# SUGGESTIONS FOR
# TEACHING OF TAMIL

(Specially Suitable for Training Colleges & Schools)

BY

S. ARUMUGA MUDALIAR, M.A., B.O.L., L.T.
Principal, Govt Training College, Komarapalayam.

The Educational Publishing Co.,
NUNGAMBAKKAM , MADRAS-6.

# தமிழ் கற்பிக்கும் முறைகள்

ஆக்கியோர்

புலவர். சரவண. ஆறுமுக முதலியார், M.A., B.O.L., L.T.

[சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், உயர் திருவாளர்,
டாக்டர், சர். ஆ. இலக்குமணசாமி முதலியார்
அவர்களுடைய முன்னுரையோடு கூடியது.]

வெளியிடுவோர்

எடுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனி

நுங்கம்பாக்கம் :: :: சென்னை

பதிப்புரிமை] 1958 [விலை ரூ. 3-0-0

Reprint—1958

உரிமையுரை

ஈன்று புறந்தந்து, எனக்குத்
தமிழ்க்கல்வி ஊட்டி, என்னைத்
தமிழ் மகனோடு தமிழாசிரியனு
மாக்கிய என் அருமைப்
பெற்றோராகிய

உயர் திரு. கு. சரவண முதலியார்
ச. செல்லம்மாள்

அவர்கட்கு
இச்சிறுநூல் உரியதாகுக

Vidhya Press, Madras-1.

## வெளியிடுவோர் முன்னுரை

இது வரை தாய் மொழி கற்பித்தல், உயர்நிலைப் பள்ளிகளிலும் ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளிலும், ஒரு சட்ட திட்டத்திற்குட்படாமல் இருந்து வந்தது. இடைநிலைப்பள்ளி ஆசிரியர் பயிற்சிக்குத் தாய்மொழி முறைகளும் பாடமாயிருந்திருப்பினும், அப்பாடத்தை விளக்கவல்ல பாட நூல்கள் தமிழில் தக்க அறிஞர்களால் எழுதப்படவில்லை. பின், B T தேர்வுக்கும் தாய்மொழி கற்பிக்கும் முறைகளும் பாடமாக வந்தன. இப் பாட திட்டத்தை ஒட்டியே தமிழ்ப் பேராசிரியர். புலவர் ச. ஆறுமுக முதலியார் அவர்கள் எளிய, இனிய செந்தமிழ் நடையில் கற்போர் உளங் கொள்ளுமாறு, ஆங்கிலத்தில் உள்ள பல உளநூல், முறைகள் பற்றிய நூல்களை ஆராய்ந்து, வடித்தெடுத்து எழுதித் தமிழ் கற்பிக்கும் முறைகளை முதன்முதல் *1945*--இல் வெளியிட்டார்கள். உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் பயிற்சி பெறுபவர்களுக்கு (B. T. தேர்விற்கு) என இஃது எழுதப்பட்டாலும் பண்டிதர் பயிற்சி பெறுவோர்க்கும், இடை நிலை, தொடக்க நிலை, ஆசிரியர் பயிற்சி பெறுவோர்க்கும் ஏற்றதாகும்.

இதில் துணைப்பாட நூற்படிப்பு, எழுத்துப் பிழைகளைப் போக்கும் சில புதிய வழிகள், செய்யுட்பொருள் உணர் பயிற்சி முதலிய புதிய செய்திகளும் சேர்க்கப்பட்டுள்ளன. பின்னிணைப்புகளாகப் புதிதாய் (*1*) ஆசிரிய மாணவர் கற்பித்த பாட அறிக்கை. (*2*) இலக்கணத்தில் புதிய முறைக் கேள்விகள். (*3*) தமிழ் இலக்கிய வரலாற்றுக் குறிப்புகளும் சேர்க்கப்பட்டுள்ளன. கலைக் கல்லூரிகளில் பதினாறு ஆண்டுகளும், ஆசிரியர் கல்லூரியில் ஆறு ஆண்டுகளும் வேலை பார்த்துப் பட்டறிவு எய்தியிருக்கும் பேராசிரியர் முதலியார் அவர்களின் நூல், பொருட்செறிவிலும், நடைச்சிறப்பிலும், முறை அமைப்பிலும், துறைவகுப்பிலும் தலைசிறந்திருக்கிறது என்று கூற வேண்டியதில்லை. இஃது ஆசிரியர் பயிற்சி பெறுவோர்க்கு மட்டு மன்றிப் பலவகை நூல் நிலையங்களுக்கும், படிப்பகங்களுக்கும் பெரிதும் பயன்படும் என்னும் துணிபுடையோம்.

வெளியிடுவோர்

# முதற்பதிப்புக்கு ஆக்கியோன் முன்னுரை

சென்ற மூன்று ஆண்டுகளாகத் தமிழ் கற்பிக்கும் முறைகளை நான் B. T. மாணவர்களுக்கும், இடைநிலைப் பள்ளி ஆசிரியர் (Secondary grad) பயிற்சி மாணவர்களுக்கும் கற்பித்தும், தாய் மொழி, அயல் மொழிகளைக் கற்பிக்கும் முறை பற்றிய நூல்களை யும், அறிக்கைகளையும் கற்றறிந்தும் எய்திய பட்டறிவின் பயனாகத் தோன்றியதே இச்சிறு நூலாகும். இதைப் பல்கலைக் கழகத்தின் B. T. பட்டத் தேர்வுக்குரிய பாடத்திட்டத்தை ஒட்டியே யான் எழுதியுள்ளேனாயினும், இந்நூல், தொடக்கநிலை, இடைநிலைப்பள்ளி (Elementary and Secondary grade) ஆசிரியர் பயிற்சி மாணவர்களுக்கும் பெரிதும் பயன்படும் என்னும் துணி புடையேன்.

இந்நூலிற் காணும் குறிப்புகள் முற்றும் முடியக் கண்ட உண்மைகள் என்றாவது, இவற்றுக்கு மேல் இனி ஒன்றுமே இல்லை யென்றாவது யான் கூற முன் வரவில்லை. என பட்டறிவிற் கண்டவற்றைத் தமிழ் உலகத்துக்கு முதன் முதல் வெளிப் படுத்தலானேன். இவற்றிற்கு மேலும், இனி வரப்போகும் மாறுதல்களையும், இதில் நான் கண்டு கூறாத குறிப்புகளையும் வரும் பதிப்பில் சேர்த்துக்கொள்ளலாம். தாட்பஞ்சமுற்ற இந் நாட்களில் பண்டு போல் மும்முறை பிழை திருத்தி அச்சிட இயலவில்லையாதலாலும், பல் வேலைகளுக்கிடையே எழுதியும் பிழை திருத்தியும் வந்தமையானும் அறிந்தும் அறியாமலும் பிழைகள் நேர்ந்திருக்குமாயின் பொறுத்துக் கொள்ளும்படி அன் பர்களை வேண்டிக்கொள்ளுகின்றேன்.

இந்நூலுக்குச் சிறந்ததொரு முன்னுரை வழங்கிய சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திவான்பகதூர் டாக்டர் சர். ஆ. இலக்குமணசாமி முதலியாரவர்கட்கு நான் பெரிதும் கட மைப்பட்டிருக்கிறேன். நான் இந்நூலை எழுதிக்கொண்டு வருங் கால் உடனிருந்து பெயர்த்தெழுதிக் கொடுத்தும், ஒப்பு நோக்கி யும் உதவி புரிந்த என் மாணவர்களாகிய திருவாளர்கள் வித்து வான் மா. இராசமாணிக்கம் பிள்ளை, M. O. L., L. T., வித்துவான் நஞ்சப்பா, B. A., B. O. L., L. T., யோகசுந்தரம், M. A. L. T., சுந்தரராஜன் B. A., L, T., L. இராமச்சந்திரன், B.A.L.T., G பத்ம நாபன், B. A., L. T., ஆகியோருக்கு என் நன்றியறிவைத் தெரி வித்துக்கொள்ளும் கடப்பாடுடையேன். இந்நூலின் பின்னர் இணைக்கப்பட்டிருக்கும் கலைச் சொற்களைப் பார்வையிட்டு அகர வரிசைப் படுத்தி உதவிய என் மாணவனும் மைத்துனனுமாகிய திரு, Sub-Lieutenant C. R. விஸ்வநாதன் B. A.,க்கும் இந்நூலை எழுதுங்கால் அடிக்கடி இதில் என்னை ஊக்கியும் உள்ளக் கிளர்ச்சியைத் தந்தும் வந்த, என் ஆருயிர் நண்பரும் Poona

R. I. A. F—இல் வேலை பார்ப்பவரும் ஆகிய திரு. A. S. R. ராஜனுக்கும் என் நன்றி உரியதாகுக. நன்முறையில் இந்நூலை அச்சிட்டுத் தந்த அச்சக உரிமையாருக்கும் இதை வெளியிட்ட Educational Publishing Company உரிமையாளருக்கும் நான் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் பற்றிய கருத்துக்கள், குறிப்புகள், சீர்திருத்தங்கள், கொள்கைகள் முதலியவற்றையும் குற்றங்களையும் இதைப் படிக்கும் அன்பர்கள் எடுத்துக் கூற முன்வருவரேல் அவை ஏற்றுக் கொள்வதற்குரியனவாயின் நன்றியுடன் ஏற்றுக் கொள்ளப்படுவதோடு அவை வரும் பதிப்புகளில் மேற்கொள்ளவும் படும் என்று உறுதி கூறுகிறேன்.

பல நிலைகளிலும் ஆசிரியப் பயிற்சி பெறுவோருக்கும் ஆசிரியர்களுக்கும் உதவியாயிருப்பதோடு, நூல்நிலையங்கள், படிப்பகங்கள் முதலிய பொது இடங்களுக்கும் பொது மக்களுக்கும் இது பயன் படும் என்பது என் துணிபு. தமிழ் கற்பிக்கும் தொழிலில் ஈடுபட்டவர்களையும், தமிழ்த் தொடர்புடைய பிறரையும் இதை ஏற்றுக்கொண்டு மேலும் இத்துறையில் என்னை ஊக்குமாறு வேண்டிக்கொள்கிறேன்.

ச. ஆறுமுக முதலியார்

# உள்ளுறை

பொருள் பக்கம்

நான்காம் பிரிவு



ஐந்தாம் பிரிவு



ஆறாம் பிரிவு

| பொருள் | பக்கம் |
|---|---|



ஏழாம் பிரிவு

# FOREWORD BY

## Dewan Bahadur

## Dr. Sir A Lakshmanaswami Mudaliar.

**B.A., M.D., LL.D., D.SC., D.C L., F.R C.O.G., F.A.C.S.,**

*Vice-Chancellor, University of Madras.*

Although Training Colleges for Teachers have been in existence for many years, it is a matter for regret that no attempt was made till recently, to impart training to those responsible for the teaching of Indian languages. The Indian languages have suffered in consequence. There are many erudite scholars, but the art of imparting instructions in such languages and of creating a taste for and an interest in such languages among the students, has to be cultivated. Vidwan S. Arumuga Mudaliar is therefore to be congratulated on his book "Suggestions for the teaching of Tamil" which should prove useful to teachers of Tamil in the High and Training Schools. His clear exposition of the general principles and his elaboration of the fundamentals are worth careful study. It is to be hoped that this book will stimulate all teachers to consider carefully the methods to be adopted in the teaching of Tamil.

I hope that ere long books on similar lines will be available for the teaching of the other Dravidan languages, Telugu, Malayalam and Kanarese and that Training Colleges will institute chairs for imparting instructions to Teachers of these languages also.

University Buildings,
Triplicane Madras.,

**(Sd.) LAKSHMANASWAMI.**

# தமிழ் கற்பிக்கும் முறைகள்

## முதற் பிரிவு

" ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்."

### 1. பொது நோக்கங்கள்

**தாய்மொழியைப் பற்றிய மனப்பான்மை: கலைத் திட்டத்தில் இன்று அது பெற்றுள்ள இடம்:** நமது தாய்மொழியாகிய தமிழ் மொழி அமிழ்தினு மினியதென இமிழ்கடல் வரைப்பில் எல்லோராலும் போற்றப்படுகிறது. கல்தோன்றி மண்தோன்றாக்காலத்தேயும் முன்தோன்றி மூத்துப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருவது. பழமையும் பெருமையும் வாய்ந்த இது புதுமையும் பொருந்தி இன்றும் உலகவழக்கழியாது என்றும் நின்று நிலவுதற்குரிய உயர்தனிச் செம்மொழி எனற்பாலது. தமிழ்த்தெய்வ வணக்கம் கூறப்போந்த பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழ்மொழிக்குப் பரம்பொருளை உவமை கூறினர். ஓர் எல்லையறு பரம்பொருள், பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் யாதொரு மாறுபாடுமின்றி அன்றும் இன்றும் என்றும் இருப்பதுபோல் நமது தமிழும், முன்னைப் பழமொழிக்கும் முன்னைப் பழமொழியாயும், பின்னைப் புதுமொழிக்கும் பின்னைப் புதுமொழியாயும் பொலிகின்றது.

வடமொழி, எபிரேயம், லத்தீன் போன்ற இறந்துபட்ட பழைய மொழிகள் "உயர்தனிச் செம்மொழி" களென வழங்கப்பெற்று வருவது போலப் பழமையிலும், பெருமையிலும், இலக்கிய இலக்கண விரிவிலும், அமைதியிலும், அவற்றிற்குப் பின் வாங்காதிருப்பதோடு, இன்னும் உலக வழக்கழிந்து சிதையாது சீரிளமைத் திறம்வாய்ந்த நந்தம் செந்தமிழை ஏனோ மொழி நூலறிஞரும் பிறரும் உயர்தனிச் செம்மொழியெனப் பேணிப் போற்றவில்லை? தான் வழங்கும் நாட்டின்கண் உள்ள பல மொழிகட்குந் தலைமையும் அவற்றினும் மிகவே தகவுடைமையும் உள்ள மொழியே உயர்மொழி.

"தான் வழங்கும் நாட்டிற்பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் சான்றதே தனிமொழி" எனப்படும். திருந்திய பண்பும், சீர்த்த நாகரிகமும் பொருந்திய தூய்மொழி புகல்செம் மொழியாம். இம் மூன்றிலக்கணங்களையும் தன்னகத்தே கொண்ட தமிழ் மொழியும் உயர்தனிச்செம்மொழியாகாதோ?

பரந்த நோக்கம் கொண்டு சிறந்த நம் தமிழ்மொழி, பிற மொழிகளின் கூட்டுறவால் வரும் தீமைகளை ஒழித்து, நன்மைகளை ஏற்றுக்கொண்டு அம்மொழிகளிலிருந்து வரும் கருத்துகளையும் சொற்களையும் தன்னியல்பாக்கும் தனிப்பேராற்றல் வாய்ந்ததாயிருக்கிறது. எவ்வகைக் கலையையும் எடுத்துரைக்கவல்ல சொல் வளம் பெற்றது. தங்குமிடமற்றுத் தன்னை நாடி வந்தோர்க்குத் தங்குமிடமளித்து, நாளடைவில் தன் ஆட்சிப் பரப்பையும் செல்வாக்கையும் குறைத்துக் கொண்டது. கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளுவம் போன்ற கிளைமொழிகள் பிரிந்து போனதாலும், தமிழ் நாட்டைப் பன்முறை கடல்கொண்டு போனதாலும், பண்டைத் தமிழகமாகிய இரு நிலவுலகின் பெருநிலப் பரப்பில், அதாவது "வடவேங்கடம் தென்குமரி ஆயிடை"த் தனியரசு செலுத்தி வந்ததுபோக, இன்று தமிழகம் பதினொருகோட்ட அளவில் குறுகி நிற்கின்றது; தன் சேய்களாகிய தமிழ் மக்களும் பண்டு போலல்லாது, இன்று தாயாகிய தன்னைப்பேணாது, பிறரைப் பேணித்திரியும் பேதைமை கண்டு ஏங்கி நிற்பதோடு, தன்னைப் பேணித் தன் புகழ்பரப்ப முன் வரும் சில பல தமிழாசிரியர்களும் மாணவர்களும் தாழ்ச்சி உறுவதைக் கண்டு உளங்கன்றி உருகுகின்றது; பண்டு போல் தனது வீட்டில் பெருமையோடு தனியரசு செலுத்துவதற்குரிய வழிவகைகளை எதிர்பார்த்து நிற்கின்றது.

**அன்றும் இன்றும்:** முடியுடை வேந்தர்களாலும், குறுநில மன்னர்களாலும், வள்ளல்களாலும் போற்றப்பெற்றுச் சிறந்தோங்கிய நம்தம் செந்தமிழ் இன்று ஆங்கில மொழியின் நெருக்கலினாலும், அயல் மொழிக் கலப்பாலும், ஆர்வத்துடன் கற்பாரும் கற்பிப்பாரும் இன்றி, வாடி வதங்கி நிற்கின்றது. கட்டாயமாக ஒரு மொழி படிக்கவேண்டும் என்று பெரும்பாலோரும், வருவாயும் வயிற்றுப் பிழைப்பும் கருதும் சிலரும், விருப்புற்று ஒரு சிலரும், இம்மொழியைப் பள்ளிக் கூடங்களிலும் கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் பயின்று வருகின்றனர். ஆங்கிலம் கற்றோர்க்கு அரசியல்

துறைகளிலும் பிற இடங்களிலும் உயர்ந்த வேலைகளும், மிக்க வருவாயும், நன்மதிப்பும், கிடைத்தனவாதலால், பெற்றோர்களும் மாணவர்களும் அம்மொழித் தேர்ச்சியில் மிகவும் ஊக்கம் செலுத்துவாராயினர். அதற்கேற்பப் பள்ளிக்கூடங்களிலும் தாய்மொழிப் பயிற்சி புறக்கணிக்கப்பட்டு, ஆங்கில மொழிப் பயிற்சியே கண்ணும் கருத்துமாய்ப் போற்றப்பட்டு வந்தது. தாய்மொழிப் புறக்கணிப்பால் தாய்மொழிப் பற்றும், தாய் நாட்டுப் பற்றும் குன்றி, அம்மொழியின் இலக்கியச் சுவைகளையும் இலக்கண அமைதிகளையும் முன்னோர் பெருமைகளையும் உணர இடமில்லாமல் போய்விட்டது.

**தமிழாசிரியர் நிலை:** மேலும் பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் உள்ள தமிழ் ஆசிரியர்கள் குறைந்த வருவாய் பெற்றுக்கொண்டு, தாழ்ந்த நிலையில் இருந்து வருகிறார்கள். ஏனைய பாடங்களைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் பெற்றுள்ள தகுதிகளை இவர்களும் பெற்றுள்ளார்கள். அவர்கள் கற்பிக்கும் வகுப்புக்களுக்கும் மாணவர்களுக்குமே இவர்களும் கற்பிக்கின்றார்கள். எனினும், அவர்கள் பெறும் வருவாய் இவர்களுக்கும் கொடுக்கப்படாததால், இவர்கள் பால், நன்மதிப்பையும் வணக்கத்தையும் மாணவர்கள் காட்டுவதில்லை என்ற குறை இன்றும் கூறப்படுகிறது. வகுப்பிலும் ஒழுங்கும் அமைதியும் ஏனைய பாடங்களிற்போல் நிலவுவதில்லை என்றும் கூறப்படுகிறது. இவர்கள் குறைந்த வருவாய் பெற்றும், எளிய வாழ்க்கையும் உயர்ந்த குறிக்கோளுமுடையோராய் இருக்கின்றனர். அன்பின் உறைவிடமாகவும் அருளின் நிலைக்களமாகவும் இருந்து இதழ் நகையாடும் பிற ஆசிரியர்களுக்கு இன்முகம் தோற்றி அமைதியுடன் விளங்குகின்றனர். இங்ஙனம் ஊதியக் குறைவாலும் உலகோர் மதிப்புக் குறைவாலும் தமிழாசிரியர் நிலை இரங்கத் தக்கதாயிருக்கின்றது.

**இன்றைய சீர்திருத்தங்கள் சில:** சில ஆண்டுகளாக, அரசாங்கமும், பள்ளிக்கூடங்களும், இலக்கியக் கழகங்களும், பல்கலைக் கழகங்களும், திருமடங்களும் தாய்மொழிப் பயிற்சியிலும் ஊக்கம் காட்டி வருகின்றன. இப்பொழுது உள்ள இடைநிலைப் பள்ளி நீக்கத் தகுதிச்சீட்டுத் தேர்வில் (S. S. L. C. Examination) தாய்மொழிக்கு முதலிடம் கொடுக்கப்படாவிடினும்,* ஆங்கிலத்தின் தகுதியும் இன்றியமையாமையும்

* இப்பொழுது ஒருவாறு கொடுக்கப்பட்டிருக்கிறது.

கொடுக்கப் பட்டிருப்பதோடு, ஆங்கிலந் தவிர்ந்த ஏனைய பாடங்களும், இடைநிலை ஆசிரியர் பயிற்சிப் பள்ளி நீக்கத் தகுதிச்சீட்டுத் தேர்வில் ஆங்கிலந் தவிர்ந்த ஏனைய பாடங் களும் (T. S. L. C. Examination, Secondary Grade) தாய்மொழியின் வாயிலாகவே கற்பிக்கப்பட வேண்டும் என் னும் விதிகளும் வந்துள்ளன. தமிழ் கற்பிக்கும் முறைகளில் உயர் நிலைப் பள்ளியாசிரியர்களுக்கும் ஆசிரியர், லேடி வில்லிங்டன் கல்லூரிகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. அண்ணாமலை, சென்னைப் பல்கலைக் கழகங்களில் தமிழுக் கெனத் தேர்வுகள் ஏற்பட்டுத் தகுதிச் சீட்டுகளும் பட்டங் களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. (B. A., B. A., Hons)., M. A., B. O. L., B. O. L. (Hons.) Vidwan, Certificates of Proficiency in Oriental Learnings etc.) தமிழ் ஆராய்ச்சிக்கும் பட்டங்கள் ஏற்பட்டுள்ளன. (M. O. L. M. Litt., Ph. D., D. Litt, etc.)

**இன்னும் செய்யவேண்டியவை: (1) மேல்நிலைப் படிப்பிலும் தாய்மொழி வாயில்:** தாய்மொழிப் புறக்கணிப்பு இன்னும் முற்றிலும் அகலவில்லை. இதனை முற்றிலும் களைவதற்கு அரசியலாரும், மாணவர்களும், ஆசிரியர்களும், பெற்றோர் களும், பொது மக்களும், பல்கலைக் கழகங்களும் ஒருங்கே முன்வர வேண்டும். கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களி லும் ஆராய்ச்சிப் பட்டங்களுக்கும், தொழிற் கல்லூரிகளிலும் உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்பயிற்சிக் கல்லூரிகளிலும் (Training Colleges) தாய்மொழியின் வாயிலாகவே பல கலைகளையும் கற்பிப்பதற்கான வழிகளைச் செய்யவேண்டும். கல்வி புகட்டும் வாயிலாய் ஆங்கிலம் இருந்தபோது, உயர் நிலைப் பள்ளி ஆசிரியர் பயிற்சி பெற்ற ஒவ்வொருவரும் கட்டாயமாக ஆங்கில மொழியைக் கற்பிக்கும் முறைகளிலும் பயிற்சி பெற்றனர். அதுபோலத் தாய்மொழி வாயிலாக வந்திருக்கும் இக்காலத்தில் ஒவ்வொருவரும் தாய்மொழியிலும் கட்டாயமாகப் பயிற்சி பெறுவது முறையாகுமன்றோ?

**2. பாட நூல்களும் கலைச்சொற்களும்:** இதற்கு வேண்டும் நூல்களும், தமிழிலேயே கலைச் சொற்களும் தக்க அறிஞர் களால் எழுதப்படவேண்டும்.

**3. சிறந்த தமிழ் அறிவுப் பயிற்சியும் பெற்ற தமிழாசிரியர்கள்:** தமிழ் ஆசிரியர்களும் தாய் மொழியில் பற்றும், ஆர்வமும் தமிழ் மாணவர்களுக்கு உண்டாகும் வண்ணம் கற்பிக்க வேண்டும். இதற்கு இவ்வாசிரியர்கள் அனைவரும் ஏனைய பாட ஆசிரியர்களைப்போல், தமிழ்க் கல்லூரிகளில் சேர்ந்து

படித்துப் பட்டம் பெற்று, தமிழ் ஆசிரியர் பயிற்சியும் பெற்றவர்களாய் இருக்கவேண்டும். இதுவரை தமிழாசிரியர்களிற் பெரும்பாலோர் ஆங்கிலம் தெரியாதவர்களாய் இருந்தமையின், அயல் நாடுகளில் மேற்கொண்டுள்ள தாய்மொழிக் கல்வி முறைகளைப்பற்றி ஒன்றும் படித்தறிய இயலாதவராய், ஆங்கிலத்தில் உள்ள மொழி ஆராய்ச்சி, மொழி நூல், இலக்கிய வரலாறு, தாய்மொழி கற்பிக்கும் முறைகள் பற்றிய நூல்களையும் இதழ்களையும் வெளியீடுகளையும் கற்க இயலாதவராய் இருந்தனர்; இருந்தும் வருகின்றனர். தாய்மொழிகளில் முறைபற்றிய நூல்கள் மிகமிகக் குறைவு; இல்லையென்றே கூறலாம். எனவே, தாய்மொழியைக் கற்பிப்பதில் அயல் நாடுகளில் மேற்கொள்ளப்பட்டு நல்லவையென்று காணப்பட்ட முறைகளை நாமும் மேற்கொள்ள வேண்டும். புதிய புதிய முறைகளில் தாய்மொழியைக் கற்பிக்கும் பயிற்சியை ஒவ்வொருவரும் பெறவேண்டும். “கல்வியின் உண்மையைப்பற்றிய புதிய வரலாறுகளும், புதிய நோக்கங்களும் அயல் நாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்டுத் தமிழ் நாட்டு நிலைகளுக்கு ஏற்றவாறுமாற்றியும், திருத்தியும், பெருக்கியும், சுருக்கியும் அமைத்துக்கொள்ளப்பட வேண்டும். இப்படிச் செய்தால் தாய்மொழிக் கல்வியில் ஈடுபட்ட எல்லோரும், ஊக்கமும், பற்றும், தந்நம்பிக்கையும், மனவுறுதியும், மகிழ்ச்சியும் எய்துவர்,” “இப்படிச் செய்தால், பள்ளிக்கூடத்தின் வாழ்வே ஒரு புதிய வாழ்வாக மாறிவிடும். நமது தாய்மொழியும் ஒரு புதிய நிலையை எய்தும். பள்ளிக்கூடம் புத்துயிரளிக்கும் இடமாக மாறுவதற்குரிய அளவற்ற வாய்ப்புகளை இப்புதுமுறை, ஆசிரியர்களுக்களிக்கும். இப் புதிய இடத்தில் தம்முடைய நாட்டின் பண்டைப் பெருமையை மாணவர்கள் முதன் முதல் உணர்ந்துகொண்டு தம் எதிர்கால வாழ்வில் தாம் ஆற்றுவதற்கென இருக்கும் நாட்டுத் தொண்டை மேற்கொள்ளுவதற்கு வேண்டும் ஆயத்தங்களைச் செய்யும் நேரிய வழியில் செல்லா நிற்பர்.”

4. **பள்ளியில் எல்லாத் துறைகளிலும் தாய்மொழியின் இடத்தை வற்புறுத்தல்:** “தாய்மொழிப் பயிற்சியில் தமிழாசிரியர்க்கு மட்டும்தான் பொறுப்புள்ளது; ஏதோ வாரத்தில் நான்கு அல்லது ஐந்து மணி நேரம் மட்டும் கற்பித்தால் போதும்” என்ற இப்போதுள்ள மன நிலை முற்றிலும் மாற வேண்டும். தாய்மொழிப் பயிற்சியே, சிறப்பாகத் தாய்மொழி வாயிலாகக் கல்வி கற்பிக்கப்படும் பள்ளிகளில், எல்லா வகை வேலைக்கும் அடிப்படையாகும். இதையும் ஏனைய

பாடங்களைப்போல் ஒன்று என்று நினைக்கும் நினைப்பு அறவே ஒழியவேண்டும். அதற்கு மாறாகக் கலைத்திட்டத்தின் உயிர் நிலையாக இதைக் கருதவேண்டும். கலைத்திட்டத்தினுள் அடங்கிய ஒவ்வொரு பிரிவிலும் அதனைக் கற்பிக்கும் ஒவ்வோர் ஆசிரியரும் தாய் மொழியிலேயே அவ்வப்பாடத்தைப் பிழையற எடுத்துச் சொல்லவும், எழுதவும், மாணவர்களும் அங்ஙனமே செய்யவும் நன்கு பயிற்றப்படவேண்டும். தமிழ்மொழி பிற பாட ஆசிரியர்களால் எங்ஙனம் பேசவும் எழுதவும் படுகிறது என்பதைத் தலைமையாசிரியர்களும் அரசியற் கண்காணிப் பாளர்களும், பிறரும் நன்றாய்க் கவனிக்க வேண்டும். முடியுமானால் இம்மேற்பார்வைப் பொறுப்பைத் தமிழாசிரியர்க்குக் கொடுக்கலாம். எனவே தாய்மொழி, பள்ளியின் வாழ்விற்கே இன்றியமையாதது. அதிலிருந்து அதைப்பிரிக்க இயலாது; பள்ளியாகிய உடலுக்கு உயிராயிருப்பது. ஒவ்வொருவருடைய வாழ்விலும் இது தொட்டிலிலிருந்து சுடுகாடுமட்டும் புறக்கணிக்க முடியாத ஒரு நிலையைப் பெற்றிருக்கிறது; அறிவை வளர்த்துக் கொள்வதற்குரிய ஒரு கருவியாயிருப்பது மட்டுமன்றிக் குழந்தையை வாழ்க்கையில் ஈடுபடுத்தலிலும் இன்றியமையாத உறுப்பாகவும் இருக்கிறது.

5. **தமிழாசிரியர்களின் ஊதிய உயர்வு:** ஆங்கிலம் முதலிய பாட ஆசிரியர்கள் கல்லூரிகளில் நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் கற்றுத் தேறிப் பட்டங்கள் பெற்றுப் பின் கல்வி கற்பிக்கும் முறைகளிலும் பயிற்சி பெற்று வருதல்போலவே, இற்றை நாளில் உயர்நிலைப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தமிழ் கற்பிக்கும் தமிழாசிரியர்களும் பல ஆண்டுகள் கற்றுத்தேறிப் பட்டங்கள் பெற்றுத் தமிழ் கற்பிக்கும் முறைகளிலும் பயிற்சி பெற்றுவருகிறார்கள். வேண்டிய இவ்வளவு தகுதிகளும் பெற்றிருந்தாலும், ஏனைய ஆசிரியர்களுக்களிக்கப்படும் ஊதியம் தமிழாசிரியர்களுக்கு அளிக்கப்படுவதில்லை. மேலும், இடைநிலைப்பள்ளி நீக்கத் தகுதிச் சீட்டுத் தேர்வில், ஏனைய பாடங்களில் நிறைந்த மதிப்பு எண்கள் பெற்றுத் தமிழில் மட்டும் குறைந்த எண்கள் பெறுவரேல், அம்மாணவர்கள் தேர்ச்சி பெறாதவரேயாவர். ஆதலால், இத்தேர்வளவிலும்கூடத் தமிழ் ஆசிரியரும் ஏனையோரும் ஒத்தவரேயெனினும், அவர்கள் ஊதியம் மிக்க குறைவாக இருப்பது ஏன்? இவ்வூதிய வேற்றுமையால் மாணவர்க்குத் தமிழாசிரியர்பாலுள்ள நன்மதிப்பும், கீழ்ப்படிதலும், தமிழ்ப்படிப்பில்பற்றும் குறைகின்றன என்பதனையும், ஆசிரியரும் ஊக்

கத்தோடும் உள்ளக் கிளர்ச்சியோடும் உழைக்கமாட்டார்கள் என்பதனையும் அரசியலாரும், பள்ளிகளை நடத்துவோரும், பிறரும் நன்கு கவனித்துச் சீர்திருத்தம் விரைவிற் செய்ய வேண்டும். அப்போதுதான் தாய்மொழிப் படிப்புச் சீர்திருந்தி நன்னிலை யெய்தும்.

6. **தமிழாசிரியரின் தாழ்வுணர்ச்சி நீக்கத்திற்கு வேண்டும் விளம்பரம்:** ஆங்கிலத்துக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருப் பதுபோலத் தாய்மொழிக்குக் கொடுக்கப்பட வேண்டும். இதற்குரிய காலம் மிகவும் விரைவில் வரும் என்றே எதிர் பார்க்க வேண்டியிருக்கின்றது.* மேலும் பிறரைக்காட்டி லும் தாங்கள் தாழ்ந்தவர்கள் என்று தாய்மொழி ஆசிரியர் களிடை நிலவி வேரூன்றியிருக்கும் தாழ்வுணர்ச்சியை அவர் களிடமிருந்து நீக்கவும், அதற்கு மாறாகத் தாய்மொழியே கலைத்திட்டத்தில் மிகவும் சிறந்த, இன்றியமையாத பாடம் என்னும் உணர்ச்சியைப் பரப்பவும், தமிழாசிரியரே ஏனைய ஆசிரியர்களைவிடச் சிறந்தவர் என்பதை அறிவுறுத்தவும், ஆங்கிலம் கணக்கு முதலிய பாடங்களும் அவற்றின் ஆசிரியர் களும் தமிழிடமிருந்தும் தமிழாசிரியர்களிடமிருந்தும் பறித் துக்கொண்ட தனியிடத்தைத் திரும்பப் பெறவும் நல்ல கடுமை யான விளம்பரம் வேண்டியிருக்கிறது.

7. இன்னும் தாய்மொழி அரசியல் மொழியாக வந்தால் தான் உண்மையான உயர்வு தமிழுக்கும் உண்டாகும். எனவே, நம் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தாய்மொழிக் குரிய முதலிடம் கொடுக்கப்படாத வரையில், உண்மையான கல்வி கற்பிக்கப்படுவதில்லை என்று உறுதியாகக் கூறலாம்.

## II. கலைத்திட்டத்தில் தாய்மொழிக்கு முதல் இடம் கொடுக்கவேண்டும் என்பதற்குரிய காரணங்கள்

### 1. சிந்தனையை வளர்ப்பது

சிந்தனையும் அதனை வெளியிடும் வாயிலாகிய மொழியும், ஒன்றை ஒன்று விட்டுப்பிரிக்க முடியாத தொடர்பைப் பெற்றிருக்கின்றன. இதனால், ஒன்றைவிட்டு மற்றொன்றை, வளர்க்க இயலாது. இரண்டையும் ஒருங்கேதான் வளர்க்க வேண்டும். எனவே, சிந்தனை யின்றேல் மொழியில்லை. மொழியின்றேல் சிந்தனையில்லை. இவ்விரண்டும் இன்றேல் வேலையும் கல்வியும் இல்லை. இவ்விரண்டும் பள்ளி வாழ்விற்கு

* இந்நிலை இப்பொழுது ஒருவாறு வந்திருக்கிறது.

இன்றியமையாதன அல்லவா? அதிலும் இத்தொடர்பு தாய் மொழியின் வாயிலாக வளர்தலே சால்புடைத்தாம்.

## 2. எண்ணத்தைத் தெரிவிக்கும் கருவி

ஒருவர் எண்ணத்தை மற்றொருவர் அறிய மொழியே உதவுவதால், மக்கட் பொது வாழ்க்கைக்கு அஃது இன்றியமையாத கருவியாகும். எனவே, மாணவர்கள் இக்கருவியைப் பயன் எய்தும் முறையில் வழங்குமாறு நாம் கற்பிக்க வேண்டும். தாய்மொழியில் தாம் எண்ணியவற்றைத் தெளிவாகவும் எளிய நடையிலும் சொல்லுவதற்கும் எழுதுவதற்குமான பயிற்சியை மாணவர்க்குத் தரவேண்டும். முதலில் தெளிவே வேண்டற்பாலது. பின் குறித்ததைக் குறித்த மொழியில் சொல்லும் ஆற்றல் கைவரப் பெறவேண்டும். இங்ஙனம் நுண்ணிய எண்ணங்களும் தெளிவான கருத்துக்களும் தோற்றுவதற்கு, நடைமுறையில் வரத்தக்க அடிப்படையான நோக்கமாவது :— (அ) ஒரு பொருளைப்பற்றி எளியமுறையில் தெளிவாகப் பேசவும், (ஆ) ஒரு பொருளைப் பற்றித் தெளிவான முறையில் ஒருவர் பேசுவதைக் கேட்கவும், கேட்டுப் பொருளுணரவும், (இ) ஒரு பொருளைப்பற்றித் தெளிவான முறையிற் படிக்கவும் படித்துப் பொருளுணரவும், (ஈ) ஒரு பொருளைப்பற்றித் தெளிவான எளிய முறையில் எழுதவுமான ஆற்றலை உண்டு பண்ணுவதாகும். இவ்வாற்றல் இல்லாமல் பள்ளியிலும் பின்னர் உலக வாழ்க்கையில் எந்தத் துறையிலும் மாணவர்கள் இறங்கி வேலை செய்து முன்னேற இயலாது.

## 3. மன எழுச்சிகளை வெளிப்படுத்தும் கருவி

தாய்மொழியைப் பிறரோடு பழகுவதற்கு வேண்டும் கருவியாகமட்டும் கொள்வதோடு அன்றி, தம் உணர்ச்சிகள், நுகர்வுகள், உயர் கருத்துக்கள் முதலியவற்றை வெளிப்படுத்தும் வாயிலாகவும் ஆக்கவேண்டும். இவற்றை வெளியிடுவதால் அவர்களுக்கு ஒரு தனிப்பட்ட மகிழ்ச்சி ஏற்படுவதோடு அவர்களுடைய மனம், ஒழுக்கம், மனவெழுச்சி முதலியவையும் பண்பட்டு வளர்ச்சி அடைய இடமுண்டு. மாணவர்களின் முழு வளர்ச்சிக்குத் தாய்மொழியே அடிப்படையானது என்னலாம். அதிலும் சிறப்பாகத் தாய்மொழியின்கண் உள்ள சிறந்த செய்யுட்களும் இலக்கியங்களுமே அவர்களின் மனவெழுச்சிகளைப் பண்படுத்தித் தனித்தன்மையை யுண்டாக்

கும். இச் செயலைத் தாய்மொழி இலக்கியங்கள் செய்வது போல் அயல் மொழி இலக்கியங்கள் பெரும்பாலும் எல்லோரிடையிலும் செய்யா என்பது திண்ணம்.

## 4. கற்பிக்கும் வாயில்

மாணவர்கள் பொருள்களை யுணர்ந்து அறிவை வளர்த்துக் கொள்வதற்குத் தாய் மொழியே ஏற்ற வாயிலாகும். அயல் மொழிகளின் வாயிலாகக் கற்கும்போது முதலில் அயல் மொழியை உணர்ந்து, அதன் பின்னர் அதன் வாயிலாய்ப் பொருளுணர்ந்து அறிவை வளர்த்துக்கொள்வதில் காலம், முயற்சி, பணச் செலவுகள் மிகுதி ஆகின்றன. தாய் மொழியிலேயே கற்று அறிவை வளர்த்துக்கொள்வதால் காலச் செலவும், பணச் செலவும், முயற்சியும் மிகுதியாகச் சுருங்கும். உறுதியான அறிவும் ஏற்படும். இஃது இயற்கையுமாகும். எனவே, தாய் மொழியின்றி உண்மையான அறிவு வளர்ச்சியே இல்லை யென்றும், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் உண்மையான கல்வி கற்பித்தலே இல்லையென்றும் கூறிவிடலாம்.

ஒவ்வொருவருடைய உயர்வுக்கும் தாழ்விற்கும் அவரவருடைய அறிவே காரணமாகும். அறிவு வளர்ச்சிக்கு ஓர் எல்லை இல்லை. "சாந்துணையும் கல்லாதவாறு என்"? என்று வினவுகின்றார் திருவள்ளுவர். அறிவு என்பது ஐம்பொறி உணர்ச்சியோடு நன்மை தீமைகளைப் பகுத்துணரும் மனப் பண்பும் ஆகும். ஐம்பொறி உணர்ச்சியில் இயற்கையிலேயே மக்களினும் கூரிய அறிவு வாய்ந்த விலங்குகளும் பறவைகளும் உண்டு. அவ்வன்மைகள் அவற்றிற்குப் பிறப்பிலேயே அமைந்தன எனினும், அவ்வறிவு முன்னிருந்தபடியே ஒரு தன்மையாக இருத்தலன்றி, நாளுக்கு நாள் வளர்ந்து ஓங்கக் காணோம். ஆனால், மக்கள் தங்கள் செயற்கை அறிவு மிகுதியால் அவற்றைவிடச் சிறந்து விளங்குகின்றார்கள். இச் செயற்கை அறிவு அவர்க்குத் தம் பட்டறிவாலும் (experience), பிறர் பட்டறிந்தவற்றைக் கேட்டதாலும், அவற்றைப்பற்றிய பல நூல்களை ஆழ்ந்த ஆராய்ச்சியோடு படித்து நன்குணர்வதாலும் மிகுதியாக உண்டாகும். காலம் இடையிட்டும், தேயம் இடையிட்டும் வாழ்ந்த பேரறிஞர் தேடிவைத்த அறிவுச் செல்வங்களை நாம் பெற்று மகிழ்வது, அந்நூல்களைப் படித்தலினாலன்றோ? அங்ஙனமாகிய படிப்புக்குப் பயன், மாணவர் உள்ளத்திற் பற்பல பொருள்களை நிறைப்பதன்று. தேர்வுகளில் தேர்ச்சி பெறச் செல்வதுமன்று. இயற்கையாய

அமைந்துள்ள அறிவைச் செயற்கைக் கல்வி முறைகளால் நன்கு வளர்த்து உறுதி செய்வதே யாகும். மேலெழுந்தவாரி யாகப் பற்பல பொருள்களைப் படிப்பதைக் காட்டிலும், சிற் சிலவற்றைத் திருத்தமாக ஆழ்ந்து படிப்பதனால் அறிவு நன்கு பயன்படும்.

ஆனால் நூல்களை மேலெழுந்தவாரியாகப் படிப்பதற்கு ஏற்ற பல காரணங்கள் இந்நாளில் உண்டு. கல்வி பன் முக விரிவை எய்தியிருக்கின்றது இந் நாளில். நூறாண்டுகட்கு முன்னிருந்த கல்வி நோக்கங்களைக் காட்டிலும், இக் கால நோக்கம் மிகமிக விரிவுடையது. அக்காலத்தில், தமிழ் இலக்கிய இலக்கணப் பயிற்சியும், பின் உயிர்க்கு உறுதி பயக்கும் தன்மையும் கருதப்பட்டு வந்தன. இக்காலத்தில், முற் கூறப்பட்டவற்றுள், மக்கட் பொது வாழ்க்கைக்குரிய பழக்க வழக்கங்கள், உடல் நலம், பொருள் நிலை, அறிவியல் கள் முதலிய பற்பல துறைகள் மிகுந்து, கல்வியின் நோக்கமும் விரிந்த பார்வையுற்றிருக்கின்றது. இப்போருக்குப் பிறகு வரப்போகும் கல்வியுலகத்தில் கல்வியின் நோக்கத்திலும் முறைகளிலும் என்ன மாறுதல்கள் நிகழப்போகின்றன என்பதை இப்போது எதிர்நோக்கி உறுதியாக ஒன்றும் கூறுவதற்கில்லை. கல்வியாகிய பூஞ்சோலையில் அழகும் நல் அமைப்பும் பெற்றுக் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து, அலர்ந்திருக்கும் பல மலர்களாம் கலைகளை நுகர வேண்டும் என்னும் அவா, மாணவர்க்கு இயல்பாய் உண்டாகும். இவற் றால், மேலெழுந்தவாரியாகப் படிக்குந் தன்மை இக்காலத்து மாணவர்களுக்கு மிக வளர இடமுண்டு. இதுவும் வேண்டற் பாலதே.

எனினும் பல நூல்களையோ சில நூல்களையோ படிப்பத னால் மட்டும் ஒருவர் அறிவாளி ஆகிவிடுவார் என்று எண்ணு வதற்கில்லை. "படித்த நூல்களின் உண்மைக் கருத்துக்களை நன்குணர்ந்து அவர் உள்ளத்தமைத்திருக்கின்றாரா? பொருள் களைப் பகுத்துணரும் அறிவும், ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்ற லும் அவர்பாலுண்டா?" என்றும் ஆராயவேண்டும். அங்ஙனம் ஆராய்ந்து பார்த்தால், பல நூல்களை உள்ளத்தமைக்காது, நுனிப் புல் மேய்வதுபோல் கற்பதால் நல்லறிவு உண்டாகாது என்பதும், சில பொருள்களையேனும் திருத்தமாய்க் கற்பதினால் மட்டுமே, நல்லறிவு வளரும் என்பதும் புலப்படும்.

எனவே, தமிழ் மாணவர்கள் இன்றியமையாத நூல்களை, ஐயந்திரிபுகளின்றித் திருத்தமாகவும், அழுத்தமாகவும் கற்றல் வேண்டும். ஆசிரியர் மாணவர் மனத்தில் அறிவைப் புகுத்தி

விட முடியாது. பிற்காலத்தில் எப்பொருளையும் எளிதில் கற்றுக் கொள்வதற்கு ஏற்றவாறு அறிவைப் பண்படுத்தி வளர்த்துக்கொள்வதிலேயே மாணவர், தம் இளமையைக் கழிக்குமாறு செய்தல் வேண்டும். அவர்கள் இலக்கியம், இலக்கணம் முதலியவைகளைக் கற்கும்போது, அவ்வக் கருத்துக்கள் அவற்றைப்பற்றி முன்னுணர்ந்துள்ள கருத்துக்களோடு சேர்ந்து ஒற்றுமைப்பட்டு, அவ்வக் கலைகளைப்பற்றிய அறிவு வளர்ச்சியுறுகிறது. பல துளி பெரு வெள்ளம் ஆவது போல் சிறிது சிறிதாக அறிந்துகொள்ளப் பெறும் கருத்துக்கள் ஒன்று சேர்ந்தே நிரம்பிய அறிவாகிறது. பழைய கருத்துக்களும் புதிய கருத்துக்களும் ஒன்று பட்டுத் திருத்தமாகத் தொடர்புறுதலையே அறிவின் வளர்ச்சி பொறுத்திருக்கிறது. ஆதலால், அறிவின் வளர்ச்சிக்கென வைக்கப்படும் பாடங்கள், பொருள்கள் முதலியவை மாணவர்களின் முன் அறிவோடு ஒன்றுபடவேண்டும். அன்றியும், கற்பிக்கப் படுபவை படிப்படியாகவும், விளக்கமாகவும் அமையவேண்டும். முன் கருத்துக்கள் விளக்கமாக இல்லாத விடத்து அவை பின் வருபவற்றோடு நன்கு ஒற்றுமையுறா. இங்ஙனம் ஒற்றுமை யுறாத பொருள்களில் மாணவர்க்குக் கவர்ச்சி இருக்காது. கவர்ச்சி இல்லையாயின் உள்ளம் பொருள்களில் பதியாது. மற்றும், அறிவு வளர்ச்சிக்கு நினைவு ஆற்றல் இன்றியமையாதது. ஆதலின், கற்பிக்கும் பொருள்களை மறவாமல் இதற்குரிய விதிகளைக் கையாளவேண்டும். கற்கும் பொருள்களில் ஊக்கமும், உள்ளக் கிளர்ச்சியும், தன் முயற்சியும் உண்டாகுமாறு, மாணவர்கள் உள்ளம் மிகுதியாக முயன்று வேலை செய்யும்படி தூண்டவேண்டும். பொருள்களை அவரவர்கள் நிலைக்கு ஏற்றவாறு நன்கு சிந்திக்கும்படியாகவும், அவற்றுள் ஒற்றுமை வேற்றுமை கண்டு தீர்மானிக்கும்படியாகவும் மாணவரை ஏவி, ஆசிரியர் ஒரு வழிகாட்டியாக மட்டும் நின்று உதவி புரியவேண்டும். காலச் சுருக்கம் கருதி ஆசிரியரே எல்லாவற்றையும் கூறிவிடுதல் கூடாது. தன் முயற்சியின்றிக் கற்பிக்கப்படும் மாணவனுக்கும் உடல் உழைப்பின்றி ஊட்டி வளர்க்கப்படும் ஒருவனுக்கும் வேற்றுமையில்லை. இளமையிலேயே அறிவினால் விளையும் நற்பயன்களை மாணவர் நன்குணருமாறு செய்துவிட்டால், பயன் காணப்படும் பொருள்களில் அவாவும் முயற்சியும் தோன்றிக் காரிய வெற்றியாதல் இயல்பன்றோ? இங்ஙனம் மாணவனது அறிவு வளர்ச்சிக்கு உரியன என்று காணக் கிடக்கும் பற்பல முறைகளையும் தமிழ் ஆசிரியர்களும் மேற் கொள்ளலாம்.

## 5. இலக்கிய நயமுணர்ந்து இன்புறல்

இனி, மாணவர்கள் இலக்கிய நயமுணர்ந்து சுவைத்து இன்புறுதற்கும் தாய்மொழிப் பயிற்சியே சிறந்த கருவியாகும். இதுவே தாய்மொழிப் படிப்பின் மிகச் சிறந்த நோக்கமாகும்.

உயர்ந்த ஆசிரியர்களால் எழுதப்பட்ட நூல்கள் தொட்டனைத்து ஊறும் மணற்கேணிபோல் இன்பமூறும் ஊற்றுக்களாம். இலக்கியங்கள் நம் முன்னோர்களாகிய தெய்வப் புலமைச் சான்றோர்கள் தம் வாழ்நாட்களில் பட்டறிந்து கண்டுவைத்த உண்மைகளாகிய விலை மதிக்கவொண்ணா மணிகள் நிரப்பி வைத்திருக்கின்ற பொற் பேழைகளாகும். இவற்றைப் பெற்று மகிழ்வது அவர்கள் கால்வழியில் வந்த பிற்றைநாள் தலைமுறைகளின் தலையாய கடனாகும். அவற்றைப் பயின்று, அவற்றில் இலைமறை காய்களாகச் செறிந்து கிடக்கும் பொருள்நயங்களையும், அவற்றின் வெளித் தோற்றங்களாகிய சொல்நயங்களையும் கண்டுணர்ந்து, சுவைத்து இன்புறுதலே கற்றலின் மிகச் சிறந்த நோக்கமாகும்.

“ தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்பர் உறைவார் பதி ”

என்றும், “நுண்ணுணர்வினரோடு கூடி நுகர்வுடைமை, விண்ணுலகே ஒக்கும் விழைவிற்றால்” என்றும் கூறப்படுகின்றதே? இந்நுண் உணர்வினரும், தவலருந் தொல் கேள்வித் தன்மை யுடையோரும் இயற்றியருளிய நூல்களைப் படித்தல், அன்னரோடு கூடி மகிழ்தலேயாகும்.

உலகத்தில் நாம் பல்வேறு மக்களோடு பழகும்போதும், வயிற்றுப் பிழைப்புக்காகப் பல துறைகளிலும் கிடந்துழன்று, ஓடியாடித் திரிந்து, உழைத்து அலுத்துப் போகும்போதும் தோன்றக் கூடிய வெறுப்பை, இலக்கியங்களே போக்க வல்லன. கீழ்மக்கள் கூட்டுறவு, மடி, வீண்காலப்போக்கு, பயனில் எண்ணத்தையும், பயனில் சொல்லையும் பாராட்டுதல் முதலிய பல குறைகளை நீக்கி, நன்மக்கள் கூட்டுறவு, முயற்சி, காலத்தைப் பயனுள்ள வழிகளிற் போக்குதல், பயனுள்ள எண்ணத்தையும் சொல்லையும் பாராட்டுதல் முதலிய பல நிறைகளை அவற்றினிடத்தில் நிறுவ வல்லது இலக்கியப் படிப்பு. பரந்த அறிவையும், விரிந்த பார்வையையும் நல்கும்.

"காவிய இன்பத்தைச் சுவைத்து மகிழ்வதைவிடப் பேரின்பம் வேறு உலகத்திலில்லை" என்பர் ஆன்றோர். வாய் ஆருக வயிறு களனுக உணரும் அறுசுவைகளோ சிறிது நேரமே நிலைத்து நின்று, பிறகு மறைந்தொழிவதோடு தெவிட்டும் தன்மையும் வாய்ந்தன. அளவுக்கு எஞ்சினல் நோய்க்கும் இடந் தருவன. செவியாருக உளம் களனுக உணரத் தக்க கவிச்சுவையோ வெனின், தெவிட்டாத தெள்ளமுதாய், மேலும் மேலும் வளர்ந்து, நினைக்கும் போதெல்லாம் புத்தின்பம் பயப்பதாய், நமதுள்ளத்தை என்றும் இன்பத்தில் ஆழ்த்தவல்லதா யிருக்கின்றது.

"கவிப்பா வமுதம் இசையின் கறியொடு
கண்ணுற் குண்ணக், குவிப்பான்"

என்ற அடியிற் கம்பர்பெருமானும், கவிப்பா இன்ப அமிழ்தாமாற்றையும், இசையோடு சேர்ந்து அஃது உண்ண உண்ணத் தெவிட்டாத தெள்ளமுதாகு மென்பதனையும், சுருங்கச் சொல்லி விளங்க வைத்ததைக் காண்க. செய்யுள் இன்பத்தில், ஒருவர் எவ்வளவில் ஈடுபட்டு இன்புறுதற் குரிய ரென்பதைக் கவியொடு ஊனும் உயிரும் ஒன்றிக் கலந்து அந்நிலையை எடுத்துரைக்கும் இராமலிங்க அடிகளின் கீழ்க் கண்ட பாவினல் உணரலாகும்.

"வான்கலந்த மாணிக்க வாசக, நின் வாசகத்தை
நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே"

என்பதே அப்பாடல். "ஆயுந் தொறுந்தொறு மின்பந் தருங் கல்வி" என்பர் பிறரும். கவிநயத்திலேயே ஆழ்ந்து அமிழ்ந்த திருவள்ளுவனர், "நவில்தொறு நூனயம் போலும்" என்ற சிறந்த உவமையை, பண்புடையார் தொடர்பில் பயில்தொறும் இன்பம் மிகுவதை விளக்க அமைத்துள்ளார். "செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள், அவியினும் வாழினு மென்?", "செவிக்குண வில்லாத போழ்து சிறிது, வயிற்றுக்கு மீயப்படும்" என்பனவும் அப்பெரியாரது கூற்றுக் களாம். சுருங்கக் கூறின், பசி, நீர்வேட்கை, அவலக் கவலை, முதுமை, தளர்ச்சி முதலியவற்றைப் போக்கி மட்டிலா மகிழ்ச்சியைத் தந்து, என்றும் இளமையாக்க வல்லது இவ் வின்பம். சிறந்த இலக்கியங்களில் ஆங்காங்குக் காணப்படும் ஒன்பான்சுவை நயமும் அவற்றிற்கேற்ற ஓசை நயமும் கற்போர் உள்ளத்திற்குக் கழிபேருவகை தருவது கண்கூடு.

பண்டைப் புலவர்களிற் பலரும் தாம் ஒரு தொழிலை மேற்கொண்டு வயிற்றுப் பிழைப்பை நடத்தியதோடு, இலக்கிய இன்பங்களையும் நுகர்ந்து அரிய செய்யுட்களையும் நூல்களையும் யாத்திருக்கின்றனர். இக்காலத்திலும் பிற தொழில்களை மேற்கொண்டுள்ள பலர் இலக்கியச் சுவையிலும் ஈடுபட்டுப் பல அரிய செய்யுட்களையும், நூல்களையும் இயற்றி வருவதைக் கண்ணுக்கெதிரே காண்கின்றோமன்றோ? மதுரைக் கூல வாணிகன் சாத்தனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், வேதநாயகம் பிள்ளை, தாமோதரம் பிள்ளை, கனகசபைப் பிள்ளை, சுப்பிரமணிய முதலியார், தேசிக விநாயகம் பிள்ளை, சிதம்பரநாத முதலியார் முதலியோரைக் காண்க. பண்டையரசர்களிலும், இங்ஙனம் பயின்றோர் பலருளர். தலையாலங் கானத்துச்செரு வென்ற நெடுஞ்செழியன், ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன், சோழன் நல்லுருத்திரன் முதலியோரைக் காண்க. பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு முதலிய நூல்களைப் பாடிய புலவர்களுக்கு நூறாயிரக்கணக்கான பொன்களையும், முற்றூட்டாகப் பல ஊர்களையும் வழங்கிப் புலவர்களை அரசர்கள் புரந்ததையெல்லாம் இவ்விலக்கியச் சுவை கண்டு மகிழ்ந்த திறத்தினாலன்றோ? செங்கோல் ஏந்திய திருக் கரங்கள் தமிழ்ப்புலவர்களுக்கு வெண்கவரி இரட்டியதும் இது பற்றியே யல்லவா?

இத்தகைய இலக்கியங்களைக் கற்பிக்குங்கால் ஆசிரியர் கள் பழைய பழக்கத்தை மேற்கொண்டு பதவுரை, பொழிப் புரை, எழுவாய், பயனிலை முதலியவற்றைக் கற்பித்து வெற் றெனத் தொடுத்துச் சென்று தேய்ந்திறும்படி விட்டுவிடாமல், சுவையுணர்ந்து மேன்மேலும் கற்கவேண்டும் என்னும் விருப்பம் மாணவர்களுக்கு உண்டாகுமாறு கற்பிக்க முயல வேண்டும். அதற்குக் கீழ்க்கண்ட வழிகள் உதவலாம். (இவற்றை வரப்போகும் செய்யுள் கற்பிக்கும் பகுதியோடும் இணைத்துக் கொள்ளுதல்.)

(1) செய்யுளை ஏற்ற இன்னோசையோடு இடத்திற்கு ஏற்றவாறு எடுத்தல் படுத்தல் நலிதல்களால், குரலை உயர்த்தியும் தாழ்த்தியும் அவ்வச்சுவை தோன்றுமாறு படித்துக் காட்டல். (2) ஏற்ற இடங்களில் அடைமொழிகளாற் பெறப் படும் முன்னுறு பொருளை விளக்கல். (3) உவமைகளை விரித்து, உவமை, பொருள்களை எடுத்துக் காட்டுவதோடு உவமைப் பொருத்தங்களையும் விளங்கவைத்தல். (4) பிற

அணிகளையும் அவைகாட்டும் பொருள்களையும் விளக்க வைத்தல். (5) நூலில் வரும் ஆட்களின் கூற்றுக்களை இடத்திற்கேற்றவாறும், நுண்ணறிவோடும், பல பொருள்படவும் புலவர் வைத்திருக்கும் சிறப்புக்களை விளக்குவதோடு புலவர் கூற்றுக்களையும் அவற்றின் உட்கோளையும் எடுத்துக்கூறல். (6) "முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்ற தமிழ் மரபுக்கு ஏற்பவே, நூலில் வரும் கருத்துக்களைப் பிற நூற் கருத்துக் களோடும், பிறமொழிப் புலவர்கள் கருத்துக்களோடும் ஒப்பிட்டு ஒற்றுமை, வேற்றுமைகளைக் காட்டி மகிழ்வித்தல், (7) செய்யுளைச் சிதைத்துச் சொற்பொருள் கூறாமல், உயிர் நிலைக் கருத்துக்கு நேரே போய், அதை எடுத்துக் காட்டி மகிழ்வித்தல் முதலியன.

## 6. படைப்பாற்றல்

மாணவர்களின் படைக்கும் ஆற்றலை வளர்ப்பதிலும், தாய்மொழிப் பயிற்சி உற்றுழி உதவும். புதிதாகப் படைக்க வேண்டும் என்னும் ஓர் உணர்ச்சி இயற்கையிலேயே ஒவ்வொருவருக்கும் இருக்கின்றது. அதைத் தாய் மொழியின் வாயிலாக வெளிப்படுத்துவதற்கு நல்ல இடமுண்டு. கட்டுரைகள், சிறு நாடகங்கள், சிறு கதைகள், செய்யுட்கள், சொற்பொழிவுகள் முதலிய எழுத்து, பேச்சு வழிகளில் இவ்வாற்றலைத் தட்டி எழுப்பி அது வளர்வதற்கான முறையில் அவர் உள்ளத்தைப் பண்படுத்தி விடலாம். அப்பண்பட்ட உளமாகிய களத்தில் போடும் ஆற்றலாகிய விதை முளைத்து, வளர்ந்து தழைத்துச் செழித்துப் பூத்துக் காய்த்துப் பின்னர்ச் செய்யுட்கள் முதலிய கனிகளாகப் பழுத்துப் பயன் கொடுக்கலாம். ஆயிரத்தில் ஒரு கோடியில் ஒரு மாணவனாவது இங்ஙனம் சிறந்து, பிற்காலத்தில் கம்பனாகவோ, பாரதியாகவோ விளங்கலாம். அதற்கு வேண்டிய அடிப்படை பள்ளியிலேயே போடுவதும் அதற்கு வேண்டிய வாய்ப்புக்களைத் தருவதும் மொழிப்படிப்பின் சிறந்த நோக்கங்களில் ஒன்று ஆகாதோ; குமரகுருபரர்,

"கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்,
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வதுபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு."

என்று சிறப்பிக்கும் கருவிலே திருவமைந்த புலவர்கள், மொழிப்படிப்பாளர்களிலிருந்து தோன்றுபவரல்லவா?

## 7. சிறந்த மனப் பயிற்சி

பள்ளிக்கூட வாழ்வில் காரண காரிய முறையில் பொருள்களை உணர்ந்து உட்கொண்டு, வெளிப்படுத்துவது என்னும் சிறந்த மனப் பயிற்சி வேண்டற்பாலது. இது தாய்மொழியின் வாயிலாக எளிதில் எய்தலாம். மேலும், தாய்மொழிப் படிப்பு, ஒரு மாணவருடைய நிலைத்ததும் ஆழ்ந்ததுமான ஈடுபாட்டைக் கல்வியிற் செலுத்தி முறைப்படி ஒழுங்காக வேலை செய்தல், குறித்ததைக் குறித்த மொழியில் வெளியிடல், கலைத் துறைகளில் இறங்கி உழைத்தல் முதலிய நற்பழக்கங்களில் பயிற்சியையும் அளிக்கும் என்றும் மொழிமுறை அறிந்த அறிஞர் உறுதியாக அறுதியிட்டுச் சாற்றுகின்றனர்.

## 8. நாட்டு வரலாறு

தாய்மொழி இலக்கியத்தைப் படிப்பதனால் அந்நாட்டு வரலாறு, வாழ்க்கைமுறை, நடை, உடை, எண்ணங்கள், பழக்க வழக்கங்கள், பொருள், அரசியல், சமய நிலைகள், இசை, கூத்து முதலிய கலைகள், அந்நாட்டில் நிறுவப்பட்ட நிலையங்கள் முதலியவற்றையும் நன்றாய் உணர்வதற்கும் அவற்றின் இயல்புகளை நன்றாய் ஆராய்வதற்கும் ஆன ஒரு நல்ல வாய்ப்பை அளிக்கும் நோக்கமும் மொழிப் படிப்புக்கு உண்டு. வரலாற்றுப் படிப்பினாலோ, கல்வெட்டு, செப்புப் பட்டயங்கள், பழங் கட்டடங்கள், கோயில்கள், நாணயங்கள், அயல் நாட்டினர் குறிப்புக்கள் முதலிய பல சான்றுகளாலோ மொழிபெயர்ப்பு நூல்களாலோ முற்றிலும் உணர முடியாத உண்மைகளாகும் இவை.

## 9. மொழிப்பற்று, நாட்டுப்பற்றுகள்

முன்னோர் எழுதிவைத்துச் சென்ற தமிழ் நூல்களைப் படிப்பதனால் மொழிப்பற்றும் அதன் வாயிலாக நாட்டுப் பற்றை விளைப்பதும் மொழிப்படிப்பின் நோக்கமும் பயனுமாகும். பெற்ற தாய்மொழியும், பிறந்த நன்னாடும் நற்றவ வானினும் நனி சிறந்தனவன்றோ? இவற்றைப் போற்றார் மக்களல்லர்; மாக்களே. இவை அமைவதற்குத் தாய்மொழிப் படிப்பு வேண்டுமே!

## 10. நல்லொழுக்கமும் கடவுள் அன்பும்

தமிழ் மொழியில் அறம் பொருளின்ப வீடுகளினியல்லைத் திறம்பட விளக்கும் சீரிய நூல்களும், உள்ளத்தை உருக்கிக் கொள்ளைகொண்டு கடவுள் நெறியிற் செலுத்த வல்ல கடவுள் வாழ்த்து வணக்கப் பாடல்களும், அறநூல்களும் ஒழுக்க முறைநூல்களும் எண்ணிறந்தன உள்ளன. இவற்றைப் படிப்பதால் நல்லொழுக்கமும், கடவுள் அன்பும், நேர்முகமாகவும் மறைமுகமாகவும் அமைய இடமுண்டு. நன்னெறி வகுப்புகளில் இவற்றை ஏற்றவாறு பிற ஆசிரியர்களும் மேற்கொள்ளலாம். தாய்மொழி இலக்கியப் பயிற்சி ஒழுக்க அமைப்பில் ஒரு சிறந்த பங்கை எடுத்துக் கொள்ளுகிறது என்பதில் ஐயமில்லை. "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக," "கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅ ரெனின்?" என்றெல்லாமல்லவோ கல்வியின் முடிந்த நோக்கங்களாகத் தமிழ்மறை வகுக்கின்றது. மொழிப்படிப்பின் சிறந்த நோக்கங்களை **ஹான்ஸ்சின்** என்னும் பேராசிரியர், திறமை, ஒழுங்கு, அறிவு, இன்புறல் என்ற நான்கில் அடக்கிவிடலாம் என்பார்.

எனவே, இதுகாறும் கூறியவாற்றால் தாய்மொழிக்கு ஏன் முதலிடம் கலைத் திட்டத்தில் கொடுக்கவேண்டும் என்பதும், கல்விக்கே தாய்மொழி உயர்நிலை என்பதும், அதன் இன்றியமையாமையும் இனிது விளங்கும்.

## III. சிந்தையும் மொழியும்

உயிர் இனங்கள் எல்லாம் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை அவ்வவ்வினத்தின் வளர்ச்சிக் கேற்றவாறு உணர்ச்சிகளைப் பல வழிகளில் வெளிப்படுத்துகின்றன. இதுவும், இயற்கையிலேயே அவற்றில் அமைந்து கிடக்கின்ற பசி, வேட்கைமுதலியனபோல இன்றியமையாத ஓர் இயல்பாகும். ஆறறிவு படைத்து, முழு உள்ளம், உடல் வளர்ச்சிகளைப் பெற்றுள்ள மக்கள் இனத்தில் எண்ணங்களைப் பிறருக்குத் தெரிவித்துப் பிறர் நினைக்கும் கருத்துக்களை அறிந்து கொள்வதற்கு மொழியே சிறந்த கருவியாக அமைந்துள்ளது. மனிதன் தோன்றிய அன்றே, மொழியும் தோன்றிவிடவில்லை. முதல் மனிதன் விலங்குகளைப் போலவே முதலில் ஒலிக்குறிகளாலும், பின்னர் முகக்குறி, கைக்குறிகளாலும் தன் உள்ளக்கருத்தைத் தெரிவித்திருக்கவேண்டும். நாளடைவில் தனித்து, அலைந்து திரிந்து, வாழ்ந்து வந்த மனிதன், ஒன்று

கூடி வாழ்த் தலைப்படவே, மொழி தோன்றலாயிற்று. ஒன்றுபட்ட மக்கட்பொது வாழ்க்கைக்கு மொழி இன்றியமையாதது. பல்வேறு பட்ட கொள்கைகள், சமயங்கள், ஏற்றத்தாழ்வுகள், குலங்கள், நிலைகள், தொழில்களால் வேற்றுமையுற்ற பல பிரிவினர்களும் பேசும் தாய் மொழியால் ஒன்றுபடுகின்றனர். மனிதர்க்குப் பேசும் திறமை கைவந்திருக்கிறது. அதனால் மக்களை மாக்களினின்றும் வேறு பிரித்தறியும் பல சிறப்பியல்களில் மொழியும் ஒன்றாகும். மொழியினால் தான் எண்ணம் வெளிப்படுகிறது. எண்ணமும், அதை வெளியிடும் மொழியும் ஒன்றையொன்று விட்டுப் பிரிக்கமுடியாத தொடர்பைப் பெற்றிருப்பதனால், ஒன்றைவிட்டு மற்றொன்றைவளர்க்க இயலாது. இன்னும் பேசப்படும் சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும், பேசுபவனுக்கும் கேட்பவனுக்கும், நேரான தொடர்பையும் அஃது ஏற்படுத்தி விடுகிறது.

## IV. தாய்மொழி

உலகிற் பல மொழிகள் இருப்பினும், பிறந்தது முதல் இறக்கும் வரை, தொட்டிலிருந்து சுடுகாடுவரை ஒருவர் கேட்டும் பேசியும் வரும் மொழியே தாய் மொழி யெனப்படும். அதுவே, குழந்தைக்கு இயல்பான மொழியாகும். குழந்தை பிறந்து, மொழிபயிலுங்கால் அதன் தாயால் முதற்கண் பாலூட்டிச் சீராட்டித் தாலாட்டிப் பாராட்டிப் பயிற்றப்படும் மொழியே தாய்மொழியெனப்படும். இச் சிறப்புக் கருதியே நம் மொழி "பால்வாய்ப் பசுந்தமிழ்" எனப்படுகிறது. அன்னை வாயிலாகக் கேட்டு மழலை மொழிந்து தேறிய பின்னரே, அப்பனாலும், ஆசிரியனாலும் விரிவடிவிற் பயிற்றப்பெற்று அறிவு விரிவெய்தப்பெறும் ஒருவர் இறைவனை அடைந்து பேரின்ப நுகர்ச்சியில் கலைப்பட விழையுங்கால், அங்கும் அருள் உருவாகிய தாயே முதற்கண் அவரைப் பண்படுத்தி அப்பனாகிய இறைவனை அறிவித்து அவன்பால் உய்ப்பவளாவள். இதனை 'மெய்யருளால் தாயுடன் சென்று பின் தாதையைக் கூடிப்பின் தாயை மறந்தேயுமதே நிட்டை' என்னும் முற்றத் துறந்த முனிவர் பெருமானாகிய பட்டினத்தடிகள் அருள் மொழியானு முணர்க. தாய் வழியாகத் தந்தைக்கு ஆளாதலை யுணர்ந்தே முதற்கண் தாயைக்குறிப்பிட்டு **மணிவாசகப் பெருந்தகையாரும்** "அம்மையே, அப்பா, ஒப்பிலா மணியே" என்று திருவாய் மலர்ந்தருளினார். மேலும் இது, கருவிலேயே திருவமைக்கு மொழியாகும்.

எனவே, குழந்தை முதன் முதல் கற்கவேண்டிய மொழி தாய்மொழி எனக் கொள்ளப்படுகிறது. இதில் நன்கு கற்றுத் தேறும் வரையில் அயல் மொழிகளைக் கற்பிக்க முயலுதல் முறையன்று.

## V. மொழி செய்யும் வேலைகள்

**உட்கொள்ளல், வெளியிடுதல், படைத்தல் :** மொழிக்கும் எண்ணத்துக்கும் பிரிக்க முடியாத தொடர்புண்டு என்று கண்டோம். மக்கள் தொகுதியாக வாழ்ந்து தம் கருத்தை வெளியிடுவதற்கும் பிறர் கருத்தை உட்கொள்ளுதற்கும் மொழி இன்றியமையாதது என்னும் உண்மையும் உணர்ந்தோம். மொழியின்றியே குறிகளாலும், படங்களாலும், பிறவாற்றாலும் கருத்தை வெளியிடலாமாயினும், அவற்றின் பொருளைத் திரிபாகக் கொள்ள மிகுதியும் இடமிருப்பதோடு, தெளிவாகவும் அறிய இயலாது. சொற்களுக்கோ எனின், பொருள்களுடன் இயைபு நன்றாய் உண்டாயிருக்கிறது. இருளிலும் பொருள்களைச் சொற்களின் வாயிலாய் விளக்கி விடலாம். அன்றியும், மொழி கனித்த நிலையில் ஒருவர் எண்ணுவதற்கும் கருவியாகிறது. அஃதாவது, ஒருவர் எண்ணும்போது அவர் இயல்பாய்ப் பேசும் மொழிச் சொற்களைச் சொல்லாமற் சொல்லி உள்ளத்துக்குள்ளேயே பயன் படுத்திக்கொள்கிறார். எனவே, ஒருவர் கருத்துப் பிறருக்கும், பிறர் கருத்து ஒருவருக்கும் தெரியவேண்டுமானால்,மொழியாகிய கருவி வேண்டும். பிறர் கருத்துக்களைப் பேச்சு, படிப்பு, எழுத்துக்களினால் உட்கொள்ளல், அவற்றை அவ்வாறே வெளியிடல், புதிதாக ஆக்கல் ஆகிய மூன்று வேலைக் கூறுகள் மொழிக்கு உள்ளன.

**உட்கொள்ளல் :** எண்ணத்தையும் அறிவையும் பெற்று அவற்றை வளர்க்கவேண்டும் என்னும் நோக்கத்தோடேயே நாம் குழந்தைகளைத் தாய்மொழியிற் படிப்பதையும் பேசுவதையும் கேட்கச் செய்கிறோம். அதோடு அவர்களையே படிக்கச் செய்கிறோம். சிறந்த நூல்களின் வாயிலாய் உயர்ந்த உணர்ச்சிகளை உண்டாக்கி அவற்றிற்குத் தக்கவாறு அவர்கள் எங்ஙனம் நடந்து கொள்ளுகிறார்கள் என்பதையும் கவனித்து, அவற்றிற்கு ஏற்பவே, அவர்கள் நடந்துகொள்ள வேண்டிய ஆற்றலையும் வளர்க்கிறோம். எழுதப் படிக்கத் தெரியாதவர்கள், கேள்வி வாயிலாகவும், வானொலி, படக் காட்சிகள், நாடகங்களின் வாயிலாகவும் உணர்ந்து கொள்ளுகின்றனர். இவ்விரு நிலைகளிலும் பொருள் உணர்ந்து

கொள்ளுவதாலேயே எண்ணம், சொல்வளம், அறிவு எல்லாம் வளர்கின்றன.

**வெளியிடல் :** இனி உட்கொண்ட இக்கருத்துக்களை வெளியிடலாகிய மற்றொரு வேலையும் மொழிக்குண்டு. ஒரு குழந்தையின் உள்ளத்தில் இருக்கும் எண்ணத்தைத் தெளிவாகவும், கோவையாகவும் எடுத்துரைக்கும் ஆற்றலை இவ் வெளியிடற் பகுதியினாலேயே மொழி உண்டாக்குகிறது. நமது உட்கருத்துக்களைப் பெரும்பாலும் நாம் வாய்மொழியாகவே வெளியிடுகின்றோம். எழுதத் தெரிந்தவர்கள் எழுத்து வாயிலாகவும் அறிவிக்கின்றனர் ; கடிதங்கள், நூல்கள், நாடகங்கள், கட்டுரைகள், செய்யுட்கள், சிறு கதைகள், முதலிய பலவழிகளிலும் வெளியிடுகின்றனர். கைவேலைகள், நடித்துக் காட்டல், ஓவியம் எழுதுதல் முதலியனவும் மொழியின் வெளியீட்டுப் பகுதிகளே. இவ்வாறு குழந்தைகள் உட்கொண்டவற்றை வெளிவிடுவதால், அவை உள்ளத்தில் அமைந்து நிலைத்திருக்கும். ஆகலால், ஆசிரியர்கள் முதலிலிருந்தே தம் கருத்தை வெளியிடுவதற்கான முயற்சிகளில் குழந்தைகளை ஈடுபடும்படிசெய்து, அதற்கு வேண்டிய இடம் பொருள் ஏவல்களை இளமையிலிருந்தே தரவேண்டும்.

**படைத்தல் :** படைக்கும் ஆற்றலைத் தட்டி யெழுப்பிக் கிளர்ச்சி செய்து மாணவர்களையும் கவிகள் கட்டுரைகள் முதலியன எழுதத் தூண்டும் வேலையையும் மொழி செய்கின்றது. அவர்களின் மன ஆற்றலுக்கும், அறிவு வளர்ச்சிக்கும் ஏற்றவாறு அவர்களையும் படைப்புக் கடவுளர்களாக்கலாம். பல நூல்களைப் படிக்கும்போதும், பேராசிரியர்கள், அறிவிற் சிறந்த அறிஞர்களின் பேச்சுக்களைக் கேட்கும் போதும் பிள்ளைகளுக்குப் புதிய எண்ணங்கள் தோன்றக் கூடும். அவ்வெண்ணங்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தவும், வினாக்களுக்கு விடையளிக்கவும், பள்ளிக்கூட இதழ்களுக்கும் கட்டுரைகளும் கதைகளும் எழுதவும், செய்யுட்கள் ஆக்கவும், செய்யுள் விளக்கும் ஓவியங்கள் வரையவும், சிறு நாடகங்கள் எழுதவும் பயன்படும். நாம் தடைசெய்யாவிட்டால், இயற்கையிலேயே அமைந்துள்ள படைக்கும் ஆற்றலால், மாணவர்கள் தம் கற்பனையிலிருந்து இன்னோரன்ன பல வேலைகளைச்செய்ய விருப்பத்தோடு முன் வருவர். அவர்களுக்கு உதவியும் தூண்டுகோலுமே வேண்டியிருக்கின்றன. இவ்வியற்கை ஆற்றலைத் தடுக்காமலும், நசுக்காமலும் இருப்பதோடு நாம் வளர்ப்பதற்கும் உரிய பயிற்சிகளும் வாய்ப்புக்களும் கொடுக்கவேண்டும். மொழியின் இம் மூவகை வேலைகளும்

சரிவர நடைபெற்று மாணவர்கள் திறமை எய்தும் பொருட்டே, பேச்சு, படிப்பு, எழுத்து ஆகிய முப்பயிற்சிகளையும் இளமை தொட்டே, எல்லா வகுப்புக்களிலும் பல வழிகளில் ஆசிரியர்கள் வற்புறுத்த வேண்டும்.

கீழ்க்கண்ட சில குறிப்புகளைப் பின்பற்றி ஆசிரியர் படைப்பு ஆற்றலை வளர்த்தும், மேர்பார்வை பார்த்தும் ஒருவாறு மாணவர்களுக்கு உறுதுணையாக நிற்கலாம். (1) இவ்வாற்றலைத் தூண்ட வேண்டுமென்றும் அதற்கு வேண்டிய வாய்ப்புக்களைத் தரவேண்டுமென்றும் ஒவ்வோர் ஆசிரியரும் கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும் (2) இவ்வாற்றலைக் கீழ் வகுப்புக்களிலேயே தொடங்கி, அங்கேயே விட்டுவிடாது மேல் வகுப்புக்களின் முடிவுவரையிற் கொண்டு போகவேண்டும். (3) இவ்வாற்றலையும் தேர்வுகளின் வாயிலாக அளந்தறியலாமோ என்று ஆராயவேண்டும். (4) உண்மையான ஆற்றல் வெளிவந்து வளர வேண்டுமாயின், எதை, எப்படி, எப்பொழுது எழுதுவது என்னும் உரிமையை மாணவர்களுக்கே விட்டுவிட வேண்டும். அவர்களது கொள்கைகளுக்குத் தடைகளை அமைக்கக்கூடாது. (5) விரும்பும் நடையிலேயே எழுதும்படி விட்டுவிடுதல் வேண்டும். தவறுகள் இருந்தால் திருத்தலாம். (6) தான் எழுதினால், தன் ஒருசாலை மாணவர் எள்ளி நகையாடுவரோ என்ற உணர்ச்சியும், அச்சமும், கூச்சமும் உண்டாகாதவாறு ஆசிரியர் பார்த்துக்கொள்ள வேண்டும். (7) எதையும் எழுதிக கொண்டுபோய் ஆசிரியரிடத்திற் காட்டலாம். ஆசிரியர் அஞ்சத் தக்கவரல்லர்; அன்புடையர்; பரிவுடையர் என்ற எண்ணத்தை ஆசிரியர்கள் வகுப்பில் நிறுவுதல் நலம். தமது அறிவு, ஆற்றல், பட்ட அறிவுகளை அளவு கோலாகக் கொண்டு ஆசிரியர்கள் பார்க்காமல் மாணவர் நிலையில் தம்மை வைத்துக்கொண்டு பார்த்தல் வேண்டும். (8) எழுதிக்கொண்டு வந்ததை ஒருசாலை மாணவர் எங்ஙனம் ஏற்றுக் கொள்வார்களோ என்ற அச்சத்தையும் நீக்கல் ஆசிரியர் கடமை. எல்லோரும் அறியும்படி வகுப்பில் படித்துத்தான் ஆகவேண்டும் என்று கட்டாயப் படுத்துதல் நலமன்று. சிலர் விரும்புவர். பலர் விரும்பார். விரும்பினோர் படிக்கலாம். (9) மாணவன் படைக்கத் தொடங்குவது அவனுடைய பட்டறிவு, அறிவின் ஆழம், அகலம், சொற் களஞ்சியம் முதலியவற்றைப் பொறுத்து இருக்கிறது. எனவே, ஆசிரியர் வகுப்பில் நடக்கும் பாடங்களுக்கு மேல்

அவ்வப்போது பாடத்திற்குப் புறமான நூல்களிலிருந்து ஒப்புமைச் செய்யுட்கள், செய்திகள், மேற்கோள் முதலியவற்றையும், தாம் பட்டறிந்தவற்றையும் பல நிலைகளிலும் ஏற்றவாறு சொல்லிக்கொடுத்து மாணவரின் அறிவை வளம்படுத்தலாம். (10) எந்த உருவத்தில் அவன் படைப்பு வெளிவரப்போகின்றது என்பதையும் ஆசிரியர் உறுதி செய்யக்கூடாது. செய்யுளா, உரை நடையா, சிறு கதையா, சொற்பொழிவா, சிறு நாடகமா—இது மாணவனது மனப்பான்மையைப் பொறுத்தது. (11) கால அட்டவணையில் படைப்பு வேலைக்கென ஒரு தனி நேரத்தை ஒதுக்கிவைக்கலாம். (12) இதற்கென, இவ்வேலையில் ஈடுபடும் மாணவர்களுக்குத் தனிக் கழகமும் நிறுவலாம். (13) பள்ளிக்கூட இதழின் வாயிலாகவும் இதை வளர்க்கலாம். (14) எழுதும் அளவைக் கவனிக்காது தகுதியையே கருத வேண்டும். (15) கீழ் வகுப்புக்களில் ஆசிரியர் மட்டுமே ஒருவன் வேலையை ஆராய்ந்து நல்லியல்புகளை மட்டும் எடுத்துக் கூறலாம். (16) மேல் வகுப்புக்களில் மாணவர்கள் எழுதியதை அவர்களையே படிக்கச் செய்து அவர்களைக் கொண்டே குற்ற நற்றங்களை ஆராயச் செய்யலாம். ஆனால், எவர் செய்யும் ஆராய்ச்சியும் ஊக்கத்தைக் கெடுப்பதாய் இராமல் மேலும் மேலும் வளர்க்கத் தக்கதாய் இருத்தல் நலம். இதற்கு ஆசிரியரே வழியைக் காட்டவேண்டும். (17) நல்லியல்புகளையே, சிறப்பாகக் கீழ் வகுப்புக்களில் கூறுவதை ஒரு வழக்கமாகக் கொள்வது நலம். மேல் வகுப்புக்களிலும் குறைகளை எடுத்துக் கூறினால், அவற்றினிடத்தில் குறைகூறுகின்றவர்கள் எவற்றை வைத்து நிறைப்பார்கள் என்பதனையும் ஆயத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும். (18) இதற்கென ஒதுக்கி வைக்கும் நேரத்தில் ஆசிரியர் மாணவர்களுடன் பொதுவாக உரையாடிப் பார்ப்பதால், எழுதுவதைப் பற்றிய பல எண்ணங்களையும் கருத்துக்களையும் அவர்களுக்கு ஊட்டுவதோடு, அவர்களிடமிருந்தும் மிகுதியாக வரவழைக்கவும் இடமுண்டு. (19) வகுப்பைச் சிறு சிறு உட்பிரிவுகளாகவும் பிரித்து எழுதச் செய்யலாம்.

## VI. மாணவனின் இன்றைய வாழ்வும், எதிர்கால வாழ்வும்

மாணவனின் ஆற்றல்களையும் பற்றுக்களையும் இன்றைய பள்ளி வாழ்விற்கு வேண்டியவற்றின்பால் செலுத்துவதோடு அவனது வருங்கால வாழ்விற்கு அடிப்படை போடுவதிலும் செலுத்துதல்வேண்டும். இவ்வுண்மை கல்வி முறை

வல்லார் கண்டதாகும். நாம் எச்செயலைச் செய்தாலும் எதிர்கால வாழ்வை, நிகழ்கால வாழ்வோடு பொருத்தியே செய்கின்றோம். எதிர்காலத்துக்கு வேண்டியவை இன்னவையென்பதை ஓர்ந்து, நிகழ்கால வாழ்வில் அவற்றிற்கு அடிகோலுகின்றோம். கல்வியிலும் அப்படியே செய்ய வேண்டும். இவ்வுலகில் இறைவனால் படைக்கப் பெற்ற எண்ணிறந்த உயிர் இனங்களிலும் மக்களே சிறந்த முறையில் கற்கின்றார்கள். ஏனெனில், அவர்களுக்குக் கற்பதற்கு வேண்டிய சிறந்த முழு வளர்ச்சியுற்ற மூளையும், அதைச் சேர்ந்த நரம்புத் தொகுதியும், கற்றலுக்கு ஏற்ற பிற இயல்பூக்கங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இயற்கையில் அமைந்துள்ள அறிவைச் செயற்கை யறிவாகிய கல்வியால் பல வழிகளில் சீர்திருத்திக்கொண்டு, நம் முன்னேற்றத்திற்கு வேண்டிய ஒழுங்கு வகைகளைத் தேடிக்கொள்ளும் ஆற்றல் உடையவர்களாய் மக்கள் இருக்கின்றனர். கல்வி யென்பது நம்முள் இல்லாத ஒன்றைப் புதிதாகப் புகுத்துவதன்று. இயல்பாக நமக்குள்ள ஊக்கங்களும், பிறவிப் பண்புகளும், அவற்றால் விளையும் நலன்களும் நம் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு பொருத்திக்கொள்ளப்படுவதே கல்வியாகும். கல்வியில் புதிய அடிப்படையாக ஒன்றும் போடப்படுவதில்லை. இயற்கை அறிவையும், பிறவிப் பண்புகளையுமே அடிப்படையாகக் கொண்டு, அவற்றை இடங்களுக்கு ஏற்றவாறு திருத்தியும் பொருத்தியும் அமைப்பதே கல்வியாகும். சுருங்கக் கூறின், கற்றல் இயற்கை யறிவைத் துணையாகக்கொண்டு கட்டப்படுகின்ற இயற்கைக் கட்டடமே யாகும். எடுத்துக் காட்டாக, இசை, பேசுதல் முதலியவைகள் பிறவிப் பண்புகளிலிருந்து கற்கப்படுகின்ற செயற்கைத் தொழில்களாகும். நுரையீரல்களிலுள்ள காற்றினால் குரல் நாண்கள் அசைந்து ஏற்படும் குரலே ஓசையாகின்றது. இது பல மாறுதல்கள் அடைந்து பேச்சாகவும் இன்னிசையாகவும் மாறுகிறது.

கல் என்னும் வேரின் அடியாகக் கற்றல் என்னும் தொழிற் பெயர் பிறக்கின்றது. கல்வி, கல்லாமை, கல்லூரி, கலை, கலைஞன், கற்பு முதலிய சொற்களும் பிறக்கின்றன. இயற்கை யறிவைக் கல்வி, கல்வியானது கிளர்ச்சி செய்கிறது; அதை வளர வைக்கிறது; என்பதே இதன் உண்மைப் பொருளாம். உழுது எருவிட்டுப் பயிர் செய்து பண்படுத்தாத வெறு நிலத்தில் பயிர் செழித்து வளருமோ? அதுபோலவே கல்வியாற் கிளர்ச்சி செய்யப்பெற்று வளராத அறிவும் சிறந்தோங்குவதில்லை.

இங்ஙனம் அறிவை வளர்க்கும்போது எதிர்கால வாழ்விற்கு இன்றியமையாத தேவைகளுக்கும் அறிவுக்கும்வேண்டிய அடிப்படை நிகழ்காலத்திலேயே போடப்படவேண்டும். நிகழ்கால வாழ்வில் காணக்கிடக்கும் மாணவனது அறிவு ஆற்றல்களை அக்காலத்துக்கு வேண்டிய பயனைச்செய்வதில் மட்டும் செலுத்தி நிறுத்தி விடாமல், அதற்கு மேலும், முழு வாழ்க்கைக்கும் வேண்டியவாறு அடிகோலுவதே முறையாகும். அதற்குச் செயல்முறையில் வரத்தக்க, நிகழ்கால, எதிர்காலத் தேவைகளை எல்லாம் ஒன்று படுத்தி முன்னவற்றை நடத்தும் போதே, பின்னவற்றிற்கு அவ்வக்காலங்களில் விரிந்து கொடுத்து வளர்த்துக்கொள்ளத் தக்க ஆற்றலையும் நம்மாணவர்கள் பெறுமாறு உள்ளடக்கி வைக்கவேண்டும்.

தாய்மொழிப் படிப்பில் நிகழ்காலப் பயன்களாக அம்மொழியில் தெளிவாகப் பேசுவதற்கும் பிறர் பேசுவதைக் கேட்டுப் பொருள் உணர்வதற்கும், படிப்பதற்கும், படித்துப் பொருளுணர்வதற்கும், எழுதுவதற்கும், எழுதிப்பொருளுணர்வதற்கும் ஆன ஆற்றலை வளர்ப்பதைக் கொள்கிறோம். சுருங்கக் கூறின், தொடக்க நிலைப் பள்ளியை விட்டு மாணவர் நீங்கும்போது கடிதங்கள் எழுதவும் வந்தவற்றைப் படிக்கவும் திறமை கைவரச் செய்வதோடு, தாய் மொழியில் செய்தித் தாள்களைப் படித்து உட்நாட்டுச் செய்திகளையும் உலகச் செய்திகளையும், அறியும் அறிவினை விளைவிப்பதும் தாய் மொழிப் படிப்பின் நோக்கம் என்று எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். அஃதாவது நிலைத்த படிப்பறிவு அமைய வேண்டும் என்பதாம். அரசியலார் வெளியிட்ட தாய்மொழிப் பாடத் திட்டத்தில் இந்நோக்கமே முனைந்து நிற்கின்றது. ஐந்தாம் வகுப்புக்குள் அதாவது பத்து ஆண்டிற்குள் வேண்டிய 2700 சொற்களை அவர்கள் உணர்ந்து திருத்தமாகப் பேசவும், படிக்கவும், எழுதவுமான திறமையை உண்டுபண்ணிவிடலாமெனக் கருதுகின்றனர். செய்தித் தாள்கள், சிறு கதைகள், சிறு இலக்கியங்கள், கையெழுத்துத் தாள்கள் முதலியவைகளைப் படித்தறியும் திறமையையும், அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கோவையாகவும், தெளிவாகவும் பேசும் ஆற்றலையும் கடிதங்கள் எழுதவும், சிறு கட்டுரைகள் வரையவும் ஆன ஆற்றலையும் பெறப் பயிற்சி அளிக்கிறார்கள். இதோடு நின்று விடுபவர்கள் நிலைத்த படிப்பறிவைப் பெறுபவர்கள் என்று எதிர் பார்ப்பதோடு, குடியரசில் தம் வாக்குரிமையின் பொறுப்பை யுணர்ந்து அதைச் செம்மையாக வழங்குவார்கள் என்றும் நம்புகிறார்கள்.

இதற்குமேல், இடைநிலை வகுப்புகளின் இறுதிக்குள் மேற்கூறிய நோக்கங்கள் உறுதியாவதோடு பேராசிரியர்கள் இயற்றிய காவியப் பகுதிகளைப் படித்துச் சுவையுணரும் ஆற்றலும் அறிவு வளர்ச்சியும் பெற்று, தொடர் கதை நூல்கள், துணைப்பாட நூல்கள், எளிய நாடகங்கள், சிறு கட்டுரைகள், பலதிறப்பட்ட கடிதங்கள், இலக்கணம் ஆகியவற்றிலும் பயிற்சியுற்று, மேற்கோள் நூல்களில் பொருள்களைத் தேடி அடைதல், அகராதி, அட்டவணைகள் புரட்டிப் பழகுதல்களிலும் பயிற்சி பெறவேண்டும்.

அவர்கள் உயர்நிலை எய்தும்போது இவையெல்லாம் இன்னும் உறுதியும் வளமும் பெறுவதோடு, சிறந்த காவியங்களையும், சிக்கல் ஆன பொருள்களைப்பற்றிய விரிவான கட்டுரைகளையும் ஆராய்ச்சி முறையோடு படித்து இன்புறுவதற்கும், அறிவை மேலும் மேலும் வளர்த்துக் கொள்வதற்கும், இலக்கண விதிகளை நன்ருய் உணர்வதற்கும், தாய்மொழியின் வாயிலாகவே எல்லாக் கலைகளையும் படிப்பதற்கும், ஆராய்ச்சி இதழ்களையும் வெளியீடுகளையும் படிப்பதற்கும், அவற்றை ஆராய்ந்து பேசுவதற்கும், ஒழுக்கத்தைப் பண்படுத்திக் கொள்வற்கும், மெய்யுணர்வு எய்துதற்கும் போதுமான அறிவு அமையப்பெற வேண்டும்.

உயர்நிலைப் பள்ளியைவிட்டு நீங்கும்போது இவ்வாற்றல்கள் இருக்கின்றனவா என்று தேர்வுகளின் வாயிலாய் அறிவதற்கு மட்டும் தாய் மொழிப் படிப்பு உதவி, அதோடு நின்று விடலாமா? இக்காலப் பயன்கள் கைவரப் பெற்ருல் போதுமா? தேர்வளவில் இவையமையும் என்ருலும், எதிர்கால வாழ்வில் மொழிநலம், நாட்டுநலம், மக்கட் பொதுநலம் முதலியவற்றைக் கவனிக்கும்போது, இது வரையில் கிடைத்த அறிவை அடிப்படையாகக்கொண்டு, பிற்கால வாழ்விற்கு வேண்டிய மேற்கட்டடத்தைத் தாங்களாகவே கட்டிக் கொள்வதற்கான பற்றையும் ஆற்றலையும் தாய்மொழிப் படிப்பு மாணவர்களுக்கு உண்டாக்கி யிருக்க வேண்டும். இதை வைத்துக்கொண்டே, அவர்கள் பிற்காலத்தில் சிறந்த குடிமக்களாய்த் தங்கள் உடல், உள, உயிர் நலங்களைத் தேடிக் கொள்வதோடு மொழியின் நலத்திற்கும், நாட்டின் நலத்திற்கும் பொறுப்பாளிகள் ஆக வேண்டும். எனவே, நமது தாய்மொழிப் படிப்பு, தற்காலப் பயன்களை நோக்கமாகக் கொள்வதோடு, வருங்கால வாழ்விற்கும் அடிகோல வேண்டும். வருங்கால வாழ்விற்கென்றே மாணவர்களின் பிறவிப் பண்பு

களையும் இயல்பூக்கங்களையும் பயிற்றவேண்டும் என்பதைத் தமிழாசிரியர்கள் உணர்ந்து தமிழ்ப்படிப்பை வருங்கால வாழ்வோடு இணைக்கும் வழிவகைகளையும் அறிந்து அதன் இன்றியமையாமையையும் மறக்கக்கூடாது.

## இரண்டாம் பிரிவு

# முறைகள்

**குழந்தை வளர்ச்சியின் நிலைகளுக்கு (தொடக்க, இடை, உயர் நிலைகளுக்கு) ஏற்றவாறு முறைகளையும், பொருளையும் அமைத்துக் கொள்ளல்:** குழந்தையை ஒரு சிறிய மனிதன் என்றாவது, நாம் வேண்டியபடி இயக்கவல்ல ஒரு பொறி என்றாவது கருதாமல் ஒரு தனிப்பட்ட இயல்புள்ள பிறவியாகக் கருத வேண்டும். குழந்தையின் எண்ணங்களும் மனநிலையும், படிப்பறிவும் பட்டறிவும் பெற்று உலக வாழ்க்கையின் சூழ்நிலையினால் வேறுபட்ட ஒரு நிலை யெய்தி அதில் உறுதி பெற்று வளர்ச்சியுற்றிருக்கும் மனிதனின் எண்ணங்களுக்கும் மனநிலைக்கும் முற்றிலும் மாறுபட்டவை யென்று ஆசிரியர்கள் அறிந்துகொள்ள வேண்டும். ஓர் ஐந்து ஆண்டுச் சிறுவனும் அவன் தந்தையும் உலவப்போகின்றனர் என்று வைத்துக்கொள்ளுவோம். தந்தை வழியில் கவனிக்கும் பொருள்களும் மகன் கவனிக்கும் பொருள்களும் அவரவர் மனநிலைக்கும் வளர்ச்சிக்கும் ஏற்றவாறு முற்றிலும் மாறுபடுவதில் வியப்பொன்றும் இல்லை. பல நிறங்கொண்டு பறந்துசெல்லும் வண்ணத்திப்பூச்சி, பிள்ளையின் கண்ணையும் கருத்தையும் கவர்கிறது. இன்னும் வேலியில் ஓடும் ஓணானையோ, குளத்தில் பூத்து விளங்கும் செந்தாமரை மலர்களையோ, தண்ணீரில் தத்தியோடும் தவளைகளையோ, அவன் கவனிக்கிறான். அவற்றின் இயற்கை யழகில் ஈடுபடுகிறான். ஆனால், உலக வாழ்க்கையிற் கிடந்துழலும் தந்தையோ அதற்கேற்ப வாய்ந்துள்ள மனநிலையோடு, தன்னைச் சூழ்ந்த இயற்கைப் பொருள்களையும் பிறவற்றையும் வேறு கண் கொண்டு பார்க்கிறார். வயல்களில், தலைதூக்கி "மேலலார் செல்வமே" போன்றும் "சுருக்கத்து வேண்டும் உயர்வு" என்பதை எடுத்துக் காட்டிக்கொண்டும் நிற்கின்றன என்று புலவர்கள் நினைக்கத் தக்க, விளையாத நெற்பயிரையும், "பெருக்கத்துவேண்டும் பணிவு" என்பதை எடுத்துக் காட்டுகின்றன என்றும், "கல்விசேர் மாந்தர்" போல் தலைவணங்கிக் கிடந்தன' என்றும் புலவர்கள் புகலுமாறு, அந்நெற்பயிர்

விளைந்து காய்த்துக்கிடக்கும் இயற்கை யழகையும் அவர் அழகுணர் கண்கொண்டு பொதுவாகப் பார்க்கின்றாரில்லை. அவருடைய மன வெழுச்சிகளும் உணர்ச்சிகளும், அவர் வாழ்க்கை நிலைக்கேற்றவாறு மாறுபடுகின்றன. வயல் களையும், தோட்டங்களையும், அவற்றில் விளைந்து கிடக்கும் பயிர்களையும், அவர் வேறு நோக்கத்தோடு பார்க்கலாம். அவற்றின் இயற்கை அழகில் ஈடுபடாது. அவற்றை விற்றுப் பெறும் விலைமதிப்பையும் செலுத்தவேண்டிய வரிப்பணத் தையும்பற்றி அவர் நினைத்துக்கொண்டு போகலாம்.

எனவே, குழந்தை உலகம் ஒரு தனி உலகம் என்னலாம். நாம் குழந்தை உள்ளத்தை நன்குணர்ந்து, குழந்தை நிலையில் நம்மையும் வைத்துக்கொண்டு பார்த்து, குழந்தை வளர்ச்சி யின் பல நிலைகளையும் உற்று நோக்கி அவ்வந்நிலைகளுக்கு ஏற்றவாறு கல்விமுறை, கலைத்திட்டம், பாடத்திட்டம், கற்பிக்கவேண்டிய பாடங்கள், பொருள்கள் முதலியவற்றை அமைக்கவேண்டி யிருக்கின்றோம். இயற்கையைப் பின் பற்றியே கல்வி கற்பிக்கப்பட்ட வேண்டுமாதலால் அதற்கு முரண்படாது, குழந்தையின் வளர்ச்சிக்கும், மனநிலைக்கும் ஏற்ற பாடங்களையும் பொருளையுமே, கலைத் திட்டத்திலும், பாடத் திட்டத்திலும் சேர்க்க வேண்டுமேயல்லாது, இன்னது தான் படிக்கவேண்டும் என்று முதலிலேயே உறுதிசெய்து கொண்டு; அதற்கு ஏற்றபடி கலைத் திட்டத்தையும் பாடத் திட்டத்தையும் அமைத்து, குழந்தையை அதிற் கொண்டு போய்ப் புகுத்துவது முறையன்று. மேலும் குழந்தையின் வளர்ச்சியில் பல நிலைகளிலும் அவ்வப்போது வெளிப்பட்டுத் தோன்றும் ஆற்றல்களை அறிந்து அவற்றின் வளர்ச்சிக் கேற்ற வாய்ப்புகளையும், கலைத்திட்டமும், பாடத்திட்டமும், உள்ளடக்கிக்கொண்டு இருக்கவேண்டும். மற்றும், கற்பிக்கும் முறைகளும் அவ்வந்நிலைகளுக்கு ஏற்றவாறு மாற்றியும், திருத்தியும், புதுக்கியும், சுருக்கியும், பெருக்கியும் அமைத்துக் கொள்ளப்பட வேண்டும்.

உள நூல் அறிஞரின் கருத்துப்படி ஒரு குழந்தையின் வளர்ச்சியைப் பின்வரும் நிலைகளாகப் பிரிக்கலாம் :—(1) **குழவிப் பருவம்**—ஒன்று முதல் ஐந்தாண்டுவரை. (2) **நிலைமாறு பருவம்**—ஐந்துமுதல் எட்டு ஆண்டுவரை. (3) **உருவமை பருவம்** எட்டுமுதல் பன்னிரண்டு ஆண்டுவரை. (3) **முன் குமரப் பருவம்** பன்னிரண்டு முதல் பதினெட்டு ஆண்டுவரை. இதில், ஐந்து முதல் பன்னிரண்டு ஆண்டுகள்வரை, இரு பிரிவுகளாகக்

காட்டப்பட்ட இவற்றையே **பின் குழவிப் பருவம்** அல்லது **இளமைப் பருவம்** என ஒரே பிரிவாகக் கொள்வாரு முளர். (5) **பின் குமரப் பருவம்**. பதினெட்டு முதல் இருபத்தோராண்டு வரை.

இவ்வாறு நாம் குழந்தையின் வளர்ச்சியைப் பல நிலைகளாகப் பிரித்தாலும், வளர்ச்சி ஆங்காங்கு ஒவ்வொரு நிலையிலும் முடிவெய்திப் பின் புதிது புதிதாகத் தொடங்குகிறதென்று கொள்ளாமல், ஒரே தொடர்ச்சியாய்ப் போகின்றது என்று கொள்ளவேண்டும். ஒரு நிலை இங்கு முடிகின்றது, மற்றொன்று அங்கு தொடங்குகின்றதென்று கூறமுடியாது. இருப்பினும், ஒவ்வொரு பருவத்திலும் சிறப்பாக ஆறு, பன்னிரண்டு, பதினெட்டு என்ற ஆண்டுகளில் சில வெளிப்படையான வேற்றுமைகளைக் காணத் தொடங்குகிறோம். அவைகளும் திடீரெனத் தோன்றுவன வல்ல; முறையாக வளர்ச்சியுற்று வெளிப்படுவனவே. இவற்றை வளர்ச்சியின் எல்லைக் கற்கள் எனலாம்.

பள்ளிக்கூட ஆட்சி முறையில் இந்நிலைகளைக் குழந்தை, தொடக்கநிலை, இடைநிலை, உயர்நிலைப் பள்ளிகளுக்கும் கல்லூரிக்கும் ஏற்றனவாகக் கொள்ளலாம்.

## பழைய முறைகளும் புதிய முறைகளும்

**பழைய முறைகள்**: இன்றைய தமிழ் நாட்டில் எத்துணையோ பள்ளிகள் இருக்கின்றன. அவற்றுள் பல்லாயிரக் கணக்காகப் பிள்ளைகள் பயின்று வருகின்றனர். தொடக்கக் கல்வியை எங்கும் எல்லோருக்கும் கட்டாயமாகப் பரவ வைத்து ஒவ்வொரு மாணவரையும் நிலைத்த படிப்பறிவுடையவராக்க வேண்டுமென்பது அரசியலாரின் நோக்கமாகும்.

பண்டைக் காலங்களிற் பல பள்ளிகள் இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. கல்விக் கழகங்கள் இருந்தன என்பதற்கு ஆங்காங்கு பழைய நூல்களிற் குறிப்புகள் காணப்படுகின்றன. "உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும், பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே", "கற்கை நன்றே கற்கை நன்றே, பிச்சை புகினும் கற்கை நன்றே", "கற்க கசடறக் கற்பவை", "கற்றதனால் ஆயபயன் என்கொல்", "எண்ணென்பவேனை யெழுத் தென்ப இவ் விரண்டும், கண்ணென்ப வாழு முயிர்க்கு", "கந்தனையனையவர் கலைதெரிகழகம்" என்பனபோன்ற பழங்காலப் புலவர் கூற்றுகள் கல்வி கற்பிக்கப்பட்டதன் உண்மையை வலியுறுத்தும்.

ஆனால் இக்காலத்தைப் போன்று அத்துணை ஆயிரம் பள்ளிகள் இருந்தனவோ இல்லையோ என்று துணிந்து கூறுவதற்கில்லை. இடைக்காலத் தஞ்சைப் பெருஞ் சோழர்கள் காலத்திலும் பாண்டியர்கள் காலத்திலும் கல்வெட்டுகளில் வடமொழிப் பள்ளிகள் பல நடைபெற்ற விவரங்கள் காணக் கிடைக்கின்றனவே யொழிய, தமிழ்க் கல்விக் கழகங்களைப் பற்றிய குறிப்புகள் அவற்றுள் மிகக் காணுமாறு இல்லை. எனினும் அவ்வப்போது அரசியலிலும், போரிலும், கோயில்களிலும் வழிபாட்டு முறைகளிலும் இன்னோரன்ன பிறவற்றிலும் நிகழும் நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்புகளை அரசர்களும் பிற அரசியற் பணியாளர்களும், ஊராளும் கழகங்களும், பிற பெரியோர்களும், பலரும் அறியவேண்டி விளம்பரஞ் செய்வதற்கென, அவற்றைக் கல்வெட்டுகளாகக் கோயிற் சுவர்களிற் பொறித்து வைக்கும் வழக்கம் இருந்திருப்பதால் அக்காலங்களிற் கோயில்களுக்குப் போவோர் தொகை மிகுதியாயிருந்தது என்பதை நாம் அறிவதோடு, அவர்கள் அனைவரும் கல்வியறிவும் படிப்பறிவும் வாய்ந்தோராய் இருந்து அச் செய்திகளைப் படித்தறிந்து கொண்டிருந்திருக்கலாம் என உய்த்துணரவும் இடமிருக்கிறது.

எனினும் இன்றுள்ள தாள்கள், அச்சுப்பொறிகள் முதலியன அன்றில்லாக் காரணத்தால் பல்லாயிரக் கணக்காய் நூல்களும், செய்தித் தாள்களும், விளக்க, ஆராய்ச்சி இதழ்களும், பிறவும் இன்று வெளி வருவதுபோல் அன்று வந்திருக்க முடியாது. நூல்கள் எல்லாம் ஏட்டுச் சுவடிகளாகவே இருந்தன. இவைகள் கையால் எழுத்தாணிகொண்டு பனை ஓலைகளில் எழுதப்பட்டதால், முயற்சியும், காலமும், பணமும் மிகச் செலவாகும். பல படிகளை விரைவில் எடுக்க முடியாது. சிறந்த நூல்களின் படிகள் சிலரிடமே இருந்திருக்கும். விலைக்கு இவற்றை வாங்க முடியாதிருக்கலாம்; கிடைத்தாலும் விலை மிக உயர்வாக இருந்திருக்கும். இக்காலத்திற்போல ஏழை மாணவர்களும் கூட நூல்களை வாங்கிப் படிக்க இயன்றிருக்காது.

எனவே கற்க வேண்டிய நூல்களை நெட்டுருச் செய்ய நேர்ந்தது. ஆசிரியர்களும் நெட்டுருச் செய்வித்தலே கற்பித்தல் என்று எண்ணினர். மேலும் உரைநடை அக்காலத்திற் பல்கிப் பெருகியில்லை. நூல்கள் அனைத்தும் செய்யுள் உருவிலே இருந்தன. ஆதலால் தான் அவற்றை நெட்டுருச் செய்வது எளிதாயிருந்தது. இலக்கணமும் அங்ஙனமே மனப்பாடம் செய்யும்படி கற்பிக்கப் பட்டுவந்தது.

ஆசிரியர் பேச்சே பாட நூலாயிருந்திருக்க வேண்டும். ஆசிரியர் கற்பிக்கும் பொருள்களைத் தாமே வாயால் எடுத்துக் கூற மாணவர் கவனித்துக் கேட்டுக் கொள்ள வேண்டும். மாணவர் கேள்வி வாயிலாகவே சொல்லுணர்தல், நூலுணர்தல் என்ற மட்டில் மொழித் தேர்ச்சி பெற்றனரே ஒழிய வாய்மொழிப் பயிற்சியும் எழுத்துப் பயிற்சியும் மிகுதியாக இருந்திருக்க முடியாது. பள்ளிகள் ஆசிரியர்களின் வீடுகளிலேயே அமைந்து, ஆசிரியரும் மாணவரும் உடனுறைந்து வாழ்ந்திருக்க வேண்டும். தொல்காப்பியத்தில் நச்சினார்க்கினியர் பாயிர உரையில் எடுத்துக் காட்டும் மேற்கோளில், பாடங் கேட்டல் முறையில், "பொழுதொடு சென்று வழிபடல் முனியான், முன்னும் பின்னு மிரவினும் பகலினும், அகலானாகி அன்பொடு கெழீஇக், குணத்தொடு பழகிக் குறிப்பின் வழிநின்று" முதலிய சொற்றொடர்களைக் காணும்போது அக்காலத்து, ஆசிரியரோடு மாணவர் உடனுறைந்து நெருங்கிப் பழகுவர் என்பதனையும், ஆசிரியரும் ஒவ்வொரு மாணவரையும் நன்கறிந்து, அவரவருடைய, இயல்பு, செயல், ஒழுக்க, விருப்பங்களைக் கண்டுணர்ந்து வைத்துத் தீய இயல் செயல்களை அவ்வப்போது போக்கவும், நல்ல இயல் செயல்களை அவர்களிடை ஆக்கவும் முயல்வர் என்பதனையும் உய்த்துணரலா மன்றோ?

பழங்காலத்து நல்லாசிரியர், நன் மாணவர்களின் இயல்பு ஒழுக்கங்களையும், கல்வி கற்பிக்கும் முறைகளையும், அவற்றை மாணவர் ஏற்றுக்கொண்டு பயின்ற முறைகளையும், நல்லாசிரியரல்லாதார் இயல்பு ஒழுக்கங்களையும், நன் மாணவரல்லாதார் இயல்பு ஒழுக்கங்களையும் கீழ்க்கண்ட தொல்காப்பியப் பாயிர நச்சினார்க்கினியர் மேற்கோள்களி லிருந்தும் தொல்காப்பியத்திலிருந்தும் நன்னூல் பொதுப் பாயிர நூற்பாக்களிலிருந்தும் கண்டுகொள்க:

## 1. தொல்காப்பியப்பாயிர நச்சினார்க்கினியர் மேற்கோள்

### 1. நல்லாசிரியர் இயல்பு. ஆத்திரையன் பேராசிரியன் கூறறு.

"வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்,
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும்
திங்கள் அன்ன கல்வியும் திங்களொடு

ஞாயிறன்ன வாய்மையும் யாவதும்
அஃகா அன்பும் வெஃகா உள்ளமும்
துலைநா வன்ன சமநிலை உளப்பட
எண்வகை உறுப்பினர் ஆகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும் தாஅ ளாண்மையும்
உலகிய லறிதலும் நிலைஇய தோற்றமும்
பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும்,
அறிவும் உருவும் ஆற்றலும் புகழும்
சொற்பொருள் உணர்த்தும் சொல்வன் மையும்
கற்போர் நெஞ்சம் காமுறப் படுதலும்,
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்,
பன்னருஞ் சிறப்பின் நல்லாசியர் ''

2. **ஈவோன்றன்மை.** *கற்கப்படுவோர் கற்கப்படாதோ ரென இரு வகையர்.* **கற்கப்படுவோர் அதாவது நல்லாசிரியர்.** *"மலை நிலம் பூவே துலாக்கோ லென்றின்னர், உலைவி லுணர்வுடையோர்"*

" **மலையே**
அளக்க லாகாப் பெருமையும் அருமையும்
மருங்ககல முடைமையும் ஏறற் கருமையும்
பொருந்தக் கூறப் பொச்சாப் பின்றி.''

" **நிலத் தி**னியல்பே நினைக்குங் காலைப்
பொறையுடை மையொடு செய்பாங் கமைந்தபின்
விளைதல் வன்மையும் போய்ச்சார்ந் தோரை
இடுதலும் எடுத்தலும் இன்னண மாக
இயைபக் கூறுப இயல்புணர்ந் தோரே.''

" **பூ**வின தியல்பே பொருந்தக் கூறின்
மங்கல மாதலும் நாற்ற முடைமையும்
காலத்தின் மலர்தலும் வண்டிற்கு ஞெகிழ்தலும்
கண்டோ ருவத்தலும் விழையப் படுதலும்
உவமத் தியல்பின் உணரக் காட்டுப.''

" **துலாக்கோல்** இயல்பே தூக்குங் காலை
மிகினும் குறையினும் நில்லா தாகலும்
ஐயந் தீர்த்தலும் நடுவு நிலைமையொடு
எய்தக் கூறுப இயல்புணர்ந் தோரே.''

3. **கற்கப் படாதோர் அதாவது நல்லாசிரியராகாதார்.**
" கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு
குண்டிகைப் பருத்தியோ டிவையென மொழிப.''

" இதனுட் **கழற் பெய் குடமாவது** கொள்வோனுணர்வு சிறிதாயினுந் தான் கற்றதெல்லாம் ஒருங்குரைத்தல்."

" **மடற்பனை** யென்பது பிறராற் கிட்டுதற் கரியதாகி இனிதாகிய பயன்களைக் கொண்டிருத்தல்."

" **முடத்தெங்**கென்பது ஒருவர் நீர் வார்க்கப் பிறர்க்குப் பயன்படுவது போல ஒருவர் வழிபடப் பிறர்க்குரைத்தல்."

" **குண்டிகைப் பருத்தி** என்பது சொரியினும் வீழாது சிறிது சிறிதாக வாங்கக் கொடுக்குமது போல, கொள்வோ னுணர்வது பெரிதாயினும் சிறிது சிறிதாகக் கூறுதல். (இவை நான்கும் நச்சினார்க்கினியர் மேற்கோள்களின் அடிக் குறிப்புகள்).

**4. " ஈதல் இயல்பு " அல்லது கற்பிக்கும் முறை.**

" ஈதல் இயல்பே இயல்புறக் கிளப்பின்
பொழிப்பே அகலம் நுட்பம் எச்சமெனப்
பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்
புகழ்ந்த மதியிற் பொருந்து மோரையில்
திகழ்ந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்
கொள்வோன் உணர்வகை அறிந்தவன் கொள்வரக்
கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்."

இதில் " கொள்வோன் உணர்வகை அறிந்து அவன் கொள்வரக் கொடுத்தல் மரபு " என வருவது மாணவரின் மனநிலை, அறிவு வளர்ச்சி, ஏற்றுக் கொள்ளும் ஆற்றல் களுக்கு ஏற்றவாறே கற்பிக்கும் முறைகளும், கலைத் திட்டம், பாடத் திட்டங்களும் அமைய வேண்டும் என்னும் இக்கால உள நூல் முறைகளுக்கு மிகவும் ஒத்திருத்தலும், மேல், கழற்பெய் குடம், குண்டிகைப் பருத்திகளின் இயல்பிற் கற்பிக்கும் முறைகளும் நல்லவையல்ல, ஆசிரியர்களும் நல்லரல்லர், எனக்கூறப்பட்டதும் இக்கால உள நூல் முறை களுக்கு மிகவும் ஒத்திருத்தலும் கண்டு கொள்க.

**5. " கோடல் மரபு " அல்லது மாணவர் பாடம் கேட்கும் முறை.**

" கோடல் மரபு கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
முன்னும் பின்னும் இரவினும் பகலினும்
அகலா னாகி அன்பொடு கெழீஇக்
குணத்தொடு பழகிக் குறிப்பின்வழி நின்று
ஆசற உணர்ந்தோன் வாவென வந்தாங்
கிருவென விருந்தே டவிழென வவிழ்த்துச்

சொல்லெனச் சொல்லிச் செல்லெனச் சென்று
பருகுவ னன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்,
செவிவா யாக நெஞ்சு களனாகக்,
கேட்டவை கேட்டவை வல்லனாகிப்
போற்றிக் கோட லதனது பண்பே"

**6. மாணவர் நூற்பயிற்சி முறை.**

"வழக்கின் இலக்கணம் இழுக்கின் றறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்,
ஆசான் சார்ந்தவை யமைவரக் கேட்டல்,
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்தலென் றின்னவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும்."

**தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் புறத்திணையியலிற் காண்பது.** *நல்லாசிரியரின் எட்டுக் குணங்களாகத் தொல்காப்பியம் கூறுவது காண்க. "எட்டு வகை நுதலிய அவையத் தானும்" என்னும் புறத்திணையில் 76-ஆம் நூற்பாப் பகுதிக்கு நச்சினார்க்கினியர் "எண்வகைக் குணத்தினைக் கருதிய அவையத்தாரது நிலைமையானும், குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, அழுக்காறின்மை, அவாவின்மை என விவையுடையராய் அவைக்கண் முந்தியிருப்போர்" என்று பொருள் கூறி அதற்கு மேற்கோளாக இளம்பூரணரைப் பின்பற்றியே "குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி, விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற, வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற், காதலின் பத்துத் தூங்கித் தீதறு, நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும், அழுக்கா றின்மை அவாஅ வின்மையெனா, விருபெரு நிதியமு மொருதா மீட்டுந், தோலாநாவின் மேலோர் பேரவை" என்னும் ஆசிரிய மாலைச் செய்யுளை மேற்கோள் காட்டுகின்றார்.*

## நன்னூற் பொதுப்பாயிரம்

**1. கற்கப்படுவோர் அதாவது நல்லாசிரியர்.**

"குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவன் **நூலுரை யாசிரி** யன்னே",

" தெரிவரும் பெருமையும் திண்மையும் பொறையும்
பருவம் முயற்சி அளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே",

" அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே ",

" ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையும் மிகும் நிறை கோற்கே",

" மங்கல மாகி இன்றியமை யாது,
யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே'.

## 2. கற்கப்படாதோர் அதாவது நல்லாசிரியராகார்.

" மொழிகுண மின்மையும் இழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலும்
கழற்குடம் மடற்பனை பருத்திக் குண்டிகை,
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையும்
உடையோ ரிலரா சிரியரா குதலே",

" பெய்த முறையன்றிப் பிறழ வுடன்றரும்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே",

" தானே தரக்கொளின் அன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா இடத்தது மடற்பனை",

" பல்வகை உதவி வழிபடு பண்பின்
அல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே",

" அரிதிற் பெயக்கொண் டப்பொருள் தான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை ".

## 3. 'ஈதல் இயல்பு' அல்லது கற்பிக்கும் முறை.

" ஈதல் இயல்பே இயம்பும் காலைக்
காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்
சிறந்துழி இருந்துதன் தெய்வம் வாழ்த்தி,
உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்தவன் உளங்கொளக்
கோட்டமில் மனத்தின் நூல்கொடுத்தல் என்ப."

## 4. ‘கோடல் மரபு’ அல்லது மாணவர் பாடம் கேட்கும் முறை.

“கோடல் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்,
குணத்தொடு பழகி அவன் குறிப்பிற் சார்ந்து
இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகிச்
சித்திரப் பாவையின் அத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சு களனாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போதல் என்மனார் புலவர்.”

## 5. மாணவர் நூற்பயிற்சி முறை.

“நூல்பயில் இயல்பே நுவலின் வழக்கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை அமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை
கடனாக் கொளினே மடம்நனி இகக்கும்.”

*இன்னும் மாணவர் நூற்பயிற்சி முறையாக* **நன்னூலார்,** *நச்சினார்க்கினியர் மேற்கோள்களைப் பின்பற்றியே’,*

“ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்
பெருக நூலிற் பிழைபா டிலனே ;”

“முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும் ;”
ஆசானுரைத்த தமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னாகும் ;”

“அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்
செவ்விதி னுரைப்ப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.”

*என்று கூறுகின்றனர்.* **நச்சினார்க்கினியர்** *இதற்கு மேலும்*

“பிறர்க் குரையிடத்தே நூற்கலப்பாகுந்
திறம்பட வுணருந் தெளிவி னோர்க்கே ;”

*என்று இன்னும் ஒன்றுசேர்த்துக் கூறுகிறார். உரையா சிரியரெனச் சிறப்பிக்கப்படும்* **இளம்பூரணரும்,** *மாணவர்* **நூற் பயிற்சி முறையாக.**

“கொள்வோன் முறைமை கூறுங்காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்,
முன்னும் பின்னு மிரவினும் பகலினும்,

அகலா னாகி யன்பொடு புணர்ந்தாங்,
காசற வுணர்ந்தான் வாவென வந்தாங்,
கிருவென விருந்தே டவிழென வவிழ்த்துச்
சொல்லெனச் சொல்லிப் போவெனப் போகி,
நெஞ்சுகள னாகச் செவிவா யாகக்,
கேட்டவை கேட்டவை வல்ல னாகிப்
போற்றிக் கோட லவனது தொழிலே ;"

"எத்திறத் தாசா னுவக்கு மத்திறம்,
அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே"

"செவ்வன் றெரிகிற்பான், மெய்ந்நோக்கிக் காண்கிற்பான், பல்லுரையுங் கேட்பான், மிகப் பெரிதுங் காதலான், றெய்வத்தைப் போல மதிப்பான் றிரிபில்லான், இவ்வாறு மாண்பு முடையாற் குரைப்பவே, செவ்விதி னூலத் தெரிந்து ;"

"வழக்கினி லக்கணம் இழுக்கின் றறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும் ;"

"அனைய னல்லோன் கொள்குவ னாயின்
வினையி னுழப்பொடு பயன்றலைப் படாஅன் ;

"ஆசா னுரைத்தவை யமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னாகும் ;"

"அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்,
செவ்விதி னுரைப்ப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்பு நனியுடைத்தே",

என்றெல்லாம் கூறுகின்றனர். இவர் மொழியும் பொருளை மட்டுமன்றிச் சொல்லையும் பின்வந்த நச்சினார்க்கினியரும் நன்னூலாரும் தழுவிக்கொண்டமை காண்க.

இனி, "**கொள்வோர்**" அதாவது **மாணாக்கர்**, கற்பிக்கப் படுவோரும், கற்பிக்கப்படாதோரும் என இருவகையினர் என்று **இளம்பூரணர்** பிரித்து, அவருள் **கற்பிக்கப்படுவோர்**,

"தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே,
உரைகோ ளாளனோ டிவரென மொழிப."

*என்றும், அவர் தன்மை,*

" அன்னங் கிளியே நன்னிற நெய்யரி,
யானை யானே றென்றிவை போலக்
கூறிக் கொள்ப குணமாண் டோரே,"

*என்றும்,* **கற்பிக்கப்படாதோர்,**

" மடி, மானி, பொச்சாப்பன், காமுகன், கள்வன்,
அடுநோய்ப் பிணியாள ரூச் சினத்தன்,
தடுமாறு நெஞ்சத் தவனுள்ளிட் டெண்மர்,
நெடு நூலைக் கற்கலா தார்;"

*என்றும், அவர் தன்மை,*

" குரங்கெறிவிளங்கா யெருமை யாடே
தோணி யென்றுங் கிவையென மொழிக;"

*என்றும் கூறுகின்றார்.*

*இவற்றைச் சொல்லும் பொருளும் பிறழாமல்* **நச்சினார்க்கினியர்** *தழுவிக்கொள்வதோடு அவைக் களத்திற் கடியப்பட்ட மாணவராக,*

" மொழிவ துணராதார் முன்னிருந்து காய்வார்
படிறு பலவுரைப்பார், பலகா னகுவார்,
திரிதரு நெஞ்சத்தார் தீயவை யோர்ப்பார்,
கடியப்பட் டாரவை யின்கண்,"

*என்று இவர்களைக் கூட்டியும் சொல்லுகிறார்.*

**நன்னூலாரும்** *இளம்பூரணரைப் பின்பற்றியே* **மாணாக்கராதற் குரியவராக,**

" தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற்கு உரைப்பது நூலே;" என்றும்,

**மாணாக்கராகத்தகாதவராக,**

" களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்,
துயில்வோன் மந்தன் தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன், தறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே;" என்றும்,

*அவர்களை*

" அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்;"

என்று தலை இடை, கடை மாணாக்கராக வகை பிரித்தும், **மாணவர் வழிபாட்டு முறையாக,**

" அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமொடு
எத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே,"

என்றும் கூறுகின்றார்.

**பழைய முறைகள் :—தொடர்ச்சி :** இனி, ஆங்கிலக் கல்வி முறையும் திட்டங்களும் நம் நாட்டில் வந்த பின்னரும், பல நிலைகளிலும், ஒவ்வொரு தமிழ் கற்பிக்கும் ஆசிரியரும் உள நூலிலும், கற்பிக்கும் முறைகளிலும் பயிற்சிபெறாத நாட்களில் தமிழ் கற்பிக்கும் முறைகளின் நிலையை ஒருவாறு கீழ்க்கண்டாங்கு குறிக்கலாம் :—(1) எழுதவும் படிக்கவும் முன்னர் கற்பித்தனர். எழுத்தை முதலிற் கற்பித்துப் பின் படிப்பையும் **எழுத்து முறையிற்** கற்பித்தனர் : எழுத்துகள் கூடிச் சொல்லாகிப் பொருளுணர்த்தியும், பின் சொற்கள் கூடித் தொடர்மொழியாகி ஒரு கருத்தை விளக்கியும் நிற்றலால் அக்காரணகாரிய முறைப்படி ஆசிரியர் எழுத்தைக் கற்பித்தனர். உயிர் இன்றி மெய்யாற் பயனில்லை யாதலானும், மெய், உயிர் தங்கி இருப்பதற்கு இடமாதலானும், உயிரும் மெய்யும் கூடியவழி உயிர் மெய் பிறத்தலாலும் அம்முறைப்படியே எழுத்துகளையும் கற்பித்தனர். சிறுபான்மை இவ்வெழுத்துகள் எழுதப்பட்ட சுவடி அல்லது நூலைப் பார்த்துப் படிக்கச் செய்தும், பெரும்பாலும் மணலிலாவது கற்பலகையிலாவது எழுதச் செய்தும் கற்பிப்பர் ; தொடக்கத்தில் சில ஆசிரியர் தாமே மாணவர்களின் விரலைப்பிடித்து எழுதி வைப்பர் அல்லது சட்டாம் பிள்ளையையோ, சற்றுக் கற்றுத் தேர்ந்த மாணவர்களையோ ஏவி அவ்வாறு எழுதச்செய்வர். இங்ஙனம் எழுத்துகளெல்லாம் எழுதவும் பார்த்துச் சொல்லவும் கற்றபின் படிப்படியாகச் சொற்களைப் படிக்கச் செய்வர், எழுத்துக்களைக் கூட்டிக் கொண்டே சொல்லச் செய்வர். (2) எழுத்துக் கூட்டிச் சில சொற்களையும் தொடர்மொழிகளையும் படிக்கத் தெரிந்ததும் 'ஆத்தி சூடி,' 'கொன்றை வேந்தன்' முதலிய சிறிய அற நூல்களைப் படிப்படியாகக் கற்பித்து வருவர். (3) திண்ணைப் பள்ளிகளில் பின்னர் நிகண்டு, நன்னூல், அந்தாதி, கலம்பகங்களையும், பின்னர், பெரிய இலக்கண இலக்கியங்களையும் கற்பிப்பர். (4) எண்களும், எண் சுவடிகளும்,

வாய்ப்பாடுகளும், கணக்கும் கற்பிப்பர். (5) அங்கும், பிற தொடக்கநிலைப் பள்ளிகளிலும் செய்யுளைப் பதவுரை, பொழிப்புரை, கருத்துரை என்ற முறையில் ஆசிரியரே எடுத்துக் கூறுவதும், மாணவர் கேட்டுக்கொண்டிருப்பதும், முதல்நாட் பாடத்தை ஒப்புவிக்கச் செய்தலும் அன்று கற்பித்த பாடத்தைத் திரும்பிக் கூறச் செய்தலும் மேற்கொள்ளும் சில முறைகளாகும். (6) இலக்கணப் பாடத்தில் நூற்பாக்களை முன்னதாகக் கூறிப் பின் எடுத்துக் காட்டுகளால் விளக்கும் பொதுச் சிறப்பு முறையே (விதிவிளக்கு முறையே) மேற்கொள்ளப்பட்டது. இலக்கணம் தனிப்பாடமாகக் கற்பிக்கப்பட்டதோடு, மொழிப் பாடத்துடனும் கட்டுரையுடனும் பொருத்திக் காட்டப்படாமலும், வாய்மொழிப் பயிற்சிகளும் எழுத்துப் பயிற்சிகளும் இல்லாமலும் இருந்தன. நூற்பாக்கள் எல்லாம் நெட்டுருச் செய்யப்பட்டு வந்தன. (7) இலக்கணம், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற முறையில் நடைபெற்று வந்தது. (8) கீழ்வகுப்புகளிலும் இலக்கணம் தொடங்கப் பெற்றது. (9) நெட்டுருச் செய்யும் வழக்கம் எல்லா வகைகளிலும் மிக மிக வற்புறுத்தப்பட்டது. பொருளறியாது குருட்டுப்பாடம் செய்தல் வளர்ந்தது. (10) பாடப்பொருள், பாடத்திட்டம், கலைத்திட்டம் முதலியனவே இன்றியமையாதன என்று கருதப்பட்டன. அவை, மாணவர் அறிவு, மனவளர்ச்சி, வயதுகளுக்குத் தக்கனவாயும், படிப்படியாய் வளர்ச்சியுறுவனவாயும் இருக்கவில்லை. (11) குழந்தையை இன்றியமையாததாகக் கருதாது இவற்றை அதன் உள்ளத்திற் புகுத்த முயன்றனர். (12) உளநூலறிவு எல்லா ஆசிரியர்களுக்குமில்லை. (13) வாய்மொழிப் பயிற்சி இல்லை. (14) வினா, விடைமுறை மிக்கில்லை. (15) பாடத்தை விளக்குவதற்கான உதவிக் கருவிகள் இல்லை. (16) தெளிவாகவும், கோவையாகவும் பேசும் பழக்கத்திற்கு வாய்ப்புகள் இல்லை. (17) விளையாட்டுகளும், விளையாடும் இடங்களும் இல்லை. (18) விளையாட்டு முறையும் இல்லை. (19) தண்டனை மிக இருந்தது.

## இம்முறைகளிற் காணப்படும் குறைகளும் நிறைகளும்

### 1. குறைகள்

(1) மாணவர்களுக்கு முதலிற் பேச்சும், பின்னர், படிப்பும், பின்னர் எழுத்தும் கற்பிப்பதே முறையாகும். முதலில் எழுத்தைத் தொடங்குவது முறையாகாது. (2) படிப்பிலும், எழுத்திலும் கூடத் தனி யெழுத்துக்களைக் கற்பித்தல்

காரண காரிய முறைக்குப் பொருத்தமேயாயினும் பிள்ளைகளின் இயற்கைக்கும் உளநூலுக்கும் அது பொருந்தாது என்பது இக்கால அறிஞர்களின் கொள்கையாகும். எழுத்துகளில் ஓரெழுத்து ஒரு மொழிகளா யுள்ளவை நீங்க ஏனையவெல்லாம் தனித்தனி நிலையில் பொருள் அற்றன. பொருள் அற்ற உச்சரிப்புகளை முதலிற் கற்பிக்குங்கால் அதில் அவர்களுக்கு விருப்பமும் பற்றும் ஏற்படுவதற்கு மாறாக வெறுப்பும் சலிப்பும் ஏற்படலாம். (3) வீட்டிலும் குழந்தைகள் முழுச் சொற்களையும் தொடர்களையுமே பேசுகின்றனர்; தனி எழுத்துகளாகப் பேசுவதில்லை. அதை ஒட்டியே செல்லாமல் முதலில் தனித்தனி எழுத்துக்களைக் கற்பித்தால், அது தெரிந்ததிலிருந்து தெரியாததற்கும், முழுப் பொருளிலிருந்து பகுதிக்கும் போதல் என்னும் இயற்கை முறைக்கு முற்றிலும் மாறாக இருக்கிறது. இதில் காலமும் வீணாகிறது. ஆதலால் சொற்றொடர் முறையே சிறந்ததாகும். (4) பழைய முறையில் நல்ல உச்சரிப்பு, தெளிவான பேச்சு, குரல் ஏற்றத் தாழ்வு முதலிய நல்ல பேச்சுப் பழக்கங்கள் அமைவதற்குரிய வாய்மொழிப் பயிற்சி இல்லாதது ஒரு பெருங் குறையாகும். "செந்தமிழும் நாப் பழக்கம்" அல்லவா? (5) தமிழ் ஆசிரியர்கள் அனைவரும் ஆசிரியர் பயிற்சி பெறாதவர்களா யிருந்ததும் ஒரு குறையே. இக்குறையால் அவர்கள் குழந்தைகளின் மனநிலை, அறிவு வளர்ச்சி, மனவெழுச்சிகள், இயல்பூக்கங்கள் முதலியவற்றை அறியமுடியாமற் போயிற்று. போகவே அவற்றிற் கேற்ற கல்வி முறைகளையும் மேற்கொள்ள இயலாது போயிற்று. (6) பண்டை முறையில் தண்டனை மிகுதியாக இருந்தது மற்றும் ஒரு குறையாகும், தண்டனையால் உடலும், உளமும் வாடுகின்றன. அச்சத்தால் நடத்துவதை அன்பால் நடத்தலாகுமே! இம்முறை அறியாதவரன்றோ "அடியாத பிள்ளை படியாது," "அடி உதவுவதுபோல் அண்ணன் தம்பி உதவார்", "பிரம்படி படாத பிள்ளை பாழ்" என்றெல்லாம் பழமொழிகளை மேற்கோள்களாகக் காட்டுவர்? (7) நெட்டுருச் செய்வதில் வேண்டும்போது வேண்டிய பகுதிகளை எடுத்துக்கூறும் நலம் உண்டு எனினும், நினைவு ஆற்றலோடு, மனத்திற்கு உற்று நோக்கல், சிந்தனை, கற்பனை, கருதுதல், தீர்மானம் முதலிய செயல்களும் இல்லையா? இவையெல்லாம் பழைய முறைகளில் நன்றாய் வேலை செய்யுமாறு ஏற்ற வாய்ப்புகள் தரப் பெறவில்லை. நன்னூலாரும், அன்னப் பறவையைப்போல் கற்பவற்றிற் சாரமானவற்றைத் தேர்ந்துகொண்டு, அவற்றைத் தானும், ஆவைப்

போல் நன்குசிந்தித்து மனத்திற் பதித்து வைத்துக்கொள்ள வேண்டும் என்கின்றனரே! ஆதலால் கற்பது அனைத்தை யும் நெட்டுருச் செய்யாமல் சிறந்த பகுதிகளையே செய்ய வேண்டும். எல்லாவற்றையும் செய்தால் சிறப்புற்றன எவை, சிறப்பற்றன எவை என்று வேறுபாடு காணும் பகுத்தறிவு குறையலாம். இளமாணவர்களின் கவனத்தைப் பாடத்தில் இழுக்கவல்ல கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க உதவிப் பொருள்களும் கருவிகளும் மிகுதியாகப் பழையமுறைப் படிப்பில் இல்லாதது உண்மையில் ஒரு பெருங் குறையாகும். (9) இன்னும் விளையாட்டு முறை இல்லாததும் அப்படியே. (10) இலக்கணத்தை மொழி, கட்டுரைப் பாடங்களோடு பொருத்திக் காட்டாமல் பொதுச் சிறப்பு முறையில் (விதி விளக்கு முறையிற்) கற்பிக்கப்பட்டதும் குறைபாடுடைய தாகும்.

## நிறைகள்

இனிப் பழைய முறைகளில் குறைகள்தான் உளவோ? நிறைகள் இல்லையோ? என்று கேட்கலாம். அவற்றுள் காணத்தக்க நிறைகளிற் சிறந்தன வருமாறு:—

(1) நெட்டுருச் செய்தல் பெரும்பாலும் பின்பற்றப் பட்டதை ஒரு குறையாக எடுத்துக் காட்டினும், அதை முற்றிலும் ஒழித்தல் அழகன்று. குருட்டுப் பாடஞ்செய்வது கண்டிக்கப் படலாமே ஒழிய, பொருள் உணர்ந்து நல்ல பகுதிகளை நெட்டுருச் செய்வது மொழித் தேர்ச்சிக்கு ஒரு நல்ல முறை யாகும். பண்டை மாணவர் இம்முறையின் உதவியால் பெற்றுள்ள மொழித் தேர்ச்சியே இதன் நன்மைக்கு ஒரு சிறந்த சான்றாகும். நெட்டுருச் செய்த பகுதிகளின் சொல்லும் பொருளும் எப்போதும் செவியிலும் உள்ளத்திலும் ஒலித்துக் கொண்டிருப்பதால் வேண்டுங்கால் அவற்றை நினைவுகூர்ந்து பயன்படுத்திக் கொள்ளலாம். (2) இதனுடன், நல்ல ஆழ்ந்த இலக்கண அறிவு அக்கால மாணவர்க்குப் பொருந்தி யிருந்தது. இவ்வறிவு பாடசாலையை விட்டகன்ற பின்னரும் தாமாகவே நூல்களைப் படித்து அறிவதற்கும், மேன்மேலும் மொழித் தேர்ச்சி யுறுவதற்கும் ஒரு சிறந்த கருவியாகு மென்பதில் ஐயமுண்டோ? (3) ஆசிரியரும் மாணவரும் உட னுறைந்து வாழ்ந்து வந்தது ஒரு சிறந்த முறையாகவும் இந்நாட்டுக் கல்விக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகவும் விளங்கு கிறது. அதுவே ஒரு கல்வியாகும். (4) மாணவரும் ஆசிரியரும்

ஒருவரை ஒருவர் நன்குணர்ந்து அன்பையும், பரிவையும், ஒத்துணர்ச்சியையும் ஒருவர்பால் ஒருவர் காட்டிவந்தனர். இன்றைய முறையில் இவையில்லாதது ஒரு பெருங்குறை.

**புதிய முறைகள் 1. விளையாட்டு முறை:** பழைய கல்வி முறையில் விளையாட்டின் அருமை பெருமைகளை அறியாமல் இருந்தார்கள். இது படிப்புக்கு முரண்பட்டது என்றும் எண்ணினர்கள். பள்ளி புகும் வரையில் விளையாடலாம் என்றும், படிப்பில் இறங்கிய பின்னர் அதை ஒழித்துவிடல் நலம் என்றும் எண்ணினர்கள். புதிய முறையில் விளையாடும் தன்மையானது குழந்தையின் இயல்பான போக்கு என்றும் அதைத் தடுப்பது முறையன்று, நசுக்கவும் கூடாது என்றும் ஆசிரியர்கள் உணர்வதால், விளையாட்டைப்பற்றிய மனப் பான்மையே முற்றிலும் மாறிவிட்டது. பாரதியாரும்.

"ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா
காலை யெழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவுகொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா—என்று

பாப்பாவைப் பார்த்துப் பாடி விளையாட்டில் விடுக்கின்றூர்.

பலவகை விளையாட்டுகளும், விளையாடும் இடங்களும், ஒவ்வொரு பள்ளியிலும் தோன்றி யிருக்கின்றன. வகுப் பறையிலும் இன்று விளையாட்டு முறை இடம் பெற்றுவிட்டது. வேலையை விளையாட்டாகவே கருதும்படியாகக் கற்பிக்கும் முறையைத் தான், விளையாட்டு முறை என்கிறோம். அஃதாவது கற்பதாகிய வேலையைக் கசப்பின்றி விளையாட்டுப் போலவே விருப்பத்தோடு செய்யும்படியும், வேலையை விளையாட்டுகளின் வாயிலாகவும், விளையாட்டுகளிலிருந்தும் கற்றுக்கொள்ளு மாறும் மேற்கொள்ளும் வழி வகைகளைக் கொண்ட ஒரு முறையையே விளையாட்டு முறை என்கிறோம்.

இம்முறையாற் பல **நன்மைகள்** விளைகின்றன. 1. விளை யாட்டு, வேலை என்ற வேற்றுமையை இம்முறை நீக்கு வதால் மாணவர்கள் மிக ஊக்கத்தோடும் பற்றோடும் வேலை யில் ஈடுபடுவர். 2. அவ்விளையாட்டின் பயனாக அறிவு வளரு கிறது. 3. கல்வியைப்பற்றிய மனப்பான்மையே குழந்தை

யிடத்தில் மாறிவிடுகிறது. 4. வாழ்க்கையைப் பற்றிய மனப் பான்மையும் மாறலாம். 5. விளையாட்டுணர்ச்சியை வேலையிற் புகுத்தும் போதெல்லாம் வேலையிற் கூடுதலான பற்றும் கவர்ச்சியும் ஊக்கமும் உண்டாகின்றன. 6. வேலையின் திறப்பாடும் அளவும் பெருகுகின்றன. 7. படிப்பில் உள்ள வெறுப்பும் சலிப்பும் நீங்குகின்றன. 8. தனித்தனிக் கற்றல் முறையில் அளவுக்கு விஞ்சித் தனிப்படுத்துவது இருக்கிறது என்று அதன்மேல் சுமத்தப்படும் குறையை இம்முறையில் நிறைக்கலாகும். மேலும் அம்முறையிற் கூட்டுறவும் ஒத்துணர்ச்சியும் இல்லை என்பதை விளையாட்டு முறையிற் சிறு சிறு பிரிவுகளாகப் பிரித்துக் கற்பிப்பதால் நீக்கிவிட இடமுண்டு என்பர். 9. இன்னும் வகுப்பு முறையில் தனித் தனிக் கற்பிக்கும் முறை இல்லை என்றும் கூறப்படுகிறது. விளையாட்டு முறையில் இக்குறையும் நீங்கிவிடுகிறது. 10. ஒத்துணர்ச்சி, விதிகளுக்கடங்கல், தலைவர்க்குக் கீழ்ப்படிதல், புறங்கூறாமை, வெற்றி தோல்விகளை ஒரே நிலையில் ஏற்றுக்கொள்ளல், உண்மையையே கூறல் முதலிய நற்பண்புகள் விளையாட்டால் விளைகின்றன. 11. ஆசிரியர் பேசும் அளவையும் இதில் குறைத்துக் கொள்ளலாம். 12. நன்முறைப் போட்டி உணர்ச்சியை வளர்க்கலாம். 13. பாடத்தில் மாணவர் கவனத்தை இழுக்கலாம்.

எனவே இக்காலக் கல்வி, ஆசிரியர்களால் மாணவர்மீது சுமத்தப்பட்ட ஒரு சுமை அல்லது கசப்பான வேலை என்றில்லாமல், மாணவர்கள் தாமாகவே பலவற்றையும் ஆசிரியர்களை அன்பும் பரிவும் உள்ள வழி காட்டிகளாகக் கொண்டு விளையாட்டாகவே கற்றுக்கொள்வதாகக் கருதப்படுகிறது. மான்டிஸரி, கின்டர்கார்டன், தன்னேக்க முயற்சி, நடிப்பு போன்ற சில முறைகள் வேலைக்கும் சிறுவர்களின் விளையாட்டுக்கும் ஒரு நல்ல தொடர்பை உண்டு பண்ணி, வேற்றுமையை நீக்கிவிட்டன என்றே கொள்ளலாம்.

இவ்விளையாட்டு முறையில் சில **குறைகள்** உளதாகவும் கொள்ள இடமுண்டு. (1) மாணவரின் கவனத்தைப் பாடத்தின் பால் இழுப்பதற்கு வழங்கும் விளையாட்டு, உதவிக் கருவிகளிலும், படங்களிலும் பிறவற்றிலும் மாணவர் நாட்டத்தைச் செலுத்திவிடுவதால், முதற்பொருளாகிய பாடத்தில் கவனமும், அதில் ஒரு தொடர்ச்சியும் அற்றுப்போக இடமுண்டு. (2) ஒரு பாடத்தின் எல்லாப் பகுதிகளையும் இம்முறையின் வாயிலாகக்

கற்றல் அரிதாகும். (3) கீழ் வகுப்புகளைப் போல் மேல் வகுப்புகளில் இதை மிக நுழைக்க வழியில்லை. (4) முயற்சிக் கவனத்திற்கு இஃது இடையூறாய் இருக்கலாம். (5) அது வளர்வதற்குரிய பயிற்சியையும் அளிப்பதில்லை. (6) எல்லாப் பாடங்களையும் இம்முறையிற் கற்கமுடியுமா ?

## விளையாட்டைத் தமிழ்ப் படிப்பிற் புகுத்தும் சில வழிகள். தொடக்க நிலைக்கு ஏற்றன

(அ) **தொடர் மொழிகள் பற்றியன :** சில கட்டளைகளில் வரும் சொற்கள் எழுதியுள்ள தனித்தனி அட்டைகளைச் சேர்த்து முழுக் கட்டளைகளை அமைத்தல்; சில அறமொழிகளில் (நீதிகளில்) வரும் சொற்கள் எழுதியுள்ள தனித்தனி அட்டைகளைச் சேர்த்து அற மொழிகளை அமைத்தல்; சிறு கதைகளில் வரும் சொற்களும் தொடர்களும் எழுதப்பட்டுள்ள அட்டைகளை வரிசையாக அடுக்கிக் கதையை அமைத்தல்; கொடுத்துள்ள தொடர்மொழிகளின் பொருள் சரியா இல்லையா எனப் படித்துக் குறித்தல், வரிசை தப்பி எழுதப்பட்டுள்ள கேள்விகளையும் அவற்றின் விடைகளையும், காரணங்களையும் காரியங்களையும் இவைபோன்ற பிறவற்றையும் பொருத்தி எழுதச்செய்தல்; விடுகதைகளைக் கேட்டு விடை கூறுவதும் எழுதுவதும்; கதை விளக்கும் படங்களைக் கொண்டு கதையைத் தொடர்ச்சியாகக் கூறலும் எழுதலும்; ஏற்ற சொற்களை ஒழிவிடப்பட்ட இடங்களில் அமைத்துத் தொடர்மொழியை முடித்தல், வரிசை மாற்றி எழுதப்பட்ட சொற்களை வரிசைப் பட எழுதித் தொடர்மொழிகளை முடித்தல் முதலியன.

(ஆ) **சொற்களும் எழுத்துகளும் பற்றியன :** முன்னட்டைகளைக் காட்டிப் பெயர் சொல்லச் சொல்லித் தெரியாவிட்டால் பின்புறம் திருப்பி அங்கு எழுதப்பட்டிருக்கும் பெயர்களைப் படிக்கச்செய்தல்; படங்களின் பெயர்களைப்பார்த்துக் கூறச்செய்தல்; சொற்கள் குறிக்கும் படங்களைக் காட்டச் செய்தல்; படங்களையும் அவற்றின் பெயர்களையும், பொருத்தச்செய்தல்; பொருள்களையும் அவற்றின் பெயர்களையும், தோட்டத்தில் பூச்செடிகளையும் கொடிகளையும் அவற்றின் பெயர் எழுதிய சீட்டுகளையும் பொருத்தல்; ஒரே முதல் அல்லது இறுதியுடைய சொற்களைத் தொகுத்தல்; ஏறக்குறைய ஓரோசையுடைய சொற்களையும், முதல்மட்டும்

வேறுபட்டு ஏனைய எழுத்துகள் ஓரோசையுடைய சொற்களையும் திரட்டல்; பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன, விலங்குகள், செடிகொடி மரங்கள் முதலியவற்றின் இளமைப் பெயர்களையும் அவற்றின் சினைப்பெயர்களையும் தொகுத்தல்; ஒரே இனம் அல்லது உறவின்முறை அல்லது கூட்டத்திற்குள் அடங்கும் பெயர்களைக்குறித்தல்; தொகைச் சொற்களைப் (வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை, அன்மொழி) புதிதாக ஆக்கல்; இனங்களில் அல்லது வகைகளில் அடங்காத சொற்களைக் கண்டுபிடித்தல்; விடு கதைகளுக்கு விடை கண்டு பிடித்தல்; எழுத்துப் பெருக்கம், எழுத்துச் சுருக்கம் கண்டு பிடித்தல்; ஒரு பொருள் குறித்த பல சொற்களையும், பல பொருள் குறித்த ஒரு சொற்களையும் நேரெதிர்ச் சொற்களையும் கண்டுபிடித்தல்; மோனை, எதுகை, முரண், தொடைகளுக்கு ஏற்றசொற்களைக் கண்டுபிடித்துச் சொல்லணிகளை அறிதல்; வரிசைமாற்றி உள்ள எழுத்துகளைச் சரியான முறைப்படுத்திச் சொற்களாக்கல்; ஒழிவு விடப்பட்ட இடங்களில் ஏற்ற எழுத்துகளை அமைத்துச் சொற்களை முடித்துக் காட்டல்; வேறு வேறு முதல் எழுத்துகளை வரிசையாய் மேல்கீழாக அமைத்து அவை எல்லாவற்றிற்கும் பொதுவான மற்றொரு எழுத்தை எதிரில் நடுவில் எழுதி, ஒவ்வொன்றையும் அதோடு சேர்த்துப் படிக்கச்செய்து சொற்களைக் கட்டலாகிய எழுத்தேணி அமைக்கச்செய்தல்; முதல் எழுத்துப் பொதுவாக அமைய இரண்டாவது எழுத்துகள் வேறுபட்டுள்ள சொற்களை ஆக்குதல்; ஆளுக்கு ஒரு எழுத்தாக எழுதிச் சொற்கள் ஆக்குதல்; அட்டை எழுத்துகளைக் கொண்டு சொற்கள் கட்டுதல் முதலிய பலவகை விளையாட்டு முறைகள் உள்ளன. இவைபோன்ற முதல் நிலை, இடைநிலைகளுக்கு ஏற்ற பிற விளையாடல்களை அறிஞர்கள் நூல்களிற் கண்டு கொள்க. (Ryburn, Suggestions for the teaching of the Mother tongue ch–X; Teaching of English chapter VIII; Caldwell Cook, The Play way; and Nunn, Education its date and Principles; Play and Playway முதலியன).

**இடைநிலை உயர்நிலைகளுக்கு** ஏற்ற விளையாட்டு முறைகளாகக் கீழ்க்கண்டவற்றைக் கொள்ளலாம். வெளிச் செலவுகள் சென்று வந்து, கண்ட காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் எடுத்துச்சொல்லி, விளக்கி, எழுதும்படி செய்தல்; கண்ட காட்சிகள் சிலவற்றைக் கற்பனையிலிருந்து ஓவியமாகத் தீட்டச் செய்தல்; கதைகள், நிகழ்ச்சிகள் முதலியவற்றை நடித்துக்

காட்டல்; விளம்பரங்கள், சிறு கதைகள், கட்டுரைகள், ஆட்டக்கதைப் பாடல்கள், சிறு செய்யுட்கள், சிறு நாடகங்கள் முதலியன எழுதத்தூண்டல்; சிறு சொற்பொழிவுகள்; சொற்போர்கள்; செய்யுள் ஒப்புவித்தல்; தனி வகுப்பு, பள்ளி இதழ்களை மாணவர்களையே நடத்தி வெளியிடச் செய்தல் முதலியன. இவற்றின் விவரங்களுக்கும், இடைநிலை வகுப்புகளுக்கேற்ற பிற விளையாட்டுகளுக்கும் மேற்குறித்த நூல்களைக் காண்க.

## 2. தன்னேக்க முயற்சி முறை

புதுக்கல்வி முறைகளில் செய்து கற்றல் மிகவும் வற்புறுத்தப்படுகிறது. கண்கண்டதைக் கை செய்யுமாதலால் படிக்க வேண்டியவற்றைக் காதால் கேட்பதைவிடச் செயல் முறையில் செய்து பார்ப்பதே மேலாகும். "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்பர் வள்ளுவனர். அறிவு, திறமை, மனவெழுச்சி, ஒழுக்க வளர்ச்சிகளுக்கு வேண்டியவற்றை மாணவர்கள் உறுதியாகவும், விருப்பத்துடனும், தன்னேக்க முயற்சி வேலைகளின் வாயிலாய்க் கற்ருல் அவை எளிதில் விளங்கி உள்ளத்து அமைக்கப்படும். கற்றலில் விளங்கும் **பயன்விதி, பயிற்சிவிதி, ஆயத்த விதி** முதலிய சிறந்தவிதிகள் எல்லாம் இம்முறையில் நன்கு மேற்கொள்ளப்படுகின்றன. பழைய முறைப் பள்ளிகளில் கலைத்திட்டம் வெறும் நூல் அறிவை மட்டும் அடிப்படையாகக் கொண்டிருந்தது. அப்படியில்லாமல் இளைஞரின் மனப்பான்மைக்கும் இயல்பூக்கங்களுக்கும் ஏற்றவாறு செய்முறைக் கல்வியின் வாயிலாய், அறிவு, உடல், மனவெழுச்சி, ஒழுக்கம் ஆகியவெல்லாம் ஒருங்கு வளரக்கூடிய ஒரு புதுக்கல்வியைத் தன்னேக்க முயற்சி முறையிற் காணலாகும். வார்தாக் கல்வித் திட்டமும் வாழ்க்கைப் பிழைப்புக்கான ஓர் அடிப்படையான தொழிலையே முதலாகக் கொண்டு நம்நாட்டு மக்கள் முழுக் கல்விப் பயிற்சியையும் அடைய வேண்டுமென்று கூறுகிறது.

அன்பும் பரிவு முள்ள ஓர் ஆசிரியரின் உதவியால் ஒரு வகுப்பிலுள்ள பிள்ளைகள் தங்கள் ஆற்றலுக்கும் தகுதிக்கும் ஏற்றவாறு தாங்களாகவே ஒரு தன்னேக்க முயற்சி வேலையைத் தேர்ந்தெடுத்து, அதற்கு வேண்டியவற்றை ஒன்று கூடி ஆராய்ந்து, அது நிறைவேறுவதற்கான வழி வகைகளை ஒழுங்குபடுத்திச் செய்து முடித்து மகிழுகிருர்கள். இப்

படி மகிழும்போது இவ்வேலையின் வாயிலாய்க் கல்வியின் முழுப்பயனையும் பெற்று முழு மனிதர்களாகிறார்கள். அறிவு, ஒழுக்கம், திறமை முதலியவை ஏற்படுகின்றன. மேலும் இவ் வேலை வெற்றியுடனும், பயிற்சியுடனும் நடைபெறுகிறது. இதை மாணவர் விருப்பத்துடனும் முழுமனத்துடனும் செய்ய முன் வருகின்றனர். தன் நோக்கத்தாலும் தன் முயற்சி யாலும் இவ்வேலை முடிகிறது. சுருங்கக்கூறின் "தானாகவே ஒரு காரியத்தைத் தேர்ந்தெடுத்து, தானாகவே அதைச்செய்து முடித்துத் தானாகவே அதன் பயனைக் கண்டு மகிழ்வதே" இம் முறையின் அடிப்படையாகும். இம் முறையை கில்பாட்ரிக் எனும் பேராசியர் "பள்ளிக் கூடத்தில் ஒரே தகுதியுடைய பிள்ளைகள் ஒரு வகுப்பில் கூடியிருக்கும்போது ஒரு மனத் துடன் ஒரு காரியத்தை அல்லது வேலையைத் தம் நோக்கத் தினாலேயே தேர்ந்தெடுத்து அதன் பேலேயே கண்ணும் கருத்துமாயிருந்து, செய்து கொண்டு வரும்போதே அதன் வாயிலாய் முழு மனிதர்களாவதற்கு வேண்டிய முழுக் கல்வி யையும் ஆசிரியர் உதவியைக் கொண்டு வளர்த்துக் கொள் வதே தன்னேக்க முயற்சி வேலையின் வாயிலாய்க் கற்கும் கல்வி" என்று கூறினார்கள். இதையே ஸ்டிவென்ஸன் என்பாரும், "பிள்ளைகள் தம் நோக்கமாய் ஒரு காரியத்தைச் செய்யும்போது முற்றும் முடியக் கொண்டு செலுத்தி, இடம் பொருள் ஏவல் ஆகிய மூன்றையும் கவனித்து எந்த வேலையை எந்த இடத்தில் எப்படிச் செய்தால் வெற்றியடையலாம் என்று அறிந்து, 'எடுத்த காரியத்தைத் தொடுத்து முடி' என்ற அறிவுரையை ஒட்டி முடிவுபெறச் செய்யவேண்டும்" என்று வற்புறுத்துகிறார். அப்போதுதான் அது தன்நோக்க முயற்சி யாவதுடன் பிள்ளைகளும் முழுப் பயனையும் எய்து வார்கள்.

எனவே, தன்னேக்க முயற்சி வேலை ஒவ்வொன்றிலும் நோக்கம், வழி வகைகளைக் கண்டு பிடித்துத் திட்டம் போடுதல், செய்துமுடித்தல், தீர்மானித்தல் என நான்கு படிகளைக் காணலாகும் என்பர் அறிஞர். இவ்வேலைகளை மாணவர் தனியாகச் செய்யக் கூடியவை என்றும் தொகுதியாகச் செய்யக்கூடியவை யென்றும் இருவகை யாக்கலாம். இன் னும் இவற்றை, படைப்போர்க்கானவகை, துய்ப்போர்க்கான அல்லது அழகுணர்வகை, பெருங்கேள்விவகை, பன்முறைப் பயிற்சி பெறுவகை, விளையாட்டு வகை யெனவும் பிரிக்கலாம்.

**தன்னேக்க முயற்சி முறையால் விளையும் கல்வி பற்றிய பயன்கள் :** (1) இன்றியமையாத அறிவு வளர்ச்சி ஏற்படுகிறது. (2) பலவகைத் திறமைகளில் பயிற்சி ஏற்படுகிறது. (3) நல்ல மனப் பயிற்சியாகும். மனத்தின் பன்முக வேலைக்கும்-உற்று நோக்கல், சிந்தனை, கருதுதல், தீர்மானம், கற்பனை முதலியவற்றிற்கு—நல்ல பயிற்சியைக் கொடுக்கும். (4) நல்ல, மனப்பான்மையும் நற்பழக்கங்களும் ஏற்படுகின்றன. (5) அழகுள்ள, நல்ல, உண்மையான பொருள்களை உணர்ந்து இன்புறும் ஆற்றல் வளர்கிறது. (6) படிப்புக்கு ஒரு நல்ல நோக்கத்தையும் தூண்டுகோலையும் உண்டுபண்ணுகிறது. பிற முறைகளில் இஃது இல்லை. (7) கல்வியைப் பரந்த நோக்கத்துடன் பார்க்கிறது. இம்முறையிற் கல்வி பயின்றால் வாழ்க்கையின் முழு நோக்கமும் கைவரும் என்று கூறப்படுகிறது. கல்வியே வாழ்க்கை யாகும் என்பதை இம்முறையாலேயே உணரலாகும் என்பர் இம் முறை அறிஞர். (8) மேலும் உலக நாகரிகம் நாளுக்கு நாள் விரைவாக மாறிக் கொண்டே வருகிறது. அதற்கேற்பக் கல்வியின் நோக்கம், படிப்பு, முறைகள், கலைத்திட்டம், பாடத்திட்டம், தேர்வுகள் வகுப்பு மாற்றல் முதலியவற்றிலும் புதிய மாறுதல்கள் ஏற்படுகின்றன. இம்மாறுதல்களுக்கெல்லாம் இம்முறை மிக ஏற்றது. (9) பள்ளிவாழ்க்கை முடிந்து உலக வாழ்க்கையில் ஈடுபடவிருக்கும் மாணவர்க்கு வேண்டிய தன்னாட்சி முறைப் பழக்கம், பள்ளியிலேயே அமைவதற்கு இம்முறை நல்ல இடம் தருகின்றது. (10) கல்வியில் இன்றியமையாது காணப்படும் பயன், பயிற்சி, ஆயத்த விதிகளை நன்கு மேற்கொண்டு பொருத்திக் காட்டுவதற்கு, இம்முறைபோல் செயல் முறையில் இடம் அளிக்கக்கூடிய முறை வேறு ஒன்றும் இல்லை எனலாம். (11) மாணவர்கள் தாமாகவே செய்து கற்பதால் தன் முயற்சியும் தன்னம்பிக்கையும் வளர்கிறது. ஒத்துணர்ச்சியையும் கூட்டுறவையும் வளர்க்கிறது இம்முறை. (12) கல்வியை ஊக்கத்தோடும், பற்றோடும் மாணவர் மேற்கொள்ளுகின்றனர். (13) சுறுசுறுப்பு, காய்தல் உவத்தலின்றி உண்மை காணும் ஆவல், பிறர் கருத்துக்கும் மதிப்புக் கொடுத்தல் முதலியன வளரும். ஒரு தன்னேக்க முயற்சியிலிருந்து எங்ஙனம் எல்லாப் பாடங்களையும் கற்கலாகும் என்பதை ஈரோடு லண்டன் மிஷன் கம்யூனிடி மாடல் ஸ்கூல் வகுப்புகளில் கையாளப்படும் கலைத்திட்டத்தில், (The project Method in Indian Elementary Education ch. XIV) கண்டு கொள்க. தன்னேக்க முயற்சி வேலை எதுவாயினும் அதன் நான்கு படிகளிலும் தமிழ்ப் பாடத்துக்கு,வாய்மொழிப்

பயிற்சிக்கும், எழுத்துக்கும், செய்யுள் உரைநடைப் பகுதிக்கும், இலக்கணத்துக்கும் அவ்வேலையிலிருந்தே தோன்றி வளருவதற்கான நல்ல வாய்ப்புகள் உள்ளன என்பது உய்த்துணரற்பாலது.

கீழ்க்கண்டவற்றை இம்முறையில் காணலாகும் **குறைகளாகக்** கொள்ளுகின்றனர் :—(1) இம் முறையின்படி கற்கும் குழந்தைகள், மொழி, கணக்கு, வரலாறு, தரை நூல்கள் போன்ற தொடக்கநிலைக் கலைத்திட்டப் பாடங்களையும் படிக்கின்றனர். ஆனல் இவர்கள் கற்பது, தகுதியிலும், அளவிலும், தன்ஞெக்க முயற்சி வேலை நடைபெறுவதற்கு வேண்டியதும், அதிலிருந்து தோன்றிவரக் கூடியதுமாகவே இருக்கிறது. தொடக்கநிலையில் ஒவ்வொரு பாடத்தின் திட்டப்படி பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, எந்த அளவில் வாரத்தில் எத்தனை மணி நேரத்தில் படிப்பது என்றில்லாமல், இம்முறையில் மாணவர்கள் ஓர் ஒழுங்கின்றித் தாம் விரும்பியெடுத்த வேலையின் வளர்ச்சிக்குமட்டும் வேண்டியவற்றைக் கற்கின்றனர்கள். ஒவ்வொரு பாடத்துக்கும் ஒரு திட்டம் கால அட்டவணைகளின் துணைகொண்டு கல்வியை ஒழுங்காய்க் கற்பிக்க வழி இல்லாத இம்முறையை மேற்கொள்ள ஆசிரியர்கள் பின் வாங்கலாம். இதுவே இம்முறையில் காணப்படும் பெரிய குறை என்று கருத இடமுண்டு. (2) தொடக்கநிலைக் கல்வி முடிந்தவுடன் ஒவ்வொரு மாணவனுக்கும் ஒவ்வொரு பாடத் பாடத்திலும் ஓர் அளவு தேர்ச்சியும் கைவரப் பெற்றிருக்க வேண்டும். இஃது இன்றியமையாதது. ஆனல் இவ்வளவும் தேர்ச்சியும் தன்ஞெக்க முயற்சி வேலைமுறையில் கிடைக்கின்றன என்றும், அப்படிக் கிடைத்தாலும் இயல்பாகவே அவைகள் வருகின்றன என்றும் உறுதியாய்க் கூற இயலாது. எனினும் தன்ஞெக்க முயற்சி வேலைக்குப் புறமாகக் கற்க வேண்டிய ஒரு திட்டத்தையும் இதோடு இணைத்துக்கொண்டால் நலமாகலாம். (3) மேலும் இம்முறைவாயிலாய்க் கற்ருல், ஒரு தன்ஞெக்க முயற்சி வேலையிலிருந்து இயல்பாய்த் தோன்றிவரக்கூடிய பாடங்களை மட்டுமே கற்கலாமே ஒழிய வேண்டிய எல்லாப் பாடங்களையும் கற்கமுடியாமற் போகின்றது. (4) இயல்பாகத் தோன்றிவரக் கூடியவைகள் தாமும், ஒழுங்கு இன்றி, அங்குமிங்குமாக, அவ்வப்போதுமட்டுமே வரக்கூடும். எனவே மாணவர்கள் அறியவேண்டியவற்றின் தொடர்ச்சியில்லாமல் அங்குமிங்கும் பிளவுகள் காணப்படலாம். (5) வறுமைமிக்க நம் நாட்டில் மிகுந்த பணச்செலவில், ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் இம்முறையை மேற்

கொள்ளமுடியுமா என்பது ஒரு கேள்வியாயிருக்கிறது. வேலைக்கு வேண்டிய பொருள்களும் எளிதில் கிடைக்குமா? ஆனால் இது முறையினது நேர் முகமான முறையன்று. (6) ஒழுங்கை வகுப்பில் நிறுவுவது என்பது மிகவும் அருமை. (7) ஒரு தன்னேக்க முயற்சி வேலையை மாணவர்கள் ஒத்துப் போய்த் தேர்ந்தெடுத்தலும் அருமை. (8) தொடக்கநிலைப் பள்ளிக்கூடக் கால அளவில் கற்கக்கூடியவற்றை, அதே காலத்தில் இம்முறையின் வாயிலாய்க் கற்கமுடியுமா என்றும் சொல்வதற்கில்லை. (9) குறித்தவேலை தானும் குறித்த காலத்தில் முடியுமா என்றும் சொல்வதற்கில்லை. இது மிக மெள்ளச் செல்கிறது. ஆனால் அம்முறை வல்லுநர்கள் இக்குறைகள் எல்லாம் உண்மையான குறைகள் அல்ல என்றும், எவ்வாற்றாலும் தொடக்க நிலைக் கல்வித் திட்டத்திற்கும் தகுதிக்கும் அளவுக்கும் இது பிற்போக்குடையதல்லாததா யிருப்பதோடு மிகவும் முற்போக்குடையது என்றும் உறுதி கூறுகின்றனர்.

## 3. நடிப்பு முறை

நடித்துக்காட்டும் முறை கல்வியில் ஒரு சிறந்த இடம் பெற்றிருக்கிறது. இம்முறையைக் கீழ் வகுப்புகளிலேயே நுழைத்தால் **நற்பயன்கள் விளையும்** என்பதில் ஐயமில்லை. (1) இளம் மாணவர்கள் அச்சமும் கூச்சமும் உடையவர்களாய், எழுந்து நின்று பேசச் சொன்னால், நடுக்கத்துடன், படபடப்பாகச் சில வார்த்தைகள் பேசுகின்றனர். சொற்றொடரின் கடைச் சொல்லையும், சொல்லின் கடை யெழுத்தையும் நடுக்கத்தினால் விழுங்கிவிடுகின்றனர். நடிப்பினால் இவற்றைப் போக்கிவிடலாம். (2) பேச்சு, உரையாடல் நடிப்புத்திறன்களை வளர்க்கும். (3) வாய்மொழிப் பயிற்சிக்குச் சிறந்த கருவி. (4) கேட்டறிவதைவிடக் கண்டறிவது நன்றாய்ப் பசுமரத் தாணியென உளத்தமைக்கப்படும். (5) பாடங்களில் பற்றையும், ஒரு கவர்ச்சியையும் உண்டுபண்ணும் ஒரு விளையாட்டு முறையுமாகும். (6) பொறிகளுக்கும், கற்பனைக்கும், நினைவாற்றலுக்கும், உணர்ச்சிக்கும் நன்றாய் முறையீடு செய்கிறது. (7) மன எழுச்சிகளுக்குரிய மெய்ப்பாடுகள், நடிப்பு, பேச்சு, உரையாடல்களால் வெளிப்படுவதற்கு இஃது ஒரு நல்ல வழி. (8) பயனுள்ள பொழுதுபோக்குமாகும். (9) மக்கள் இயற்கையையும், உலக இயல்புகளையும், நிகழ்ச்சிகளையும் உள்ளபடியே

எடுத்து மேடைமீது காட்டுகிறது. இவற்றை நேராகப் பார்ப்பதால், வாழ்க்கை உண்மைகளையும் முறைகளையும் அறிந்து கொள்ளலாம். (10) படிக்கத் தெரியாதவர்களுக்கும் படிக்கக் காலம் இல்லாதவர்களுக்கும் அறிவை வளர்ப்பதற்கு இஃது ஒரு நல்ல வழி. (11) நல்லதன் நலனையும், தீயதன் தீமையையும் நேருக்கு நேராகவே காண்பதால் பார்க்கின்றவர்களின் ஒழுக்க நிலையும் திருந்தும். மாணவர்களின் படைப்பாற்றலை ஓருறுப்பு நாடகங்கள் எழுதச்சொல்லி வளர்க்கலாம் என்பதில் ஐயமில்லை. மாணவர்களின் மனப்பான்மையை விரிவடையச்செய்து அவர்களைப் பரந்த நோக்குடையவர்களாக்கும். பலரும் சேர்ந்து நடிப்பதால் ஒத்துணர்ச்சியும், காரியத்தை எடுத்து நடத்தும் பயிற்சியும் கிடைக்கும். (12) உழைத்த உள்ளத்திற்கு ஊக்கத்தையும் கிளர்ச்சியையும் கொடுக்கும். (13) காட்சியின்பத்தோடு கேள்வியின்பத்தையும் உடன் கொடுக்கும். இத்தகைய நலன்களை யெல்லாம் கொண்டுள்ளதாலன்றோ இயல் இசையினடியாகப் பிறந்து அவற்றையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் இதைத் தமிழில் சிறந்ததாகக் கருதி "முத்தமிழ்" என்று இத்தலத்துள்ள உத்தமப் புலவர்கள் போற்றுகின்றனர்?

## வகுப்பில் நடிப்பதைப்பற்றிய சில குறிப்புகள்

(1) வாய்மொழி, எழுத்து ஆகிய இருவகைப் பயிற்சிக்கும் வகுப்பில் நடிப்பதைப் பயன்படுத்திக் கொள்ளலாம். தேர்ந்தெடுத்த சில மாணவர்களை ஒரு கதை, நிகழ்ச்சி அல்லது வரலாற்றுச் செய்தியை ஒரு சிறு நாடகப்பகுதியாக முதலில் வாய்மொழியாகப் பேசி, உரையாடி நடிக்கச்செய்து, பார்த்துப் பின் எழுத்து வடிவத்தில் எழுதவும் செய்யலாம். மாணவர்கள் இயல்பாகவே தங்கள் வீடுகளில் நடக்கும் நிகழ்ச்சிகளை உற்றுநோக்கி அவற்றைப் பார்த்துத் தாமும் செய்து நடிப்பதை, அவர்கள் விளையாட்டை அவர்கள் அறியாமல் கவனிப்போர் உணரலாம். தகப்பனார், ஆசிரியர், கடைக்காரன், பாற்காரன், வண்டி ஓட்டி முதலியவர்களைப் போலவும், சிறு சோறு சமைத்தல், சிற்றில் கட்டுதல், பொம்மைத் திருமணம் முதலியன செய்தும், அவர்கள் நடித்து விளையாடுவதை நாம் காண்கிறோம். சிறு கதைகளையும் பாடல்களையும் கூட அவர்கள் நடித்தல் கூடும்.

(2) **முன் ஆயத்தமில்லா நடிப்பு:** முன் ஆயத்தமில்லாமலே கதையை ஒரு முறை படித்துணர்ந்தபின் வகுப்பிலேயே மாணவர்களைக் கொண்டு நேராக நடித்தலில் இறங்கச் செய்தால் நல்ல கல்விப் பயன் விளையும். அவரவர் நடிக்கும் இடம் வந்தவுடன் வழக்கம் போல் அவ்வவ் வுரையாடல்களை நெட்டுருச் செய்து ஒப்புவிக்காமல், இடத்திற் கேற்றவாறு எங்ஙனம் பேசவேண்டும் என்பதை அவரவர்களே தங்களால் கூடிய வகையில் கற்பனையில் உறுதி செய்துகொண்டு உடனே பேசவேண்டும்; இதில் கற்பனைக்கு மிக இடம் இருப்பது காண்க. உரையாடல்களை அவ்வப்போது அவர்களே அமைத்துக் கொள்வர். முதலில் ஆசிரியர்கள் எதிர்பார்க்கும் அளவுக்கு இதில் வெற்றிகிடைக்காவிடினும், பழக்கினால் வந்து விடும். (3) தத்தம் பகுதிகளை நன்றாய் நெட்டுருச் செய்த பின்னும் நடிக்கலாம். இதில் நினைவாற்றலுக்குச் சிறந்த இடமுண்டு என்பது புலப்படும். இதையும் வகுப்பிலேயே நடிக்கலாம். வகுப்பில் நாடக உடை, திரைச்சீலைகள், ஒப்பனைகள், காட்சிகள் முதலியன வேண்டாம். ஆனால் எந்த மாணவருக்கு எந்தப் பகுதி என்பதுமட்டும் திட்டமாய்க் குறிக்கப்படவேண்டும். (4) எந் நடிப்பிலும் உரையாடல், எடுத்தல், படுத்தல், நலிதல்களைக்கொண்ட குரல் ஏற்றத் தாழ்வுடையதாய்த் திருந்திய செம்மையான உச்சரிப்பும் தெளிவான ஒலிப்பும் கொண்டிருக்க வேண்டும். நடிப்பு இயல்பாய் வலிந்தும் நலிந்தும் போகாமலும் உயிருள்ளதாயும் இருக்க வேண்டும். உணர்ச்சியும் மனவெழுச்சிகளும் உளச் சுவைகளும் ததும்பவேண்டும். அவற்றிற்கேற்ற மெய்ப்பாடுகளும் புலப்படவேண்டும். இந்நடிப்பெல்லாம் கல்விப் பயனுக்கே கையாளவேண்டும். (5) இசைக்கு ஏற்ற அளவில் இடம் தர வேண்டும். ஆனால் அளவுக்கு விஞ்சக்கூடாது. என்றும் பாடத் தெரிந்தவரைத்தான் நடிக்கத் தேர்ந்து எடுப்பது என்னும் கொள்கை தவறு. ஒவ்வொருவருக்கும் நடிப்புப் பயிற்சி இன்றியமையாததாகும். (6) இந்நடிப்புப் பயிற்சியைப் பள்ளிக்கூட ஆண்டுவிழா, இலக்கியக் கழகவிழா முதலிய சமயங்களிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். வேண்டுமெனின் இப்போது உடை, திரைச் சீலைகள், காட்சிகள், ஒப்பனை முதலியவற்றை மேற்கொள்ளலாம். ஆனால் இவை கதை அல்லது நிகழ்ச்சி நடந்த காலத்திற்கு ஏற்றவையாயிருக்கவேண்டும்.

## 4. தனித்தனிக் கற்றல் முறை அல்லது தனிப்பயிற்சி முறை :

பொதுவாக நமது பள்ளிகளில் **வகுப்புமுறையே** வழக்கத்தில் இருந்துவருகிறது. ஒவ்வொரு வகுப்பிலும் ஏறக்குறைய 40 பிள்ளைகள் சேர்த்து வைக்கப்பட்டு, அனைவருக்கும் ஒரே வகையான முறையில் கல்வி கற்பிக்கப்பட்டு வருகிறது. வண்டியை இழுக்க ஒருதலை நல்ல எருதையும், மற்றொரு தலை முட எருதையும் கட்டுவதேபோல் ஒரு வகுப்பில் கூரிய அறிவுடையவர்கள், மழுங்கிய அறிவுடையவர்கள், நடுநிலை மாணவர்கள் ஆகிய அனைவருக்கும் ஒரே முறையில் கற்பித்தல் நடைபெறுகின்றது. அறிவில் ஏற்றத்தாழ்வு இருக்கும் போது அவர்களுக்கு மேற்கொள்ளும் முறைகளிலும் வேற்றுமை இருக்க வேண்டாமா?

ஆனல் வகுப்பு முறையில் (1) திறமைக்கு ஏற்றவாறு கற்பிக்க இடமில்லை. (2) குழந்தைகளின் மனநிலைக்கும் ஏற்றவாறு கல்வி முறை இல்லை. பாடமும், பாடத்திட்டமுமே இன்றியமையாதனவாகக் கருதப்படுகின்றன. இதில் (3) தனித் தன்மை வளர்ச்சிக்குரிய ஊக்கம் ஒன்றுமில்லை. மாணவரின் தனிப்பட்ட தேவைகளை ஆசிரியர் கவனிப்பதில்லை. (4) கற்பித்தல் ஒரு சில மாணவருக்கே பயனைச் செய்யும். எல்லோரும் ஒரே விரைவில் அல்லது ஒரே முறையில் கற்கின்றவர்களல்லர். சற்றுப் பிற்போக்கானவர்கள், மற்றையவர்களைப்போல் தாமும் தேர்ச்சி அடையாததால் மன மகிழ்ந்து முயற்சியைக் கைவிடலாம். தேர்ச்சியும் தடைப்படுகிறது. அதேபோலக் கூரிய அறிவுடைய முற்போக்கான மாணவர்களின் தேர்ச்சியும் தடைப்படுகின்றது. நடுநிலை மாணவர்க்குரிய கலைத்திட்டமும், கால அட்டவணையும் இவர்கள் அறிவுக்கும் ஆற்றலுக்கும் தாழ்வாகக் காணப்படுவதால் இவர்கள் முன்னேற்றமும் தடைப்படுவதோடு குறும்புகள், சோம்பல், முயற்சிக் குறைவு, கல்வியில் அசட்டை, கெட்ட பழக்கங்கள், முழுமனத்தையும் கல்வியில் செலுத்தாமை போன்ற குறைகள் பெருக இடமுண்டு. "பொதுவாக எல்லா மாணவரைவிடச் சிறந்த நுண்ணறிவு ஈவு இவர்களுக்கிருந்தும் நடுநிலை மாணவருக்கென வகுத்த பாடத்திட்டத்தையே இவர்களும் பயிலுவதால், இவர்களுடைய அறிவாற்றல்கள், அடையத் தக்க நிலையை அடைய முடியாமற் போய்விடுகின்றன.

வகுப்பு முறையில் காணப்படும் குறைகளை வகுப்பைக் கல்வி கற்பிக்கும் ஓர் அளவாக வைத்துக்கொண்டே நீக்கி

விடலாம். (1) ஒரு வகுப்பு மாணவர்களனைவரையும் அவ் வகுப்பிலேயே வைத்துக்கொண்டே, தனிப்பட்ட மாணவர் களின் ஆற்றலுக்கு ஏற்றவாறு, மேற்பார்வைப் படிப்பு, ஒப்பந்த முறைகளால் கல்விமுறையை மாற்றிக்கொள்ளலாம். (2) இன்னும் எல்லோருக்கும் ஒரே முறையில் கற்பித்தாலும் ஒவ்வொரு பாடத்திலும் மாணவர்களின் தேர்ச்சிக்கு ஏற்ற வாறு வகுப்பு மாற்றம் செய்தும் செய்யாமலும் இருக்கலாம். (3) அல்லது வகுப்பு மாற்றத்தை ஆண்டுக்கு ஒருமுறை ஆண்டின் இறுதியிலேயே வைப்பதை விட்டுவிட்டு, ஒவ்வொரு பருவத்தின் ஈற்றிலும் வைக்கலாம். மிகவும் திறமைவாய்ந்த ஒரு மாணவர் இரண்டு பருவங்களிலேயே ஓராண்டுத் திட்டத்தை முடித்துவிடலாம். ஒரு பிற்போக்கான மாணவன் அதையே நான்கு பருவத்திற்குள் முடிக்க நேரினும் நேரலாம். இதற் கெல்லாம் இடங்கொடுக்க வேண்டும். ஆண்டு வகுப்பு மாற்றம் இரு பாலார்க்கும் தடையா யிருக்கிறது. (4) வகுப்பு மாற்றத் தைப் பாடங்களை ஒட்டியும் வைக்கலாம். அஃதாவது ஒரு மாணவன், தான் பிற்போக்காய்த் தேர்ச்சியின்றி இருக்கும் ஒரு பாடத்திற்குக் கீழ் வகுப்பிற்கும், சிறந்த தேர்ச்சி பெற்றிருக்கும் மற்றொரு பாடத்தில் உயர்ந்த வகுப்பிற்கும் போகலாம்.

ஆனால் இம்முறைப் பயிற்சி எளிதாய் முட்டுப்பாடு இன்றி நடைபெறுவதற்கு, ஒரு பாட வேளையில் எல்லா வகுப்பு களிலும் ஒரே பாடம் நடைபெற வேண்டும். இன்னோரன்ன முறைகளால் வகுப்பு முறையிற் காணும் குறைகளை ஒருவாறு நிறை செய்யலாம்.

இம்மாறுதல்கள், வகுப்பில் தனிப்பட்ட நிலையில் ஒவ் வொரு மாணவனும் கவனிக்கப்பட வேண்டும் என்னும் சிறந்த கொள்கையை எல்லோருக்கும் எடுத்துக் காட்டுகின்றன. இத்தனிப் பயிற்சி முறையால் பல **நன்மைகள்** விளையலாம். (1) மாணவர்கள் அவரவர்கள் திறமைக்கு ஏற்றவாறு ஆசிரி யரின் மேற்பார்வையிலும், உதவிகொண்டும் தாமாகவே முயன்று கற்கத் தூண்டப்படுகிறார்கள். ஆதலால் இதைத் **தன் முயற்சி முறை** என்றும் கூறலாம். (2) வேறுபட்ட திறமை யுடைய பல மாணவர்களும் தம் தம் திறமைக்கு ஏற்றவாறு விரைவாகவோ, மெள்ளவோ கற்கிறார்கள். (3) இதில் மாண வர்களின் தனித்தனிச் சிறப்புகளையும், ஆற்றல்களையும் வெளிப்படுத்த இயலும். (4) விருப்பத்துடனும், உள்ளக் கிளர்ச்சியுடனும், ஊக்கத்துடனும், பற்றுடனும் கற்கிறார்கள். (5) ஆதலால் காலம் வீண் போவதில்லை. (6) தாங்களே

முயற்சி செய்யவும், சிந்திக்கவும் தூண்டப்படுவதால் தன்னம்பிக்கையையும் சிந்திக்கும் ஆற்றலையும் வளர்க்கும் (7) தாங்களே கண்டுபிடித்துக் கற்பதில் மாணவர்களுக்கு ஒரு தனிப்பட்ட மகிழ்ச்சியும், மன அமைதியும் ஏற்படுகின்றன. (8) மாணவர் தங்கள் உரிமைகளையும் கடமைகளையும் உணர்ந்து கொள்கிறார்கள். (9) தம்மறிவைத் தாமே வளர்த்துக் கொள்வதில் ஒரு பற்று மாணவர்க்கு ஏற்படுவதோடு, தாமே முயன்று கற்பதால் பசுமரத்தாணியெனப் பொருள்கள் உள்ளத்தமைக்கப் படுகின்றன. (10) திறமைக்குத் தக்க தேர்ச்சி உண்டு. (11) ஆசிரியர் பேச்சைக் குறைத்துக் கொள்ளலாம்.

இம்முறையில் **சில குறைகளும்** எடுத்துக் காட்டப்படுகின்றன. (1) ஆசிரியருக்கு வேலை மிகுதியாகும். (2) வேலை மிகுதியோடு செய்வதற்கு அருமையான வேலையுமாகும். (3) சில சமயங்களில் மாணவர்களில் ஒருவர் வேலையை யொருவர் பார்த்தெழுதிவிட இடமுண்டு. ஆதலால் ஆசிரியர் மிக விழிப்பாயிருந்து மேற்பார்க்க வேண்டும். (4) செலவு மிகுதியாக ஆகலாம். (5) நூல் நிலையமும், உதவிக் கருவிகளும் பிறவும் மிக விரிவாக இருக்கவேண்டும். (6) இம்முறை மெள்ளப் போவதாயிருக்கிறது. (7) தனித்து வேலை செய்யும் முறையில் தன்னலமே மிகுதியாகத் தலையெடுத்து, கூட்டுறவுப் பழக்கமும், ஒத்துணர்ச்சியும் மிக இல்லாமல் போய்விடுகின்றன என்றும் சிலர் அஞ்சுகின்றனர் (ஆனால் இவ்வச்சம் வேண்டியதில்லை. ஒருநிலைத் திறமை வாய்ந்த சில மாணவர் சேர்ந்தும் வேலை செய்யலாம். மேலும் வாரத்திற்கு ஒரு முறை ஆசிரியர் எல்லோரையும் சேர்த்து வைத்துப் பேசுவதோடு, ஒவ்வொரு பாடத்துக்கும் ஒரு கூட்டுறவு ஏற்பட்டுவிடுகிறது. மேலும் அப்போதைக்கப்போது சில தன்னேக்க முயற்சி வேலையும் கொடுத்துக் கூட்டுறவுப் பான்மையை வளர்த்து விடலாம்.)

**டால்டன் திட்டம் என்னும் ஒப்பந்த முறை** தனிப் பயிற்சி முறையை அடிப்படையாகக் கொண்டதொன்றாம். ஒன்றுபட்ட அமெரிக்கா நாடுகளில் மேசாசுசெட்ஸ் நாட்டில், டால்டன் என்னும் ஊரில் ஹெலன் பார்க்ஹர்ஸ்ட் என்னும் அம்மையார் இம்முறையை முதன் முதல் தோற்றியவர். இம்முறை உயர்நிலை வகுப்புகளுக்கு மிக ஏற்றது. இத்திட்டத்தைப் பெயரளவில் நாம் 'முறை' என்று கூறினும், அவ்வம்மையார் "இதை ஒருமுறை என்றாவது கலைத்திட்டம் என்றாவது கூறாமல், இது கல்விபற்றிய ஒரு சீர்திருத்தமேயாகும்

என்றும், இது கல்வி கற்றல், கற்பித்தல் என்ற இருவேலைக்கும் ஒரு தொடர்பு ஏற்படுத்திவிடுகிறது," என்றும் கூறுகிறார்கள். **இம் முறையில் காணப்படும் நல் இயல்புகளாகக்** கீழ்க்கண்டவற்றைக் கூறுகிறார்கள். (1) இதில் உண்மையான உரிமை மாணவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. கால அட்டவணையால் மாணவர்கள் கட்டுப்படுத்தப் படவில்லை. எந்தப் பாடத்தையும், எந்த நேரத்திலும், வேண்டிய கால அளவு மட்டும் மாணவர்கள் கற்கலாம். தமக்கு ஒரு பாடத்தில் பற்றுள்ள அளவும் கற்றுக்கொண்டிருக்கலாம். விரைவாகவோ, மெள்ளவோ, வேண்டியபடி கற்கலாம். (2) தனித்தனிப் பாடம் என்ற பிளவில்லாமல் ஒத்துணர்ச்சி, ஒத்தபற்று, ஒவ்வொரு பிரிவு மாணவர்க்கும் உள்ள தொடர்பு வேலைகள் முதலியவற்றால் பள்ளிக்கூடம் முழுவதும் ஒரு குடும்பம் போல் பிணைத்து விடப்படுகிறது. (3) பள்ளிக்கூட வேலையை மாணவரின் வேலையாகக் கருதி, மாணவரே இதிற்சிறந்த பங்கை எடுத்துக் கொள்ளற்குரியர்; அவர்களுக்காகவே , கலை பாடத் திட்டங்கள் வகுக்கப்பட்டன; அவைகளுக்காக இவர்கள் இல்லை என்ற சிறந்த நன்னோக்கங்கள் இதில் உணரப்படுகின்றன. (4) தான் உணர்ந்து உள்ளத்தமைக்காத எதையும் மாணவர்கள் இதில் கற்கப்போவதில்லை. அவர்களுடைய ஒவ்வொரு வேலையும் நோக்கமும் பயனுமுடையதாகவே இருக்கும். (5) தம்மறிவைத் தாமே வளர்த்துக்கொள்வதில் பற்றும் கவர்ச்சியும் மாணவர்க்கு ஏற்படுகின்றன. (6) தன்னம்பிக்கையும், காரியத்தை எப்படி எடுத்துச் செய்வது என்னும் ஆற்றலும், பொறுப்புணர்தலும் உண்டாகின்றன. (7) படிப்பு திறமையாய் நடைபெறுகிறது. (8) முன்னேற்றம் சிறந்த முறையிற் செல்கிறது. (9) உறுதியான பயனும் கிடைக்கிறது.

**இதிற் காணும் சில குறைகளாகக் காட்டப்படுவன.** (1) ஒப்பந்த முறையில் வேலைக்கு மதிப்பு எண்கள் தருவது மிகவும் அருமையான காரியம். (2) அச்சு வடிவத்தில் உள்ள நூல்களின் இன்றியமையாத் தன்மையையும் அதையே மாணவர் நம்பி யிருப்பதையும் இம்முறை மிகவும் வற்புறுத்துகிறது. என்பர் சிலர். ஆனல் நூலின் இன்றியமையாத தன்மையையன்று, மாணவர்களின் தன் முயற்சியைத் தான் இது வற்புறுத்துகிறது. பழைய முறையில் ஆசிரியரே அறிவைப் பல நூல்களிலிருந்து திரட்டி மாணவர்களுக்குக் கொடுத்தனர். இங்கு அவ்வேலையை மாணவரே செய்துகொள்கின்

றனர். வேறு ஒன்றும் இல்லை என்று இக்குறைக்கு அமைதி கூறிவிடலாம். (3) ஆசிரியருக்கு மிக வேலை. எனினும் இம் முறையிற் கற்பித்த ஆசிரியர் எவரும் வேலை மிகுதியாதலின் பழைய முறைக்கே போவோமே என்று திரும்பியவர்களில்லை. (4) சிறு வயதிலேயே இவ்வளவு பெரிய பொறுப்பை மாண வர்க்குக் கொடுக்கலாகாது என்றும் (5) மிகுந்த பணச் செலவு என்றும் (6) காலம் மிகுதியாக ஆகிறது என்றும் கூறுகின்ற னர். இவையெல்லாம் கொள்ளத்தக்க குறைகள் அல்ல.

இம்முறையில் **ஆய்வுக் களங்கள், பாட வல்லுநர்கள், ஒப் பந்தங்கள், தேர்ச்சிப் பதிவுத்தாள்கள்** என்பன இன்றியமையாது வேண்டப் படுவனவாம். பாடங்கற்பித்தலுக்கு வகுப்பு முறையே அளவுகோலாகக் கொள்ளப்படினும், வகுப்பறை கள் ' கூட்டு ஆய்வுக் களங்களாக ' மாறிவிடுகின்றன. மாண வரே ஆய்வு நடத்துவோர்கள். ஒவ்வொரு பாடத்திற்கும் ஆய்வுக்களம் உண்டு. அதில் பாடத்திற்கு வேண்டிய எல்லாப் பொருள்களும்—பாட நூல்கள், மேற்கோள் நூல்கள், நாட்டுப் படங்கள், விளக்கப் படங்கள், கால்க்கோடுகள், காலக்குறிப்பு கள், உதவிப் பொருள்கள் முதலிய பலவும்—இருக்கும். தமிழுக்கும் தனி ஆய்வுக் களம் வேண்டும்.

'**பாடவல்லுநர்கள்**' எனப்படும் ஆசிரியர்கள் அவ்வப் பாடங்களில் சிறந்த, ஆழ்ந்த, அகன்ற அறிவுடையோராய் இருக்கவேண்டும். இம்முறையில் சிறந்த ஆசிரியர்கள் கற்பிக்கும்போது தம்மையே மறந்து தனி மாணவர்களையும் மறந்து விடுவார்களோ என்று அஞ்ச வேண்டுவதில்லை. ஏன் எனில் ஆசிரியர் பேச்சும் கற்பித்தலும் பழைய முறைபோல் இங்கு மிக இல்லை. ஒவ்வொரு பாடத்தையும் தனித்தனி வல்லுநரின் கீழ்த் தனித்தனியாக மாணவர் படிப்பதால் எல்லாப் பாடங்களிடையேயும் ஒரு தொடர்ச்சியற்றுப்போய் விடுமோ என்று ஐயுறாமலிருக்கப் பல வல்லுநர்களும் ஒன்று சேர்ந்து தாங்கள் கொடுக்கப்போகும் ஒப்பந்தங்களின் தன்மை, அளவு முதலியவற்றைக் கூடி ஆராய்ந்து ஒரு தொடர்பை ஏற்படுத்தலாம். மேலும் எல்லா மாணவரிடையும் ஓர் ஒத்துணர்ச்சியையும் கூட்டுறவையும் உண்டுபண்ண ஒவ் வொரு வல்லுநரும் வாரத்திற்கு ஒரு முறையாவது எல்லா மாணவரையும் சேர்த்து வைத்துப் பொதுவான பொருள்கள் பற்றிப் பேசலாம்.

ஒவ்வொரு பாட அறையாகிய "**ஆய்வுக்களம்**" அவ்வப் பாட வல்லுநரின் ஆளுகையில் இருக்கும். ஒவ்வோர் அறை

யினும் பல நிலைத்தேர்ச்சியுள்ள மாணவர்களும் தாமாகவே படிப்பார்கள். இவர்கள் படித்து, படித்தவற்றை எழுதுவதற்கான **ஒப்பந்தங்களை** ஒவ்வொரு வார, மாத, ஆண்டுக்கும் ஆசிரியர் முன்னதாகவே, ஆயத்தம் செய்து அச்சிட்டுக் கொடுப்பார். இவ்வொப்பந்தங்களே இம்முறையின் உயிர் நிலையாகும். ஒவ்வொரு மாணவரும் ஓர் ஆண்டிற்குள் இவ்வளவு "ஒப்பந்தங்கள்" செய்து முடிக்க வேண்டும் என்று ஒப்பந்தம் செய்துகொள்வதால் இஃது இப்பெயர்பெற்றது. ஒரு பள்ளிக்கூட ஆண்டில் எத்தனை மாதங்களுளவோ அத்தனை ஒப்பந்தங்கள் ஒரு பாடத்திற்கு உண்டு. ஒன்பது மாதங்கள் கொண்ட ஒரு பள்ளிக்கூட ஆண்டில் தமிழுக்கு என்று வைத்துக்கொண்டால் ஒன்பது ஒப்பந்தங்கள் தரவேண்டியிருக்கும். அதுபோல் ஆறு பாடங்கள் இருந்தால் ஐம்பத்து நான்கு ஒப்பந்தங்கள் மாணவர் செய்யவேண்டிவரும். ஒவ்வோர் ஒப்பந்தமும் மாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டாலும், மாணவர்கள் வேலையைச் சரியாகப் பகிர்ந்து கொண்டு திறமையுடன் செய்வதற்காக, வாரத்திற்கு ஒரு பிரிவாகச் செய்யும் வகையில் ஒவ்வொரு மாத ஒப்பந்தமும் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்படும். ஒப்பந்தங்களை விளம்பரப் பலகையில் போடலாம்; அல்லது ஒவ்வொரு மாணவரின் கையில் கொடுத்து விடலாம்.

ஒவ்வோர் ஒப்பந்தமும் ஒரு சுருங்கிய முகவுரை, படிக்க வேண்டிய குறித்த பகுதியில் எழுத வேண்டிய பொருள் பற்றிய தலைப்பு, அதைப்பற்றி எழுதவேண்டியவை, விடையிறுக்க வேண்டிய கேள்விகள், இவற்றுக்கு வேண்டிய குறிப்புகளைத் திரட்டுவதற்குதவியான மேற்கோள் நூல்கள் முதலியவை பற்றிய விவரங்களைக் கொண்டிருக்க வேண்டும். ஒப்பந்தங்கள் மாணவர்களின் சிந்தனை ஆற்றலைத் தட்டி எழுப்பி நன்றாய்ச் சிந்திக்கச் செய்வனவாய் இருத்தல் வேண்டும். வெறும் பாடங்களின் எண் வரிசையையோ, தலைப்பையோ, தனிச்சொற்களையோ விடைகளாக எழுதி விடுவனவாக இருத்தல் ஆகாது. மாணவர் தாமாகவே எழுதி முடிக்கத் தக்க தகுதி வாய்ந்தனவாய் மிக அருமையும் எளிமையுமின்றி இருத்தல் நல்லது. தமிழில் சொல் விளக்கங்கள், கேள்விகள், இலக்கணக் குறிப்புகள், அணிகள் முதலியனவும், பாட நூலில் இல்லாமல், ஆனால் அதிலிருந்து தோன்றி வருவனவுமானவைபற்றி, நிகண்டுகள், அகராதிகள் பல பொருளகராதிகள் முதலியவற்றிலிருந்து படித்து எடுத்துத் திரட்டி எழுதும்படி ஒப்பந்தங்கள் அமையவேண்டும். இன்

னும் அவைகள் விளக்கமாய், தெளிவாய், மாணவர் பற்றை இழுக்கக்கூடியனவாய், ஊக்கத்தை ஊட்டக் கூடியனவாய், வேலையில் செலுத்தக் கூடியனவாய், ஆயத்தம் செய்வதற் கேற்றவையாய், பகுத்தறிவுக்குப் பொருந்தியவையாய், ஒவ்வொரு தனிப்பட்ட மாணவருக்கும் ஏற்றவையாய் இருக்க வேண்டுமென்றும், புதிய பாட ஒப்பந்தத்தைப் பழையவற்றோடு தொடர்பு படுத்துவனவாயும் இருக்க வேண்டு மென்றும் கூறுகின்றனர். இன்னும் ஒப்பந்தங்களின் நல்லியல்புகளையும் ஒப்பந்த முறைக் கல்வி நடைபெறும் முறையையும் அறிஞரின் நூல்களிற் கண்டுகொள்க. (Bossing ch. VIII; Colvin ch. XI; Dewey-Dalton Laboratory Plan, Parkhurst. Education on the Dalton Plan, Ryburn Mother tongue–XI.)

ஒவ்வொரு பாடமும் தொடங்குவதற்கு முன்னும் பாடத்திற்குப் பின்னும் ஒப்பந்தங்கள் கொடுக்கலாம். பாடம் தொடங்குவதற்கு முன், ஆசிரியர் கேட்கக்கூடிய கேள்விகளுக்கு மாணவர் விடை யெழுதி ஒப்பந்தங்களை முடித்தால் அவை பாட முன் ஒப்பந்தங்களாம். பாடம் முடிந்தபின் பயிற்சிகள் கொடுத்துத் தனித் தனியாக எழுதி முடிப்பது பாடப் பின் ஒப்பந்தமாகும்.

இனி ஒப்பந்தங்களை மாணவர் எப்படிச் செய்திருக்கின்றனர் என்று பார்த்துத் தேர்ச்சியைப் பதிவு செய்வதும் ஆசிரியரின் மேற்பார்வையைப் போல் சிறந்த வேலையாகும். பிள்ளைகள் ஒவ்வொருவரும் எப்போது ஒப்பந்தங்களை முடித்தனர் என்ற விவரம் தவறாமல் குறிக்கப்பட வேண்டும். இதற்கெல்லாம் ஆசிரியரின் கண்ணும் கருத்துமாய்க் கண்காணிக்கும் மேற்பார்வை மிகமிக வேண்டற்பாலதாம். **தேர்ச்சிப் பதிவுத் தாள்களில்** ஆசிரியர்கள் மாணவர் ஒப்பந்தங்களை முடித்த நாள், வேலையின் தகுதி முதலியவற்றைக் குறித்து வைக்க வேண்டும். இத்தாள்கள் ஆசிரியரிடத்திலிருப்பதோடு ஒவ்வொரு மாணவருக்கும் கொடுக்கப்படவேண்டும். அப்போதுதான் மாணவருக்கும் அவரவர் உண்மைநிலை தெரிய வரும்.

இம்முறையை உயர்நிலை வகுப்புகளில் தமிழ்ப் படிப்பிலும் இலக்கணம், கட்டுரை, செய்யுட் பாடங்களில்மேற்கொள்ளலாம் எனத் தோன்றுகிறது.

## 5. மேற்பார்வைப் படிப்பு

மேற்பார்வைப் படிப்பு என்பதென்ன என்று உறுதி யாகக் கூறுவதே அருமையா யிருக்கின்றது. ப்ரௌன்வெல் என்னு மாசிரியர் தம் நூலில் பதினைன்கு வகை மேற்பார்வைப் படிப்பைப்பற்றிக் கூறுகின்றார். ஆனால் பொதுவாக இவை யெல்லாவற்றையும் இரண்டு வகையாகச் சுருக்கி மேற் பார்வைப் படிப்பை இரண்டு பிரிவுகளாகக் கொள்ளலா மென்பர் பாசிங் ஆசிரியர். ஒரு சாரார், ஒன்றுக்கொன்று வேறு பாடுடையதாகவும், "மாணவர்களுக்கு எங்ஙனம் படிப்பது என்பதை அதற்கென ஒதுக்கப்பட்டிருக்கும் ஒரு பாடவேளை நேரத்தில், ஆசிரியர் வழிகாட்டி அவர்களைப் படிக்குமாறு செய்தலே" மேற்பார்வைப் படிப்பாகும் என்பர். அஃதாவது "மாணவர்களோடு சேர்ந்து படித்தும், தனித்தனி மாணவர்க்கு வேண்டும் உதவிபுரிந்தும் அதற்கெனப் பாட வேளையில் ஒதுக்கப்பட்டிருக்கும் மணி நேரத்தில், ஆசிரியர்கள் மாணவர்களுக்கு எப்படிப் படிப்பது என்பதைக் கற்பிப்பதே மேற்பார்வைப் படிப்பாகும்" என்பதாம். இதையே பெரும் பான்மையோர் கொள்கின்றனர்.

ஆனால் கில்ஸர், ஷ்ரெவ் போன்ற ஆசிரியர்கள் இங்ஙனம் ஒரு தனி நேரத்தில் பயிலுவதைக் கொள்ளாது, சிறுபான்மை யோராகிய மற்றொருசாரார் கூறுவதைக் கொள்ளுகின்றனர். அஃதாவது "மேற்பார்வைப் படிப்பு என்பது குறித்த ஒரு மணிநேரப் படிப்பைமட்டும் குறிக்காது, மாணவர்களின் எல்லாப் படிப்பு வேலைப் பகுதிகளையும் பரந்த நோக்கத்தோடு குறிக்கிறது" என்பதாம். ஆனால் இப்படி ஒரு திட்டமும் தெளிவுமில்லாத படிப்பைக் கொள்ளாமல், ஒரு குறித்த நோக்கத்தோடு "பயனுள்ள முறையிற் படிக்கும் பல வழிகளை யும் மாணவர் உணர்ந்து ஆசிரியரின் உதவிகொண்டு அவற் றைத் தன் படிப்பிற் செலுத்தி வகுப்பில் புதுப்பாட ஒப்பந் தங்களைப் படிப்பதே மேற்பார்வைப் படிப்பென்று கொள்ள லாகும்" என்று பாஸிங் ஆசிரியர் கருதுகிறார். எனவே பயனுடன் படிப்பதற்குரிய சிறந்த வழிகளும் முறைகளும் மாணவர்களுக்குக் கற்பிக்கப்பட்டால், "ஆசிரியரே இவற்றை காட்டும் வழி காட்டியாய் மாணவனுக்கு அமைதல், புதுப்பாட ஒப்பந்தங்களை இம்முறைகளின்படி கற்பது, வகுப்பிலேயே பாடவேளையில் ஒரு பிரிவில் மேற்பார்வைப் படிப்பு நிகழல், என்ற மூன்று கட்டுப்பாடுகள் உறுதியாக வேண்டும்."

ஆசிரியர்கள், தம் மாணவர்களின் படிப்பில், விளையாட்டில் ஒரு நடு நிலையாளர் எடுத்துக்கொள்ளும் பங்கையே எடுத்துக் கொள்ளவேண்டும். அஃதாவது அவர்கள் படிப்பில் மிகக் குறுக்கிடாது, ஐயம் நேர்ந்தவிடத்து ஐயத்தை நீக்கவும், தவறான முறையிற் செல்லும்போது நேரான வழியிற் செலுத் தவும், பலவகைத் திறமைகளைப் பெறவும், உள்நோக்கம் பெறவும், சுவையறிந் தின்புறவும் வேண்டிய உதவியைச் செய்யலாம். இவற்றைப் பாடம் நடத்தும்போது வகுப்பி லேயே வாய்மொழி, விளக்கிக்கூறல், படங்கள் முதலிய கருவிகளால் விளக்கல்களினாலும், நடைமுறை, கருத்துகள், கொள்கைகள், ஆராய்வு நோக்கங்கள், மனப்பான்மைகள் முதலியவற்றை எடுத்துக் காட்டுவதினாலும் செய்யலாம். எனி னும் தனிப்பட்ட முறையில், "திறமையுடன் தம் வேலையைச் செய்யும் வழி எது என்பதை எடுத்துக் காட்டும் மேற்பார்வைப் படிப்பில் மாணவனுக் குதவுவதையே ஆசிரியரின் சிறந்த வேலை என்று சொல்லலாம்" என்பர் கால்வின் ஆசிரியர். ஆகையால்தான், புதுமுறைகளில் இற்றைநாளில் மேற்பார் வைப் படிப்பையும், அதற்குரிய காரணங்களையும், அதை நடத்தும் முறைகளைப் பற்றியும், அதனால் விளையும் நற்பயன் களைப் பற்றியும் அடிக்கடி நாம் கேள்விப்படுகிறோம்.

இப்படிப்பு ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் மேற் கொள்ளப்படவேண்டும் என்று கூறப்படுகிறது. ஒவ்வொரு மாணவனும் படிப்பை வீட்டிலேயே செய்யக்கூடாதா? பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் பாடத்தை நடத்தினால் மட்டும் போதுமே என்று சிலர் கேட்கலாம். ஆனால் படிப்பு ஆசிரி யரின் மேற்பார்வையில் **பள்ளியில் நடப்பதே சிறந்தது என்பதற்குப் பல காரணங்கள் கூறுவர் முறை வல்லார்.** அவற்றிற் சில இன்றி யமையாதனவற்றை எடுத்துக் கூறுவோம். (1) நம் நாட்டில் படிக்கும் மாணவர்களில் மிகப் பெரும்பான்மையோர் மிகமிக எளியராய், உண்ண உணவும், உடுக்க உடையும், தங்க நிழலும் சரியாகக் கிடைக்கப் பெறாதவராய் இருக்கின்றனர். அவர்கள் வீடும், சுற்றுப்புறமும், சூழ்நிலையும் மிகவும் கேடா யிருக்கின்றன. நல்ல காற்றோட்டமும் வெளிச்சமும் உள்ள தனியறைகள் படிப்பதற்கென இவர்களுக்குக் கிடையாது. வெளிச்சமும் காற்றோட்டமும் இல்லாத குறுகிய அறைகளிற் பலருக்கிடையில் இவர்கள் எதைப் படிப்பார்கள்? உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் நூற்றுக்கு எத்தனை பேர்களுக்குப்

படிக்கத் தனி அறைகள் உள்ளன? இன்னும் பல இடை யூறுகள் இவர்களுக்கு உண்டு. பெற்றோர்களும் பள்ளிக் கூடத்தில் பயிலும் தன்னுடன் பிறந்தோர்களும் சூழ, ஒரே இடத்தில் ஒரு மாணவன் படிக்க நேரிடுகிறது. இதில் கவன மும் மன ஒருமையும் எங்கிருந்து வரும்? இதனால் வீண் கால முயற்சிச் செலவுகள் மிக ஆகின்றன. (2) இன்னும் அதோடு அன்றி வீட்டுப் படிப்பு, கெட்ட படிப்புப் பழக்கங்களையும் உண்டுபண்ணி விடுகின்றது. நாள்தோறும் குறித்த ஒரு காலத்தில் பழக்கமாகப் படிப்பது என்றில்லாமல், மனம் போனவாறு படிப்பதும், நடு இரவில் எழுந்துகொண்டு படிப்பதும், சில சமயங்களில் சாப்பாட்டிற்கு முன்னும், சில சமயங்களிற் பின்னும் படிப்பதும், படிப்பைத் திடீரென்று நிறுத்திவிட்டு நண்பருடன் காட்சிகளுக்குப் போய்விடுவதும், பெற்றோர்களால் பல வேலைகள் செய்யும்படி படிப்புக்கிடை யில் ஏவப்படுவதும் போன்ற பல தொல்லைகளாலும், இடை யூறுகளாலும், படிப்புக் கெட்டுப் போவதோடு, கெட்ட பழக் கங்களும் ஏற்பட்டு விடுகின்றன. (3) படிப்பைச் சரியான முறையில், மேற்பார்வை பார்ப்பதற்குரிய தகுதியும், ஆற்ற லும், பயிற்சியும் பெற்றோர்கள் ஒவ்வொரு வீட்டிலும் இல்லாத காரணத்தால் தவறுகள் செய்வதும், பயனற்ற முறைகளை மேற்கொள்வதும், தட்டுத்தடுமாறுவதும், காலத்தை வீணாக்கு வதும் மிகவும் வீட்டுப் படிப்பில் காணப்படுகின்றன. (4) சிற்சில வீடுகளில் படிக்காத, படித்தும் கற்பிக்கப் பயிற்சிப் பெறாத பெற்றோர்கள் அல்லது நண்பர்கள் தாமாகவே உதவி செய்வதாக முன்வந்து மாணவர்களைக் குட்டிச்சுவராக்கி விடுகிறார்கள். முழு வேலையும் தாங்களே சில பெற்றோர்கள் செய்து கொடுத்து விடுவதால் பல மாணவர்களுக்குத் தாமாகவே காரியங்களை அறியவும் செய்யவும் வேண்டிய ஆற் றல் நசுக்கப்பட்டுப் போகிறது. சில வீடுகளில் பல, ஒரு சாலை மாணவர்கள் சேர்ந்து கற்க முன்வந்து ஒருவரையொருவர் கெடுத்து விடுவது முண்டு. மேலும் இக்கூட்டுப் படிப்பில் சிறந்த மாணவர்கள் முழு வேலையையும் செய்ய, சோம்பேறி கள் சும்மா இருப்பதுமுண்டு. (5) தனித்தனி ஆற்றல் படைத்த தனித்தனி மாணவர்க்குத் தனித்தனிப் பயிற்சி வேண்டியது இன்றியமையாததல்லவா? ஒரே வகுப்பில் உள்ள ஒரே வயது மாணவர்கள் பல திறப்படுகின்றார்கள். இவர்கள் எல்லோருக் கும் வகுப்பில் ஆசிரியர் தனித்தனியாக வேண்டியதைச் சொல்லிக்கொடுக்க முடியாது. மேற்பார்வைப் படிப்பிலேயே

தான் இதைத் தரமுடியும். (6) மேற்பார்வைப் படிப்பைப் பற்றி நடத்திய ஆராய்ச்சிகளின் புள்ளி விவரங்களைப் பார்க்கும்போது, இப் படிப்பினுல் மாணவர்க்கு மிக நன்மை விளைந்திருக்கின்றது என்றும், இதில், இடை கடை மாணுக்கர் முன்னேற்றத்தைக் காட்டியிருக்கின்றனர் என்றும், பெரும் பாலோர், இம் முறையில் தாமே வீட்டிற் படிப்பதைவிடச் சிறந்த வேலை செய்கின்ருர்கள் என்றும் தெரியவருகிறது. (7) மேலும் பள்ளிக்கூடங்களில், சரியான மேற்பார்வைப் படிப்பு இல்லாத காரணத்தினுல் சில அறிவுள்ள மாணவர் களும் பிற்போக் குள்ளவர்களாகி விடுகின்றனர் என்றும் தெரியவருகிறது. இவர்களின் பிற்போக்குக்கு இவர்கள் அறிவின்மை காரணமன்று. ஆனுல் மேற்பார்வைப் படிப்பு இல்லாமையே காரணமாகும்.

எனவே இம் மேற்பார்வைப் படிப்பைப் பள்ளிக்கூடக் கால அட்டவணையிலேயே ஓர் இடத்தில் நுழைக்க வேண்டும். இதைக் கால அட்டவணையில் சேர்ந்தாற்போன்று **இரண்டு பாடவேளை** நேரத்தில் பிற்பிரிவில் நுழைக்கலாம் என்றும், **ஒரு பாடவேலையிலேயே** பிற்பகுதியில் நுழைக்கலாம் என்றும், ஒவ் வொரு **நாளின் இறுதியில்** அட்டவணைக்குப் புறமாகத் தனியான ஒரு பிரிவில் நுழைக்கலாமென்றும் முறைவல்லார் கூறு கின்றனர். விவரங்களைக் காஸ்வின், பாஸிங் ஆசிரியர்களின் நூல்களிற் காண்க.

இம்மணிநேரத்தில் என்ன செய்வது என்று பார்ப் போம். ஒரு புதுப் பாடத்தில் சிறந்த ஒரு பகுதியை ஒப்பங் தங்களாகக் கொடுத்துப் படிக்கச் செய்யலாம். அல்லது வகுப்பில் நடந்த ஒரு பாடத்தின் சுருக்கத்தை எழுதும்படி கூறலாம். எப்படி ஒரு பகுதியைச் சரியான முறைகளை மேற்கொண்டு படிக்கலாம் என்றும் ஆசிரியர்கள் வழிகாட்ட லாம். அஃதாவது உயர்நிலைக் கருத்தையும் அதை விளக்க வரும் விவரங்களையும் அறிதல், குறிப்புச் சட்டம் எழுதுதல், அதில் வரும் கேள்விகளைச் சிந்தித்துத் தீர்மானித்தல், இலக் கணக் குறிப்புகளை அறிதல், அயல் மொழியாயின் மொழி பெயர்த்தல் முதலியவற்றைச் செய்யச் சொல்லலாம். அல்லது மாணவர்களின் தனித்தனி ஆற்றல் எவ்வழியிற் செல்கின்றது என்று தனித்தனி கண்டுபிடித்து அவரவர்களுக்கு ஏற்ற வேலையைக் கொடுப்பதற்குரிய வாய்ப்புகளைத் தரலாம். இன்னும் இந்நேரத்தில் கீழ்க்கண்டவற்றைச் செய்து மாண

வர்கள் பயனெய்துமாறு ஆசிரியர்கள் மாணவர்க்குதவலாம் என்பர் பாஸிங் :—

நெட்டுருச் செய்வதில் சிறந்த முறைகளில் மாணவர்க்குப் பயிற்சி அளித்தல், பொருள்களை நினைவூட்டிக் கொள்வதில் உதவல், பொருள்களைத் தேடி அடைதல், நூல்களைப் புரட்டிப் படித்தல்களிற் பயிற்சி, விரைவாகவும் பொருளுணர்ந்தும் படிப்பதிற் பயிற்சி, வாய்க்குட் படிக்கும் பழக்கத்தை எய்துவித்தல், படிக்கும் நன்முறைகளைக் கற்பித்தல், சுருக்கங்களையும் குறிப்புச் சட்டங்களையும் எழுதப்பயிற்றல், அறிக்கைகள் எழுதவும், குறிப்புகளும், விவரங்களும், தொகுக்கவும், தொகுத்தவற்றை ஒழுங்காக முறைப்படுத்தவும் பழக்கல், கற்பனையிலிருந்து, இப்படித்தான் சில பொருள்கள் இருந்திருக்கலாம் என்று ஒரு தற்கால முடிவுக்கு வந்து, பின் அவற்றைப் பொருத்திப் பார்த்தல், உய்த்துணர்தல், தீர்மானித்தல்களைச் செய்தல், தனித்தனி மாணவரின் பற்றுகள், தனித்திறமைகள், தனி வேறுபாடுகளைக் காண்டல், பழைய பாட ஒப்பந்தங்களைப் புது ஒப்பந்தங்களோடு பொருத்தல் இவற்றையும் இன்னும் இவைபோன்ற நல்ல படிப்புப் பழக்கங்களையும் உண்டு பண்ணுவதிலும் நன்முறைகளை மாணவர் மேற்கொள்ளச் செய்வதிலும் ஆசிரியர்கள் மேற்பார்வைப் படிப்பில் மாணவர்க்குதவியாயிருக்கலாம்.

ஆனால் கீழ்க்கண்ட **குறைகளும்** இம்முறையில் இருப்பதாக முறைவல்லோர் கூறுவர். (1 மாணவர்கள் தன்னம்பிக்கையையும் தன் முயற்சியையும் இது குறைக்குமாம். ஆனால் இஃது உண்மையான குறையாகாது. ஆசிரியர் மாணவருக்கு உறுதுணையாவரேயன்றி அவர்கள் வேலை முழுவதையும் செய்து விடுவதில்லை. (2) முன்னரே வருந்தி உழைக்கும் ஆசிரியர்களின் காலத்தை இன்னும் இது விழுங்கிவிடுமென்பர். ஆனல் மேற்பார்வைப் படிப்பையும் ஆசிரியரின் முறையான கடமைகளில் ஒரு பகுதியாக்கி விடலாம். மேலும் தனியாகப் பாடம் நடத்துவதையும் குறைத்துக் கொள்ளலாம். (3) பள்ளிக் கூடத்திற்கு இன்னும் செலவு கூடுதலாகவும் கூடும் என்பர். ஆனல், நல்ல பயன் தரத்தக்க முறைகளை நுழைப்பதில் பணச் செலவை இடையூறாகக் கருதுவது அறியாமையாகும். மேலும் ஆசிரியர்களும் இன்னும் மிகுதியாக வேண்டுவதில்லை. இன்றியமையாத சிறந்த இம் முறையை ஒரு பாடவேளையின் பிற்பகுதியிலே நுழைத்தால் இதற்கெனக் கூடுதலான தனி ஆசிரியர் வேண்டுவதில்லை. பணச் செலவும் இல்லை. தனி

அறையும் வேண்டாம். (4) பள்ளிக்கூடக் கால அளவு கூடுதலாகின்றது என்பது மற்றொரு தடை. நல்ல முறையிற் பள்ளிக்கூடத்திலேயே மாணவனது முழு வாழ்க்கைக்குரிய வாய்ப்புகளைக் கொடுத்துவிட்டால் கால நீடிப்பால் கெடுதி ஒன்றும் ஏற்பட்டுவிடாது. ஐந்து மணி நேரத்திற்கு மேலும் இந்நன்முறையை நுழைப்பதால் இன்னும் ஒரு மணி நேரம் கூடுதலாகப் பள்ளிக்கூடத்தில் மாணவர்கள் இருந்துவிட்டால் ஒன்றும் கெட்டுப்போய்விடாது. மேலும் ஆசிரியர் தனியாகப் பாடம் நடத்தும் வேலையையும், இம்மேற்பார்வைப் படிப்பு வந்தவுடன் குறைத்துக்கொள்ளலாம். (5) தனி அறைகளாக இன்னும் மிகுதியாகப் பல வேண்டும் என்பது மற்றொரு குறைவாகக் காட்டப்படுகிறது. நல்ல மேற்பார்வைப் படிப்பிற்குப் பெரிய கூடங்கள் தனியாக வேண்டியதில்லை. ஆனால் இருக்கும் பெரிய கூடங்களிலேயே தனி அறை வேண்டுமென்றில்லாமல், சிறு சிறு பிரிவுகளாகப் பிரித்து, வகுப்பில் இப்படிப்பை நடத்தலாம். புதிதாகக் கட்டும் கட்டடங்களில் 35, 40 பேர்கள் பிடிக்கக்கூடிய பல சிறிய அறைகளைக் கட்டி இப்படிப்பிற்கு உபயோகப்படுத்திக் கொள்ளலாம்; அவற்றையே வகுப்புக்கும் வைத்துக்கொள்ளலாம்.

## அயல்மொழியை எந்த வயதில் கற்பிக்கத் தொடங்கலாம்

இதைப்பற்றி இரண்டுபட்ட கருத்துகள் உள்ளன. ஒரு சாரார், மிக இளமையிலேயே தொடங்கலாம் என்பர். ஏனெனில், இளமையில் ஒலி உறுப்புகள் இறுகாமல், இளகியிருக்கும் பொழுதே உச்சரிப்பதற்கு அருமையான அயல்மொழி ஒலிகளை உச்சரிக்கப் பழகுவது எளிதென்பர்.

மற்றொரு சாரார், பன்னிரண்டு வயதுவரை அயல்மொழிப் படிப்பைத் தள்ளி வைக்கலாம் என்பர். கீழ் வகுப்புகளில், அயல் மொழியானது அம்மொழியிற் சிறந்த அறிவும் பயிற்சியுமின்றிக் குறைந்த ஊதியம் பெறுகின்ற ஆசிரியர்களால் சரிவரக் கற்பிக்கப் படுவதில்லை. அவர்கள் தகுதியுடையவர்களும் அல்லர். மேலும் இளமைப் பருவத்தில் மாணவர்களுக்குப் போதிய சொல்வளமும் கருத்து வளமும் இல்லை. ஆகையால் இப்பருவம் அயல்மொழியை நுழைப்பதற்கு ஏற்றதன்று; தாய் மொழியில் போதிய அளவு பயிற்சியும் அறிவும் ஏற்படாத வரையில் அயல் மொழியைப் புகுத்துவது முறையன்று என்பன இவர்கள் அதற்குக்

கூறும் காரணங்களாம். அயல் மொழிப் படிப்பைத் தொடங்குவதுபற்றி அறிஞர்கள் பின் வருமாறு கூறு கின்றார்கள்.

டாக்டர் ஸ்வீட் (Sweet) என்பார், "தாய் மொழியின் சிறப்பியல்புகளை மாணவர்கள் நன்கறிந்திருத்தலே அவர்கள் அயல் மொழியைப் படிப்பதற்குரிய தகுந்த அடிப்படையும் ஆயத்தமும் ஆகும்" எனக் கூறுகின்றார். "தாய் மொழியிற் பெறும் நற்பயிற்சியே எவ்வகை மொழிப் படிப்பிற்கும் ஏற்ற அடிப்படையாகும் என்றும், இப்பயிற்சி அதற்கு உறு துணையாகுமேயன்றி இடையூறாகாது" என்றும் கூறும் டாக்டர் ப்ரெர்டன் (Brerton) என்னும் பேராசிரியர், "மொழிகளை ஒப்பிட்டுப் படிப்பது ஒன்றை யொன்று வளப்படுத்துகிறது என்ற கருத்தினையும், தான் தொடங்கி யுள்ள ஒரு மொழியில் நல்ல திறன் எய்துமுன்னர் பிறிதோர் அயல்மொழியைத் தொடங்குவது நன்றன்று" என்று பல மொழிகளைப் படிப்பதைப் பற்றிய தம் கருத்தை வெளி யிட்டுள்ளார். நம் நாட்டு மூதறிஞர்களாகிய காந்தியடிகளும் காலஞ்சென்ற கவியரசர், தாகூரும் இக்கருத்தையே கொண்டவர்களாவார்கள்.

எனினும், ஆங்கிலம், இந்தியாவில் பெற்ற ஒரு நிலை யானது மிகவும் தனி நிலையாக இருப்பதினையும் மாணவர்கள் பள்ளியிற் செலவிடும் காலவரையறையை முன்னிட்டும் மேற்கூறிய இரண்டு கொள்கைகளுக்கும் நடுநிலையாக, ஆங்கிலமானது ஏறக்குறைய எட்டு அல்லது ஒன்பது வயதில் கற்பிக்கத் தொடங்கப்படலாம் எனத் தோன்றுகிறது. இதை யொட்டியே நம் பள்ளிக்கூடங்களிலும் ஆங்கிலமானது நான்காவது வயதில் தொடங்கப்படுகிறது. இவ் வகுப்பு மாணவரின் வயது 8—9 ஆகும்.

## தாய்மொழிப் படிப்புக்கும் அயல்மொழிப் படிப்புக்குமுள்ள தொடர்புகள்

ஆங்கிலப்படிப்பில் நேர்முறை(Direct Method) என்னும் முறையானது வருவதன் முன்னர், மொழி பெயர்ப்பு முறையே (Translation Method) கையாளப்பட்டு வந்தது. ஆங்கிலச் சொற்கள், சொற்றொடர்கள், தொடர்மொழிகள் எல்லாம் தாய் மொழியில் பெயர்க்கப்பட்டே கற்பிக்கப்பட்டு வந்தன. இந்த ஒரே முறைதான் கையாளப்பட்டுவந்தது. இதில் சில நன்மைகளும் தீமைகளும் கலந்திருக்கின்றன. ஒரு நாட்டா ருடைய பழக்க வழக்கங்களும், நடை உடைகளும், எண்ணங்

களும், உணர்ச்சிகளும் மற்றொரு நாட்டாருடைய பழக்கவழக்கங்கள் முதலியவற்றிற்கு மாறாக இருப்பதைக் காண்கிறோம். இவைகளெல்லாம் அன்னார்தம் மொழிகளிலே பொதிந்து கிடக்கின்றன. ஆங்கில நாட்டின் தட்ப வெப்பநிலை காரணமாயும் நாகரிகம் காரணமாயும் தோன்றிய பல்லாயிரக்கணக்கான ஆங்கில வார்த்தைகளுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்கள் காண்பதரிது. எடுத்துக்காட்டாக, **Drawing room, winter, warm welcome (key in music)** முதலிய சொற்களைக் காண்க.

மேலும் ஆங்கில மொழியின் இலக்கண அமைப்பிற்கும் தமிழ்மொழியின் இலக்கண அமைப்பிற்கும் மிகுதியான வேற்றுமை இருக்கிறது. ஆங்கிலத்தில் காலம் மிகவும் சிக்கலாக இருக்கிறது. ஆனல் தமிழில் எளிதாக இருக்கிறது. ஆங்கிலத்தில் **Preposition** என்ற முற்சேர்புகளினுல் அளவற்ற சொற்ருெடர்களையும் பொருள் வேற்றுமைகளையும் உண்டு பண்ணலாம். ஆனுல் இவற்றிற்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைக் கண்டுபிடிப்பது அருமையாம்; உண்டுபண்ணவும் முடியாது. எடுத்துக் காட்டாக -- **on the table, on the committee, on duty, on the move, on condition, on the authority of, on the contrary, on Monday, on flee, on reaching home, on his arrival**, என்ற தொடர்களில் **on** என்னும் முற்சேர்பினுல் பொருள் வேறுபடுமாற்றைக் காண்க. இங்ஙிலையில் மொழிபெயர்ப்பு முறையில் ஆங்கிலத்தை முற்றிலும் சொல்லிக் கொடுப்பது முடியாத செயலாகும்.

மேலும் ஒரு மொழியைப் படிப்பதன் நோக்கமாவது, வேருெரு மொழியும் குறுக்கிடாமல் அம்மொழியிலேயே திருத்தமாக நினைக்கவும், பேசவும், எழுதவும் வேண்டிய திறமையைப் பெறுவதாகும். அதற்குத் தாய்மொழியின் உதவியின்றி வாய்மொழிப் பயிற்சியும் எழுத்துப் பயிற்சியும் ஆங்கிலத்திலேயே பெறுவது நல்லதும் முறையுமாகும். அஃதாவது ஒரு மாணவன் ஆங்கிலத்திலேயே நினைக்க வேண்டும், பேசவேண்டும். ஆனல் மொழி பெயர்ப்பு முறையில் வாய்மொழிப் பயிற்சியில்லை. மேலும், இலக்கணமானது சிறப்புப் பொது முறையில் (விதிவருமுறை) சொல்லிக் கொடுக்கப் படாமல் விதிகளிலிருந்து எடுத்துக் காட்டுகளுக்குப் போகும் பொதுச் சிறப்பு முறையிலேயே சொல்லிக் கொடுக்கப்பட்டது. இலக்கணமானது உரைநடைப் பாடத்

தோடு பொருத்தப்பட்டு நடைமுறையிலும் கொண்டுவரப்பட வேண்டும். இதுவும் இம்முறையில் இல்லை.

எனினும் மொழிபெயர்ப்பு முறையில் நன்மைகள் இல்லாமலுமில்லை. அயல் மொழியில் விளங்காத சொற்றொடர்களைச் சிறப்பாகக் கருத்துப் பொருள் பற்றியவற்றைக் கூடியவரையில் விளக்கவல்லன தாய்மொழிச் சொற்களே. இன்னும் அயல்மொழிச் சொற்றொடர்களைத் தாய்மொழிச் சொற்றொடர்களின் வழியாய் விளக்கும்போது முன்னவை மனத்தில் நன்றாய்ப் பதியும் என்று சொல்லப்படுகிறது. ஓர் அயல் மொழியின் அமைப்பானது தாய்மொழியின் அமைப்பைவிட முற்றிலும் மாறுபட்டிருப்பினும், ஒற்றுமை வாயிலாக இனப்படுத்துவதனால் அயல்மொழி அமைப்பு நன்கு உணரப்படும்.

மொழிபெயர்ப்பு முறையிலுள்ள சில குறைகளை நிறைப்பதற்காகவே **நேர்முறை** என்னும் புதிய முறை கண்டுபிடிக்கப்பட்டது. இம்முறையின் நோக்கமாவது, ஒரு சொல்லுக்கும் குறிக்கும் ஒரு பொருளுக்கும் இடையில் வேறொரு மொழியும் குறுக்கிடாமல் அம்மொழியின் வழியாகவே ஒரு நேரான தொடர்பை ஏற்படுத்துவதாகும். அஃதாவது தாய்மொழியில் குறுக்கிடுதலின்றி ஒரு மாணவனை ஆங்கிலத்திலேயே நினைக்கச் செய்து அவன் எண்ணிய எண்ணங்களையும், உணர்ந்த உணர்ச்சிகளையும் நேராக ஆங்கிலத்திலேயே வெளியிடும்படி செய்வதாம். மேலும் இம்முறையின் உதவியால் மாணவன் இவ்விதம் வெளியிடுவதோடு பிறர் பேசுவதையும் தான் படிப்பதையும் தாய்மொழியில் அறிந்துகொள்வது போலவே அறிந்துகொள்ள வேண்டுமாம். இது கைவரப் பெறுவதற்காக இம்முறையாளர்கள் மேற்கொண்ட நான்கு அடிப்படையான கொள்கைகளாவன :—

(1) மிகுதியான வாய்மொழிப் பயிற்சி.

(2) முழுச் சொற்றொடர்களாகவே பேசுதல்.

(3) இலக்கணத்தை நேராகச் சொல்லிக் கொடுக்காமல், சிறப்புப் பொதுமுறை வழியாகச் சொல்லிக் கொடுத்தல்; அதோடு இலக்கணக் குறிப்புகள், மரபுத் தொடர்கள் முதலியவற்றையும், கட்டுரைக்கு வேண்டிய பயிற்சிகளையும் இலக்கணத்தோடு பொருந்தி மாணவர்களைப் பயிலும்படி செய்தல்.

(4) தாய்மொழி குறுக்கிடாமல் தடுத்தல்.

இவர்கள் மேல்கொண்டவற்றுள் தாய்மொழி குறுக்கிடாமல் தடுத்தலைப்பற்றிக் கொஞ்சம் கூறவேண்டி யிருக்கிறது. தாய்மொழி குறுக்கிடுவதினால் அயல்மொழிப் படிப்பு கெட்டுவிடுகிறது என்ற கொள்கை இப்பொழுது மறுக்கப் படுகிறது. ஆங்கில முறை வல்லுநரான தாம்ஸன் என்பாரும் வயட் என்பாரும், "முற்றிலும் மொழி பெயர்ப்பு அல்லது மொழிபெயர்ப்பே இல்லாமை ஆகிய இரண்டிற்கும் நடுவே இரண்டும் கலந்த ஒருமுறை நல்லது" என்று கூறியுள்ளனர். தாய்மொழியை ஆங்கிலப் படிப்பில் மேற்கொள்வதற்கு ஏற்ற இடங்கள் இயல்பாகவே உண்டு என்று அவர்கள் கருதுகின்றார்கள். எனவே இங்கு நாம் கவனிக்கவேண்டியது, ஆங்கிலத்தைத்தாய்மொழிக்கு அடிமைப்படுத்த வேண்டும் என்பதன்று; அல்லது ஒன்றைக்கொண்டு மற்றொன்றுக்கு இடையூறு விளைவிக்க வேண்டும் என்பதுமன்று; ஆங்கிலத்தைக் கற்பிப்பதில் தாய்மொழியை உதவியாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதேயாம். ரைபர்ன் என்னும் பேராசிரியரும், "தாய்மொழி ஆங்கிலப் படிப்புக்கு நல்ல உதவி செய்யும்" என்கிறார். தாய்மொழிக்கும் ஆங்கிலத்திற்குமுள்ள பொருத்தத்தைப் பற்றிய ஓர் ஆராய்ச்சியை நடத்திய பானர்ஜி என்பார், 100 மாணவர்கள் ஆங்கில மொழியிலும் தாய்மொழியிலும் வாங்கிய மதிப்பெண்களை ஒப்பிட்டு அவ்விரண்டு எண்களுக்கும் ஏறக்குறைய முழுத்தொடர்பு (95) இருக்கிறது என்று கண்டு பிடித்திருக்கிறார். அஃதாவது தாய்மொழியில் தேர்ச்சியிருப்பின் ஆங்கிலத்திலும் தேர்ச்சி இயல்பாகவே இருக்கிறது என்பதும் ஒன்றில் தோல்வியிருப்பின் மற்றொன்றிலும் தோல்வியே காணக்கிடக்கிறது என்பதுமே அவர் கண்ட உண்மை.

## அயல் மொழிப் படிப்புக்குத் தாய்மொழி உதவக்கூடிய சில வகைகள்

(1) **மறைமுகமாக.** (1) தாய்மொழிப் படிப்பினால் ஏற்படும் சில நல்ல **மொழிப் பழக்கங்களான,** தெளிவான உச்சரிப்பு, தெளிவான எண்ணம், எண்ணங்களையும் கருத்துகளையும் தெளிவாகவும் கோவையாகவும் ஒழுங்குபடுத்தல் முதலியன ஆங்கிலப் படிப்புக்கும் உதவலாம்.

(2) **வாய்மொழிப் பயிற்சிக்கும், பேசுதலுக்கும் உதவலாம்.** தாய்மொழியிற்பேசிப் பழகிப் பெறப்பட்ட அறிவின் உதவி

கொண்டு ஆங்கிலத்தில் எப்பொருள் பற்றியும் தெளிவாகவும் கோவையாகவும் பேசும் பழக்கத்தை மாணவர் பெறுவார் கள். தாய்மொழியிற் பேசுவதினுற் பெற்ற நற்பயிற்சியானது ஆங்கிலத்திற் பேசுவதற்குப் போட்டியாய் நின்று தடை செய்யாமல், அதற்கு வேண்டிய முற்பயிற்சியாகவே ஆகு மென்று கூறலாம்.

(3) **படிப்பில் விருப்பத்தை** முதலில் தாய்மொழியில் உண் டாக்குவதுதான் இயல்பு. தாய்மொழியில் அவ்விருப்பம் உண்டானல் பிறகு அஃது ஆங்கிலத்திற்கும் பரவும்.

(4) **பொருளுணர்ந்து படிக்கும் வழக்கம்** தாய்மொழியில் ஏற்பட்டால் பிறகு ஆங்கிலத்திலும் அது வருவது எளிது.

2. **நேர்முகமாக. (1) இலக்கணம்.** தாய்மொழி இலக்கணத் தில் நல்ல பயிற்சி ஏற்பட்டால் ஆங்கில இலக்கணம் படிப்பது மிக எளிது. இவ்விரு இலக்கணங்களும் ஒத்திருக்கும் இடங் களும் வேறுபட்டிருக்கும் இடங்களும் குறித்துக் காட்டப்பட்டு எளிதில் உணரக் கூடும். இவ்வொற்றுமை வேற்றுமை முறை யில் தாய்மொழி இலக்கணப் படிப்பு ஆங்கிலப் படிப்புக்கு உதவுகிறது.

(2) **சொல்விளக்கம்.** இவ்விரு மொழிகளுக்கும் உள்ள ஒற்றுமையையும், உதவியையும், அரிய ஆங்கிலச் சொற்களை, அதிலும் சிறப்பாக, கருத்துப்பொருள்களைக் குறிக்கும் சொற் ருெடர்களைத் தாய்மொழியின் வாயிலாக உணர்ந்து கொள்வதி லிருந்து அறியலாம். அஃதாவது அரிய ஆங்கிலச் சொற்ருெடர் களை எளிதாகவும், காலத்தை வீணுக்காமலும், ஐயந்திரி பின்றியும் உணர்ந்துகொள்வதற்குத் தாய்மொழி உற்றுழி உதவும். ஆகலால ஆங்கில ஆசிரியர்கள் அவ்வப்போது மேல் வகுப்புகளிற்கூட வேண்டிய இடங்களில், அரிய ஆங்கிலச் சொற்ருெடர்களைத் தமிழ்ச் சொற்களின் வாயிலாய் விளக்கு வதற்கு அச்சமும் கூச்சமும் கொள்ளக்கூடாது.

(3) **மொழிபெயர்ப்பு :** நேர் முறையில், மொழிபெயர்ப் பானது முற்றிலும் ஒதுக்கப்படவேண்டும் என்றும் கூறப்படு கிறது. ஆனல் பொதுமுறையில் மொழிபெயர்ப்பு ஆங்கிலப் படிப்பிற்கு உதவி செய்யும் என்பதில் தடையில்லை. மொழி பெயர்ப்புப் பயிற்சிகள் நல்ல பலனை அளிக்கும்.

(4) **கட்டுரை வரைதல்:** போதுமான கருத்துகளில்லா மலும், பெரும்பாலும் தங்கள் மனத்திற் பொதிந்துள்ள கருத்துக்களைத் தெளிவாகவும் கோவையாகவும் வெளியிடு

வதற்கு வேண்டிய வாய்மொழிப் பயிற்சி இன்றியும் மாணவர்களின் ஆங்கிலக்கட்டுரைகள் மிகவும் சீர்கேடாயிருக்கின்றன. இவ்விரு குறைகளையும் நீக்கத் தாய்மொழியானது சிறந்த உதவியாயிருக்கக்கூடும். எவ்வாறெனில், ஒரே வகுப்பின் தாய்மொழி ஆசிரியரும் ஆங்கில ஆசிரியரும் ஒருமித்து அவ்வகுப்புக்கு இன்னின்ன கட்டுரைகள் எழுதச் சொல்ல வேண்டும் என்று தமக்குள் தீர்மானித்து, அக்கட்டுரைகள் முதலில் தாய்மொழியிலும், பின்னர் ஆங்கிலத்திலும் எழுதப்பட்டால், பொருளின்மை, கட்டுரை ஒழுங்கின்மை முதலிய குறைகளை அவ்வாங்கிலக் கட்டுரைகளிற் காண்டல் அருகிப் போம்.

(5) கவிகளின் சொல்நயம், பொருள்நயம், கற்பனை முதலியவற்றைக் கண்டு சுவைத்து இன்புறுவதற்கும் இஃது உதவும்.

எனவே ஆங்கிலப் படிப்பில் தாய்மொழியை ஆங்காங்கு வேண்டிய அளவு பல வழிவகைகளில் வழங்கிக் கொள்வது பொருத்தமானது. எங்கு, எப்பொழுது, எவ்வளவு மேற்கொள்ள வேண்டும் என்பதற்குத் தனிப்பட்ட விதிகள் கிடையா. அவற்றைக் கண்டறிந்து வழங்குவதற்கு நடத்தப்படும் பாடமும், கற்பிக்கப்படும் மாணவரும், நடத்தும் ஆசிரியருமே ஏற்றவர்களாவார்கள்.

## மொழிபெயர்ப்பு

ஆங்கிலப் படிப்பில் மொழிபெயர்ப்பும் ஒரு முறையாகவே முன்னர்க் கையாளப்பட்டு வந்தது. அதில் சில குறைகள் உண்டெனினும், அயல்மொழியில் விளங்காத கருத்துப் பொருட் சொற்களையும் சொற்றொடர்களையும் மொழி பெயர்ப்பினல் கூடியவரையில் எளிதில் விளக்கிவிடலாம். காலம், முயற்சி முதலியவை வீணாகாமல் மாணவர்கள் பொருள் உணர்ந்து கொள்வதோடு அயல் மொழிச் சொற்கள் மொழி பெயர்க்கப்படும்போது மனத்தில் நன்றாய்ப் பதிந்துகொள்ளுமென்கின்றனர். மேலும் தாய்மொழியிலிருந்து சில பகுதிகளை ஆங்கிலத்தில் பெயர்த்தெழுதும் பயிற்சிகள், மாணவர் கருத்துக்களைத் தமிழிலிருந்து எடுத்து ஆங்கிலத்திற் கூறும் ஆற்றலையும், அவர்கள் ஆங்கில அறிவையும் தேறுகின்றன. இப்பயிற்சிகள் தமிழில் பெரும்பாலும் கொடுக்கப்படுவதில்லை. இவைகளும் கொடுக்கப்படவேண்டும்.

ஒரு மொழியை வளப்படுத்தி உயரச் செய்வதற்குரிய வழிகளுள் மொழிபெயர்த்தலும் ஒன்றாகும். அயல்மொழியி லுள்ள சிறந்த நூல்களைத் தம் மொழியில் பெயர்த் தெழுதி யும் இலக்கிய வளத்தைப் பெருக்கலாம். இம்முறை நம்மொழி யில் பழங் காலத்திலேயே கையாளப்பட்டு வந்ததென்பதற்குத் தொல்காப்பியம் சான்று பகரும். வழி நூல்கள் நால்வகை என்று கூறும் தொல்காப்பிய நூற்பா, "மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல்" என்பதையும் ஒன்றாக்குகிறது.

காலஞ்சென்ற பாரதியாரும், "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்" என் கிறார். தமிழில் உள்ள திருக்குறள், திருவாசகம் முதலிய சிறந்த நூல்களையும் கருத்துக்களையும் ஆங்கிலத்தில் எடுத் தெழுதினால் ஆங்கிலம் அறிந்த நாடுகளிலும் தமிழ்க் கல்வி, கலை, நாகரிகம் முதலியன பரவும்.

மேலும் அரசியலறிவுபெற்று அரசியலிற் பங்கெடுத்துக் கொள்ளவும், உலகச் செய்திகளையும் நாட்டு நடப்பையும் அறிவதற்கும், சட்ட நுட்பங்களை உணர்ந்து அறங்கூறு அவையங்களிலும் அலுவல் நிலையங்களிலும், வணிக நிலை யங்களிலும் வழக்காடுவதற்கும், ஆங்கிலப் புலமை யுற்றோ ரன்றி மற்றோரும் அறிவியல் அறிவு முதலியன வந்தெய்தப் பெறுவதற்கும், தற்காலத்தில் தாய்மொழி வாயிலாகவே எல்லாக் கலைகளையும் கற்பிக்க வேண்டியதற்குரிய கலைச் சொற்கள், பாட நூல்கள் முதலியன எழுதுவதற்கும் மொழி பெயர்த்தல் மிகமிக வேண்டற்பாலதாம்.

சொல்லுக்குச் சொல் மொழி பெயர்த்தல், மொழிபெயர்ப் பாகாது. ஆங்கிலச் சொற்றொடர்கள், மரபுத்தொடர்கள், பழமொழிகள் முதலியவற்றின் பொருள்களைச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பில் கூற முடியாது. ஆங்கில நாட்டுப் பழக்க வழக்கம், நடை, உடை, எண்ணம், உணர்ச்சிகள், சூழ்நிலை, மொழித் தொடரமைப்பு முதலியன நம்மவற்றோடு மாறுபட்டிருப்பதால் ஒவ்வோராங்கிலச் சொல்லுக்கும் சரியான தமிழ்ச்சொல் இருக்கும் என எதிர்பார்த்தல் அறியா மையும் தவறுமாகும். முடியுமானால் கூறலாம்; இல்லையேல் அவற்றிற்கேற்ற தமிழ் மரபுத்தொடர்களைக் கூறலாம்.

சொல்லுக்குச் சொல் சில சொற்றொடர்களுக்குப் பொருள் தரலாம். **Turn the back**-முதுகு கொடுத்து

ஓடல்; **Face is the index of the mind**—அகத்தினழகு முகத்தில் தெரியும்; ஆனால் பெரும்பாலும் அப்படியே முடியாது. **Take the seat; Breathed his last** போன்ற தொடர்களைக் காண்க. இன்னும் இதுபோல எவ்வளவோ எடுத்துக் காட்டலாம். **Arms in arms** என்பதற்குத் தமிழில் 'புயத்தொடு புயம்' என்பதில்லை. 'தோளோடு தோள்' என்போம். **All that glitters is not gold** என்பதற்கு 'மின்னுவதெல்லாம் பொன்னல்ல' என்பதைவிட, 'வெளுத்ததெல்லாம் பாலல்ல' என்பது சிறப்பானது. **Poke one's nose** என்பதை 'ஒன்றில் தலையிடுதல்' என்று பெயர்ப்பதே முறை. **Make hay while the sun shines** என்பதற்கு, "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்" என்பதே ஏற்றது. எனவே சொல்லுக்குச் சொல் மொழி பெயர்க்காமல் கருத்தைத் தெளிவாகத் தமிழில், தமிழ் முறைப்படி மொழி பெயர்க்கவேண்டும். படித்துப் பார்த்தால் தொடர்ச்சியாகவும் கோவையாகவும் இருக்கவேண்டும். மொழி பெயர்ப்பானது மொழி பெயர்க்கப் பட்டது போலத் தோற்றாமல் புதிதாகத் தமிழிலேயே எழுதியதுபோல அமையவேண்டும். ஆங்கிலச் சொற்களின் பொருள் நுட்பங்களை நன்கறிந்தாலன்றி மொழி பெயர்ப்பு அங்ஙனமமையாது. ஆதலால் ஆங்கிலத் தமிழ் அகராதியையும் பார்த்துக்கொள்வதோடு, ஆங்கில-ஆங்கில அகராதியையும் பார்த்துக்கொள்ளத் தூண்ட வேண்டும். அவ்வாறே தமிழிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்குங்கால் தமிழ்-ஆங்கில அகராதியைப் பார்ப்பதோடு தமிழ்-தமிழ் அகராதியையும் பார்க்க வேண்டும். ஒரு பகுதியைப் பார்த்த உடனேயே எழுதத் தொடங்கி விடாமல், முற்றிலும் பொருளுணரும் வரையில் இரண்டு மூன்று முறையாவது படித்துப் பின்னரே மொழிபெயர்க்கத் தொடங்க வேண்டும்.

## வகுப்பில் மொழிபெயர்ப்பு நடத்துதல்

முதலில், கொடுத்திருக்கும் பகுதியை மாணவர் ஒருவாறு உணர்ந்திருக்கின்றனரா என்று காண அதன் உட்கிடையைப் பொதுவாகச் சில கேள்விகளினால் வரவழைத்துப் பின்னர், சிறப்பாக விவரங்களடங்கிய மொழி பெயர்ப்புக்குப் போகலாம். ஆசிரியரே பகுதியை இருமுறை அல்லது மும்முறை தெளிவாக நிறுத்திப் படிக்குங்கால் மாணவரைக் கவனிக்குமாறு கூறி, அடுத்து, மாணவரையும் தொடர்ச்சியாகப் படிக்கும்படி கூறி முற்கூறியபடி தொங்கலாம். அல்லது வகுப்புக்கு ஏற்றவாறு ஆசிரியர் படித்து முடிந்தவுடன்

மாணவர் நின்று படிக்காமல் வாய்க்குள்ளேயே சற்றுநேரம் படித்துணர்ந்த பின் வாய்மொழிப் பயிற்சி தொடங்கலாம். முதலில் வாய்மொழியாக மொழிபெயர்க்கச் செய்து பின்னரே எழுதச்செய்யவேண்டும். மொழிபெயர்ப்பு எளிய, இனிய, தூய நடையில் அமையவேண்டும். எழுத்துப் பிழைகளும், சொல் முடிவு, பொருள் முடிவு, புணர்ச்சி முதலியவற்றில் இலக்கணப் பிழைகளும் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எழுதி முடிந்தபின் திரும்பவும் மாணவர் அதைப் படித்துப் பார்க்க வேண்டும். கட்டுரைப் பயிற்சிகள் திருத்தப்படுவது போலவே மொழிபெயர்ப்புப் பயிற்சிகளும் ஆசிரியர்களால் நன்றாகத் திருத்தப்பட்டு அவற்றிலுள்ள பிழைகள், தவறுகள் முதலியன எடுத்துக் காட்டப்படுதல் வேண்டும்.

## மூன்றாம் பிரிவு

**தொடக்கநிலைப் பள்ளி:** மிகவும் கவனிக்கத்தக்க பருவம், திருத்தமாகப் பேசுவதற்கும், படிப்பதற்கும், எழுதுவதற்கும் வேண்டிய அடிப்படை போடுங் காலம்.

ஓர் உயர்நிலைப் பள்ளியிற் படிக்கும் மாணவர்களின் தேர்ச்சிமுறையை ஒட்டி அவர்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கின்றோம். முதல் ஐந்து வகுப்புகள் அடங்கிய பிரிவைத் **தொடக்கநிலை** என்றும், முதல் இரண்டாவது மூன்றாவது அமைப்புகள் அடங்கிய பிரிவை **இடைநிலை** என்றும், நான்கு, ஐந்து, ஆறாவது அமைப்புகள் அடங்கிய பிரிவை **உயர்நிலை** யென்றும் கூறுகின்றோம். இம்மூன்றிலும் தொடக்க நிலை மிகவும் கண்ணும் கருத்துமாய்க் கவனிக்கத் தக்கதாகும். இதற்குரிய காரணங்கள் பின்வருமாறு:—

(1) இந்நிலை மாணவர்கள் வயதிலும், மனவளர்ச்சியிலும், அறிவிலும் மிகச்சிறியவர்கள். இப்பொழுதுதான் வீட்டை விட்டுப் பள்ளி புகுந்திருக்கின்றனர். பள்ளியிற் படித்து முன்னேறி உடல், அறிவு, ஒழுக்கங்களில் தேர்ச்சி யுற்று வெளிவரப்போகும் பிற்கால மக்களுக்கு ஆன அடிப்படை இப்பொழுதுதான் போடவேண்டி இருக்கிறது. தக்க அடிப்படையின்றிக் கட்டப்படும் கட்டடமும் அதன் மேல்நிலைகளும் இறுதியாயும், நீடுழியும் நிலைத்து நிற்கா. அதுபோலவே, மாணவர்களின் மேல்நிலைகளிற் பெறும் பன்முகத் தேர்ச்சி, தொடக்க நிலையில் முதல் வகுப்புகளில் அவர்கள் பெறும் தேர்ச்சியைப் பொறுத்திருக்கும். (2) மேலும் அவர்களது

மன, அறிவு, ஒழுக்க நிலைகள் முதலியவற்றை உணர்ந்து அவற்றிற்கேற்ப முறைகளை மேற்கொண்டு அவர்களை வகுப்புகளில் நடத்துவது அருமையிலும் அருமையாம். இதற்குக் குழந்தை உளநூலறிவும், அன்பும், பரிவும் மிக வேண்டும். (3) வீட்டை விட்டு வந்து, பள்ளி புகுந்த சிறுவர்கள் இப்பொழுதுதான் கொச்சை, மழலை, மொழிகளை மெள்ள மெள்ள விடுத்துச் செம்மொழியையும், உச்சரிப்பையும், பெற்றுப் பேசிப் படித்து, எழுதவும் போகிறார்கள். பேச்சும், உச்சரிப்பும், ஒலி உறுப்புகளும் எழுதும் உறுப்புகளான தசை நார்கள், மணிக்கட்டுகள், விரல்கள், கை, கண்ணோட்டம் முதலியனவும், பிறவும் இன்னும் பயிற்சிபெறவில்லை. இப்பிள்ளைகளுக்குக் கருத்து வளமும், சொல் வளமும் குறைவு. ஆதலால் முதல் வகுப்புகளிலிருந்தே பிள்ளைகளை இலக்கணப் பிழையின்றிச் சரியான உச்சரிப்புடன் திருத்தமாகவும் தெளிவாகவும் தாய் மொழியிற் பேசப் பழக்குவதும் பொருளுணர்ந்து, தெளிவாய், விரைவாய், படிக்கப் பழக்குவதும், தெளிவாய், விரைவாய் எழுதப் பழக்குவதும் ஏற்ற முறைகளில் இப்பருவத்தில் தான் செய்தற்குரியன. "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" "ஐந்தில் விளையாதது ஐம்பதில் விளையாது" "செந்தமிழும் நாப்பழக்கம்". (4) ஒலி உறுப்புகள் இளகி, இறுகாமலிருக்கும்போதே இந் நற்பழக்கங்களை ஏற்படுத்தாமல் விட்டுவிட்டால் பின்னர் அவை அமைவது அருமை. (5) பிழைபட்ட பழக்கங்கள் ஏற்பட்டுவிட்டால் அவற்றைப் பின்னர், திருத்துவதும் போக்குவதும் அதனினும் அருமையாம். ஆதலால், இம்மூன்றிலும் திருத்தமான, நல்ல அடிப்படையை இப்பருவத்திலேயே போடுவது ஆசிரியரின் இன்றியமையாத கடமையாகும்.

## வாய்மொழிப் பயிற்சி

**அதன் இன்றியமையாமையும் பயன்களும் :** (1) பேசுவதற்கே முதன்மையாக நாம் மொழியை வழங்குகிறோம். ஆதலால் வாய்மொழிப் பயிற்சியே ஏனையவற்றிற்கு அடிப்படை. இதனையே நாம் முதன் முதலில் தொடங்கவேண்டும். அதோடு படிப்புக்காலம் முழுவதும் இது வழக்கத்திலிருக்க வேண்டும்.

(2) வாய்மொழிப் பயிற்சியே மொழிப்படிப்பின் நோக்கங்களை எய்துவதற்கு முதற்படியாகும். நமதுமொழி, பேசப்பட்டு வளர்ந்துகொண்டே வருகின்ற உயிருள்ள மொழியாக

வின் இதில் எப்படிப் பேசுவதென்பது ஒவ்வொருவரும் முதலிலிருந்தே தெரிந்திருக்க வேண்டியதாம்.

(3) பேசுதல், பேச்சுப் பழக்கத்தால் வருவதேயொழிய எழுதுவதினுலும், படிப்பதினுலும், வெறும் மொழியறிவும் இலக்கண அறிவும் பெற்றிருப்பதனுலும் மட்டுமே வந்துவிடாது. இவ்வறிவைப் பேசுவதில் பொருத்திப் பழக்க வேண்டாமா.

(4) வாய்மொழிப் பயிற்சியே பேசுவதற்கு அடிப்படை. பேசுவதே, படிப்பது, எழுதுவதைவிட விரைவிலும் எளிதிலும் வரக்கூடியது. பேசுதல், படித்தல், எழுதுதல் என்பதே மொழிப்படிப்பின் இயற்கையான முறையாகும்.

(5) திருத்தமாய்ப் பேசும் குழந்தை, திருத்தமாய்ப் படிக்கும், எழுதும்.

(6) வாய்மொழிப் பயிற்சியால் பல சொற்களைக் கற்ற பின்னர்ப் படிப்பார்களாயின் மாணவர்கள் நன்கு பொருளுணர்ந்து படிப்பார்கள்.

(7) பேசுவது என்பதுதான் ஒரு மொழியை உயிருள்ளதாக்கி, அதன்பால் மாணவருக்கு ஒரு கவர்ச்சியையும் பற்றையும் உண்டாக்கும்.

(8) பேச்சில், ஒரு சொல்லை அல்லது சொற்றொடரைக் கேட்டுப் பொருளுணருவதற்கும், பின்னர் மறுமொழியாகப் பேசுவதற்கும், எண்ணத்திற்கும் இவ்வெண்ணத்தைக் குறிக்கும் சொற்களுக்கும், கேட்போனுக்கும் பேசுவோனுக்கும், நேரான தொடர்பு ஏற்படுகிறது.

(9) குழந்தையின் மொழி, பள்ளி புகுமுன்னர்த் திருத்தமாக இருக்காது. மழலைச் சொற்களும், கொச்சை மொழிகளும் கலந்திருக்கும். இவற்றை வாய்மொழிப் பயிற்சியால் திருத்திவிடலாம்.

(10) முதலிலேயே நல்ல உச்சரிப்பும் தெளிவான பேச்சும் மாணவனுக்கு அமைந்திருந்தால்தான் பின்னரும் அப்பழக்கம் ஏற்படும். இளமையில் ஒலி உறுப்புகள் இளகி, இறுகாம லிருப்பதால் நல்ல உச்சரிப்பு முதலியவை வாய்மொழிப்பயிற்சியால் அமைத்தால் வாழ்க்கையில் பின்னரும் அது தொடர்ந்து வரும் என்பதில் ஐயமில்லை.

(11) இளமையில் அவை அமையாமல் கெட்ட உச்சரிப்பு, தெளிவு இல்லாத பேச்சு முதலிய பிழைகள் ஏற்பட்டால்

பின்னர் வயதானவுடன் ஒலி உறுப்புகள் இறுகிப்போன நிலையில் அப்பிழைகளைத் திருத்துவது அருமை; முடியாது என்று சொல்லிவிடலாம்.

(12) மேலும் இளமைப் பருவமே நல்ல பேச்சுப் பழக்கங் கள் ஏற்படுவதற்குரிய காலம். நல்ல உச்சரிப்பைப் போலவே சில நல்ல தமிழ்ச் சொற்றொடர் அமைப்புகளைப் பேச்சில் வழங்கப் பழகிக்கொள்வது நல்லது. இதுவும் பேச்சுப் பழக்கத்தினாலன்றி வேறொன்றினாலும் ஆகாது. வாயுள்ள பிள்ளையே பிழைக்கும்.

(13) தொடர்ச்சியாய்ப் பேசப் பழகுவது மனத்திற்கே ஒரு நல்ல பயிற்சியாகும். கருத்துகளைக் கோவையாகவும் ஒழுங் காகவும் முறைப்படுத்திப் பேசுதல் என்னும் நற்பழக்கத்தை இது கொடுக்கும்.

(14) வாய்மொழிப் பயிற்சியால் பிழைகளை அங்கங்கே திருத்த இடமுண்டு. மற்றும் குறைந்த நேரத்தில் மிகுந்த பொருள்பற்றி ஆராய இடமுண்டு.

(15) வாய்மொழிப் பயிற்சியால் அச்சமும், கூச்சமும் மாணவருக்கு நீங்கித் தன்னம்பிக்கை உண்டாகும்.

(16) ஒரு மாணவன் பள்ளியை விட்டு நீங்கும்போது, தாய்மொழியில் தன் கருத்துக்களையேயன்றி, உணர்ச்சி களையும் உளச் சுவைகளையும் பிறருக்குத் தெளிவாயும், கோவையாயும் எடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற வேண்டும் என்பதும் ஒரு நோக்கமாகும். இதுவும் பேச்சுப் பயிற்சியால் கைவரக் கூடியதாகும். (17) சொல்வன்மையுடன் பல பொருள்பற்றிப் பேசப் பயின்றிருப்பது பொது மக்களுக்கு அறிவு புகட்டவும், அரசியல், வாணிகம் முதலிய பல துறை களில் வெற்றியுடன் விளங்கவும் நல்ல உதவிசெய்யும். (18) ஒலியியல் அறிதல். (19) மொழிப் பயிற்சி கொடுத்தல். (20) வினா விடை. (21) கட்டுரை எழுதுதல் (கட்டுரை எழுதுவ தற்கு முன்னர்த் தாய்மொழிப் பயிற்சி), உரையாடல் (**conversation**), நடித்தல், கதை சொல்லல் முதலியவைகளுக்கும் வாய்மொழிப் பயிற்சி மிகவும் பயன்படும்.

வாய்மொழிப் பயிற்சியில் சில **குறைகளும்** உள்ளன என்னலாம். (1) எழுதுவதிலும் படிப்பதிலும் போலத் தொடர்ச்சி இல்லாமல் துண்டுகளாகப் பேச்சு இருக்கிறது. சரிவரச் சிந்தித்தும் செய்யப்படாமற் போய்விடலாம். (2) மாணவர்களினால், பொருள் உணர்ந்து பேசவும், விடை யிறுக்கவும் முடியாமல் போகலாம் (3) கற்பித்தலில் இதற்கு

ஒரு குறித்த திட்டமில்லாமற் பேய்விடலாம், (4) ஆசிரியரும் மாணவரும் இதற்கு மிக கவனத்துடன் ஆயத்தம் செய்ய வேண்டி யிருக்கிறது. (5) எளிய, இனிய, தூய தமிழ் நடையிற் பேசுவது அருமையாயிருக்கலாம் : எளிதன்று. (6) சுற்றிச் சுற்றி வளைந்து வளைந்து வராமல் வாய்மொழிப் பேச்சானது நேராகவும் சுருக்கமாகவும் இருக்கும்படி பார்த்துக்கொள்வது எளிதன்று. (7) பேச்சினிடையில் ஆசிரியர் அடிக்கடி கேள்விகளைக் கேட்டு அல்லது குறிப்புகளைக் கொடுத்து இடைமறிப்பதால் மாணவர்களுக்குள் மனவருத்தம் ஏற்படலாம். (8) வகுப்பில் மிகுந்த காலம் இதில் செலவழிந்து போகலாம். (9) வீணாகப்போன காலத்தை மாணவர்கள் வேறு நல்ல வழியிற் செலவழித்திருக்கலாம். (10) ஆசிரியர், தாம் பேச்சில் மிகச் சிறந்தவர் என்று பெருமையடித்துக் கொள்ளலாம். (11) அஃது எழுதிவைக்கப் பெறாது வாய்மொழியாகவே போய்விடுவதால், என்றும் அதை நிலைத்திருக்கச் செய்ய முடியாது. ஏதாவது ஐயம் நேர்ந்தால் அதை இன்னும் ஒரு முறை பார்த்துத் தீர்த்துக்கொள்ளலாம் என்பதும் முடியாது. எழுத்தாயிருந்தால் அதை வேண்டும் என்றபோது பார்த்துக் கொள்ள இடமுண்டு. (12) மேலும் பேச்சு முறையில் ஒரு சொல் அல்லது சொற்றொடரைப் பேசும்போதே பொருளுணர்ந்தாலன்றி முடியாது. அது திரும்பிக் கூறப்படப் போவதில்லை. இன்னும் அஃது ஒருகால் மறந்துபோய்விட்டாலும் பார்த்து நினைவூட்டிக்கொள்ள இயலாது.

## வாய்மொழிப் பயிற்சிக்கான சில வழிகள்

(1) **உரையாடல்** : மொழிப் படிப்பில் "உரையாடல், கூடிய வரையில் நூலுதவியின்றி, எழுதுதலின்றி, சொல்லாக்கம் முதலிய மொழி நூற்கொள்கைகள் ஒன்றையும் மேற்கொள்ளாமல் அயல்மொழிகள் குறுக்கிடாமல் ஒருவர் பேசுவதை மற்றொருவர் கேட்பதும் அதற்கு விடையிறுப்பதுமாகும்." என்பர் பாமர் என்னும் பேராசிரியர்.

**உரையாடலின் நோக்கங்கள்:** (க) உரையாடலுக்காகவே உரையாட்டைப் பயிலுவது.

(ங) மொழியறிவைத் திரட்டிக்கொள்வதற்கு ஒரு கருவியாகக் கொள்ளலாம்.

(ச) மாணவர்களது உரையாடும் ஆற்றலையும், அறிவையும் அளந்தறியலாம்.

(ஞ) **நேரான தொடர்பு.** எண்ணத்திற்கும் மொழிக்கும், சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும், பேசுபவருக்கும் அதைக் கேட்பவருக்கும் ஒரு நேரான தொடர்பு ஏற்படுகிறது. அதனால் பொருள் விளங்குவதோடு ஒருவர் எண்ணம் பிறருக்கும் அறிவிக்கப்படுகிறது.

(ட) உரையாடல், மொழியைத் திருத்தமாகப் பேசுவதற்கு ஒரு கருவியாகும் என்பதோடன்றிக் கல்விபற்றிய அதன் பயன்களையும் அஃதாவது அதுவே ஒரு கல்வியாக இருக்கின்றது என்பதையும் ஆசிரியர்களும், மாணவர்களும் உணரவேண்டும். ஆனால் இவ்வுண்மையைச் சிறிது காலத்திற்கு முன்வரையில் கல்வித் தொடர்புடையவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை.

(ண) உணர்ந்த உணர்ச்சிகளையும், எண்ணிய எண்ணங்களையும் எப்படியாகிலும் வெளிப்படுத்த வேண்டும் என்னும் எண்ணம் ஒவ்வொருவருக்கும் இருக்கிறது. இயற்கைக்கு ஏற்றதாயும் மொழியின் இன்றியமையாத உறுப்பாயும் இவ்வெண்ணத்தை வெளியிடும் பேச்சு இருப்பதால் இதில் பயிற்சி பெற்ற மாணவர் பேச்சுத்திறமையும் எய்துவர்.

(த) சொல்லின் தனித்தனி நிலையில் பொருள் சிறப்பதில்லை. தொடர்பு மொழிகளாகப் பேசும்பொழுதுதான் பொருள் திரண்டு சிறக்கிறது. உரையாடிப் பயின்றால், சொற்களைத் தனித்தனியாக வழங்காமல், தொகுதி தொகுதியாகப் பொருட்போக்கினை உணர்ந்து, வழங்கும் இயல்பை இது கொடுக்கும். இப்படித் தொகுதியாக வழங்குவதுதான் பேச்சின் இயல்பாகும் என்று அறிஞர் கருதுகின்றனர்.

(ந) பிள்ளைகளின் கருத்தையும், சொற் களஞ்சியத்தையும் வளர்க்கும்.

(ப) நிகழ்ச்சிகளை அவை நடந்தமுறையிலேயே நினைக்கவும் சொல்லவும் உதவும்.

(ம) கேள்விகளுக்கு நேரான ஏற்ற விடையிறுக்கவும் செய்யும்.

(ய) உற்றுநோக்கல், சிந்தித்தல், கவனம் முதலிய ஆற்றல்களையும் தூண்டிக் கிளர்ச்சி செய்யும்.

(ர) சொற்பொருக்கும், சொற்பொழிவுகளுக்கும் கூடப் பயிற்சியாகும்.

(ல) நடிப்பிலும் பயன்படும்.

(வ) ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் இடையில் ஒரு நட்பும், தொடர்பும், அன்பும், பரிவும் ஏற்படுத்தும்.

(ழ) மாணவர்களிடை உள்ள அச்சம், கூச்சம் முதலியவற்றை நீக்கும்.

(ள) ஆசிரியரும் மாணவர்களும், பாடத்தை ஒருங்கு கூடி ஆராய்வதற்கு இஃது ஒரு நல்ல வழியாகும்.

(ற) கதை சொல்லுவதற்கும் பயன்படும்.

**உரையாடும் பொருள்கள்** : (1) இவை மாணவர்களின் மனப்பான்மைக்குத் தக்கனவாய், அறிவுக்குத் தக்கனவாய், அவர்கள் விரும்பி, அவர்கள் வாழ்க்கையில் குறுக்கிட்டுத் துய்க்கும் பொருள்கள், நிகழ்ச்சிகள், காட்சிகள், வரலாறுகள் பற்றியனவாய் இருக்க வேண்டும். அவர்கள் அறிவுக்கும், விருப்புக்கும் பட்டறிவுக்கும் எட்டாதவற்றைப் பற்றிப் பேசுதல் பயனை விளைவிக்காது. தொடக்கநிலைக் கீழ் வகுப்புகளில் குடும்பம், உறவினர்கள், நண்பர்கள், உணவு, உடை, விளையாட்டு, தோட்டம், பண்டிகைகள், திருவிழாக்கள் முதலியவற்றைப் பற்றிப் பேசலாம். ஒவ்வொரு பொருள் பற்றியும், மாணவர்கள் அறிவிற்கு எட்டக்கூடிய வகையில், பல விவரங்களைக் குறித்து உரையாடலாம். எடுத்துக் காட்டாக உணவு, உடைகள் பற்றிக் கீழ்க்கண்ட விரைங்களைக் குறித்து உரையாடலாம் :—**சமைத்தல்** — வேகவைத்தல் — ஆவியில் வேகவைத்தல் — சமைக்கும் ஆள் — காலை, பகல், இரவு உணவுகள் — குடிப்பது, காப்பியா, தேயிலையா, பாலா, மோரா, நீரா, அன்றி வேறு — காய்கறிகள், சிற்றுண்டிகள், கோதுமை, பருப்பு வகைகள், கீரை, நெய், தயிர், பழம், முதலியவை உண்டா—நூல், பட்டு, கம்பள **உடைகளா** — எது எக்காலத்திற்கு— அரையில் கால் சட்டையா, வேட்டியா, அப்பா, அம்மா, உடன் பிறந்தார், உடை வகைகள்—நாள்தோறும் குளித்தல், துவைத்தல் உண்டா — வண்ணான் வெளுத்ததுமட்டும் கட்டுவதா — முதலியன. தொடக்கநிலை மேல் வகுப்புகளில் மேற்கூறிய பொருள்கள் மட்டுமன்றி அவரவர் தம் வகுப்பு நிலைக்கேற்றவாறு அவர்களுக்குப் பற்றுள்ள செயல்கள், சிறு நிகழ்ச்சிகள், செய்திகள், சிறு கைத்தொழில்கள், நாட்டு நடப்பு, வாணிகம், போக்குவரவு வசதிகள், ஆட்சிமுறை, திருவிழாக்கள், பண்டிகைகள் முதலியவற்றைப் பற்றிப் பேசலாம். இவ்வகுப்புக்களில் பேச்சானது இலக்கணப் பிழையின்றி,

எளிய, தூயநடையில் இருக்கவேண்டுமென்று ஆசிரியர் வற்புறுத்தவேண்டும்.

(2) சிறுவர்களுக்கான, பாப்பா, செவிலி, ஆட்டக் கதைப் பாடல்களை நெட்டுருச்செய்து ஒப்புவித்தலும், வாய் மொழிப் பயிற்சிக்கு உதவக்கூடிய ஒரு வழியாகும். இவற்றை நெட்டுருச் செய்யும்போதும், ஒப்புவிக்கும் போதும், அடிக்கடி சொற்களை உச்சரித்தலால் சொற்களின் ஓசை, பாடலின் இனிமை, புதிய சொற்களின் அறிவு, கருத்துகளின் அறிவு முதலியவை உண்டாவதோடு நல்ல ஒலிப்பு, உச்சரிப்பு, குரல் ஏற்றத் தாழ்வு முதலிய நல்ல மொழிப் பழக்கங்களும் அமையும். இவைகள் பேச்சிற்கு இன்றியமையாதன.

(3) நடிக்கச் செய்தல்.

(4) கதை சொல்லுதல். ஆசிரியர் முதற்கண் கதையைச் சொல்லிப் பிறகு மாணவர்களைக் கொண்டு முடிக்கச் சொல்லுதலும், தனியாகவே அவர்களைச் சொல்லச்செய்வதும், அதைப் பற்றி ஆசிரியர் மாணவர்களைக் கேள்வி கேட்பதும், மாணவர்கள் ஆசிரியரையும் ஒருவருக் கொருவரையும் கேள்விகள் கேட்பதும், பின்னர்க் கதையை நடித்துக்காட்டுவதும் செய்தல் வாய்மொழிப் பயிற்சிக்கு ஏற்ற ஒரு வழியாகும்.

(5) தமிழ் ஒழிந்த ஏனைய பாடங்களிலும் வாய்மொழிப் பயிற்சியை வற்புறுத்தல்.

(6) கட்டுரை எழுதும் முன்னர் வாய்மொழிப் பயிற்சி.

(7) தடையின்றித் தான் விரும்பியபடி பேசும் உரிமையை ஆசிரியர் அளித்தல். மாணவர் ஆசிரியருடனும், பிற மாணவருடனும், தாராளமாயும், ஏராளமாயும், அச்சமின்றியும், பேசத் தூண்டுதலும், வற்புறுத்தலும்.

(8) வீட்டில் பெற்றோர்கள், மூத்தோர்களின் பேச்சுப் பழக்கமே, குழந்தைகளுக்கும் வரும். மேலும், குழந்தைப் பேச்சு மூன்று வயதுவரை மழலையுடனும், கொச்சையாயும் இருக்கும். ஆதலால், பெற்றோர்களும், மூத்தோர்களும் குழந்தைகளின் பேச்சை அவ்வயதிற்குப் பிறகு திருத்துவதோடு தங்கள் பேச்சையும், திருத்தமாயும் செம்மையாயும் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். தகாத, பயனில்லாத சொற்களைக் குழந்தைகளின் முன் பேசக்கூடாது.

(9) ஆசிரியரின் பேச்சையும், மாணவர்கள் பின்பற்றுவராதலின், ஆசிரியர்களும் தங்கள் பேச்சு திருத்தமாயும்,

செம்மையாயும் இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். சரியான உச்சரிப்புடன், தெளிவான ஒலிப்பு, குரல் ஏற்றத் தாழ்வுகளோடு, விரைவாகவும், மெள்ளவும் இன்றி, தகுந்த படி பேசவேண்டும். கெட்ட வார்த்தைகளை, அதுவும் மாண வர்களின் முன்னிலையில் வழங்குதலாகாது.

(10) நல்ல பெயர்வாய்ந்த சொற்பொழிவாளர்கள், பேச் சாளர்கள், ஆசிரியர்கள் முதலியவர்களின் பேச்சுகளை நேரி லும் வானொலியிலும் கேட்டும், படித்தும் பின்பற்றும்படி தூண்ட வேண்டும்.

(11) மாணவர்களையே சொற்பொழிவுகள் ஆற்றவும், பேச்சுகள் நிகழ்த்தவும் செய்யவேண்டும்.

(12) வகுப்பில் மாணவர்கள் ஆசிரியரோடு ஒருங்கு கூடி ஆராய்தலையும் செய்தல் வேண்டும்.

(13) சொற்போர்களும் நிகழ்த்த வேண்டும்.

(14) ஆசிரியர் ஒலி இயலையும் நன்கறிந்து அவ்வறிவைப் பேச்சில் நன்கு வழங்கிக் காட்டி, மாணவர்களின் பேச்சில் நிகழும் தவறான உச்சரிப்பு முதலியவற்றைத் திருத்த வேண்டும்.

## திருந்திய பேச்சும் அதன் பயிற்சியும்

உள்ளத்துத் தோன்றி எழும் கருத்துகளைப் பிறருக்கு ஒருவர் வெளியிட்டுக்கொள்ளும் முதன்மை வாய்ந்ததும், அடிப்படையுமான ஒரு நோக்கத்தோடேயே மொழி மக்க ளால் படைத்துக் கொள்ளப்பட்டது என்பது மொழி நூலறி ஞர்கள் ஒப்புக்கொண்ட உண்மையாகும். அது கருத்துக் களை வெளியிடும் அடையாளங்களாகிய சொற்களின் தொகு தியாம். பின்னர் அதை எப்பொழுதும் அழியாமல் குறித்து வைத்துக் கொள்வதற்கு வேண்டிய வரிவடிவத்திலும் எழுத் தாக எழுதிவைத்துக் கொள்ளுகிறோம். எனவே கருத்து வெளியிட்டுத் தோன்றும் ஊர்தியே மொழியாம். சிறந்த அறிஞர்களின் மொழியோ அவர்கள் தம் வாழ்க்கையில் குறுக்கிட்டு அவர்கள் துய்த்துப் பட்டறிந்த அளவிற் கேற்ப வாய்ந்துள்ள அறிவிற்கும் ஆற்றலுக்கும் ஒத்த அளவிற்றாக விருக்கும். அறிவாகிய கடலில் துறைதோறும் சென்று அகப்படும் பொருள்களை ஏற்றிக் கொண்டு செல்லும் ஒரு மரக்கலமாகும் மொழி என்னலாம். சிறியோர் மொழியோ

என்றால் அவர்களுடைய சிறு பட்டறிவிற்கு ஏற்பவே, சிறு அறிவுத் தொகுதியையே அடிப்படையாகக் கொண்டது. ஆதலின் அறிவுக் கடலிற் செல்லும் பெரிய மரக்கலத்தை ஒக்காமல், அஃது இளஞ்சிறார் மழை நீரில் விட்டு விளையாடும் விளையாட்டுக் கப்பல் போன்றது என்னலாம்.

எப்படியிருப்பினும் மொழியை விரும்பி மேற்கொள்ளும் ஒவ்வொருவருக்கும், அவரவர் தகுதி, வகுப்பு, அறிவு முதலிய வற்றிக்கு ஏற்ற நடையில் கருத்துகளுக்கு ஏற்ற சொற்களினால் தடையின்றித் தெளிவாகவும் கோவையாகவும் கேட்போருக்கு விளங்கும் வண்ணம் எடுத்துரைக்கும்படியான நற் பழக்கத்தையும் ஆற்றலையும் உண்டாக்குவதே முதற் கடமையாகும். பேசிப் பேசிப் பழகக் கருத்தும் பேச்சும் நடையும் தெளிவடையும். இலக்கணப் பிழைகளும் பேச்சில் இருக்கக் கூடாது.

**திருந்திய பேச்சில் இருக்க வேண்டிய சில நல்லியல்புகள் :** திருத்தமான ஒலிப்பு, திருத்தமான உச்சரிப்பு, இடத்திற் கேற்றபடி குரலில் எடுத்தல், படுத்தல், நலிதல் முதலிய ஏற்றத் தாழ்வு, இனிய குரல், குரலும் பேச்சும் வேண்டுமென்றே வலிந்து பேசியதுபோல் தோன்றாமல் இயல்பா யிருத்தல், மிகத் தாழ்ந்த குரலும் மிக உரத்த குரலுமின்றி வகுப்பிற் கேற்ற அளவான குரல் மிக விரைவும் மெதுவுமின்றிப் போதல், அச்சம் கூச்சமின்றிப் படிப்புமின்றி மனவுறுதியும் தன்னம்பிக்கையுமுடைய அமைவு, பேச்சில் உணர்ச்சி ததும்புதல், ஆனால் தன்னுணர்ச்சியில்லாமை, கருத்துகளில் தொடர்பும் தெளிவும் கவனிக்கப்படல், கூறியது கூறல், மாறுபடக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், வெற்றெனத் தொடுத்தல், சென்று தேய்ந்திறுதல், மற்றொன்று விரித்தல் முதலிய குற்றங்கள் இல்லாமை, பேச்சு, ஆற்றலும் உயிரும் பெற்றிருத்தல், கேட்டார்ப் பிணித்துக் கேளாதார் வேட்கும்படி அமைதல், சரியான இடத்தில் சரியான சொற்களை அமைத்தல், ஏற்ற எடுத்துக் காட்டுகளும் மேற்கோள்களும் காட்டல், எளிய, இனிய தூய நடை, இலக்கணப் பிழை இல்லாமை முதலியன.

**திருத்தமில்லாப் பேச்சின் குறைகள் :** திருத்தமில்லா ஒலிப்பு, திருத்தமில்லா உச்சரிப்பு, இடத்திற்கேற்றபடி குரலில் எடுத்தல் படுத்தல் நலிதல் முதலிய ஏற்றத்தாழ்வு இல்லாமை, கடுங்குரல், குரலும் பேச்சும் இயல்பாயில்லாது வேண்டுமென்றே வலிந்து பேசியது போல் தோன்றுதல், வகுப்பிற்

கேற்ற அளவான குரலாயில்லாமல் மிகத்தாழ்ந்தோ உரத்தோ இருத்தல், மிகவிரைவு அல்லது மிக மெதுவு, அச்சம், கூச்சம், படபடப்புகளினால் தன்னுணர்ச்சி தோன்றுதல், உணர்ச்சியும், மனவுறுதியும், தன்னம்பிக்கையும் இல்லாமை, கருத்துகளில் தெளிவும் தொடர்பும் இல்லாமை, இலக்கணப் பிழைகள் காணப்படல், கொச்சை மொழிகள் பேச்சில் காணப்படுதல், நடையில் தெளிவு, இனிமை, எளிமை, தூய்மைகள் இல்லாமை, கூறியது கூறல், மிகைபடக் கூறல், குன்றக் கூறல், மாறுபடக் கூறல், சென்று தேய்ந்திறுதல் முதலிய குறைகள் இருத்தல், பேச்சில் உயிரும் வன்மையும் இல்லாதிருத்தல், பிறரைப் பார்த்துப் பேசுவதாலும், தொண்டைச் சதை, மூக்கடியான் முதலியவற்றாலும் பேச்சில் நேரக்கூடிய குறைகள், சொற்றொடரின் கடைச் சொல்லை அல்லது சொல்லின் கடையெழுத்தை விழுங்கிவிடுதல், மிக விரைந்து பேசுதல், விரைந்து பேசுவதால் எண்ணத்துக்கும் மொழிக்கும் சரியான தொடர்பு ஏற்படாமற் போவதோடு சொற்பொருட் குற்றங்கள் நிகழ்தல் முதலியன.

**திருத்தமில்லாப்பேச்சின் குறைகளைப் போக்கச் சில வழிகள் :**

(1) ஆசிரியர் பேச்சு மாணவர்கள் பின் பற்றுவதற்கு ஏற்றவாறு எடுத்துக் காட்டாக அமையவேண்டும். திருந்திய பேச்சின் தகுதிகளைக் கொண்டு, செற்றமும், விரைவும் இன்றிச் செல்லவேண்டும் அவர் பேச்சு.

(2) பெற்றோர்களின் பேச்சும் மற்றோர்களின் பேச்சும் வீட்டில் பின்பற்றுவதற்கு ஏற்றவாறு அமைவதோடு, பெற்றோர்களின் ஒத்துழைப்பை ஆசிரியர்கள் பெற்றுக் குழந்தைக்கு இருக்கும் தொண்டைச் சதை, மூக்கடியான் போன்ற குறைகளை அறுத்து நீக்கியும், மிகு சோர்வு, நரம்பு மிகு கிளர்ச்சி, தளர்ச்சி முதலியவற்றை ஏற்ற மருந்துகள் கொடுத்தோ ஓய்வு கொடுத்தோ அவற்றின் காரணங்களை வேறு வழிகளால் நீக்கியும் போக வேண்டும்.

(3) இடையூறுகளால் ஏனைய குழந்தைகளைப்போல் பேச இயலாத சில மாணவர்கள் மனம் புண்பட்டுப் போகாமலும், தாழ்வுணர்ச்சி அவர்களிடை நிலைத்து விடாமலுமிருப்பதற்குப் பேச்சின் இடத்தில் பேச்சுக்கு மாறான அவர்கள் செய்யக் கூடிய கைவேலை, வரைதல், ஓவியம், எழுத்துவேலை முதலியன போன்ற வேலைகளைக் கொடுக்கலாம். அவர்கள் மனத்திலுள்ள எண்ணங்கள் வெளிப்படுவதற்கு மொழியின் வாயிலாக அவர்களுக்குச், சிறப்பாக முடியவில்லையாதலால் இவை

போன்ற வேறு சில வழிகளைக் காட்டவேண்டியது ஆசிரியர் கடமையாகும்.

(4) மேலும் பேச்சிற் குறையுடைய பிள்ளைகளுக்கு ஒல்லும் வழி வகைகளில் மிகுதியாக வாய்மொழிப் பயிற்சி கொடுத்து உதவுவதோடு, ஆசிரியர் அவர்களைத் தனித்தனியாக ஒரு சிறு தொகுதி மாணவர்களோடு வைத்துக்கொண்டு வாய்விட்டுப் படிக்கவோ, பாட்டு ஒப்புவிக்கவோ செய்யலாம். இஃது அவர்களின் குறைகளைப் போக்குவதில் ஒரு தூண்டுகோலாயிருக்கலாம்.

(5) பேச்சில் பிழைசெய்யும் குழந்தையைச் சுட்டிக் காட்டாது, பொதுப்படத் திருத்துதல் வேண்டும். அல்லது தனியாக எடுத்துக் காட்டித் திருத்தலாம்.

(6) **நா பிறழ்** பயிற்சிகள் கொடுக்கலாம். ஒத்த ஓசைகள் பயிலும் சொற்களை அமைத்துச் சொல்லச் சொல்லிப் பன்முறைப் பயிற்சி செய்தால் நாக்கு திருந்தும். (கடலிலே மரவுரல் உருளுது பிறழுது; ஓடும் நரிகளில் ஒரு நரி கிழ நரி, கிழ நரி முதுகினில் ஒரு பிடி நரைமயிர், மலைமேல் மழை பெய்தது; அவள் அவல் தின்றாள்; ஆண்டி ஒருவன் தோண்டி வாங்கினான். தேர் உருளத் தேங்காயுருள, தேரடி மணி நுனி யுருள முதலிய சொற்றொடர்களைப் பன்முறை பயிலச் செய்யலாம்.)

(7) **நா நெகிழ்** பயிற்சிகளும் கொடுக்கலாம். நாவின் நுனி மேலும் கீழும் அசையுமாறுள்ள ஒலிகளைப் பன்முறை உச்சரிக்கச் செய்யலாம். அப்போது நாக்கு திருந்தும்.

ல,ல,ல,ல,லா ; லி,லி,லி,லி,லீ ; லெ,லெ,லெ,லெ,லே ;
ழ,ழ,ழ,ழ,ழா ; ழி,ழி,ழி,ழி,ழீ ; ழெ,ழெ,ழெ,ழெ,ழே ;
ர,ர,ர,ர,ரா ; ரி,ரி,ரி,ரி,ரீ ; ரெ,ரெ,ரெ,ரெ,ரே ;
ற,ற,ற,ற,றா ; றி,றி,றி,றி,றீ ; றெ,றெ,றெ,றெ,றே ;
ன,ன,ன,ன,னா ; னி,னி,னி,னி,னீ ;
னெ,னெ,னெ,னெ,னே ;
ண,ண,ண,ண,ணா ; ணி,ணி,ணி,ணி,ணீ ;
ணெ,ணெ,ணெ,ணெ,ணே ;

என்ற முறையில் அரிய சில ஒலிகளைப் பன்முறை மாணவர் பயிலலாம்.

(8) நாளைக்கு ஓரிரண்டு முறைகளாவது **மூச்சுப் பயிற்சிகள் கொடுத்தல்.**

(9) உச்சரிப்பதற் கருகிலுள்ள சில ஒலிகள் அடங்கிய பெயர்களில், அவ்வொலிகள் முறையே முதலிடை கடைகளிற் பயின்று வருமாறு அமைத்து, அவை குறிக்கும் **படங்களைக்** காட்டிப் படித்துப் பயிலச்செய்தல்.

(10) **கேள்விப்பயிற்சியும்** கொடுத்தல். அஃதாவது ஆசிரியர் உச்சரித்தற்கு அரிய சில ஒலிகளை உச்சரித்துக் காட்ட, மாணவர்களும் அதைக் கேட்டுப் பின்பற்றி உச்சரித்தல். முதலில் அவை பயிலும் முழுச்சொற்களையும், பின்னர், தனி ஒலிகளையும் உச்சரித்துக் காட்டலாம்.

(11) ஒலித்தற்கரிய ஒலிகள் அடிக்கடி பயிலும் **சிறு பாடல்களையும்** நெட்டுருச்செய்து ஒப்புவிக்கச்செய்தல்.

(12) தன்னுணர்ச்சியை மாணவர்களிடமிருந்து போக்க முயற்சிக்கும் ஆசிரியர் அதனையே உண்டுபண்ணி விடக்கூடாது.

(13) **ஒலியியல் அறிவை** ஆசிரியர் கையாளல் :—அரிய சில ஒலிகளை ஒலித்து ஒலி உறுப்புகளின் நிலையைத் தன்வாயிலும், படத்திலும், கண்ணாடியில் அவரவர் வாயிலும் கண்டு உணரச் செய்வதோடு, அவற்றின் திருந்திய உச்சரிப்பை இசைத் தட்டுகளின் வாயிலாயும் கேட்கச்செய்தல். இதற்கு ஆசிரியர் ஒலியியல் அறிவு கைவரப் பெற்றவராயிருக்கவேண்டும். எடுத்துக் காட்டாக, ந, ன, ண ; ர, ற ; ல, ழ, ள ; என்ற ஒலிகளை உச்சரிக்கும்போது இருக்கும் நாவின் நிலைகளைப் படங்களின் வாயிலாய் உணரலாம். இதுபோன்ற பிற அரிய ஒலிகளையும் கற்பிக்கவேண்டும்.

**திருந்திய பேச்சை வளர்க்கும் சில வழிகளாகப்** பொருந்தியவற்றை வாய்மொழிப் பயிற்சிக்கான வழிகளைக் காட்டும் குறிப்புகளிலும், உரையாடலைப்பற்றிய குறிப்புகளிலும் கண்டு கொள்க. இதற்கு அடிக்கடி பேச்சுப் பயிற்சிவேண்டும் என்பதை மறக்கலாகாது. “செந்தமிழும் நாப்பழக்க” மாகும்.

## ஒலியியல்

“மொழி முதற் காரணமாம் அணுத்திரள் ஒலி” எழுத்தாகும். இவ்வெழுத்துக்களின் பிறப்பியல்பையும் இலக்கணத்தையும் தெரிவிக்கும் மொழி நூற் பகுதியே “**ஒலியியல்**” எனப்படும். இவ்வியலை அறிந்தால் தான் மொழியாசிரியர்கள் எழுத்து, சொற்களின் செம்மையான உச்சரிப்பை நன்கு அறிந்து ஒலிப்பதோடு, மாணவர்களின் உச்சரிப்பில்

நிகழும் பிழைகளைத் திருத்தவும் சரியான உச்சரிப்பைக் கற்பிக்கவும் முடியும். இவ்வெழுத்துக்கள் தோன்றி வெளிப் படுவதற்கு, நுரையீரல்களோடு காற்றுக் குழாயும் தொண் டையும் வாயும் இன்றியமையாத உறுப்புகளாம். ஒலித்த லுக்கு மிக இன்றியமையாத கருவியாதல் பற்றி வாய் " இசை யறை " எனப்படுகிறது.

## உயிர் எழுத்துகள்

நுரையீரல்களினின்று வெளிப்பட்டுக் காற்றுக் குழா யின் வழியாக, வாயில் வந்து வெளிப்படப் போகும் காற்றி னால் உச்சரிக்கப்படும் ஒலிகளை உயிர், மெய் என்ற இரு பெரும் பிரிவுகளாக மொழி நூல் வல்லோர் பிரிப்பர். இவற் றின் சேர்க்கையால் உயிர் மெய்யெழுத்துக்கள் தோன்று கின்றன. " ஓசை பெற்ற ஓர் ஒலியானது, அஃது ஒலிக்கப் பப்படுங்கால் வரும் காற்றானது யாதொரு வெளிப்படையான தடையுமின்றி வாயின் வழியாக வெளிவந்து விட்டால் 'உயிர்' எனப்படும் " என்று ஒலிநூல் வல்லார் கூறுகின்ற னர். ஆகவே ஒவ்வோர் உயிரும் தோன்றுவதில் மூன்று கூறுகள் காணப்படுகின்றன. அவையாவன: (1) நுரை யீரலிலிருந்து காற்று வெளிவரல், (2) குரல் நாண்களின் அசைவு, (3) வாயின் அமைப்பு என்பனவாம். இவ்வோசை வாய்க்கு வந்தவுடன் வாயில் உள்ள உறுப்புகளால் மாறு பாடுற்று ஒலிக்கப்படுவதால் வெவ்வேறு மாறுபாட்டை எய்து கின்றது. இவ்வோசை வேறுபாட்டை உண்டாக்கும் இன் றியமையாத உறுப்புகளாக, நாக்கு, வாயின் மேற் கூரை, இதழ்கள், பற்களைக் கொள்ளலாம். இவற்றுள் நாவை ஓசை வேறுபாடு கருதி நுனிநா, இடைநா, முதல்நா, என்றும் வாயின் மேற் கூரையை, 1. நுனி அண்ணம், 2. இடை அண்ணம் 3. முதல் அண்ணம் என்றும் மொழிநூல் வல்லார் பிரிப்பர். இவ் வுறுப்புகளிற் பட்டு, காற்று வந்து வெளியேறும் போது இவற்றிற்கு ஏற்றவாறு பெயரைப் பெறும். அம்முறை பற்றி உயிர்கள் எல்லாம் மிடற்று, நா, தலை, பல், இதழ் ஒலிகள் என வகைப்படுத்தப் படுகின்றன. முதல்நா, முதல் அண்ணத்தைத் தொட மிடற்றொலியும், இடைநா, இடை அண்ணத்தைத் தொட நா வொலியும், நுனிநா வளைந்து, அண்ணத்தின்மேல் இறுதியைத் தொடத் தலை ஒலியும், நுனிநா, மேற்பல்லைத் தொடப் பல் ஒலியும், மேல் இதழும் கீழ் இதழும் கூட, அல்லது கீழ் இதழ் மேற்பல் லைத்தொட இதழ் ஒலியும் பிறக்கும் என்பர்.

இவ்வுயிர் எழுத்துக்களை நாவின் நிலையை மட்டும் கருதிப் பார்க்கும்போது, இடை நா, இடை அண்ணத்தை நோக்கி மேலெழுந்தால் **முன் உயிர் எழுத்துகள்** என்றும், முதல் நா முதல் அண்ணத்தை நோக்கி மேல் எழுந்தால் **பின் உயிர் எழுத்துகள் என்றும்**, நா, கூடிய வரையில் மிக உயர எழுந்தால் **மூடு உயிர்** எழுத்துக்கள் என்றும், நா, கூடிய வரையில் மிகத் தாழ இருந்தால், **திறப்புயிர்** எழுத்துக்கள் என்றும் மூடு நிலையினும் நா, இன்னும் ⅓ பங்கு தாழ்ந்து வந்தால் அரைமூடு உயிர் எழுத்துக்கள் என்றும், மூடு நிலையினும் இன்னும் ⅔ பங்கு தாழ்ந்து வந்தால் அரைத் திறப்புயிர் எழுத்துகளென்றும் பெயர்பெறும் என்றும் கூறுவர். இன்னும் உயிர் எழுத்துக்களை **இதழ் குவி** உயிர் எழுத்துக்கள், **இதழ் விரி** உயிர் எழுத்துக்கள் என்றும், **மூக்கு ஒலி** உயிர் எழுத்துக்கள், **மூக்கொலி இல்லுயிர்** எழுத்துக்கள் என்றும், **இறுகு உயிர்** எழுத்துக்கள், **நெகிழ்** உயிர் எழுத்துக்கள் என்றும், **குறிலு**யிர் எழுத்துக்கள் **நெடிலு**யிர் எழுத்துக்கள் என்றும், **தனி உயிர்** எழுத்துக்கள், **புணர் உயிர்** எழுத்துக்கள் என்றும் பல்வேறு வகைகளினாலும் பெயர் பெறும் என்பர் ஒலியியற் புலவர். ஆனால் முதலிற் கூறிய இருவகையே பெரும்பாலும் கொள்ளப்படும். எவ்வெவ்வுயிர், எவ்வெவ் வகையை இவ்விரு முறைகளிலும் (ஒலி உறுப்புகளின் வேறு பாட்டுமுறை, நாவின் நிலையைக் கருதும் முறை) முறையே சேரும் என்பதை அடுத்துவரும் ஒலியியற் கண்ணாடியிற் கண்டு கொள்க.

**இனி மெய்களையும்** அதாவது நுரையீரலிலிருந்து காற்றுக் குழாய் "இசை அறையாகிய" வாய்க்கு வரும் போது சில தடைகளினால் தடுக்கப்படும் ஓசைகளையும்-இரு வகைகளாகப் பிரிக்கலாம். முதலாவதாக - அவைகளை ஒலிப்பதில் எடுத்துக்கொள்ளப்படும் முயற்சி கருதி அவற்றை (அ) ஓசை இல்லாதனவும் ஓசை உள்ளனவுமான **"வெடிப்பொலிகள்,"** (ஆ) **"மூக்கு ஒலிகள்"** (இ) **நெகிழ் ஒலிகள்** (ஈ) **இரைப்பு ஒலிகள்** என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். இரண்டாவதாக, உயிர்கள் போலவே இவைகளும் எவ் வுறுப்புகளால் ஒலிக்கப்படுகின்றன என்பது கருதி (அ) மிடற்றொலி (ஆ) நா வொலி (இ) தலை ஒலி (ஈ) பல் ஒலி (உ) இதழ் ஒலி (ஊ) எகிர் ஒலி (எ) பல் இதழ் ஒலி எனப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்படும். எவ் வொலி, எப்பிரிவைச் சேரும் என்பதையும் **ஒலியியற் கண்ணாடியிற் கண்டு** கொள்க.

## ஒலியியற் கண்ணுடி.—I. உயிர்கள் (Vowels)

### (1) ஒலி உறுப்புகள் பற்றிய பிரிவு

| மொழிகள் | மிடற்றொலி Guttarals | நாவொலி Palatals | தலையொலி Cerebrals | பல்லொலி Dentals | இதழ் ஒலி Labials |
|---|---|---|---|---|---|
| 1. ஆங்கிலம் | a | i, e | | | u, o |
| 2. வடமொழி | a, ā | i, ī, ē, ai | ṛ ṝ | ḷ ḹ | u, ū, ō, au |
| 3. தமிழ் | a, ā (அ-ஆ) | i, ī, e, ē, ai (இ) (ஈ) (எ) (ஏ) (ஐ) | | | u ū o ō au (உ)(ஊ)(ஒ)(ஓ)(ஔ) |
| 4. தமிழ் ஒழிந்த ஏனைய திராவிட மொழிகள் | a, ā | i, ī, e, ē, ai | ṛ, ṝ | ḷ, ḹ | ụ, ū, ọ, ō, au |

### (2) நாவின் நிலைபற்றிய பிரிவு

| முன் உயிர் (Front) | | பின் உயிர் (Back) | |
|---|---|---|---|
| மூடு (Close) | i (இ) ī (ஈ) | மூடு (Close) | u (உ) ū (ஊ) |
| அரை மூடு (Half close) | e (எ) | அரை மூடு (Half close) | ō (ஓ) |
| அரைத்திறப்பு (Half open) | ē (ஏ) | அரைத்திறப்பு (Half open) | a (அ) |
| திறப்பு (Open) | | திறப்பு (Open) | ā (ஆ) o (ஒ) |

## ஒலி இயற் கண்ணாடி—II மெய்கள் (Consonants)

### (1) வெடிப்பொலிகள் (Plosives - வல்லினம்)

| மொழிகள் | மிடற்றொலி (Gutturals) | | நாவொலி (Palatals) | | தலை ஒலி (Cerebrals) | | பல் ஒலி (Dentals) | | இதழ் ஒலி (Labials) | | எகிர் ஒலி (Alveolar) | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஓசை இல்லன (breathed) | ஓசை உள்ளன (voiced) | ஓசை இல்லன (breathed) | ஓசை உள்ளன (voiced) | ஓசை இல்லன (breathed) | ஓசை உள்ளன (voiced) | ஓசை இல்லன (breathed) | ஓசை உள்ளன (voiced) | ஓசை இல்லன (breathed) | ஓசை உள்ளன (voiced) | ஓசை இல்லன (breathed) | ஓசை உள்ளன (voiced) |
| 1. ஆங்கிலம் | k - | g - | | | | | t - | d - | p - | b - | | |
| 2. வடமொழி | k, kh | g, gh | c, ch | j, jh | ṭ, ṭh | ḍ, ḍh | t, th | d, dh | p, ph | b, bh | | |
| 3. தமிழ் | k(க) - | - - | c(ச) - | - - | ṭ(ட) - | - - | t(த) - | - - | p(ப) - | - - | ṟ(ற) | - |
| 4. தமிழ் ஒழிந்த ஏனைய திராவிட மொழிகள் | k, kh | g, gh | c, ch | j, jh | ṭ ṭh | ḍ, ḍh | t, th | d, dh | p, ph | b, bh | ṟ | - |

### II மெய்கள் (Consonants) தொடர்ச்சி—(2) மூக்கொலிகள் (Nasalas - மெல்லினம்)

| மொழிகள் | மிடற்றொலி (Gutturals) | நாவொலி (Palatals) | தலை ஒலி (Cerebrals) | பல் ஒலி (Dentals) | இதழ் ஒலி (Labials) | எகிர் ஒலி (Alveolar) |
|---|---|---|---|---|---|---|
| 1. ஆங்கிலம் | – | – | – | n | m | |
| 2. வடமொழி | ṅ | ñ | ṇ | n | m | |
| 3. தமிழ் | ṅ (ங) | ñ (ஞ) | ṇ (ண) | n (ந) | m (ம) | ṉ (ன) |
| 4. தமிழ் ஒழிந்த ஏனைய திராவிட மொழிகள் | ṅ | ñ | ṇ | n | m | ṉ |

### II மெய்கள் (Consonants) தொடர்ச்சி—(3) நெகிழ் ஒலிகள் (Liquids - இடையினம)

| மொழிகள் | மிடற்றொலி (Gutturals) | நாவொலி (Palatals) | பல் ஒலி (Dentals) பின் (Post) | பல் ஒலி (Dentals) முன் (Pre) | இதழ் ஒலி (Labials) | தலை ஒலி (Cerebrals) பின் (Post) | தலை ஒலி (Cerebrals) முன் (Pre) |
|---|---|---|---|---|---|---|---|
| 1. ஆங்கிலம் | y | – | r | l | w | – | – |
| 2. வடமொழி | y | – | r | l | v | – | – |
| 3. தமிழ் | y (ய) | – | r (ர) | l (ல) | v (வ) | l̤ (ழ) | ḷ (ள) |
| 4. தமிழ் ஒழிந்த ஏனைய திராவிட மொழிகள் | y | – | r | l | v | l̤ | ḷ |

### II மெய்கள் (Consonants) தொடர்ச்சி—(4) இரைப்புஒலிகள் (Sibilants or Fricatives)

| மொழிகள் | மிடற்றொலி (Gutturals) ஓசை இல்லன (breathed) | மிடற்றொலி (Gutturals) ஓசை உள்ளன (voiced) | நாவொலி (Palatals) ஓசை இல்லன (breathed) | நாவொலி (Palatals) ஓசை உள்ளன (voiced) | பல் ஒலி (Dentals) ஓசை இல்லன (breathed) | பல் ஒலி (Dentals) ஓசை உள்ளன (voiced) | இதழ் பல் ஒலி (Labio-dental) ஓசை இல்லன (breathed) | இதழ் பல் ஒலி (Labio-dental) ஓசை உள்ளன (voiced) | தலை ஒலி (Cerebral) ஓசை இல்லன (breathed) | தலை ஒலி (Cerebral) ஓசை உள்ளன (voiced) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. ஆங்கிலம் | h | – | – | – | s | – | f | v | z | – |
| 2. வடமொழி | h(ஹ) | | ś (ஶ) | – | s(ஸ) | – | – | – | ṣ (ஷ) | – |
| 3. தமிழ் | h(ஃ) | – | – | – | – | – | – | – | – | – |
| 4. தமிழ் ஒழிந்த ஏனைய திராவிட மொழிகள் | h | – | ś | – | s | – | – | – | ṣ | – |

## கையெழுத்து

பள்ளியிற் சேருமுன்னர், பல சொற்களின் அறிவும் பொருள்களின் அறிவும் கைவரப் பெற்று, பள்ளியில் வந்து சேர்ந்த குழந்தையின் வாய்மொழிப் பயிற்சியினாலும் படித்தலினாலும் அவ்வறிவு இன்னும் வளம்பெற அதை எழுதவும் வேண்டும் என்னும் அவாவும் பின்னர் இன்றி யமையாமையும் அதற்கு ஏற்படுகின்றன. ஒருவர் தம் கருத்தை வேறிடங்களிலிருக்கும் பிறருக்குத் தெரிவிக்க வேண்டின் அதை எழுதி அனுப்பவேண்டி யிருக்கிறது. உற்றார் உறவினர்க்கு ஒருவர் கடிதம் எழுதுவது இயல் பாய்ப் போய்விட்டதோடு அவர் கற்றறிந்த பொருளையும் பிறருக்குத் தெரிவிக்க எழுத்து வேண்டியிருக்கிறது. சிறந்த அறிஞர்களும் புலவர்களும் தங்களது எண்ணங்களையும் தாம் துய்த்து இன்புற்றவைகளையும் செய்யுள், கட்டுரைகள், நாடகங்கள் போன்றவை வாயிலாகப் பின் வருவோரும் படிக்குமாறு வெளியிடுகின்றனர். எனவே நமது எண்ணங் கள் வாய்மொழியாய் வெளியிடப்படுவதோடு எழுத்துவாயி லாயும் நிலைபெறவேண்டும். இதற்கு எழுதத் தெரிய வேண்டுமன்றோ? இலக்கணத்தின் படியும் ஒலியியலின்படி யும் எழுத்து, ஒலி அணுத்திரளாய் இருப்பினும் ஈண்டு நாம் எழுத்தை எழுதும் வரி வடிவம் என்று கொள்ள வேண்டும்.

### எழுத்தைப் பயிற்றுவதற்குமுன் மேற்கொள்ளத்தக்க சில முற்பயிற்சிகள்

*குழந்தை நினைத்தவுடனே எழுதிவிடமுடியாது.*

1. எழுதுவதற்கு முன்னே எழுதுவதற்கான பொரு ளறிவு வேண்டும். சொல்லறிவு வேண்டும். அதற்கு முதலிற் பேச்சும், படிப்பும், பின்னர் எழுத்தும் வருவது முறையாகும்.

2. மேலும் எழுதுவதற்கான உறுப்புகளையும் கருவி களையும் கை, முன்கை, மணிக்கட்டு விரல்கள், தசைநார்கள் எழுதுகோல்கள், கற்பலகை முதலியவற்றை அடக்கி ஆண்டு எழுதப் பழகவேண்டும். அவற்றை வழங்கவும் அடக்கி ஆளவும் பள்ளி புகும் முன்னரே குழந்தை ஒருவாறு பழகி யிருக்கும் என்பதில் ஐயமில்லை.

மேலும் குழந்தைப் பள்ளிகளில் குழந்தைகள் அடுக்கும் அடுக்கல், எடுத்தல், கட்டல், வகை பிரித்தல்களைச் செய்யும் போதே தம்மை அறியாமலேயே தசைகளையும் தசைநார்களையும் அடக்கி ஆளுவதிற் பயின்றாலும் எழுதுவதற்கெனத் தனிப்பட்ட பயிற்சி வேண்டும். இப்பயிற்சி தசையை அடக்கவும், தசைகளைச் சேர்த்து இயக்கவும் ஒரு சிறிது கைவந்த பிறகே அளிக்கப்படல் வேண்டும்.

3. அதற்கு முற்பழக்கமாக, சீமைச் சுண்ணம்புக்கட்டியினால் கரும்பலகையில் தமக்குப் பிரியமான வடிவங்களை வரையவும் கிறுக்கவும் செய்யலாம். இதைச்செய்ய மாணவர் பெரிதும் விரும்புவர். முதல் வகுப்புப் பிள்ளைகளுக்கு இப் பயிற்சிக்கென வகுப்பறையில் அவர்களுக்கு எட்டக்கூடிய உயரத்தில் சுவர்க் கரும்பலகைகள் அமைத்தல் நலம்.

4. பின்னும் மணலில் கைவிரலால் அழுக்குப் படிந்து கைவிரலை வாயில் வைத்துக்கொள்ளிற் கேடாம் எனில் ஒரு குச்சியால் கிறுக்கவும் உருவங்கள் வரையவும் பழக்குதல். இது முழுக் கையையும் வழங்கப் பழக்குவதால் பின்னர் மணிக் கட்டைப் பழக்குவதற்கு முற்பயிற்சியாம்.

5. அவ்வப்போது மாற்றக்கூடிய பலகையிலும் தட்டில் மணலை வைத்து முன்போல் எழுதலாம்.

6. விதைகள், புளியங்கொட்டைகள் முதலியவற்றால் விரும்பிய உருவங்களை அமைக்கச் சொல்லுதல்.

7. ஆகாய வெளியில் எழுதுதல், முதுகில் எழுதிக் காட்டுதல் முதலியன.

இன்னும் சிறப்பு முறையில் வடிவங்களைப் பார்த்து எழுதும் பயிற்சிகளைக் கொடுக்கலாம்.

8. வட்டங்கள், வளைவுகள், நேர், படுக்கைக், கோடுகள் முதலிய உருவங்களை எழுதப் பழக்கலாம். இவ்வேலைக்கு மாண்டிசோரி முறையை மேற்கொள்ளலாம். ஒரு காகித அட்டையிலிருந்து வட்டங்கள், வளைவுகள் முதலிய உருவங்களை வெட்டியெடுத்து மற்றொரு தாளின்மீது ஒட்டிப்பழக்கலாம்.

9. மேலும் ஓர் எழுதுகோலினால் வடிவத்தின் உட்பக்கத்தில் எழுதி, தாளில் விழும்படிசெய்து, பின்னர் வெளிப்பக்கத்தையும் அங்ஙனமே எழுதி எடுத்து உருவத்தை முற்றுப் பெறச் செய்யவேண்டும். இந்த நிற எழுதுகோல்களினால்

எழுதிப் பின்னர் இடைவெளியை அவ்வெழுதுகோல் கொண்டு நேர்கோடுகளினுல் நிறைத்து விடலாம். பின் அவற்றின்மீது குழந்தைகள் விளம்பி அவ்வடிவத்தை எழுதப் பழக்கினுல் தம்மையறியாமலே தமிழ் எழுத்துக்களின் உட் பகுதிகளை அறிந்து கொள்ளுகிருர்கள். எழுத்தை எங் கிருந்து எப்படித் தொடங்கவேண்டும் என்னும் பழக்கமும் வரும்.

சிலர் கொம்பை (ெ) மேலிருந்து எழுதுவர்; 'ம' வைச் சுழியிலிருந்து தொடங்குவர் சிலர். 8-ஐச் சாய் கோட்டி லிருந்து சிலர் தொடங்குவர். 'னை' 'ளை' களை எழுதும் போது 'ன' 'ள' க்களை முதலில் எழுதிப் பின்னர் 'ல' வைச் சேர்ப்பர். வட்டங்கள் முதலியவற்றை எழுதிப் பழக்குவதால் தம்மை யறியாமலே தமிழ் எழுத்துக்களின் உட் பகுதிகளும் மாணவர்களுக்குப் பழக்கத்தில் வந்து விடுகின்றன. தமிழ் நெடுங் கணக்கிலுள்ள எழுத்துகளின் உட்பகுதிகள் சில வருமாறு:—உயிர்மெய் எழுத்துக்களைப்பற்றிய நூற்பாவில், 'உருவு திரிந்துயிர்த்தல்' என்னும் சொற்ருெடரை விளக்கிய நச்சினுர்க்கினியர், "உருவு திரிந்துயிர்த்தலாவது மேலும் கீழும் விலங்குபெற்றுங், கோடுபெற்றும், புள்ளிபெற்றும், கோடும் புள்ளியும் உடன்பெற்றும் உயிர்த்தலாம். கி, கீ. முதலியன மேல் விலங்குபெற்றன; கெ, கே முதலியன கோடுபெற்றன; கா, ஙா முதலியன புள்ளிபெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர். கொ, கோ, முதலியன புள்ளியுங் கோடும் உடன்பெற்றன." என் கிருர். இதில் தமிழ் எழுத்துகளின் உட்பகுதியான வடிவங் கள் குறிக்கப்படுதல் காண்க.

10. எழுத்துக்களை உப்புத் தாளினுலும் தடித்த பட்டி னுலும் வெட்டி அட்டைகளில் ஒட்டி அவற்றின்மேல் குழந்தை களை விரல்கொண்டு விளம்பச் செய்யலாம். இவற்றைத் தொட்டு உணர்வதால் இவற்றின் உருவம் ஒருவாறு இவர் களின் மனத்தில் அமைகிறது.

11. நிலத்தில் எழுத்துக்களைக் குழித்து எழுதி அவற் றின் மேலும் குழந்தைகளைக் கைகொண்டும் பின்னர், குச்சி எழுது கோல்களைக் கொண்டும் விளம்பப் பழக்குதல் வேண்டும்.

12. இவ்வாறு எழுதி ஒரு சிறிது பழக்கம் எய்திய பின்னர்க் கரும்பலகையில் ஆசிரியர் சற்று மங்கலாக எழு திக் குழந்தையை அவற்றின்மீது குச்சிகொண்டோ சீமைச்

சுண்ணும்புக் கட்டிகொண்டோ விளம்பும்படி செய்ய வேண்டும். இப்பயிற்சியை அவர்களுக்கு மிகுதியாகக் கொடுக்க வேண்டும்.

13. மற்ருெரு வழியாவது, கரும்பலகையில் எழுத்துக்களை அழியாத வண்ணத்தால் தீட்டி அவற்றின்மேல் குழந்தைகள் சீமைச் சுண்ணும்புக் கட்டியினுல் எழுதுதல், ஒரு குழந்தை எழுதி முடிந்தவுடன் அழித்துவிட, பின் பிறரும் அவ்வாறே பயில்வர்.

14. எழுத்துக்களின் உருவ ஒற்றுமைபற்றி அவற்றைக் கீழ்க்கண்ட வகைகளாகப் பிரித்துக்கொள்ளலாம் என்பர். ஆனல் தனித்தனி எழுத்துப் பயிற்சி கொடுக்கும்போது எவ்வகையை முன்னர்த் தொடங்குவது என்பது ஆராயத்தகுந்தது. (1) ட, ப, ம, ய, ழ (2) ஈ, ர, ந, ங, ற, ஐ, சு, ச, த (3) எ, ஏ, ஞ, ஒ, ஓ, ஔ (4) ள, வ, ல, ண, ன (5) அ, ஆ, இ, உ, ஊ.

15. முழுச் சொற்களாகப் படிப்பதுபோலவே முழுச் சொற்களாகவே முதலில் எழுதச்சொல்லல். பின்னர், தனியெழுத்து. ஏனெனில் தனி யெழுத்துக்களில் கருத்துகள் இல்லை.

16. மின் அட்டைகள், கட்டளை அட்டைகள், விளம்பரங்கள், கரும்பலகையில் ஆசிரியர் எழுதியவை, பாடங்களில் உள்ள சொற்ருெடர்கள் முதலியவற்றை அப்படியே எழுதிப் பழகுதல், விடுபட்ட எழுத்தை எழுதிச் சொல்லை முடித்தல், விடுபட்ட சொற்களை எழுதி, சொற்ருெடரை முடித்தல், எழுத்துக் கூட்டு விளையாட்டுகள் முதலிய விளையாட்டு முறைகளை எழுதுதலிலும் மேற்கொள்ளலாம்.

17. **சரியான உட்காரும் நிலையை எழுத்தில் கவனித்தல்:—** கோணலாகச் சாய்ந்துகொண்டு இயல்புக்கு மாருக உட்காருதல் கூடாது. முதுகு கூனும். எழுதுகோலைப் பிடிக்கும் முறை கவனிக்கப்பட வேண்டும். மிகவும் கிட்ட அல்லது எட்டி, மிகவும் இளகி அல்லது இறுகிப் பிடித்தல் கூடாது. எழுதுகோலை நடுவிரலில் வைத்து ஆள்காட்டி விரலினும், கட்டை விரலினும் பிடித்துக்கொண்டு, கற்பலகையை இடது கையால் பிடித்து வலது முழங்கால் மீது வைத்து, (சற்று இடதுபுறம் சாய்த்து) எழுதுதல் நலம். சாய்வு மேஜைமீது வைத்து எழுதுதல் மிகவும் சிறப்புடையது.

## சில எழுத்துப் பயிற்சிகள்

**1. பார்த்து அதன்படி எழுதுதல்:** குழந்தைகள் எதைப் பார்த்தாலும், அதன்படியே பார்த்து எழுத விரும்புகின்றனர். இவ் விருப்பத்தை ஆசிரியர்கள் வளரச் செய்து பயன் படுத்திக் கொள்ள வேண்டும். முதலில், பெயர்கள் எழுதிய அழகிய படங்களை மாணவர்களுக்குக் காட்டி அவற்றைப் பார்த்து அவர்களை வரையச் செய்து, பெயர்களையும் அவற்றின் கீழே அல்லது எதிர்ப்புறத்தில் எழுதும்படி செய்யலாம். அதன் பின்னர்ப் பார்த்து அதன்படி எழுதும் பயிற்சி கொடுக்கலாம். ஆனால் பார்த்து அதன்படி எழுதும் புத்தகங்களைப் பார்த்து எழுதுதல் மிகவும் அருமையானதும், மிகுந்த முயற்சியை வேண்டுவது ஒன்றும் ஆகும். மூன்றாம் வகுப்பிலிருந்தே இதை எழுதத் தொடங்கலாம். மூன்று கோடுள்ள புத்தகங்களை வழங்கலாம். உடலுக்கு நடுக்கோடுகள், கீழ்விலங்குகளுக்குக் கீழ்க்கோடு வரை, முதலில் பெரிய எழுத்துக்களால் ஆகிய வரிகளையும், பிறகு வர வரச் சிறிய எழுத்துகளாகிக் கொண்டேயும் வருகின்ற வரிகளையுமுடைய புத்தகங்களை முறையே கொள்ளலாம். சற்றுப் பழகிய பின்னர் இரண்டு கோடுள்ள புத்தகங்களையும் பின்னர் ஒரு கோடுள்ள புத்தகங்களையும் கொடுக்கலாம். பின்னர், கோடில்லாமலே எழுதச் சொல்லலாம். மேலிருந்து கீழ் வருவதைவிடக் கீழ் இருந்து மேல் எழுதிக்கொண்டு போவது சிறந்து விளங்கும். மேலிருந்து வந்தால் முதலில் உள்ள அச்சு வரியைக் கவனிக்காமல், தாம் ஒருவேளை தவருக எழுதக்கூடிய முன் உள்ள வரியையே பார்த்து மாணவர் எழுதக்கூட நேரிடும். பிழைபட்டால் மேலே திருத்தவும் நேரும். செக்குத்தாய் எழுதுவதே தமிழுக்குச் சிறந்ததாம். எழுத்துக்குத் தோற்றப்பொலிவையும் கொடுக்கும். சாய்த்தும் சேர்த்தும் எழுதுவது, விரைந்து எழுதுவதற்கு உதவும் என்று ஆங்கிலத்தில் மேற்கொண்டு இருக்கிறார்கள். தமிழுக்கு இவை யேற்றவை அல்ல.

பார்த்து எழுதுவதைவிட, ஆசிரியரே கரும்பலகையில் நன்ருய் எழுதிக்காட்ட, அதை மாணவர் பின்பற்றிப் பார்த்து எழுதுதல் சிறந்தது என இக்காலத்துக் கருதப்படுகிறது. ஏனெனில் ஆசிரியர் கைவளைதல், எங்குத் தொடங்கி எப்படிப் போவது, எழுதுகோலைப் பிடிக்கும் முறை, எழுத்தின் உருவம் முதலியவற்றை மாணவர்கள் கண்கூடாகக் கவனித்து, ஆசிரியரை நல்ல முறையில் பின்பற்ற நேரிடும். எனவே

'கரும்பலகையில் எழுதிக்காட்டுவதே' பார்த்து அதன்படி எழுதுவதைவிடச் சிறந்தது என்று முறை வல்லார் கருதுகின்றனர்.

## பார்த்து எழுதுதல்

இரண்டாவது வகுப்பு முதலே, பார்த்து எழுதுதலைத் தொடங்கலாம். நாள்தோறும் நான்கு வரிகளாவது வகுப்பில் எழுதும்படி செய்யலாம். நிறுத்தக் குறியை—சிறப்பாக முற்றுப் புள்ளியை—கவனிக்கும்படி செய்யவேண்டும். எவ்வித எழுத்துப் பயிற்சியும் பதினைந்து நிமிஷங்களுக்கு மேல் போகக்கூடாது. தண்டனையாகப் பன்முறை எழுதும்படி செய்யக்கூடாது.

## பார்த்து எழுதுவதால் உண்டாகும் நன்மைகள்

1. கையெழுத்து திருத்தமாய் அமைவதற்கு ஒரு நல்ல வழியாம்.

2. தெளிவாயும் வேகமாயும் எழுதுவதற்கு ஒரு தூண்டு கோல்.

3. நன்றாக மேற்பார்க்கப்பட்டால் இது மாணவரின் உற்று நோக்கும் பழக்கத்தையும் ஆற்றலையும் வளர்ப்பதோடு பார்த்து எழுதிக்கொண்டு வரும் பகுதிகள் தெளிவாய் விளக்க முற்று உள்ளத்தும் அமைக்கப்படும்.

4. நல்ல சொற்றொடர்கள், மரபுத் தொடர்கள், பழமொழிகள், அரிய சொல்லாட்சிகள் முதலியன பழக்கத்தில் மாணவர்க்கு வரும். இவைகள் பொதிந்துள்ள பகுதிகளைப் பார்த்து எழுதச் சொன்னால் இவைகள் வழங்கும் முறைகளும் இடங்களும் மனத்திற் பதிய இடமுண்டு.

5. கவனக் குறைவாயிருக்கும் மாணவர்களுக்குக் கவனத்தை இஃது ஊட்டவல்லது.

6. எழுதும், பேசும் மொழியில் ஒவ்வொரு சொல்லும் பொருள் கருதியே வைக்கப்பட்டிருக்கிறது என்னும் எண்ணமும், ஏற்ற இடங்களில் நிறுத்திப் பேசுவதும், நிறுத்தக் குறிகளோடு எழுதுவதும் பொருளுணர் பயன் கருதியேயாம் என்னும் எண்ணமும் மனத்திற் படியும்.

7. தமிழ் வகுப்புகளில் மட்டுமன்றித் தாய்மொழியின் வாயிலாகக் கற்பிக்கப்படும் பிறபாடங்களிலும் அவற்றைப் பற்றிக் குறிப்புகள் எழுதும் குறிப்புப் புத்தகங்களிலும், நிகழக்கூடிய பிழைகளை மறைமுகமாக இப்பயிற்சியால் நீக்கலாம்.

8. புதிய சொற்களின் எழுத்துக் கூட்டலுக்கும், பழைய சொற்களின் எழுத்துக் கூட்டலை நிலைபெறும்படி செய்வதற்கும் இஃது உதவும்.

9. இதை உதவிகொண்டு எழுதும் கட்டுரைக்கும், மாணவர் தாமாகவே உதவியின்றி எழுதும் கட்டுரைக்கும் இடையில் அமைந்துள்ள ஒரு மாறுநிலைக்குப் பயிற்சியாகக் கொள்ளலாம். மேலும் தாமாக எழுதும் கட்டுரைக்கு ஒரு வழி காட்டியாயும் முற்பயிற்சியாயும் கொள்ளலாம்.

## இதை நடத்தும் முறை பற்றிய சில குறிப்புகள்

1. நல்ல நடையும் பொருளும் பொதிந்த பகுதிகளைப் பொறுக்கி எடுத்தல்.

2. கீழ் வகுப்புகளில் நடந்த பகுதிகளையே பொறுக்கி எடுத்தல்.

3. இடைநிலை வகுப்புகளில், நெட்டுருச் செய்யத்தக்க நல்ல உரை நடை, செய்யுட் பகுதிகளைப் பார்த்து எழுதச் செய்தல்.

4. எழுத்துக் கூட்டலையும், பார்த்து எழுதுதலையும் தொடர்பு படுத்தி, எழுத்துக் கூட்டலில் தவறக்கூடிய சொற்களையும் தொடர்புகளையும், உள்ளடங்கிய பகுதிகளைப் பார்த்து எழுதச்செய்தல்.

5. சொல்லிக்கொண்டே எழுதச்செய்தல்.

6. பிழைகளிருப்பின் திருத்தச்செய்தல்.

## மாற்றியமைக்கப்பட்ட பார்த்து எழுதுதல்

ஒருமையைப் பன்மையாகவும், பன்மையை ஒருமையாகவும் மாற்றி எழுதுதல், காலங்களை மாற்றி எழுதுதல், ஏற்ற அடைமொழிகளைப் பெயர்களுக்கும் வினைகளுக்கும் கொடுத்துத் தொடர்மொழிகளை விரிக்கச்செய்தல், முதலிய சில பயன் கருதிப் பார்த்து எழுதுதலில், பார்த்தபடியே எழுதாமல் மாற்றியும் எழுதும்படி மாணவர்களை ஏவலாம். கீழ் வகுப்புகளுக்கு மிகவும் எளிய முறையில் இதுபோன்ற பயிற்சியைக் கொடுத்தால் அவர்களுடைய சொற்களஞ்சியத் தேர்ச்சியையும் இலக்கண மரபுகளைத் தெரிந்து வழங்கும் அறிவையும் ஒருவாறு தேறலாம்.

இடைநிலை வகுப்புகளில் இவற்றை இன்னும் சற்று விரிவான முறையில்—தற்கூற்றை அயற்கூற்றாக மாற்றுவது முதலியன—நடத்தலாம். இங்ஙனம் மாற்றியமைக்கப்பட்ட

பார்த்து எழுதுதல் இலக்கண மரபுகளையும் அவைகள் வழங்கும் முறையையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது.

## சொல்லுவதெழுதுதல்

இரண்டாம் வகுப்பு முதல் நடந்த பாடப்பகுதிகளைப் பொறுக்கி எழுதச் சொல்லலாம். இதனால் விளையும் நன்மைகளாவன :—

1. பேசும் மொழிகளை விரைவாகவும் சரியாகவும் பொருளுணர்ந்து கொள்வதற்கு ஒரு நல்ல பயிற்சியாகும்.

2. ஆசிரியர் தம் மாணவர்க்குக்கற்பித்த உச்சரிப்பை மாணவர்களும் ஆசிரியர்களும் சரிவரப் பின்பற்றி வருகிறார்களா என்பதைத் தேறவும் இஃது ஒரு வழியாகும்.

3. தனியாகப் படிப்பதை நினைவில் வைத்துக்கொள்வதைவிடக் கேட்டு எழுதுவதை நன்றாய் உள்ளத்தில் அமைத்துக்கொள்வர். ஆதலின் சொல்லுவதெழுதுவதற்கு நல்ல பகுதியைப் பொறுக்கி எடுக்கவேண்டும்.

4. மாணவர்களின் தமிழ்ப் பாட அறிவையும் நினைவாற்றலையும், கவனிக்கும் ஆற்றலையும், மன ஒருமையையும் தேறுகிறது.

5. கேட்கும் ஆற்றலையும், நிறுத்தக்குறிகளை வழங்கும் ஆற்றலையும் அளந்து அறிகிறது.

6. கையெழுத்தின் விரைவையும், தெளிவையும் வளர்ப்பதோடு ஆராய்ந்தும் அறிய உதவும்.

7. எழுத்துக் கூட்டலின் அறிவைக் கண்டறியவும், பழைய சொற்களின் எழுத்துக் கூட்டலைக் கண்டறியவும், உறுதிசெய்யவும், எச்சொற்களைத் தவறாக எழுதுகின்றனர் என்பதைக் கண்டறியவும் இது நல்ல வழியாகும். ஆனால் புதிய சொற்களின் எழுத்துக் கூட்டறிவைக் கண்டறிய இஃது ஏற்ற வழியன்று.

8. ஆசிரியர் பேச்சுத் தெளிவையும் இது கண்டறிகிறது.

## இதை நடத்தும் முறை பற்றிய சில குறிப்புகள்

(1) சொல்லுவதெழுதுவதற்குத் தேர்ந்தெடுத்த பகுதியை ஒருமுறை படித்துக்காட்டல் அல்லது மாணவர்களைப் படித்துக்கொள்ளச் செய்தல். (2) சொல்லும் போதும் ஆசிரியர் சொற்களைத் திரும்பச் சொல்லுக்கூடாது. (3) பொருள் தொடர்ந்துசென்று நிற்கும் இடங்களில்மட்டும்

திறுத்துதல். (4) நன்றாய் முழுவதும் கேட்டுப் பொருளுணர்ந்த பின்னரே எழுதத் தொடங்க வேண்டுமென்று அறிவுறுத்தல். (5) பிற சொற்களைக் கவனிக்காமல் முதற்சொல்லைக் கேட்டவுடனேயே எழுதத் தொடங்கிப் பின் அடுத்த சொல் என்னவோ என்று விழிக்கக்கூடாது என அறிவுறுத்தல். (6) எழுதும்போதே ஆசிரியர் சொன்ன சொற்களை மெல்ல வாய்க்குள் சொல்லிக்கொண்டே எழுதும்படி செய்தல். (7) இம்முறை பின்னர்க் கல்லூரிகளிலும், வாழ்க்கையிலும், சொற்பொழிவுகளைப்பற்றிய குறிப்புகள் எடுத்துக்கொள்வதிலும் உதவிசெய்யும். (8) கையெழுத்து, நிறுத்தக் குறிகள், சொற்களைப் பிரித்து எழுதும்போது கூடியவரையில் பொருள் நோக்கிப் பிரித்தல் முதலியவைகள் கவனிக்கப்பட வேண்டும். ஆனால் இதில் காலம் கொஞ்சம் செலவழிகிறது என்பதை ஒரு குறையாகக் கூறலாம்.

## மாற்றியமைக்கப்பட்ட சொல்லுவ தெழுதுதல்

கேட்கும் ஆற்றலைக் கண்டறிவதையும், சொற்றொடர்கள், இலக்கண மரபுகள் முதலியவற்றை வழங்கும் ஆற்றலையும் இதில் கலக்கலாம். ஆசிரியர் ஒரு சொற்றொடரை ஓர் உருவத்தில் எடுத்துச்சொல்ல, மாணவர் அதைக்கேட்டு, மாற்றும்படி கூறப்பட்டிருக்கும் உருவத்தில் எழுதுதல். இடைநிலை வகுப்புகளுக்கு இது மிக ஏற்றது.

## நல்ல கையெழுத்தின் தகுதிகள்

கையெழுத்தை இக்காலத்தில் சரியாய்க் கவனிப்பாரில்லை. நன்றாகக் கற்றுத் துறைபோகிய பெரும்புலவர்களின் எழுத்தும் நன்றாயிருப்பதில்லை. இளமையில் திருந்திய கையெழுத்து அமையாததே இதற்குக் காரணம். இன்றைய உலகில் எழுத்து வேலை கடல்போல் பரந்துகிடப்பதால் மிக விரைவாக எழுதவேண்டியிருக்கிறது. இவ்விரைவிற்கு வேண்டிய எழுத்தின் அழகையும் தெளிவையும் பறிகொடுக்கின்றனர்.

ஆனால் நல்ல கையெழுத்து நல்ல கல்விக்கும் மனப் பயிற்சிக்கும் அறிகுறியாம். இது பிள்ளைகளின் தசைநார்களை அடக்கி ஆள்வது மட்டுமன்றி மனத்தையும் பயில்விக்கிறது. அழகின் பெருமையையும் எடுத்துக்காட்டுகிறது. நல்ல முத்துப்போன்ற எழுத்துக்களை யாவரும் விரும்பிப் படிப்பர்.

## நல்ல கையெழுத்தின் தகுதிகள் வருமாறு

1. **தெளிவு:** நாம் எழுதுவது பிறர் அதைப் படித்துப் பொருளுணர்ந்து கொள்வதற்காகையால் பிறருக்கு விளங்கும்படி தெளிவாய் எழுதுவதே முதற்கண் கவனிக்கற்பாலது. தமிழெழுத்துகள் விளக்கமாயும் தெளிவாயும் இருப்பதற்கு அவைகளைத் தனித்தனியாய் எழுதவேண்டும். சிலர் ஆங்கிலக் கையெழுத்துப்போல் கோவையாய்ச் சங்கிலிபோல் சேர்த்து எழுதுவர். இதுபோல் எழுதுவது விரைவைக் கொடுக்கும் என்பர். சேர்த்துச் சேர்த்து எழுதிக்கொண்டே போனால் எழுதுகோலை ஒவ்வோர் எழுத்துக்கும் எடுத்தெடுத்து எழுத வேண்டியதில்லை யாதலால், காலக்குறைவும் விரைவும் உண்டாகும் என்பதில் ஐயமில்லை. ஆனால் தனித்தனி எழுதுவதே தமிழ் எழுத்துக்குத் தெளிவைக் கொடுப்பதோடு தோற்றப் பொலிவையும் தரும். மேலும் இதுவே தமிழ் முறையும் மரபுமாகும். எழுத்துகள் கிறுக்கியது போலில்லாமல் முத்து முத்தாக இருக்கவேண்டும். உருவங்கள் சரியாக இருக்க வேண்டும். விரைவு கருதிப் பலர் உருவத்தைக் குலைத்து விடுகின்றனர். சிலர் மேற்புள்ளியை விட்டுவிடுகின்றனர். அதனால் தெளிவில்லாமற் போய்விடுகின்றது. மெய்யெழுத்துகளின் கூர்மையை அமைத்தல், கீழ்வளைவு, கீழ்விலங்கு, மேல்விலங்குகளைச் சரியாகப்போடுதல், இடைவெளியை ஒரே அளவாக விடுதல், முதலியவை கவனிக்கப்படல் வேண்டும்.

2. **விரைவு:** காலம் சுழன்றுகொண்டு விரைவாய்ப் போகின்றது. கல்வி கரையிலதா யிருக்கின்றது; ஆனால் கற்போர் நாள் சிலவாயிருக்கிறது. கற்றது கைம்மண்ணளவாயும் கல்லாதது உலகளவாயும் இருக்கிறது. ஆதலின் படிக்கவேண்டியவற்றையும் எழுதவேண்டியவற்றையும் மிக விரைவாகச் செய்யவேண்டியிருக்கிறது. விரைவாக எழுதவேண்டு மென்பதற்காக எழுத்தின் தெளிவைப் பறிகொடுக்காது கூடியவரையில் விரைவாக எழுதவேண்டும். எழுத்தின் விரைவையும் ஒருவாறு தேறலாம். மாணவர்களை 'எழுது' என்று கட்டளையிட்டவுடன் எழுதத் தொடங்கச் செய்து 'நிறுத்து' என்றதும் நிறுத்தச்செய்து, அக்கால அளவில் ஒரு நிமிஷத்தில் எத்தனை எழுத்துகள் என்று கணக்கிட்டுப் பின் ஒரு மணிக்கு எவ்வளவு என்றும் கணக்கிடலாம். மேலும் அடிக்கடி இவ்வாறு தேர்வுகள் வைத்து விரைவு வளர்ச்சியையும் கண்டறியலாம். மூன்றாவது வகுப்பில் நிமிஷத்திற்கு 35—40 வரையில் எழுத்துகள் எழுதலாம்.

நான்காவது வகுப்பில் 50—60 என்றும், ஐந்தாவது வகுப்பில் 60 என்றும் கணக்கிட்டிருக்கின்றனர். பெரியோர்கள் 100 எழுத்துகள் எழுதலாம்.

3. **அளவும் அழகும் :** எழுத்துகள் தெளிவாகவும், விரைவாகவும் அமைவதோடு அழகு பொருந்தவும் அமையவேண்டும். எழுத்துகள் அழகும் தோற்றப் பொலிவும் பெறக் கீழ்க் கண்டவற்றை மேற்கொள்ளலாம். எழுத்துகளின் உருவம் சரியாயிருப்பதோடு அவைகள், மேலும் கீழும் தொடும் இடங்களும், மேல் விலங்கு கீழ் விலங்குகளும் ஒரே அளவில் இருக்கவேண்டும். எழுத்துகளும் உருவ அளவும் ஒன்றாயிருக்க வேண்டும். சொற்களில் எழுத்துக்கும் எழுத்துக்கும், சொல்லுக்கும் சொல்லுக்கும், வரிக்கும் வரிக்கும், விடும் இடைவெளியளவு ஒரே யளவாய் இருந்தால் எழுத்து பார்ப்பதற்கு அழகாயிருக்கும். இன்னும் வரி கோணமல் எழுதுவதையும், தமிழ் எழுத்துகள் சாயாமல் செங்குத்தா யிருத்தலையும் கவனிக்க வேண்டும். (ஆங்கிலத்தில் எழுதுகிறவனின் வலப் புறமாகச் சாய்த்து எழுதுவதைப் பெரும்பாலும் மேற்கொள்ளுகின்றனர். இது விரைவாக எழுதுவதற்கு உதவும் என்று சொல்லுகின்றனர்.) எழுத்துகளுக்கில்லாத சுருள்களைச் சேர்க்கக்கூடாது. இவைகள் எழுத்துக்கு ஒருவித அழகைக் கொடுப்பினும் விரைவைக் குறைக்கும். எனினும் இவைகளை முன் குமரப் பருவத்தில், மாணவர்கள் மனத்தில் வேரூன்றிக் கிடக்கும் கலை, அழகு உணர்ச்சிகளின் வெளித் தோற்றங்களாகக் கொள்ள ஒருவாறு இடமிருப்பதால் எழுத்துக்களின் உருவத்தைக் காண இயலாதவாறு குலைக்காமலும் எழுத்தின் விரைவை மிகவும் குறைக்காமலும் இருக்கும் நிலையில் அவரவர்களின் தனித்தகுதி கருதி இவற்றைத் தடுக்காமல் அவர்களின் போக்கிலேயே விட்டுவிடலாம். கோடுகளும் மிக மெல்லியனவாயும் தடித்தனவாயுமிராமல் ஒரே அளவாக இருத்தல் வேண்டும்.

## மாணவர்கள் கையெழுத்து நன்கு அமைவதை வற்புறுத்தக்கூடிய சில இடங்களும் வழிகளும்

1. தமிழ்ப் பாடத்தில் மட்டுமன்றி ஏனைய பாடங்களிலும் கையெழுத்தின் தெளிவையும் விரைவையும் அழகையும் வற்புறுத்தல்.

2. ஒருவன் எழுத்தின் தெளிவு முதலியவற்றைக் கவனிக்கும் பொழுது சிறப்பாக அதற்கென எழுதியதிலிருந்து உறுதி செய்யாது பொதுவாக எப்போதும் இயல்பாக

எழுதும் எழுத்திலிருந்து கவனித்தால் மாணவர்கள் எப்பொழுதும் கவனத்தோடு எழுதுவார்கள்.

3. நல்ல செய்யுள், உரை நடைப் பகுதிகளிலிருந்து பார்த்து எழுதிக்கொண்டு வரச் செய்தல்.

4. சிற்சில சமயங்களில் சொல்லுவ தெழுதுதல்.

5. பார்த்ததன்படி எழுதுதல்.

6. தங்கள் எழுத்திற் காணுங் குறைகளை மாணவர்களைக் கொண்டே திருத்துதல். சரியாக எழுதாததைத் திருப்பிச் சரியாக எழுதச் சொல்லல். மிகக் கேடாக எழுதுவோர்க்குத் தனியாக எழுத்து வேலை கொடுத்தல்.

7. கையெழுத்தில் தெளிவும் வேகமும் பறிகொடுக்காமலிருக்கும் வரையில் தனித் தன்மையைத் தடுக்காதிருத்தல்.

8. விடைத் தாள்களை மதிப்பிடுவதில் எழுத்துக்கும் துப்புரவுக்கும் தனி மதிப்பெண்களை ஒதுக்கி வைத்தல்.

9. கையெழுத்தைச் சீர்திருத்துவதற்கு மாணவர்களையே அவரவர்கள் கையெழுத்தைத் தரும் பிரித்துக் காட்டும்படி கூறுதல் ஒரு நல்ல வழியாகும். அஃதாவது பலவகைக் கையெழுத்துக்களையும் மிகக் கேடானது, கேடானது, ஏற்றுக்கொள்ளற் குரியது, மிக ஏற்றுக் கொள்ளற்குரியது, நல்லது, மிக நல்லது, சிறப்புடையது மிகச் சிறப்புடையது என்ற தகுதிகளில் அவரவர் கையெழுத்து எவ்வகையைச் சேர்ந்தது என்று மாணவரையே மதிக்கும்படி செய்வதாம். ஒரு நிலையாக்கப்பட்ட தகுதிகள் கிடைக்கும் வரை ஆசிரியரே மேற்கூறியவாறு ஒருவகையாகத் தகுதி பிரித்து வைத்திருக்கும் சில வகைகளில், எதைத் தம் எழுத்து ஒக்கின்றது என்று மாணவரையே கூறும்படி செய்தால், நல்லது அல்லாத வகையில் தம் எழுத்து, பொருந்துவதை நேரிற்காணும் மாணவர், மனம் அழுங்கித் தாமும் நன்றாக எழுதவேண்டும் என்னும் உணர்ச்சிமிக்கு, அங்ஙனமே செய்யத் தூண்டப்படுவர்.

## எழுத்துக் கூட்டல்

நாம் எழுதுவது எல்லாவற்றையும் பிழைகளில்லாது எழுதவேண்டும். பிழைகளில் எழுத்துப் பிழையும் ஒன்றாகும். எழுத்துப் பிழை மல்கி இருந்தால் அழகு குறைகிறது. பிழைபட எழுதுவது படிப்பவரை அவமதித்தது போலாகும்.

எழுத்தில் கவனமற்றிருந்து பிழை செய்தால் அது கல்வியின் பல பிரிவுகளிலும் கவனக்குறைவை யுண்டு பண்ணும். எழுத்துப் பிழைகள் முற்றிலும் மாறுபாடுள்ளதும் எவரும் எதிர் பாராததுமான பொருளைக் கொடுப்பினும் கொடுக்கலாம். இப்பிழையினால் "கல்வி," "கலவி" யாவதும், "மன்னர்" "மண்ணராவதும்" "அறிந்தோர், " அரிந்தோராவதும்" நாள்தோறும் மாணவர்கள் எழுத்துகளிலும் கட்டுரைகளிலும் காணப்படுவதோர் காட்சியாம். எழுத்துப் பிழையின்றி எழுதும் நற்பழக்கம் இளமையிலிருந்து ஏற்படவேண்டும். இந்நற்பழக்கம் உற்று நோக்கி நன்றாய்ப் படிப்பதையும் கேட்பதையும் எழுதுவதையும் விளக்குவதோடு, கற்றறிந்த ஒருவரை அறிந்து கொள்வதற்குரிய அறிகுறியுமாகும்.

ஆனால் ஆங்கில மொழி போலன்றித் தமிழ் மொழியில் ஒலியியலுக்கும் எழுத்துகளுக்கும் மாறுபாடில்லாமலிருக்கிறது. உச்சரிக்கும்படியே எழுதுகிறோம். ஓர் ஒலி பல வேறு சொற்களில் ஒரே எழுத்தால் (பல எழுத்துக்களால் அல்லாமல்) குறிக்கப்படுகிறது. ஆங்கிலத்தில் இப்படி இல்லை. ஓர் ஒலி பல எழுத்துகளாலும் குறிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக **King Cat ; Any, End ; Some, Sum ;** என்ற சொற்களை நோக்குக.

மேலும் ஓர் எழுத்து (பல ஒலிகளுக் கன்றி) ஒரே ஒலிக்கு அறிகுறியாய் இருக்கிறது. இதுவும் ஆங்கிலத்தில் சரியாயில்லை. **Sure, Sing ; Put, Cut ; Gin, Get ; Gipsy, Go** என்ற சொற்களை நோக்குக.

இன்னும் எழுதுவது போலவே ஆங்கிலத்தில் உச்சரிக்கப்படுவதில்லை. **warm, Depot, Folk** போன்ற சொற்களைக் காண்க.

எனவே, தமிழில் பெரும்பாலும் சொற்களில் எழுத்துகளுக்கு ஏற்றவாறே உச்சரிப்பு அமைந்திருக்கிறது. சிற்சில இடங்களில் இல்லை. எடுத்துக் காட்டாக (1) மெய்யெழுத்துகளில் ஓசை இல்லாத வல்லின எழுத்துகளாலேயே மொழியிடை, மெல்லினத்தோடு சேர்ந்து வரும் வல்லின எழுத்துகள் ஓசை உள்ளனவாக, உச்சரிக்கப்படும்போதும் (2) ஒரோ வழி மெல்லினத்தோடு சேர்ந்து வராமலே மொழியிடை ஓசையுடையனவாக அவை உச்சரிக்கப்படும் போதும் குறிக்கப்படல் (3) மொழி யிடையில், ஒரோ வழி மொழி முதலிலும் ஓசை இல்லா வல்லின எழுத்துகளைக் கொண்டே, இரைப்

பொலிகள் போல் வல்லினங்கள் உச்சரிக்கப் படும் போதும் குறிக்கப்படல் (4) மொழிக் கடையில் ஒரோ வழி ஓசையில்லா வல்லின எழுத்துகளாலேயே, வல்லெழுத்துக்கள் மூச்சொலி கள் போல் உச்சரிக்கப்படும் போதும் குறிக்கப்படல்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| (1) | கங்குல் | (2) | கதவு | (3) | ஈசல் | (4) | தபு |
| | பஞ்சணை | | மதலை | | பூசல் | | தப |
| | பண்டம் | | முதலை | | பசலை | | |
| | வந்தான் | | மதகு | | | | |
| | தின்றான் | | | | | | |

முதலிய சொற்களைக் காண்க.

உச்சரிப்பு சரியாய் இல்லாவிட்டாலும், உச்சரிப்புக்கு ஏற்ற எழுத்தும் எழுத்துக் கேற்ற உச்சரிப்பும் இல்லாவிட்டாலும் எழுத்துப் பிழைகள் ஏற்படும். ஆங்கிலத்தில் எழுத்துப் பிழைகள் மிக ஏற்படுவதில் வியப்பொன்றுமில்லை.

சரியான உச்சரிப்பில்லாமையால் தமிழிலும் சிற்சில இடங்களில் எழுத்துப் பிழைகள் நேர்ந்து விடுகின்றன. ஆகலால் இளமையிலேயே, தமிழ் ஒலிகளின் தவறான உச்சரிப்பும், கொச்சை மொழிகளைப் பேசுதலும் திருத்தப்பட வேண்டும். இளமையிலேயே இவை திருத்தப்பட்டால், பின்னர், எழுத்துப் பிழைகள் நிகழா. இளமையில் மொழியாசிரியர்கள் இவற்றை வளரவிட்டுப் பின்னர் எழுத்துப் பிழை செய்கிறார் கள் என்று கூறுவதிற் பயனில்லை. தமிழில் எழுத்துப் பிழைகளை உண்டாக்கக்கூடிய சில எழுத்துக்கள் ர, ற ; ல, ழ, ள ; ந, ன, ண என்பனவாம். இவை பயிலும் சொற்களைச் சரியாகப் பழக்குவோமாயின் பிள்ளைகள் எழுத்துப் பிழை கள் இல்லாமல் எழுதுவார்கள்.

## எழுத்துப் பிழை நீக்கும் சில வழிகள்

1. ரகர, றகர ; லகர, ழகர, ளகர; நகர, னகர, ணக ரங்கள் பயிலும் சொற்களை அடுத்தடுத்து எழுதி அவற்றின் பொருள் வேற்றுமையைக் காணுமாறு செய்தல்.

ந, ன, ண ; ர, ற ; ல, ழ, ள, என்ற ஒலிகளைப் படங்களின் வாயிலாக உணரலாம். இதுபோன்றே பிற அரிய ஒலிகளை யும் கற்பிக்க வேண்டும்.




2. நகர, னகர, ணகரங்கள் அவற்றின் இனவெழுத்துகளாகிய, தகர, றகர, டகரங்களோடு தான் முறையே சேர்ந்து வரும் என்பதை வற்புறுத்தல்.

3. எழுதி எழுதிப் பழகித் தான் எழுத்துக்கூட்டு அறிவு வர வேண்டுமே ஒழியப் பழைய முறைப்படி குருட்டுப் பாடம் பண்ணுவதிற் பயனில்லை.

4. எழுத்துக் கூட்டிப் பழகுவது தானும், சொற்களை முழு உருவத்திற் கண்டு இஃது இன்ன சொல்லென்று முழுவதாக உச்சரித்தறிந்து பொருள் உணர்ந்த பின்னரே செய்தற்குரியதே ஒழிய, அதற்கு முன்னர் அன்று என்பது உளநூலறிஞர் கண்ட உண்மையாகும்.







5. சொற்களைப் "பார்த்துச் சொல்லும்" முறை, பல அரிய சொற்களின் எழுத்துக் கூட்டறிவை உண்டுபண்ணுவதற்கு மிக ஏற்றதாகும் என்பர் முறையுணர்ந்தோர்.

6. மாணவர்கள் தம் பட்டறிவாலும், படிப்பறிவாலும் உணர்ந்த சொற்களையே முதன் முதலாக, எழுத்துக் கூட்டியறிய வேண்டும்.

7. ஏறக்குறைய ஒத்த ஓசையுடைய ஆனால் பொருள் வேற்றுமையுடைய சொற்களைப் பல இடங்களில் மாணவர்

தம் வாக்கிலேயே வைத்து வழங்கும்படி செய்து பொருள் வேற்றுமையைக் கற்பித்தால் அவற்றின் எழுத்துக் கூட்டறிவு சிறக்கும்.

8. எழுத்துக் கூட்டலில் பொதுவாகப் பிழை நிகழக் கூடிய சொற்களை ஆசிரியர் தொகுத்து வைத்துக்கொண்டு, ஏற்ற இடங்களில் அச்சொற்கள் வரும்போது அவற்றின் பொருளாட்சியை வற்புறுத்தினால் அவற்றின் எழுத்துக் கூட்டறிவும் மறைமுகமாக ஏற்பட்டுவிடும்.

9. பிழைபட்ட எழுத்துக்கூட்டறிவு ஏற்பட்ட பின்னர் அதை மாற்றுவதற்கான வழி வகைகளைத் தேடி அலைவதை விட ஆசிரியர்கள் முதலிலேயே சொற்களுக்குச் சரியான எழுத்துக் கூட்டறிவு அமையும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

10. சொற்களின் "உறுப்பிலக்கண" அறிவும், இன்றியமையாப் புணர்ச்சி விதிகளின் அறிவும் எழுத்துக் கூட்டறிவுக்கு உதவிபுரிவனவாம்.

11. மாணவர்கள் ஒவ்வொருவரும் எழுத்துக் கூட்டலில் ஐயம் நிகழுமாயின் உடனே பார்த்துத் தீர்த்துக்கொள்ளுவதற்கெனத் தமிழ் அகராதி ஒன்றை வைத்துக்கொள்ள வேண்டும்.

12. பிழையற எழுதச் சொற்களின் உருவம் மிகத் தெளிவாய் மனத்திற் படிய வேண்டும். அதற்கு முதலில் சொற்களை முழுதாகக் கண்டு, பின் தனித்தனி எழுத்துகளாய்க் கவனித்துக் கூட்டிப் பின் எழுதவேண்டும். அதாவது முதலில் காட்சிப் புலனுக்கு வேலை கொடுத்துப் பின் செவிப் புலனுக்கு வேலை கொடுத்துப் பின் தசைகளுக்கு இயக்கம் கொடுக்கவேண்டும் என்பதாம். இளமைப் பருவத்தில் கட்புல அறிவே தெளிவு ஏற்படச் சிறந்த உதவியாகும்.

13. சொல்லுவது எழுதுவது பெரும்பாலும் மேற்கொள்ளப்படுகிறது. பழைய, அதாவது மாணவர் தம்பட்டறிவாலும் பாட நூற் படிப்பறிவாலும் கற்றுப் பொருள் தெரிந்துள்ள, சொற்களின் எழுத்துக்கூட்டறிவை அளந்தறியவும், அதனை உறுதி செய்யவும் இது சிறந்த கருவியே என்பதில் ஐயமில்லை. ஆனால் புதிய சொற்களின் எழுத்துக் கூட்டறிவைக் கண்டறியவும் கற்பிக்கவும் இஃது ஏற்ற வழியன்று. மேலும் சொல்லுவதெழுதுவதிற் பன்முறை பிழையாக எழுதிப் பழகிவிட்டால் அப்பிழைகளே *மனத்திற்

புடிந்துவிடவும் இடமுண்டு. ஆதலால் இதனை இடமறிந்து ஏற்ற முறையில் கையாள வேண்டும்.

14. புதுச் சொற்களின் எழுத்துக் கூட்டறிவுக்குப் பார்த்து எழுதும் பயிற்சிகள் மிக மிக வற்புறுத்தப்பட வேண்டும்.

15. விளையாட்டு முறையிற் பல எழுத்துக்கூட்டு விளையாட்டுகளினால் இவ்வறிவை வளர்க்கலாம். மாணவர் வெறுப்பும் சலிப்புமின்றி விருப்போடும் பற்றோடும் இவ்விளையாட்டுகளில் ஈடுபட்டுத் தம்மையறியாமலே எழுத்துக் கூட்டறிவைக் கற்றுக் கொள்வார்கள். எழுத்துக் கூட்டலில் விளையாட்டு முறைகள் சிலவற்றை **ரைபர்ன்** ஆசிரியரின் தாய்மொழி, ஆங்கில மொழி முறை நூல்களிற் காண்க.

எழுத்துக்கூட்டலை அருஞ்சொற்கள் வரும்போதே கற்பிப்பது **அவ்வப்போது கற்பிக்கும் முறை**யாகும். மிகவும் பிழைபட்டுப் பலராலும் எழுதப்படும் மிக அரிய சொற்களைத் தனியாகப் பாட வேளையில் பயிற்சி மிகுதியாகக் கொடுத்துத் தனியாகவே எழுத்துக்கூட்டப் படிப்பிக்கும் முறை **பயிற்சி முறை**யாகும். இங்குத் தனியாக ஒவ்வொரு சொல்லையும் ஆசிரியரோடு மாணவர் பயிலுவர். இதில் புலன், கேள்வி, இயக்கங்களை அஃதாவது கண்ணால் பார்த்து, காதால் கேட்டு, கையால் எழுதுவதைப் பொருத்தவேண்டும். பாடத்தில் உள்ள அருஞ் சொல்லைக் கண்ணால் பார்த்து, ஆசிரியர் எழுத்துக்கூட்டுவதைக் காதாற் கேட்டுப் பின் எழுதவேண்டும். ஆசிரியர் கரும் பலகையில் எழுத மாணவர் பார்த்தெழுதலும், ஆசிரியர் எழுத்துக்கூட்ட மாணவர்களும் கூட்டலும், பின் ஆசிரியர் கேட்க மாணவர்கள் எழுத்துக்கூட்டிச் சொல்லுதலும் இம்முறையிற் பயிற்சி கொடுக்கும் வழிகளாம்.

## நாலாம் பிரிவு

## படிப்பு

தாய்மொழிப் படிப்பில் பேச்சுப் பயிற்சிக்குப் பிறகு இயல்பாய் வரத்தக்கது படிப்பாகும். இதுவே கல்விக்கு அடிப்படையா யிருக்கிறது. எல்லாப் பாடங்களையும் படிப்பின்றேல் படிப்பது எங்ஙனம்? பாடங்களும், பாடத்திட்டமும் படிப்பின்றேல் இல்லை. அவையின்றேல் கல்வி கற்பிக்கும் ஆறும் இல்லை. கையெழுத்து அல்லது அச்சில் உள்ளதைக் கண்ணால் பார்த்து, வாயால் உச்சரித்துச்

சொல்லிப் பொருள் உணர்வதே படிப்பாகும். எனவே படிப்பில் சொற்களைக் காணல், உச்சரித்தல், அவற்றின் பொருளுணர்தல் என மூக்கூறுகள் உண்டு. இவை நடை பெறும்போது உறுப்புகள் பல இயங்குகின்றன. கண்கள் எழுத்துகளைப் பார்க்க, உள்ளம் பொருளுணர, உதடு, நா முதலிய ஒலி உறுப்புகள் சொற்களை உச்சரிக்கின்றன. இப்படிக்கும் பழக்கத்தை முதல் வகுப்பிலிருந்தே தொடங்குதல் வேண்டும்.

## படிப்பில் ஆர்வத்தை ஊட்டக்கூடிய சில வழிகள்

**முதல் நிலை:** முதல் முதல் படிப்பைத் தொடங்கும் போதே மாணவர்கள் அதை ஒரு விளையாட்டாகவே கருதும் முறையில் தொடங்கினுல், அதை விரும்புவர். அதனுல் விளையும் இன்பத்தையும் ஒருவாறு உணரவைத்தால் அதில் பற்றும் வைப்பர்; கவர்ச்சியும் உடையராவர் என்பதில் ஐயமில்லை. இதற்கு உளநூலுக்கு ஒத்த சில முறைகளை மேற்கொள்ள வேண்டுமே ஒழிய, அறிவுக்குப் பொருத்தமாயிருக்கிறது, காரண காரியமுறைக்கு ஏற்றதாயிருக்கிறது என்றெல்லாம் கருதி உளநூல் முறைக்கு மாருகவுள்ள முறைகளை மேற்கொள்ளல் முறையன்று. கீழ்க்கண்ட சில பயிற்சிகளைப் படிப்புக்கு முற்பயிற்சிகளாகவும் படிப்பில் ஆர்வத்தை யூட்டக்கூடிய வழிகளாகவும் கொள்ளலாம்:— (1) **படங்களைப்** பார்க்க எல்லாப் பிள்ளைகளுக்கும் இயற்கையிலேயே விருப்பம் உண்டு. அவற்றின் வாயிலாய்ப் படிப்பை வளர்க்கலாம். சில சொற்களாலும் தொடர்களாலும் விளக்கப்பட்டுள்ள குறிப்புகளைக் கீழே கொண்டுள்ள கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க, சில படங்களை வகுப்பறையில் தொங்கவிட்டிருந்தால், அவற்றைக் காணும் மாணவர்களுக்கு, அவற்றில் எழுதியிருப்பனவற்றைப் படித்தால், கண்ணுற் கண்டு எய்தும் இன்பத்தைவிட இன்னும் மிகுந்த இன்பம் பிறக்கும் என்னும் உணர்ச்சி உண்டாகலாம். அவ்வுணர்ச்சியே அவற்றைப் படிக்கவேண்டும் என்னும் ஓர் ஆவலையும் தட்டி எழுப்பும். (2) மாணவர் வீட்டிலும் பள்ளியிலும் கண்டறிந்திருக்கும் பொருள்கள் பற்றியும், பட்டறிந்திருக்கும் நிகழ்ச்சிகள் பற்றியும் **வினவி, விடை யிறுக்கச்** செய்தும், உரையாடலின் வாயிலாய் **வாய்மொழிப் பயிற்சி** கொடுத்தும் அவை பற்றிப் படிக்கும் ஆவலைத் தூண்டலாம். (3) படிப்பை உணர்வதற்கும் அதில் ஒரு சுவை உண்டாவதற்கும், மாணவர்களுக்

குப் **பேச்சுப் பழக்கமும்**, சில சொற்கள், பொருள்களின் அறிவும் வேண்டும். இந்நிலை எய்துவதற்குக் குறைந்தது ஐந்தாண்டாவது வேண்டும். முதல் ஆண்டுப் படிப்புத் திட்டத்தில் முந்நூறு புதிய வார்த்தைகளாவது படித்தல் வேண்டும் என்று கண்டிருக்கிறது. (4) சில **கட்டளைவேண்டு கோள் அட்டைகளைப்** படித்து அவற்றின்படி நடக்கவும், அதன் படி ஒரு குழந்தை நடக்காவிட்டால் அதைத் தனியே அழைத்துப் படித்துக் காட்டவும் செய்யலாம். (5) பிள்ளைகளுக்குப் பற்றுள்ள செய்திகளை அவ்வப்போது பள்ளிக்கூட **விளம்பரப் பலகையில்** எழுதிப் படிக்கத் தூண்டலாம். (6) **அறமொழி அட்டைகளை** அல்லது நல்ல **பழமொழி அட்டைகளை** ஆங்காங்குத் தொங்கவிட்டுப் படிக்கச் செய்தல். (7) செய்தித்தாள், படக் காட்சி, துண்டு **விளம்பரங்களையும் விலைப்பட்டிகளையும்** படிக்கத் தூண்டுதல். (8) புகைவண்டி நிலையங்கள், தெருக்கள், ஊர்கள், பூம்பொழில்கள், கடைகள், சிற்றுண்டிச் சாலைகள் முதலியவற்றின் **பெயர்களையும்** படிக்கத் தூண்டுதல், (9) **சிறு கதை**, செவிலி, பாப்பா, ஆட்டப் **பாடல்களை** இசையுடன் **ஒப்புவித்துக்** காட்டிப் படிக்கத் தூண்டுதல். (10) **கதை சொல்லி**, அதில் ஓர் ஆர்வத்தை ஊட்டி, அதுபோன்ற கதைகளை அவர்களே படிக்கலாம் என்று படிக்கத் தூண்டுதலும், அச்சிறு கதைகளைச் சொற்றொடர் முறையில் தொடங்குதலும் ஒரு சிறந்த வழியாகும். இதற்குரிய வாசிப்புத் தாள்களை ஆசிரியரே ஆயத்தம் செய்துகொள்ளவேண்டும்.

**இடை நிலை**: தொடக்க நிலையில் நான்கு, ஐந்தாவது வகுப்புகளிலும், இடைநிலைப் பள்ளி அமைப்புகளிலும், (11) **அறிவு வளர்ச்சிக்குப்** படிக்கவேண்டும் என்ற ஒரு பற்றை உண்டாக்கிவிட்டால் அதுவே படிப்புக்கு ஒரு தூண்டு கோலாகும் என்பதில் ஐயமில்லை. (12) **சுவைத்து இன்புறுவதற்கும்** படிக்கவேண்டும் என்று ஆர்வத்தை ஊட்டுதல், (13) **தன்னூக்க முயற்சி வேலைகளின்** வழியாகவும் படிப்பில் பற்றை உண்டாக்கலாம். அவ்வேலைக்கு வேண்டிய அறிவைத் திரட்டிக்கொள்வதற்கு வேண்டிய நூல்களைப் படிக்கத் தூண்டப்படுவர். (14) சில **பிரியமுள்ள வேலைகளில்** மாணவர்களைப் பொழுது போக்குக்காக ஈடுபடுத்தினால் அவற்றைப் பற்றிக்கூறும் நூல்களைப் படிக்கவும் அவர்கள் தூண்டப் படுவார்கள். (15) மாணவர்களின் அன்றாட வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறும் நூல்களைப் படித்து அவற்றை இன்னும் நன்றாய் அறிந்து கொள்ளுவதிலும் மாணவர்கள் கவர்ச்சி உடையராயிருப்பர். (16) **விளையாட்டு முறையில்** அவர்களுக்குப்

பற்றுள்ள பல பொருள்களைப் பற்றி மாணவர்களையே சொற்பொழிவாற்றவும், சொற்போர் செய்யவும் சொன்னால் அதற்கு வேண்டிய நூல்களைப் படிக்க அவர்கள் தூண்டப்படுவார்கள்.

**உயர் நிலை:** மேற்கூறிய இடைநிலைக்குரிய குறிப்புகளோடு மிக விரைவாக வாய்க்குள்ளேயே படிக்கும் பழக்கத்தையும், விரைவாகப் படித்துக்கொண்டு போகும்பொழுதே பொருளுணர்ந்துகொண்டு போகும் பழக்கத்தையும் உண்டு பண்ணவேண்டும். இவற்றுக்குரிய வழிகளை, அகன்ற படிப்புக்கும் வாய்க்குட் படிப்புக்கும் இனிக்காட்டப்போகும் முறைகளிற் கண்டுகொள்க.

## படிக்கக் கற்பிக்கும் முறைகள்

### 1. எழுத்துமுறை

இம் முறையிலேயே எல்லோரும் இப்பொழுது உயர்நிலை வகுப்புகளிலும் இடைநிலை வகுப்புகளிலும் இருக்கும் தலைமுறை மாணவர்களும் படிக்கக் கற்றுக்கொண்டோம். தொடக்க நிலை வகுப்புகளிற் கூட இன்னும் சிற்றூர்களில் சில பல ஆசிரியர்கள் இதைப் பின்பற்றி வருகின்றனர். எழுத்துகளை முதலில் வரிசையாகக் கற்பித்துப்பின் எழுத்துக்கூட்டி முழுச்சொற்களையும் பின்னர்ச் சொற்றொடர்களையும் கற்பிக்கும் முறையே எழுத்து முறையாம். முதலில் ஈரெழுத்துச் சொற்களையும் பின் மூன்று, நான்கு எழுத்துச் சொற்களையும், அதன் பின் சொற்றொடர்களையும் கற்பிப்பர்.

**இதிற் காணப்படும் குறைகள்:** எழுத்துக்களினாலேயே சொற்கள் ஆகின்றன. ஆதலால் எழுத்துக்களின் வாயிலாகவே சொற்களைக் கற்றல் காரண காரிய முறைக்குப் பொருத்தமாகத் தோன்றினும் உளநூல் முறைப்படி இதில் குறைகள் உள்ளன என்பர் முறைநூல் அறிஞர். (1) ஓரெழுத்து ஒரு மொழிகளாய் உள்ளவை நீங்கலாக ஏனைய எல்லாம் தனித்தனி நிலையில் பொருள் தருவனவல்ல. பொருளற்ற உச்சரிப்புகளைக் குருட்டுப் பாடமாக முதலிற் கற்பித்தல் மாணவருக்குப் படிப்பில் விருப்பத்தை உண்டுபண்ணுவதற்கு மாறாக வெறுப்பையும் சலிப்பையும் உண்டாக்கலாம். (2) குழந்தைகளின் உற்று நோக்கி உணரும் தன்மையைக் கவனித்து அவர்கள் பொதுவாக வார்த்தைகளையாவது பொருள்களையாவது முன் உருவத்திலேயே தொகுத்துப் பார்க்கிறார்கள் என்றும் பின்னர்த் தான் தனித்தனிப் பகுதிக்குப்போய் வகுத்துப் பார்க்கிறார்கள் என்றும் உளநூல் அறிஞர் கண்டு கூறுகிறார்கள். மேலும் குழந்தைகள் வீட்டிலும்

முதலில் சொற்களையும் சொற்றொடர்களையுமே பேசுகின்றனர்; அதை ஒட்டிச் செல்லாமல் தனித்தனி எழுத்துகளைக் களைக் கற்பித்தல் அவர்கள் இயற்கைக்கு மாருக இருக்கிறது. (3) இது தெரிந்ததிலிருந்து தெரியாததற்குப் போதல் என்னும் கொள்கைக்கு மாருக இருக்கிறது. (4) பொருளற்ற எழுத்துகளைக் கற்பிப்பதில் மிகுதியாக வீண் காலச் செலவாகிறது. (5) பள்ளியில் பிறர் படிப்பதைப் பார்த்துத் தானும் படிக்கவேண்டும் என்ற ஆவல் மிக்குள்ள மாணவனுக்கு இப் பயனற்ற உச்சரிப்பு மிக்க ஏமாற்றத்தைக் கொடுப்பதுடன் படிப்பில் உள்ள ஆவலைக் குறைக்கலாம். (6) எழுத்து, உச்சரிப்பு, வார்த்தை ஆகிய இம் மூன்றையும் ஒரே சமயத்தில் கற்றல் குழந்தைக்கு அருமையாக இருக்கலாம். (7) இம் முறை மெள்ளவும் செல்லும். (8) எழுத்துக் கூட்டிப் படிப்பதிலேயே முழுக் கவனமும் செலுத்தப் படுதலால் பொருள் உணராமற் படிக்கும் பழக்கம் வளர்ந்து படிப்பின் நோக்கம் கைகூடாமற் போனாலும் போகலாம். (9) தமிழ் நெடுங்கணக்கில் உள்ள எல்லா எழுத்துக்களையும் இப்படிப் படிப்பது வீணே.

**இதில் காணப்படும் சில நிறைகள்:** (1) தமிழ் மொழியில் ஆங்கிலம் போலன்றி உச்சரிக்கும்படியே எழுதுகிறோம். ஓர் ஒலி ஒரே எழுத்தால் குறிக்கப்படும் ஓர் எழுத்து ஓர் ஒலிக்கே அறிகுறியாய் இருந்தும் எழுதப்படும் எழுத்துக்களெல்லாம் உச்சரிக்கப்பட்டு வருகின்றன. ஆதலால் இம் முறை தமிழ் எழுத்துகளைக் கற்பதற்கு மிகவும் எளிதாம். (2) எழுத்களின் பிறப்பு முறைப்படி, உயிர், மெய், உயிர்மெய் என்ற வரிசையில் படிப்பதால் பின்னர் ஒலியியல் அறிவதும் எழுத்து வரிசை முறை அறிவதும் எளிதாம். (3) பிள்ளைகள் எழுத்துகளின் சரியான உச்சரிப்பைத் தெரிந்துகொள்வதால் எழுத்துப் பிழை யில்லாமல் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொள்வார்கள்.

## 2. பார்த்துச்சொல்லும் முறையும், சொல்முறையும்

முன்னர் எழுத்துகளைக் கூட்டாமல் சொற்களையோ தொடர்களையோ பார்த்ததுமே, முழுவதாக அப்படியே உச்சரித்துப் படிப்பதே **பார்த்துச் சொல்லும் முறை** எனப்படும். பின்னர் வேண்டுமெனின் தனியாகச் சொல்லையும் அதன் பின்னர் எழுத்துக் கூட்டி எழுத்துக்களையும் கற்பிக்க வேண்டும்.

பார்த்துச் சொல்லலில் சொல்லை அளவாகக் கொண்டு கற்பித்தல் **சொல் முறையாம்.**

**நிறைகள் :** (1) நாம் பேசும்போது எழுத்தெழுத்தாகப் பேசுவதில்லை. சொற்களாகவே பேசுகின்றோம். மேலும் முதல் மனிதன் பொருள்களை முழுச் சொற்களாலேயே வெளியிட்டான். ஆகவே முழுச் சொற்களைக் கற்பித்தல். இயற்கையானதும், உளநூல் முறைக்கு ஏற்றதுமாகும். (2) மாணவர்கள் பள்ளியில் வந்து சேரும்போது ஐந்து வயதிற்குள் பல சொற்கள், பொருள்களின் அறிவு பெற்றவராய்ப் பேச வல்லராய், சில சொற்றொடர்கள் அமைக்கும் ஆற்றல் வாய்ந்தவராய் வருகின்றனர். அவர்கள் கற்ற சொற்களையும் பொருள்களையும் நேரில் வரைந்து, அல்லது படத்தைக் காட்டி அச்சொல்லைக் கூறிக் கற்பித்துப் பின் எழுத்துக்களைக் கற்பித்தல் எளிது. (3) முழுச் சொற்களின் வடிவத்தையும், உச்சரிப்பையும் உணர்வதோடு பொருளையும் உணர்கிறார்கள். (4) குருட்டுப் பாடமில்லாமல் பொருளுணர்ந்து படிப்பதால், படிப்பில் ஆவலும், பற்றும் ஏற்படலாம். (5) தெரிந்ததிலிருந்து தெரியாததற்கும், முதலிலிருந்து சினைக்கும் போகிறது இம்முறை. இதுவே இயல்பாகும்.

**குறைகள் :** (1) இம் முறையில் எழுத்துக் கூட்டிப் படிக்கும் பழக்கம் இல்லாததால் புதிய சொற்றொடர்களைப் படிக்கும்போதும், படித்தவற்றையே பார்க்காமல் எழுதும்போதும் எழுத்துப் பிழைகள் உண்டாகும் எனக் கூறுகின்றனர். ஆனால் தெரிந்த சொற்களில் முன்னர்ப் பெற்ற பயிற்சி போலவே, அத்துணைகொண்டு, புதிய சொற்களிலும் பயின்று, அவற்றைப் பன்முறை உச்சரிப்பதாலும், பின்னர் எழுத்துக் கூட்டுவதாலும், எழுதுவதாலும், முழுச் சொற்களாகவே உற்றுநோக்குவதாலும் பிழைகள் ஏற்படா. மேலும் பார்த்துச் சொல்லும் முறையை முற்றும் முடியக்கொண்டு செலுத்தாத பள்ளிகளில் அக்குறை ஏற்படலாம். சொற்களை முழுவதாக உச்சரித்துப் படித்துப் பொருளுணர்ந்த பின் அவற்றின் உட்பகுதிகளையும் தனித்தனி உச்சரித்து, எழுத்துக் கூட்டிக் கற்பித்திருந்தால் இக்குறை ஏற்படாது. ஆங்கிலத்தில் வேண்டுமெனில் இக்குறை கூறுவதில் கொஞ்சம் உண்மையிருக்கிறதென்று ஒப்புக்கொள்ளலாம். தமிழில் இதற்கு இடமே இல்லை என்று கூறலாம். (2) குருட்டுப் பாடமாகச் சொற்களின் வரிசையைப் படங்களிலிருந்து கற்றுக்கொண்டு,

அவற்றைப் பொருளுணராமலும் பாராமலும் விரைவாகப் படித்துக்கொண்டு சென்றுவிடுவர் என்கின்றனர். ஆனால் உச்சரிக்கும்போது சொற்களின் மீது விரலை வைத்துக் கொண்டு வரச்செய்தும், தனிச்சொற்களை உச்சரிக்கும்படி கேட்டறிந்தும், ஒரோ வழி பாடத்தில் காணப்படும் சொற்களை முறைமாற்றிக் கரும்பலகையில் தலைகீழாக அல்லது இட வலமாக எழுதிப் படிக்கச்செய்தும் இககுறை உளதாயின் நீக்கலாம். (3) ஏறக்குறைய ஓர் ஓசைச்சொற்கள் அடுத்து வரும்போது மாற்றிப் படிப்பர் என்றால், மாறோசைச் சொற்களை அமைத்து இதைத் தடுக்கலாம். (4) படிப்பு வளரும்; எனினும் எழுத்து உடனுக்குடன் கற்றுக்கொள்ள முடியாது என்பர். ஆனால் படிக்கக் கற்றுக்கொண்ட பின்னரே எழுத்து கற்பிக்கப்பட வேண்டும். இன்னும் அகர வரிசையில் எல்லாத் தமிழ் எழுத்துக்களையும் கற்றுக்கொள்ள வேண்டும் என்றும் இல்லை. இரண்டாம் வகுப்பின் இறுதியில் தமிழ் நெடுங் கணக்கு எழுத்துகளை வரிசையாய் எழுதும் ஆற்றல் வந்தெய்தினாற் போதும்.

எங்ஙனமாயினும், சொற்களை எழுத்துக்கூட்டும் அறிவு மாணவர்க்கு வேண்டாம் என்று சொல்லமுடியாது. அஃது இருந்தால் மாணவர் தாமே ஆசிரியர் உதவியின்றிப் படித்துச் செல்வதற்கும் எளிதான வழியுமாகும். ஆதலால் பார்த்துச்சொல்லும் முறையும் எழுத்துக்கூட்டும் முறையும் கலந்ததொரு முறையே சாலச் சிறந்ததாகும். தமிழ்மொழியில் ஆங்கிலம்போலன்றி, எழுத்துக் கூட்டுவது அருமையான காரியமன்று. தனித்து ஒலிக்கும் ஒலிக்கும் முழுச்சொல்லாகச் சேர்த்து ஒலிக்கும் ஒலிக்கும் தமிழ்மொழியில் வேறுபாடே இல்லை. மேலும் ஆங்கிலம் போலன்றித் தமிழில் உச்சரிக்கும்படியே எழுதியும், எழுதும்படியே உச்சரித்தும் வருகிறோம். ஓர் ஒலி ஓரெழுத்தாற் (பல எழுத்துக்களாலன்றி) குறிக்கப்பட்டும், 'ஓர் எழுத்து ஓர் ஒலிக்கே (பல ஒலிகளுக்கு அன்று) அறிகுறியாயிருக்கிறது. எழுதப்படும் எல்லா எழுத்துகளுக்கும் உச்சரிப்புண்டு.

ஆதலால் மேற்குறித்த இருமுறைகளையும் தக்க அளவிலும் முறையிலும் கலந்து கையாண்டால், விரைந்து பொருளுணர்ந்து படிக்கும் பழக்கமும் எழுதும் பழக்கமும் மாணவர் ஒருங்கே எய்துவர். இவ்விருமுறைகளையும் கீழ்க்கண்டவாறு கலக்கலாம்:—பாடநூல் அல்லது படிப்புத் தாளின் தலைப்பில் ஒரு படமும் அதனடியில் அதன் பெயரும், அதை ஒட்டிய

சொற்களும், சொற்றொடர்களும் அமைந்திருக்கும். மாணவர் அப்படத்தை உற்று நோக்கிப் பொருளுணர்ந்து கொள்ளச் செய்து, ஆசிரியர் அச்சொல்லை அல்லது தொடரை முழுவதாகப் படித்துக்காட்ட மாணவரும் அங்ஙனமே உச்சரிப்பர். பிள்ளைகள் அவற்றைத் தெளிவாகச் சொல்லக் கற்றபின், ஆசிரியர் எழுத்துக்களாக அச்சொற்களைப் பிரித்துப் பின் கூட்டிச் சொல்ல மாணவர்களும் அதைப் பின்பற்றுவர். இவ்வாறே வேறு சொற்களையும் கூறப் பழக்கினால் சொற்களை முழு உருவில் முதலில் சொல்லவும் எளிதில் மாணவர் பழகி விடுவர். இம்முறையிற் சொற்களின் பொருளறிவும், உச்சரிப்பறிவும், எழுத்துக் கூட்டறிவும் ஒருங்கே மாணவர் உள்ளத்து உறுதியாய் அமைய இடமுண்டு.

## 3. சொற்றொடர் முறை

இது புதிதாகக் கையாளப்படும் ஒரு முறையாகும். முதலில் சிறு சிறு எளிய சொற்றொடர்களைக் கற்பித்த பின், வேண்டுமெனின் தனித்தனியாக அவற்றின் உட்பகுதிகளாகிய சொற்களையும், சொற்களின் உட்பகுதிகளாகிய எழுத்துக்களையும் கற்பிப்பதே இதன் நோக்கமாகும். இதுவும் பார்த்துச் சொல்லுதல் என்னும் கொள்கையையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. சொல்லை அளவாகக் கொண்டு சொல் முறையில் பார்த்துச் சொல்வதுபோல் இங்குச் சொற்றொடரை அளவாகக்கொண்டு பார்த்துச் சொல்லுகிறோம். நாம் பெரும்பாலும் சில பல சொற்களடங்கிய தொடர்களாகவே பேசுகின்றோம். தொடர்கள் முழுக் கருத்தைத் தெரிவிப்பதில் சொற்றொடர் முறை குழந்தைகளுக்கு இயற்கையானதும் உளநூலுக்கு ஏற்றதும் ஆகும். நாம் எண்ணுவதும் பேசுவதும் தொடர்களிலேயே. ஆதலால் மாணவர்க்கு இதில் பற்றுண்டாகும். மேலும் ஒரு சிறு கதையாகப் படத்தை அமைத்து, அதைச் சொற்றொடர் முறையிலும் கற்பித்தால், அஃது உளநூலுக்கும் மாணவர்க்கும் ஏற்றதாய் மாணவர்கள் விருப்பத்தையும் பெற்றதாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

### இம்முறையிற் காணப்படுவனவாகக் காட்டப்படும் குறைகள்

1. இம்முறையில் பாடநூல் எழுதிக் கற்பித்தலில் ஓர் ஒழுங்கில்லையென்றும் அஃதாவது சொற்களஞ்சியத்தைப்

படிப்படியாய் எளிதிலிருந்து அருமைக்குப் பெருக்கிக்கொண்டு போக வழியில்லையென்றும், ஒரு முறைப்படி அச்சிட்ட பாடப் புத்தகத்தைப் படிப்பதற்கு இஃது ஈடாகாது என்றும் கூறு வர். இது தவறு. ஆண்டின் இறுதியில் இம்முறையில் முதல் வகுப்பு மாணவர் படிக்கவேண்டிய சொற்களை இம்முறையி லேயே நன்றாய்க் கற்பிக்கலாம் என்பதில் ஐயமில்லை.

2. மாணவர்கட்கு இம் முறையிற் கற்பித்தால் அவர்கள் பாடநூலிற் கண்ட தொடர்களை அப்படியே நெட்டுருச்செய்து குருட்டுப் பாடமாக ஒப்புவிப்பர் என்றும், தனித்தனிச் சொற்களையும் எழுத்துக்களையும் அறிய முடியாது என்றும் கூறுவர். ஆனால் குருட்டுப் பாடமாகக் கிளிப்பிள்ளை போல் மாணவர்கள் ஒப்புவித்தலைத் தடுக்கலாகும். ஒரு பாட நூலுக்கு மாறாக, பல சிறிய படிப்புத் தாள்களைத் தனித் தனி யாகக் கற்பிக்கலாம். மேலும் மாணவர்கள் எல்லோரும் குருட்டுப் பாடம் செய்கின்றனர் என்றும் தனிச் சொற்களை அறியமாட்டார்கள் என்றும் கூறுவதற்கில்லை. சில பள்ளி களில் இங்ஙனம் நிகழ்ந்தால், அஃது இம்முறையினால் விளைந்த குறையன்று; அம்முறையை முற்றும் முடியக் கொண்டு செலுத்திச் சரிவர நடத்தாத ஆசிரியர்களின் குறையே யாகும். ஆசிரியர்கள் சொற்றொடரிலிருந்து தனிச் சொற்க ளின் உச்சரிப்புக்கும், பின் தனிச் சொற்களின் எழுத்துக் கூட்டலுக்கும், எழுத்துக்களின் உச்சரிப்புகளுக்கும் போவார்களாயின், இக்குறை நேரும் என்று ஐயுறவேண்டிய தில்லை.

3. சொற்றொடர் முறையில் படிக்கக் கற்றுக்கொண்ட மாணவர்கள், எழுத்துக் கூட்டறிவில் திறமை யற்றவர்களாக இருக்கின்றனர் என்று கூறப்படுகிறது. இக்குறையும் சில பள்ளிகளில் இருக்குமாயின் அதுவும் முறையின் குறையன்று. அம்முறையை முற்றும் முடியக்கொண்டு செலுத்திச் சரிவர நடத்திக் காட்டாத ஆசிரியரின் குறையேயாகும். அஃதாவது தனிச் சொல்லின் உச்சரிப்புக்கும் பின் அதன் எழுத்துக் கூட்டலுக்கும் போகவேண்டும். ஒலியியலுக்கு ஒத்த எழுத்துக்களில்லாத ஆங்கில மொழியில் வேண்டுமெனில் இக் குறை எழ இடமுண்டு; தமிழ் மொழியிற் சொஞ்சமும் இடமே இல்லை என்று உறுதியாகக் கூறலாம்.

4. பல சொற்களைத் தொடர்ந்து ஒரே காலத்தில் உச்சரித் துப் பொருளுணர்ந்து படித்துக் கற்றுக் கொள்வது இளஞ்

சிலர்க்கு எளிதன்று என்பர். ஆனால் முழுச் சொற்றொடர்களாகப் பேசுவதே இயற்கை முறையாகும்; உள நூலுக்கும் ஒத்தது. மேலும் குழந்தைகளின் அறிவுக்கும் ஆற்றலுக்கும், பட்டறிவுக்கும் உட்பட்ட பொருள்கள் பற்றியே பாட நூல்கள் அமைவதால் அவற்றைப் படித்துப் பொருளுணர்தல் மாணவர்க்கு மிக அருமையாயிருக்காது.

**படிப்புத் தாள்கள்; ஆசிரியர்களே அவற்றை ஆக்கல்:** மாணவர்களுக்கு ஏற்ற பாட நூல்கள் அவர்கள் மனநிலை, பட்டறிவு, அறிவு, ஆற்றல்களுக்கு எட்டக்கூடிய பொருள்களையே கொண்டிருக்கவேண்டுமாதலால், அவற்றை அவ்வவ் வகுப்பு ஆசிரியர்களே மாணவர்களின் ஒத்துழைப்பையும் உதவியையும் கொண்டு ஆக்கலாம். மாணவர்கள் விரும்பும் பொருள்கள், ஆசிரியர்கள் அவர்களுக்கு ஏற்றதாகக் கருதும் பொருள்கள், கதை, பாப்பா ஆட்ட, செவிலிப் பாடல்கள் முதலியவற்றை ஆசிரியர்களே ஏற்ற விளக்கப் படங்களோடு எழுதி வாசிப்புத் தாள்களை வெறுபட்ட பலவகைகளாக, ஆண்டு முழுவதுக்கும் வேண்டிய அளவில் தொகுத்து வைக்கலாம். பள்ளிக்கூடத்தில் உள்ள அல்லது வகுப்பில் உள்ள அல்லது ஒரு மாணவனுக்குரிய ஒரு பொருளைப்பற்றி ஒரு சிறு நூல் (அஃதாவது படிப்புத்தாள்) எழுதவேண்டும் என்ற ஓர் ஆவலை மாணவர்கள் மனத்தில் உண்டுபண்ண முடியுமானால், உண்டு பண்ணி, அதைப்பற்றி என்ன எழுதலாம் என்று கேள்விகளின் வாயிலாய் அவர்கள் வாயிலிருந்தே வரவழைக்கலாம்; பின் அவற்றைப் பழுப்புத் தாள்களில் அல்லது க்ரீம் மஞ்சள் தாளில் நீல எழுத்தில், கொட்டை எழுத்தில் எழுதி அதன் படம் போடுவதற்கு அல்லது விளக்க இதழ்களிலிருந்து கத்தரித்து ஒட்டுவதற்கு மேலே இடம்விட்டு வைக்கலாம். இதேபோலச் சிறு கதைகளும், கதைப் பாடல்களும் பிறவும் விளக்கங்களோடு பெரிய தாள்களில் ஆசிரியர்கள் எழுதிப் பின் சற்றுச் சிறிய அளவில் ஒவ்வொரு மாணவருக்கும் வேண்டிய படிகளாவும் உண்டாக்கிக் கொள்ளலாம். அல்லது வகுப்பில் ஒவ்வொரு சிறு பிரிவுக்கும் ஒரு படியாக எழுதலாம். இதுபோல் நான்கு அல்லது ஐந்து தாள்களை ஓர் ஆண்டுப் படிப்புக்கு வேண்டிய அளவில் ஆயத்தம் செய்து வைத்துக்கொள்ளலாம். அச்சாகி வெளிவரும் பாடநூல்களை விட வகுப்பில் உள்ள மாணவர்களின் சுவைக்கு ஏற்றவாறு ஆசிரியராலும், பிற மேல்வகுப்பு மாணவர்களின் உதவி கொண்டும் எழுதப்பெறும் இத்தாள்கள் எவ்வாற்றானுஞ்

சிறந்தன என்பது உற்று நோக்குவார்க்குப் புலனுகாது போகாது.

இன்னும் இவற்ருேடு பலவகையான படிப்புத்தாள்களை யும் அட்டைகளையும் ஆசிரியர்கள் உண்டாக்கிப் படிப்பில் ஓர் ஆர்வத்தை ஊட்டலாம். அவற்றைப் படிப்பில் ஆர்வம் ஊட்டக்கூடிய வழிகளைக் கூறும்போது வரும் குறிப்புகளை யும், விளையாட்டு முறையில் காட்டியவற்றையும், வாய்க்குட் படிப்பில் வருவனவற்றையும், சொற்களஞ்சியத்தைப் பெருக் கும் முறைக் குறிப்புகளையும் பற்றிக் கூறும் இடங்களிற் கண்டுகொள்க. அவற்றிற் சிலவற்றையும் ஈண்டுச் சிறப்பாகக் குறிப்போம். (1) **மின்னட்டைகள்.** (2) **தனிப் பயிற்சி அட்டைகள்** தனிப் பயிற்சி அட்டைகளைக் கொடுத்துப் படிக்கச் செய்யும் போது வகுப்பை ஆறு பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு வகையட்டையைக் கொடுக்கலாம். ஆறுவகைத் தனிப் பயிற்சி அட்டைகளாவன. (அ) முறை மாறி எழுதப்பட்ட சொற்களைச் சரியான முறையில் அமைத் துச் சொற்ருெடர்களாக்குதல், (ஆ) விடுகதைகள் எழுதி அவற் றைப் படித்து விடுவிக்கச்செய்தல்; (இ) விடைகளுக்கு ஏற்ற வினைக்களையும், வினைக்களுக்கு ஏற்ற விடைகளையும் பொருத்திக் கண்டுபிடித்தல்: (ஈ) ஒவ்வொரு வரிசையிலும் அவ்வரிசைக்குப் பொருத்தமில்லாத சொல்லைப் படித்து நீக்கிச் சரியாக விலங்குகள், பறவைகள், மரங்கள் முதலிய வகைகளாக்கல்; (உ) நேரெதிர்ச் சொற்களையும், ஆண்பாலுக்குப் பெண்பாற் சொற்களையும் ஒருமைக்குப் பன்மைச் சொற்களையும் ஒரு பொருள் குறித்த பல சொற்களையும், பல பொருள்களைக் குறித்த ஒரு சொற்களையும் அமைத்தல்; (ஊ) சரி, தவறு என்ற இருவகைக் கூற்றுகளையும் அமைத்துச் சரியானமற் றைக் கண்டுபிடிக்கச் செய்தல். (3) மாணவர்கள் அறிந்த பொருள்கள், நிகழ்ச்சிகள் பற்றிய **சொல்-சொற்ருெடர் அட்டை கள்.** அஃதாவது சிறு சிறு தொடர்கள். சொற்களை அவற்றிற்குரிய படங்களுடன் எழுதியும் தனித்தனியாய்ப் படங்களையும் அவைகுறிக்கும் சொற்களையும் தொடர்களையும் எழுதிப் பின்பொருத்திக் காட்டும்படியாகவும் உள்ள அட்டை கள்; (4) **கட்டளை அட்டைகள் விளம்பரப் பலகையில்** மாண வர்க்கு விருப்பூட்டக்கூடிய செய்திகளை எழுதிப் படிக்கச் செய்தல், (5) **விடு கதைகள்** எழுதுதல், (6) **சிறு பாடல்கள்** எழுதுதல், (7) விளையாட்டுப் பொருள்களையும் சொற்களையும் பொருத்தும் அட்டைகள் (8) முறை மாற்றி எழுதிய சொற் களை முறைப்படி எழுதிச் சொற்ருெடரை முடித்தல்,

(9) கதைகளையும் அங்ஙனமே முறை மாற்றிய தொடர்களை முறைப்படுத்தி அமைத்தல், (10) ஒழிவுவிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்து முடித்தல் முதலியன.

## மாணவர்களின் சொற்களஞ்சியத்தைப் பெருக்கல்

## அதைப்பற்றிய சில விதிகளும் முறைகளும்

மாணவர்களின் சொற்களஞ்சியத்திலுள்ள சொற்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். (1) மாணவர் வாக்கிலும் பேச்சிலும் **நாள்தோறும் வழங்கும் சொற்கள்.** இவற்றின் பொருளை மாணவர்கள் நன்குணர்வதோடு தங்கள் பேச்சிலும் எழுத்திலும் வழங்குவர். வழக்கில் இருக்கும் சொற்களிலும் சில மிகவும் **அடிக்கடி பயில்வன**வாயிருக்கும் (2) **நாள்தோறும் வழங்காச் சொற்கள்** இவற்றை மாணவர்கள் பொதுவாக உணர்வதேயன்றி, மிகுதியாகப் பேச்சிலும் எழுத்திலும் வழங்கார். இவை பெரும்பாலும் இலக்கியம் அஃதாவது செய்யுட் பாடத்திலும், உரைநடைப் பாடத்தில் ஒரோவழியும், வரலாறு போன்ற சில பாடங்களிற் சிலவிடங்களிலும் பயிலும். முதல் ஐந்து வகுப்புகளில் நாள்தோறும் வழங்கும் சொற்களின் பட்டிகளையும், அவற்றுள்ளும் அடிக்கடி பயிலும் சொற்களின் பட்டிகளையும், நாள்தோறும் வழங்காச் சொற்களின் பட்டிகளையும் நன்முறையில் ஆராய்ந்து தொகுக்க வேண்டும். நன்முறையில் இது போன்ற ஆராய்ச்சிகள் செய்து ஆயத்தம் செய்த பட்டிகள் தமிழில் இல்லை.

**சொற்பெருக்கத்திலும் வளர்ச்சியிலும்** கீழ்க்கண்ட சில வழிகளையும் முறைகளையும் மேற்கொள்ளலாகும்.

(1) அடிக்கடி பயிலும் சொற்களையே முதலில் கற்பிக்க வேண்டும். மிகவும் பயன்தரக்கூடிய இன்றியமையாச் சொற்களையே முதலில் கற்பிக்கவேண்டும். வீட்டிலும், பள்ளியிலும், வகுப்பறையிலும் இவற்றைச் சூழுமிடங்களிலும், காணக்கூடிய பொருள்கள், நிகழ்ச்சிகள் முதலியவைபற்றிய சொற்களே முதலில் வருவதற்குரியன. (2) தொடக்க நிலையில் தொட்டு, கண்டு, கேட்டு, மோந்து, சுவைத்தறியக்கூடிய காட்சிப் பொருள்களைக் குறிக்கும் சொற்களே (கருத்துப் பொருள்களைப் பற்றியவையல்ல, முன்னர் இடம்பெற வேண்டும். (3) சொற்களைச் சிலச்சிலவாகப் பொருளுணரும் வகை

யில் கற்பிக்கவேண்டுமேயன்றிப் பலப்பலவாக ஒரே பொழு திற் கற்பித்தலாகாது. (4) சொற்களின் பொருளைக் கற்பிக் கும்போது அவை பயிலும் பல இடங்களில் வைத்துப் பல முறையும் அவற்றை வழங்கிக் கற்பித்துப் பின்பற்றிச் சொல்லச் செய்து பின்னுமொரு முறை மாணவர் தம் வாக்கி லேயே பிறிதோர் இடத்தில் வைத்து வழங்குமாறு ஏவிப் பயிற்சி கொடுத்துக் கற்பிக்கவேண்டுமே யல்லாமல், அவற் றின் பொருளைப் பிறிதொரு சொல்லாற் கூறிப்போவதிற் பயனில்லை. ஒரு நல்ல பாட நூலாயிருப்பின் புதுச்சொற் களைப் பல இடங்களிலும் வைத்து வழங்கியிருக்கும் சொற் றொடர்களைக் கொண்டிருக்கும். ஒவ்வொரு மாணவனும் ஒவ்வொரு புதுச் சொல்லையும் இங்ஙனம் வைத்து வழங்க அறிந்தாலன்றி மேலும் புதுச் சொற்களுக்குப் போவது முறையன்று. (5) சொற்களைத் தனித்தனி நிலையிற் கற்பிக் காது இனப்படுத்தியே கற்பிக்க வேண்டும். அஃதாவது தொடர் மொழியில் வைத்தே கற்பிக்கவேண்டும். (6) தொடர் மொழிகளில் வைத்துச் சொற்களைக் கற்பிப்பதோடு இணை மொழிகளாகவும், சொற்றொடர்கள் மரபுத்தொடர்கள், பழ மொழிகள், அறமொழிகள், உவமைகள் முதலிய வடிவத்திலும் கற்பிக்கலாம். (7) மிகவும் அடிப்படையான இன்றியமை யாத தொழில்களையும், பெயர்களையும் குறிக்கும் பெயர்வினைச் சொற்களை முதன் முதலில் தொடங்கவேண்டும். (8) படம் பார்த்துப் பொருளுணர்ந்து பேசுதல், பேச்சு, உரையாடல் களினாலும் சொல்லறிவு பெருகும். (9) வினாவிடை மிகவும் சிறந்ததும், கவர்ச்சி யுள்ளதுமான ஒரு முறையாகும். இதனால் சொல்வளம் மிகும். மாணவர்களும் இம்முறையை விரும்புகின்றனர். அவர்களுக்குள்ளேயே வினாவிக் கொள் ளவும், ஆசிரியரை வினாவவும் மாணவர்களுக்கு உரிமைகள் கொடுக்கலாம். (10) நல்ல சில அரிய சொல்லாட்சிகள், மரபுத் தொடர்கள், இலக்கண அமைதிகளைக் கொண்டுள்ள சொற் றொடர்களை நெட்டுருச் செய்துகொள்வதால் அவற்றில் வரும் புதுச்சொற்கள் உள்ளத்தமையும். "முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோற் போற் றுவது" தமிழ் மரபன்றோ? (11) ஒற்றுமை வேற்றுமைப் பொருள்களை இனப்படுத்துதல் என்னும் இனப்படுத்தும் விதியின் உதவியாலும் சொற்களை இனப்படுத்திக் கற்கலாம். அஃதாவது சொற்களை அவற்றின் நேரெதிர்ச் சொற்களோ டும், ஒரு பொருள் குறித்த பல சொற்களையும் இனப்படுத்திக் கற்பிக்கலாம். (12) பல பொருள் குறித்த ஒரு சொற்களையும் ஒன்றாகக் கற்பிக்கலாம். (13) ஒரு பொருளை, தொழிலை

கலையை, சமய உண்மைகளை, நிலையத்தை, வேலையை நிகழ்ச்சியை இவைபோன்ற பிறவற்றை விளக்கும்போது வரும் சொற்களைத் தொகுதி தொகுதியாக வகைப் படுத்திக் கற்பிக்கலாம். (14) வேரினின்றும் அல்லது பகுதியினின்றும் பிறக்கக்கூடிய பல சொற்களையும் ஒன்று சேர்க்கலாம். (15) தொகைச் சொற்களை உண்டாக்கியும் புதுச் சொற்களைக் கற்பிக்கலாம். (16) ர, ற; ல, ழ, ள; ந, ண முதலிய ஒத்த ஓசைகளால் பொருள் வேறுபடும் சொற்களை இணை இணையாகக் கற்பிக்கலாம். (17) குறில் நெடில்களில் தொடங்கும் சொற்களை இனப்படுத்தலாம். (18) முதல் நீண்டு தொழிற் பெயராகும் சொற்களையும், ஒரே முடிபுடைய சொற்களையும் சேர்த்துக் கற்பிக்கலாம். (19) அடைமொழிகளை முதல் கடைகளிற் சேர்த்து வேறு புதிய சொற்களை உண்டாக்கலாம். (20) மூன்று சொற்கள் தனித்தனி சேர்ந்து ஒரு முழுப் பொருளைக் குறிக்கும் சொல்லைப் பிறப்பிக்குமாறும் புதுச் சொற்களைப் பிறப்பிக்கலாம். காலை—உச்சி—மாலைசேர்ந்து ஒரு பகல் ஆகிறது. அடிவாரம்—நடு—குடுமி சேர்ந்து மலையாகிறது. இயல்—இசை—நாடகம் சேர்ந்து தமிழாகிறது. போல. (21) விடுகதைகளை அவற்றின் விடைகள் வாயிலாகக் கற்பித்தல். (22) சிறு கதைகளைச் சிறு தொடர்களாகத் தனித்தனியாக எழுதிச் சேர்த்துக் கதையைப் படிக்கச் செய்தும், சொற்களை அவை குறிக்கும் படங்கள், பூந்தோட்டத்தில் உள்ள செடி கொடிகள், விளையாட்டுப் பொருள்கள் முதலியவற்றோடு இணைக்கக் கூடிய அட்டைகள் வாயிலாகவும் அருஞ்சொற்களும் புதுச் சொற்களும் பயிலப் படலாம். தமிழ்ச் சொற் களஞ்சியம் உலகிற் பல மொழிகளிலும் உள்ளதைவிட மிக மிக விரிவும் வளமும் உடையது. "தமிழெனும் அளப்பரும் சலதி" யென்றும் "தமிழ்க் கடல்" என்றுமல்லவோ தமிழ் புகழப்படுகிறது."

## வாய்விட்டுப் படித்தல்

**நல்ல வாய்விட்டுப்படித்தலின் இயல்புகள்:** ஓலைச் சுவடிகளையும் கையெழுத்து, அச்சு நூல்களையும் கண்ணால் பார்த்து, வாயால் உச்சரித்துச் சொல்லிப் பொருள் உணர்வதே வாய் விட்டுப் படித்தலாம். இதில் சொற்களைக் கண்ணாற் காணல், உதடு, நா, அண்ணம், பல் முதலிய ஒலி உறுப்புகளால்

செம்மையாய் உச்சரித்தல், உள்ளத்தாற் பொருளுணரல் ஆகிய முக்கூறுகளைத் தெளிவாய்க் காணலாகும். தொடக்கத்தில் படிப்பு வாய்விட்டே இருக்க வேண்டும். பின்னர்ப் படிப்படியாக வாய்க்குட் படிக்கும் பழக்கத்தைச் சிறிது சிறிதாக உண்டுபண்ணி முடிவில் வாய்க்குட் படிப்பையே முழுவதும் நிறுவவேண்டும். மெய்யுணர்வுக் கல்வியிலும் இறைவனோடு ஒன்றுபட்டிருக்கும் மோன நிலையிலும் அந்நிலையை மாணவர்க்கு உணர்த்தும் முடிந்த நிலையிலும் படிப்படியாகப் பேச்சிலிருந்து பேச்சற்ற அறிவு (ஞான) நிலைக்குப் போவது காண்க. கல்லாலின் நிழலில் முற்றத் துறந்த சனகர்முதலிய நால்வர்க்குச் சிவபெருமான் பேச்சற்ற நிலையைப் பேசாமலே குறிப்பிற் காட்டினர் என்பதை "கல்லாலின் புடையமர்ந்து நான் மறை ஆறங்க முதற் கற்ற கேள்வி, வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய் எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமற் சொன்னவரை" என்னும் அடிகளிலும், "கண்மூடி மௌனியாகிச் சும்மா இருக்க" நினைத்ததே தன் குறிக்கோள் என இறைவன் திருமுன் முறையிடா நிற்கும் தாயுமானவர் வாக்கிலும் காணலாமன்றோ? உலக உணர்வுக் கல்வியிலும் இம்முறையே சிறந்தது.

எனினும், செய்யுளின் ஓசை நயம், இனிமை முதலியவற்றை மாணவர்களுக்குப் பாடிக் காட்டிச் செவியாரக ஊட்டுவதே முறையாகும்.

விரைவாகப் படித்தல், விரைவாகப் படித்துக்கொண்டு போகும்போதே பொருளுணர்ந்து கொண்டுபோதல், தனித் தனிச் சொல்லாகப் படித்துக்கொண்டு போகாமல் பொருள் முடிந்து செல்லும் நிலையுமிடமும் உணர்ந்து, தொகுதி தொகுதியாகச் சொற்களைச் சேர்த்து, நிறுத்தக் குறிகளறிந்து நிறுத்திப் படித்தல், தெளிவாகப் படித்தல், தெளிவான ஒலிப்பு, திருந்திய உச்சரிப்பு, சரியான குரல் ஏற்றத் தாழ்வு, இயற்கையான குரல், குரல் போட்டுப் படிக்காமை கண் பாய்ச்சல் சரியான வரிக்குச் செல்லுதல், விரைவான கண்ணகர்ச்சி, பிற்போக்கில்லாமை, முழுச்சொற்களாகவே சொற்களைக் காணல், வகுப்பிற்கேற்ற எடுத்தலும் படுத்தலுமில்லாத நடுநிலையான குரல்களும் இன்னோரன்ன பிறவும் விரைந்து பொருளுணர்ந்து படித்துக்கொண்டு போகும் நல்ல வாய்விட்டுப் படித்தலின் இயல்புகளாகக் கொள்ளலாம்.

**வாய்விட்டுப் படித்தலின் நிறைகளும் குறைகளும் : நிறைகள் :** தடுமாற்றமின்றி விரைந்து படித்தலை அளந்தறிதல், உச்சரிப்புப் பிழைகளைத் திருத்த வாய்ப்பு, புதிய அருஞ்சொற்களைக் கண்டு, பின் உச்சரிப்பதால் அவற்றின் பொருள் நன்ருய் உள்ளத்தமைக்கப் படல், ஓசை, நயம், செய்யுட்சுவை முதலியவற்றைப் படித்துணர்ந்து இன்புறல், செய்யுளை ஏற்ற இசையுடன் ஒப்புவித்தல், தெளிவான ஒலிப்பு, உச்சரிப்பு, குரல் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படல், வாய்மொழிப்பயிற்சி, பேச்சு, உரையாடல், நடித்தல், சொற்பொழி வாற்றல்களிற் பயிற்சி ஏற்படல், விளம்பரச் செய்திகளை அறிவித்தல் முதலியவைகளும் இன்னோரன்ன பிறவுமாம்.

**குறைகள் :** ஒலி உறுப்புகளுக்கும், காற்றுக் குழாய், நுரையீரல்களுக்கும் மிக வேலை. காலமும் முயற்சியும் மிகச் செலவாதல், படிப்பு மெள்ளப்போதல், ஒலிப்பிலும் உச்சரிப்பிலும் கவனம் மிகச் செய்வதால் படிப்பு மெள்ளப் போவதோடு பொருள் உணர்வதற்கும் சற்றுக் காலம் மிகுதியாதல், உயிர்நிலைக் கருத்தைப் பார்க்கும்போதே அறிந்துகொள்ள இடமில்லாமை, வகுப்பில் தன்னம்பிக்கை, தன் முயற்சிகள் குறைதல், அடுத்திருப்போருக்கு இடையூறு, வாய்க்குட் படிப்பைப் போன்று சிறந்த உளப் பயிற்சி யாகாமை முதலியவற்றையும் பிறவற்றையும் இதன் குறைகளாகக் கருது வாருளர்.

இப்படிப்பிற் பயிலக்கூடிய பிழைகளை ஆசிரியர்கள் எடுத்துச் சொல்லித் திருத்தும்போது, மாணவர்களை எள்ளி நகையாடாமலும், பிற மாணவரும் பார்த்து எள்ளி நகையாடாமலும் ஊக்கத்தைக் குறைக்காமலும், மேலும் ஊக்கத்தைக் கொடுக்கும் வகையிலும் நயமாகத் திருத்தவேண்டும். ஒரு நிமிஷத்திற்கு எத்தனை சொற்கள் என்று கணக்கிட்டும் இப் படிப்பின் விரைவை அளந்தறியலாம்.

## வாய்க்குட் படிப்பு

வாய்விட்டுப் படித்தலைவிட வாய்க்குட் படிப்பதே சிறந்ததாகும். முதன் முதல் குழந்தைகள் வாய்விட்டுப் படித்தலே இயல்பும், எளிதுமாகும் என்பதில் ஐயமில்லை. அப்படிப் படித்தலினுலேயே, இளம் மாணவர்கள் பொருளுணர்கிருர்கள் என்பதும், ஓசை நயத்தையும், செய்யுள் இன்பத்தையும், சுவையையும் வாய்விட்டுப் படிப்பதால் உணர்வர் என்பதும் மெய்யே. உணர்ச்சியையும், உளச்சுவையையும் தட்டி எழுப்

புவது இப்படிப்பு. எனினும், நன்ருய்ச் சிந்திக்கும் ஆற்றலை வளர்ப்பதற்கும், பொருளுணர்ந்து விரைவாகப் படித்துப் போவதற்கும் வாய்விட்டுப் படிப்பது சிறந்த பயிற்சி அளிப்ப தில்லை. இது "சொன்னதைச் சொல்லுக் கிளிப்பிள்ளை" படிப்பைச் சேர்ந்தது எனப்படுகிறது. ஏனெனில் இதில் மாணவரின் முயற்சி, கவனம் முதலியன சொற்களை உச்ச ரிப்பதில் செலவழிக்கப் படுகின்றனவேயொழியப் படிப்பில் உள்ளடங்கிய கருத்துக்களை உணர்வதில் மிகுதியாக வழக்கப் படுவதில்லை. மிகவும் நுண்ணறிவு வாய்ந்து பிற நலங்களும் (உடல் நலம், நல்லுணவு, நல்ல சூழ் நிலை) பெற்றுள்ள ஒரு நல்ல குழந்தையும் அதன் கவனம் உச்சரித்தலிலும், ஒலித்த லிலும் சென்றிருக்கும் பொழுது, பொருளுணர்ந்து சிந்தித் தலில் அதை முற்றிலும் செலுத்த முடியாது. மேலும் இன் றைய உலகில், பன்முக அறிவும், நூல்களும், கட்டுரைகளும், பிறவும், கரையற்ற கடல் போல் மல்கிக் கிடக்கின்றன. 'கல்வி கரையில, கற்பவர் நாள் சில." கற்க வேண்டியவை உலகளவாயும், கற்றது கைமண்ணளவாயு முள்ளன. இவையனைத்தையும் வாய்விட்டுப் படித்துணர்வது இயலாத தேயாம். இதில், முயற்சி, காலச்செலவுகள் மிகுதி. விரைவில் சோர்வும் உண்டாகும். ஒலி உறுப்புகளுக்கு மிக வேலை. நாவறட்சி, பக்கத்திலுள்ளவர்களுக்கு இடையூறு, விரைத லின்றி மெள்ளப் போதல் முதலியன உள. எனவே, காலம் செல்லச் செல்ல இதைக் கொஞ்சங் கொஞ்சமாய் விட்டு வாய்க்குட் படிப்பதை வளர்க்க வேண்டும்.

ஓலைச்சுவடிகள், கைச்சுவடிகள், அச்சு நூல்கள் முதலிய வற்றை மனத்திற்குள்ளேயே வாய்திறவாமல், உதடுகள் அசையாமல், ஒலித்தல் உச்சரிப்பு இன்றி, முணு முணுப் பில்லாமல் படித்தலே வாய்க்குட் படிப்பதாகும். சிறுவகுப்பு களிலிருந்தே இதைப் படிப்படியாய் நுழைக்கலாம். நூற் றுக்கு நாற்பது பங்கு இரண்டாம் வகுப்பிலும், மூன்ரும் வகுப்பில் அறுபது பங்கும் அதற்குமேல் இன்னும் சிறிது சிறிதாயும் இப்படிப்பை வளர்க்கலாம். ஆங்கிலத்திலுள்ளது போல் இடைநிலையிற்ருன் தொடங்கவேண்டு மென்பதில்லை. இதற்குப் பாட நூலிலேயே பயிற்சி அளிக்கலாம்.

**இப்படிப்பால் விளையும் நன்மைகள்**: (1) நல்ல மனப் பயிற்சி. (2) **அறிவு நோக்கம்**. அஃதாவது நூற்சுவையை உணர்ந்து இன்புற்றுப் படிப்பதுடன் உயிர்நிலைக்கருத்தை

உடனறிந்து கொள்ளும் ஒட்பம் வளர இப்படிப்பு உதவும். (3) **இலக்கிய நோக்கம்.** படிப்பில் ஓர் ஆர்வத்தையும், பற்றையும் தோற்றுவித்துப் படிக்கும் பழக்கத்தையும் உண்டாக்கும். (4) **மொழி நோக்கம்.** முன்னிருந்த சொற்களஞ்சியத்தை உறுதி செய்வதோடு பெருக்கவும் செய்கிறது. (5) ஒலி உறுப்புகளுக்கு ஓய்வு. (6) காலம், முயற்சிக் குறைவு. (7) படிப்பு விரைவாய்ப் போதல். அஃதாவது குறைந்த நேரத்தில் நிறைந்த படிப்பு. (8) ஒலிப்பிலும், உச்சரிப்பிலும் கவனம் போகவில்லை யாதலால் விரைந்த படிப்போடு பொருளுணர்ந்தும் படித்தல். (9) சிந்தனை, கருதுதல் முதலியவை வளர இடமுண்டு. (10) உரக்கப் படிப்பதில் சில பிள்ளைகளின் கவனம் குறையலாம். அடுத்திருப்போருக்கும் இடையூறுகலாம். இதிலோ ஒரு காலத்தில் எல்லாப் பிள்ளைகளும், ஒரே சமயத்தில் பாடத்தில் கவனம் செலுத்த இடமுண்டு. (11) தன்னம்பிக்கையும், தன் முயற்சியும் வளர இடம் உண்டு. (12) முற்போக்கான பிள்ளைகளும், பிற்போக்கான பிள்ளைகளும், தம் தம் தகுதிக் கேற்றவாறு தனியாகப் படிக்கலாம். (13) பிற்கால வாழ்வில் நாம் மிகப் படிக்க வேண்டியிருக்கும்போது வாய் விட்டுப் படிக்கப் போவதில்லையாதலின், அதற்கு இளமையிலேலே பழகுதல் நல்லது.

## சில குறைகள்

குரற்பயிற்சி பெறவும், உச்சரிப்புப் பயிற்சிபெறவும் இடமில்லை. நடித்தல், உரையாடல், பேச்சு, சொற்பொழிவுகள் முதலியவற்றை இப்படிப்பின் உதவியால் செய்யமுடியாது. பிழைகள் ஏற்பட்டால் திருத்துவதற்கும் ஆசிரியர்களுக்கு வாய்ப்புக் கிடையாது. மொழிப்பாடத்தின் இன்றியமையாத உறுப்பு ஆகிய வாய்மொழிப் பயிற்சிக்கு இதில் இடமில்லை. தனியாகவே மனத்திற்குள் பார்த்துக்கொள்ள வேண்டி யிருக்கிறது. செய்யுளின் கருத்தை உணர்ந்து இன்புறுவதற்கும், இடத்திற்கேற்ற, சுவைக்கேற்ற நடை கேட்டு இன்புறுவதற்கும் இடம் இல்லை. செய்யுளை ஒப்புவித்தல் முடியாது.

## இப்பழக்கத்தை உண்டுபண்ணுவதற்கான சில பயிற்சிகள்

1. **கண் நகர்ச்சி:** ஒரு வரியைப் பார்க்கும்போது, **கண் அடிக்கடி நிற்கிறது. ஆதலால் ஒரு வரியில் கண் எத்தனை**

முறை நிற்கிறது என்பதற்கேற்பப் படிப்பில் விரைவுகூடும் அல்லது குறையும். இதனைக் **கண் நிறுத்தம்** எனலாம். ஒரு நிறுத்தலுக்குச் சுமார் கால்வினடி ஆகிறது. இதனைக் **கண் நிறுத்த அளவு** என்பர். ஒரே வரியில், கூட நிறுத்துபவர்கள் விரைவிற் குறைந்தோர் என்றும், குறைத்து நிறுத்துபவர் விரைவில் மிகுந்தோர் என்றும் கொள்ளப் படுவார்கள்.

2. **நிறுத்தும் இடம்** : நிறுத்தும் கால அளவைக்குறைப்ப தோடு, நிறுத்தும் இடங்களையும் குறைத்தல் வேண்டும். அஃதாவது ஒரே தடவையில் ஒரு கருத்து முடிகின்ற ஏற்ற இடத்தில் எத்தனை சொற்களைச் சேர்த்துப் படித்துணரலா மென்பதைப் படிப்பின் விரைவு பொறுத்திருக்கிறது. எனவே, ஒரே சமயத்தில், பொருள் முற்றி வார்த்தைகளின் எண்ணை மிகுதியாகக் கொண்ட தொகுதிகளாகப் பொரு ளுணர்ந்து படித்துப் போதல் இப்படிப்பின் விரைவை வளர்க்கும் ஒரு வழியாகும்.

3. **பிற்போக்கு** : சில இடங்களில் சரியாகப் பார்த்துப் பொருளுணர்ந்து படிக்காமற் போய்விட்டுப் பின்னர் அதற்கே திரும்பிவருவதும் உண்டு. கண் திரும்பவும் அதையே பார்க்கிறது. இது பிற்போக்காகும். பிற்போக்கு கள் குறையக் குறையப் படிப்பின் விரைவு பெருகும்.

4. **கண் பாய்ச்சல்** : ஒரு வரி முடிந்தவுடன் கண் அடுத்த வரியின் முதலுக்குப் பாய்கிறது. இதனைக் கண்பாய்ச்சல் எனலாம். இது நேர்மையாயும், விரைவாகவும் போவதற் குப் பழக்கம் வேண்டும். அச்சு வரியோடு இஃது ஓடிப் பின் சரியாக அடுத்த வரிக்குப் போதல்வேண்டும். இப்பழக்கம் ஏற்பட முதலில் கைவிரலை வரியோடு வைத்துக் கொண்டு போகும்படி செய்தல் நலம்.

5. **கண் பார்வை** : இது விரைவாகப் போவதற்குக் கண் பார்வையும், தெளிவும் கூடக் காரணமாகும். கண்ணுக்கு மிக அண்மையில் வைத்துப் படிப்பது **குறும் பார்வையாம்.** புத்தகத்தை ஓரடிக்கப்பால் சேய்மையில் வைத்துப் படிப் பது **நெடும் பார்வையாம்.** இரண்டும் தகாது. கண் மருத்து வரைக் கலந்து கண்ணாடி போடுதல் முதலியவற்றைச் செய் தல்வேண்டும்.

6. **உட்காரும் நிலையும் வெளிச்சம் வருதலும்** : இப்படிப் பைக் குறைக்கவோ, கூட்டவோ செய்யலாம். மிக மங்கலும் மிக ஒளியுமுள்ள வெளிச்சங்கள் தகாதன. நேராக நிமிர்ந்து

உட்கார்ந்து நூலை மார்புக்கு நேராகப் பன்னிரண்டு அங்குல அளவிற் பிடித்து வெளிச்சம் இடப்புறத்திலிருந்து வரும்படி (பின்னும் முன்னும் அசையாமல்) படிக்கவேண்டும்.

7. முழுச் சொற்கள், சொற்றொடர்கள் முற்றுப்பெற்ற கருத்துக்களாக, உணர்ந்து கொண்டு இப்படிப்பின் விரைவை வளர்க்கலாகும்.

8. இப்படிப்பிற்குரிய நூல்கள் எளியனவாய் மாணவர்கள் தாமே உணர்ந்து கொள்ளக் கூடியனவாய், அவர்களுக்குப் பற்றுள்ளனவாய் இருப்பின் இப்படிப்பு விரைந்து போகும்.

9. மேலும், இது மாணவரின் கவனத்தையும், சொற் களஞ்சியத்தின் விரிவையும் பொறுத்திருக்கிறது.

10. குரல் போட்டுப் படித்தலை அறவே அகற்றப் படிப்படியாய்ப் பழகவேண்டும்.

11. வாய்விட்டு உச்சரிப்பை உரக்கச் சொல்லாமல் நாவும், உதடும் அசையாமலிருக்க வேண்டும் என்பதை உதடுகள், குரல்வளை முதலியவற்றின் மேல் கை வைத்து அசைவது முதலியவற்றைத் தடுத்து வற்புறுத்தலாம். உதடுகள் அசைதல் முதலியன படிப்பின் விரைவைக் குறைக்கும்; களைப்பை விரைவில் உண்டாக்கும் என்பதையும் அறிவுறுத்தலாம்.

12. பாடநூலிலுள்ள ஒவ்வொரு பாட்த்திலும், வாய்க்குட் படிப்பினைச் சிறிதளவேனும், செய்ய வற்புறுத்தலாம். ஆழ்ந்து படிக்கவேண்டிய பாடங்களிலும், இப்பயிற்சியை நுழைக்க இடமுண்டு. இப்படி நுழைப்பது பாடப்புத்தகம் அல்லாதவற்றைப் பின்னர்த் தாமாகவே படிக்கும் பழக்கத்திற்கு முற்பயிற்சியாகக் கொள்ளலாம். பாடத்தொடர்புள்ள கேள்விகளைக் கரும்பலகையில் எழுதி அவற்றை வாய்க்குட் படித்து ஏற்ற விடைகளைக் கண்டு பிடிக்கச்செய்தல், சில பகுதிகளின் உயிர் நிலைக் கருத்தைக் கண்டறியச் செய்தல், பகுதிகளுக்குத் தலைப்புக் கொடுக்கச் செய்தல், பாடத்தில் வந்துள்ள நீதிகளையும் மேற்கோள்களையும் தனியாகக் குறித்துக் கொள்ளச் செய்தல், அருஞ்சொற்களைத் திரட்டி எழுதிப் பொருள் காணச் செய்தல் முதலிய பயிற்சிகளினால் வாய்க்குட் படிப்பைப் பாட நூலிலும் நுழைக்க இடமுண்டு.

13. பாடப் புத்தகத்திலிருந்து சில எளிய பகுதிகளை வகுப்பில் நடந்து முன்னரே, ஒரே வழி வீட்டிலேயே படித்

துக்கொண்டு வரும்படியும் செய்யலாம். அது தாமாகவே நன்ருய்ப் படித்துப் பொருளுணர்வதற்கு ஒரு பயிற்சியாக இருப்பது மட்டுமன்றித் தாமாகவே படிப்பதற்குரிய ஓர் ஆவலையும் உண்டுபண்ணும்.

14. வகுப்பில் நடத்தப்பட்ட ஒரு பகுதியை வாய்மொழிக் கட்டுரையாகவோ அல்லது எழுத்துக் கட்டுரையாகவோ, சொல்வதற்கும், எழுதுவதற்கும் அடிப்படையாக அதை வாய்க்குள்ளேயே சிறிது நேரம் படிக்கச் செய்யலாம்.

15. பாடப் புத்தகங்களில் இல்லாத சில பயிற்சிகளும் உள. அவற்றுள் சில :—கட்டளை அட்டைகளைப் படித்துக் கட்டளைகளை நிறைவேற்றல், படங்களையும் அவற்றிற்கேற்ற சொற்களையும் இணைத்தல், விளம்பரங்களைப் படித்துணர்தல், பெயரெழுதிய சீட்டுகளைப் படித்து உரியோரிடம் சேர்த்தல், மேல் வகுப்புகளில், தன்ஞேக்க முயற்சி வேலைகள் கை வேலைகள் முதலியன பற்றிய விவரங்களைப் படித்து உணர்தல், கட்டளைகளை ஆசிரியர் எழுதிப்போட அவற்றில் வேண்டியவற்றை மாணவர் படித்துச் செய்தல், தனிப்பயிற்சி அட்டைகளைக் கொடுத்து அவற்றில் கண்டிருக்கும் வேலைகளைச் செய்யச் சொல்லுதல் முதலியன. தனிப் பயிற்சி அட்டைகளின் விவரத்தைப் படிப்புத் தாள்களை ஆயத்தம் செய்யும் பகுதியிற் காண்க.

## இப்படிப்பின் விரைவை அளந்தறிதல்

இதுவரை படித்தறிந்திராத ஒரு பாடத்தை ஆசிரியர் படி என்றதும் பிள்ளைகள் விரைவாகவும், வாய்க்குள்ளும் படிக்கத் தொடங்கி, ஒரு குறித்த நேரத்திற்குப் பிறகு நிறுத்து என்றதும், நிறுத்த வேண்டும். அக்கால அளவைக்குள் படித்த வார்த்தை எவ்வளவு என்று கணக்கிடலாம். பழகிய ஒருவர் நிமிஷத்திற்கு 80-முதல் 120 வரை வார்த்தைகள் படிக்க முடியும் என்று கணக்கிட்டிருக்கிருர்கள். பக்கத்திற்கு 350 வார்த்தைகளாக, மணிக்கு எத்தனை பக்கங்கள் என்று கணக்கிடலாம். இவ்விரைவு, பாடத்தின் அறிவு அல்லது படிப்போர் தேர்ச்சி, கவனம், கண்ணகர்ச்சி, பொருளுணரும் ஆற்றல் ஆகியவற்றைப் பொறுத்திருக்கும். வாய்க்குட் படிக்கும் விரைவு, பொருளுணரும் ஆற்றல் ஆகிய இரண்டையும் கண்டறிந்து மதிப்பெண்கள் கொடுப்பதோடு, கோட்டுப்படங்கள் வாயிலாகவும் குறித்து வைக்கலாம். மேல் நிலைகளில், இவ்வாய்க்குட் படிப்பின் விரைவையும் பழக்கத்

ஙீதயும் பல வழிகளில் வளர்க்கலாம். அவற்றை அகன்ற படிப்பினடியிற் கண்டுகொள்க.

## ஐந்தாம் பிரிவு

## செய்யுள்

தாய்மொழிக் கல்வியில், செய்யுளே உயிர் நிலையான பகுதி என்று கூறலாம். சிறந்த புலவர் பெருமக்களுடைய வாழ்க்கை நுகர்வுகளிலிருந்தும் பட்டறிவிலிருந்தும் எழும் உணர்ச்சிகளையும் உயர் கருத்துகளையும் ஓசை இனிமை, சொல்நயம் பொருள் நயங்களோடு வெளிப்படுத்துவது செய்யுளாகும். செய்யுளை 'சொல் ஓவியம்' என்னலாம். வியன் கலைகளில் செய்யுள் சிறந்த இடம் பெறுகிறது. தமிழில் உரைநடை நூல்கள் மிக அண்மையில் வளர்ந்தனவே. பண்டையோர் தம் மதிநுட்பத்தால் நுனித்தறிந்து வெளியிட்ட அறிவுச் செல்வங்கள் எல்லாம் செய்யுள் வடிவிலேயே தமிழில் உள்ளன. சங்ககாலத்தும், இடைக்காலத்தும், பிற்காலத்தும், வழங்கும் தமிழ் நடை வேறுபாடுகள் எல்லாம் செய்யுளில்தான் காணப்படும். ஒன்பான் சுவைகளும் பத்துவகை அழகுகளும் உரைநடைகளை விடச் செய்யுள்களிலேயே சிறந்து காணப்படும். மனம் ஈடுபடுதற்குரிய ஓசை நயம், நெட்டுருச் செய்து கோடற்குரிய பொருளினிமை, சுருக்கம், செறிவு முதலியன செய்யுட்கே சிறந்தனவாம். இளமை தொட்டே மாணவர்களுக்குச் செய்யுட் பாடம் சிறப்பாக நடைபெற வேண்டும்.

### செய்யுள் கற்பிப்பதன் நோக்கங்கள்

1. செய்யுளைக் கற்பிக்கும்போது புதிய சொற்களின் அறிவு, பொருள் அறிவு, மொழிப்பயிற்சி முதலியன இடையிடையே வரினும், அவைகளே செய்யுள் கற்பிப்பதன் சிறந்த நோக்கங்கள் அல்ல. மாணவர்களின் சொற்களஞ்சியத்தைத் பெருக்குவதற்கென்றோ, அவர்கள் அறிவு வளர்ச்சிக்கென்றோ, கருத்துகளை வெளியிடும் திறமையை மேம்படுத்துவதற்கென்றோ செய்யுளைக் கற்பித்தல் கூடாது. செய்யுட் பாடத்தின் நடுநடுவே இவைகள் (கடினமான சொற்கள், சொற்றொடர்கள் முதலியவற்றின் விளக்கங்கள்) வரலாம். ஆனல் இவற்றையே முதன்மையான நோக்கமாகக் கொள்ளுதல் கூடாது.

ஆனால், உயிர்நிலைக் கருத்தை உணர்ந்து, புலவரின் கருத்துகள், உணர்ச்சிகள், இயற்கை, மக்களியற்கை முதலிய வற்றின் அழகும் எழிலும் உணர்தல், அவ்வழகிய பொருள் களின்பால் பற்று ஆகியவற்றை மாணவர்களிடை உண்டு பண்ணி வளர்ப்பதே செய்யுள் படிப்பதின் சிறந்த நோக்க மாகும்.

2. செய்யுள் அழகாயிருப்பதோடு மட்டுமின்றி உண்மை யை உள்ளபடியே எடுத்துரைக்கிறது. இவ்வுண்மையை அழகு பொருந்த எடுத்துரைக்கும் தன்மையைச் செய்யுளின் வாயிலாக மாணவர்களை நாம் உணரும்படி செய்துவிட்டால் கற்றதனாலாய சிறந்த பயனை நாம் அடைந்ததாகக் கருதலாம். எல்லாவற்றிலும் அழகோடு உண்மையை உணரும் ஆற்றலை—ஒலியிலும், பொருளிலும், சிந்தனையிலும், செயலிலும்—பெற்று இன்புறுதலை அவர்களிடையே தோற்றுவிக்க வேண்டும்.

3. மாணவர்களிடையே மன எழுச்சிகளை அவ்வச் சுவைகளுக் கேற்றவாறு செய்யுள் கிளர்ச்சி செய்கிறது. எந்த மன எழுச்சிகளும் கற்பனைகளும் ஒரு கவி வெளித் தோன்றக் காரணமாய் இருந்தனவோ அவ்வச்சுவைகளையும் கற்பனைகளையும் அக்கவி மாணவர்களிடையும் உண்டு பண்ண வேண்டும்.

4. செய்யுள் படிப்பதே ஒரு தனிப்பட்ட இன்பமாகும். செய்யுள் படிக்கும்போது நிகழ்ச்சிகளும் காட்சிகளும் நேரிற் பார்ப்பது போலவே இருப்பது மட்டுமின்றி இன்னோசை மயமாகவும் விளங்குகின்றது. இவ்வின்பத்தை நுகர்தல் வாழ்க்கையையே பண்படுத்தி மக்கட்பண்பை வளர்க்கும் சிறந்த கருவியாகிறது.

5. செய்யுள் மாணவர்களின் கற்பனையை வளப்படுத்து கிறது.

6. மாணவர்களின் தனித்தன்மையை வளர்த்து அவர் கள் ஒழுக்கத்தையும் சீர்படுத்துகிறது.

## செய்யுளைச் சொல்லிக்கொடுக்கும் ஆசிரியரின் தகுதியும் செய்யுளைப் பொறுக்கி யெடுத்தலும்

இந்நோக்கங்கள் கைகூடுவதற்கு ஆசிரியரே முதலில் அச்செய்யுளில் கவர்ச்சி உடையவராய்ச் செய்யுள் நயம்

வியப்போராய் இருப்பதோடு செய்யுளைத் தெளிவோடும் உணர்ச்சியோடும் படிக்கவேண்டும். மேலும் அச்செய்யுளின் உட்கிடையை விளக்கக் கூடிய ஒரு சூழ்நிலையை விளைத்துப் பின்னர் அதன் உதவி கொண்டு கவியின் உணர்ச்சியைப் பிள்ளைகளும் உணரும்படி செய்யவேண்டும். திருத்தமான ஒலித்தலோடு செய்யுளை இடத்திற்கேற்ற இசையுடன் படித்துக் கவியின் கருத்தை வெளிப்படுத்த முயலவேண்டும்.

செய்யுட் கருத்துக்களையும் நயங்களையும் மாணவர் உணர்ந்து துய்த்தலே செய்யுட் பாடத்தின் பயன் எனக் கூறப்பட்டிருத்தலால் குழந்தைகளுக்கு விளங்காதனவும் அவர்கள் துய்த்து உணர்ந்திராதனவுமான கருத்துகளும் நிகழ்ச்சிகளும் அவர்களுக்குச் சுவையளிக்க மாட்டா. ஆகவின் கீழ் வகுப்பு மாணவர்க்குரிய பாடல்கள் அவர்கள் உணர்ச்சிகளை எடுத்துக் காட்டுவனவாய் இருக்கவேண்டும். அவர்கள் இயற்கை விருப்பங்களுக்கு ஒத்தனவாயும் இருக்க வேண்டும். உள்ளக்கிளர்ச்சியைத் தூண்டுமாறு உயிர் ததும்பும் சந்தமும், சொற்கள் திரும்பத் திரும்ப வந்து ஒலிக்கக் கூடிய பின்வரு நிலை யழகும் உள்ள பாடல்களும், கருத்துப் பொருள்களன்றிக் காட்சிப்பொருள்களைக் கொண்டுள்ளனவும் சிறுவர்களுடைய செவியையும் சிந்தையையும் கவரும்.

தொடக்கநிலைப் பள்ளிகளில், செய்யுட் பாடங்களில் மிகுதியாக மூதுரை, உலகநீதி, ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நன்னெறி, நல்வழி, நீதி நெறி விளக்கம்போன்ற அறநெறிப் பாடல்களே பெரும்பாலும் கற்பிக்கப்படுகின்றன. நன்னெறியும் நல்லொழுக்க முறையும் அவர்களுக்கு இப்போது தெரியாது. அவர்களுக்குத் தெரிந்த சொற்களும் பொருள்களும் மிகக் குறைவே. வீட்டிலும் பள்ளியிலும் அவர்களைச் சுற்றியுள்ளனவும் அவர்கள் வாழ்க்கையில் குறுக்கிடக் கூடியனவுமான பொருள்கள், செடி கொடிகள், மரங்கள், பூக்கள், பறவைகள், விலங்குகள், உற்றார் உறவினர்கள், நண்பர்கள், ஞாயிறு, திங்கள், விண் மீன்கள் முதலிய சிலவற்றைப் பற்றியே அவர்கள் நினைக்கலாம். காட்சிப் பொருள்களை—தொட்டுப் பார்ப்பவற்றை, நல்ல நிறங்கள் உள்ளவற்றை, சுவைத்துப் பார்ப்பவற்றை, சந்த இனிமையோடு கேட்கக் கூடியவற்றை, நுகர்ந்து பார்ப்பவற்றை, சுருக்கமாக, ஐம்பொறிகளாலும் உணரக் கூடியவற்றையே—அவர்கள் எளிதில் உணர்வர். முது மக்களிற் பெரும்பாலோர் தாமும்

இன்னும் அந்நிலையிலேயே இருக்கின்றனர். அப்படியிருக்க, கருத்துப்பொருள்களை இன்னும் நன்றாய் உய்த்துணரும் ஆற்றல் வாய்ந்திராத இவ்விளைஞர்களுக்கு முழுதும் அறவுரைகளே அமைந்துள்ள பாடல்களாயிருந்தால் அவர்கள் அவற்றைத் துய்த்து இன்புறுவதோடு அவற்றில் அருவருப்பும் கொள்ளலாம். ஆதலால் இளம் மாணவர்களின் விளையாட்டுத் தன்மைக்கும் மனப்பான்மைக்கும் ஏற்ற பலவித இனிய பாடல்களைச் சேர்க்கவேண்டும். அவர்கள் விரும்பிக் கற்க வல்ல இன்னிசையும் எளிமையுமுள்ள செவிலிப் பாடல்கள், பாப்பா பாடல்கள், ஆட்டப் பாடல்கள், கதைப் பாடல்கள், விடுகதைகள் முதலியன எளிதில் படிக்கக்கூடிய வகையில் சொற்பிரிவு செய்து போடப்பட்டனவாய் இருக்கவேண்டும். அவ்வண்ணம் மாணவர்கள் விரும்பும் பாடல்களை அவரவர்கள் தனித்தனிக் குறிப்புப் புத்தகங்களில் குறித்து வைத்துக் கொள்ளலாம்.

இடைநிலை வகுப்புகளில் அவர்கள் விரும்புகின்ற முற் கூறப்பட்ட பாடல்களோடு நன்னெறிச் செய்யுட்கள் சற்று மிகுதியாகவும், உயர்நிலை வகுப்புகளில் இன்னும் சற்று மிகுதியாக விரவியும் வரலாம். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, ஆழ்வார்கள் திருப்பாடல்கள், தாயுமானவர், இராமலிங்க அடிகள், மஸ்தான் சாகிபு, பட்டினத்தார், வேத நாயகம் பிள்ளை முதலியவர்களின் சமயப் பிணக்கமின்றிப் பொது நோக்காயமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல்களும், அரிச்சந்திரபுராணம், நளவெண்பா, குசேலோ பாக்கியானம், திருவிளையாடற் புராணம் முதலிய கதைப் பகுதிகளும், பல் சுவை நிறைந்த தனிப் பாடல்களும் உயர்நிலை அமைப்பு களுக்குச் சேர்க்கப்படலாம். சிறப்பாக, பள்ளியிறுதி வகுப் பிற்குச் சங்க காலச் செய்யுட்களும், நாட்டு மொழிப் பற்று களை ஊட்டவல்ல தற்காலப் புலவர்கள் (பாரதியார், பாரதி தாசன், தேசிக விநாயகம் பிள்ளை, சுந்தரம் பிள்ளை, இராக வையங்கார், கலியாண சுந்தரனார், வெ. ப. சுப்பிரமணிய முதலியார், சுத்தானந்த பாரதியார்) பாடல்களும் பொறுக்கி எடுத்துப் போடப் படலாம்.

## செய்யுளை இசையோடு படித்தலும் பயனும்

வாய்விட்டுப் படித்தல் உரைநடைப் பாடத்தினும் செய் யுட் பாடத்திற்கு மிகவும் இன்றியமையாததாகும். உரை

நடைப் பாடங்களைத் தனியே வீட்டிற் படிக்கும்போது, வாய்க்குட் படித்துப் பொருளுணர்ந்து கொள்ளலாம். ஆனல், செய்யுளை எங்கிலையிலும் ஏற்ற இசையோடு வாய்விட்டுப் படித்தால் தான் அதன் சொல்லும் பொருளும் சுவையும் நன்கு தோன்றி உள்ளத்திற்கு உவகை யளிக்கும்.

"இழுக்கு டைய பாட்டிற் கிசைநன்று
ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று—வழுக்குடைய
வீரத்தின் நன்று விடா நோய் பழிக்கஞ்சாத்
தாரத்தின் நன்று தனி"

எனக் கூறப்பட்டிருப்பினும் செய்யுட்கு இசை இன்றியமையாததாகும். இசையில் ஈடுபடாதார் எவருமிலர். ஈசனுக்கு 'வீணை தடவி' என்று ஒரு பெயருமுண்டு. பேராசிரியர், தொல்காப்பியச் செய்யுளில் முதல் நூற்பாவில் பா என்பது "சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமற் பாடம் ஓதுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுள் என்று உணர்தற்கு ஏதுவாகிப் பரந்து பட்டுச் செல்வதோர் ஓசை" என்று விரிவுரை எழுதுகின்றார். இதனல் 'பா' என்பது இசை மயம் என்பதும் இசையின்றேல் பாவின்று என்பதும் போதரும். பகுத்தறிவில்லாத குழந்தைகளும், கொடிய விலங்குகளும், பறவைகளுங்கூட இசையில் ஈடுபடுதல் நேரிலும் நூல்கள் வாயிலாகவும் அறியப்படும். தொழிலாளர் இசையின் இனிமையில் ஈடுபட்டுத் தம் தொழில் வருத்தம் தோன்றப் பெறுமல் தொழில் செய்து முடிப்பதை இன்றும் காணலாம். தெருக்களில் இளைஞர்கள் முற்றிலும் பொருளுறியப் பெறுமலே இசையில் ஈடுபட்டுப் பல செய்யுட்களை உள்ளக் கிளர்ச்சியோடு பாடித் திரிகின்றனர். பொருட்சிறப்பு மிக்கில்லாத செய்யுட்களும் இசைப்பொருத்தம் பெற்றிருப்பின் பாடிப்போர் மனத்தைக் கவர்ந்து மேலும் மேலும் படிக்கச் செய்யும்.

இதனல் மாணவர்களை வகுப்பில் நன்கு கவனிக்கச் செய்வதற்கும் செய்யுட் பகுதிகளை மேலும் மேலும் கிளர்ச்சியோடு படிக்கத் தூண்டுவதற்கும் இசையுடன் படித்தல் சிறந்த முறையாம். புறத்தே சென்றுலவும் மாணவர் மனத்தைக் கவர்ந்து நடைபெறும் செய்யுட் பாடத்தில் ஈடுபடுத்துவது

இசையேயாகும். இசை யென்றால் கேள்விக்கு இனிமையாக இருக்குமாறு அதற்குரிய ஓசையில் செய்யுளைப் படிப்பதே யாகும். இசைப் புலவர் போல் தாளம் முதலியன அமைத்துச் சுரத்தோடு பாடவேண்டு மென்பதில்லை. இன்னின்ன பாக்களை இன்னின்ன பண்களில் பாடலாம் என்பதைக் கீழே காண்க :—

| பா | பண் |
|---|---|
| 1. வெண்பா | சங்கராபரணம் |
| 2. அகவல் | ஆரபி, தோடி |
| 3. கலிப்பா | பந்துவராளி |
| 4. கலித்துறை | பைரவி |
| 5. தாழிசை | தோடி |
| 6. விருத்தம் | காம்போதி, கல்யாணி, மத்யமாவதி |
| 7. உலா | சௌராஷ்டிரம் |
| 8. பிள்ளைக்கவி | கேதாரகௌளம் |
| 9. பரணி | கண்டாரவம் |

மேலும் சுவைக்கேற்றவாறும் இசையை மாற்றலாம்.

| சுவை | பண் |
|---|---|
| கடவுள் வாழ்த்து, வணக்கம் | கல்யாசி, காம்போதி, பூபாளம் |
| கடவுள் அன்பு | மாயாமாளவகௌளம், நாதநாமக்கிரியை, ஆனந்த பைரவி, மத்யமாவதி, ஆரபி |
| நகை | இந்தோளம், மோகனம், பிலகரி, கல்யாணி |
| அழுகை | தோடி, புன்னாகவராளி, பைரவி, ஸ்ரீ, முகாரி, சாவேரி |
| சமநிலை | சங்கராபரணம் |
| பெருமிதம் | அடாணா, கேதாரகௌளம், கானடா நாட்டை |
| காதல் | வசந்தா, பைரவி |
| செவிலிப்பாடல் | நீலாம்பரி, முதலியன. |

# செய்யுளைக் கற்பிக்கும் முறை

எல்லாச் செய்யுட்களுக்கும் பழைய முறைப்படி செய்யுளைப் பிரித்துப் பதவுரை, பொழிப்புரை, கருத்துரை என்ற வரிசையில் விளக்கம் கூறவேண்டியதில்லை. செய்யுளை முதலில் ஏற்ற இசையுடன் சொற்களையும் பிரிக்காமல் சீர் பிரித்துப் படித்துக் காட்டுவதிலிருந்தே பிள்ளைகள் பாட்டின் கருத்தை ஒருவாறு அறியக்கூடும். இவ்வாறு படித்துக் காட்டுதல் போதுமென்று ஆசிரியருக்குத் தோன்றும் வரையில் படிக்கலாம். பிள்ளைகள் பாடலின் கருத்தை உய்த்துணர்வதோடு இலக்கிய இன்பத்தையும் நயத்தையும் துய்க்க வேண்டும் என்பதை ஆசிரியர் உணரவேண்டும்.

ஆசிரியர் பாடலைப் படித்தவுடன் மாணவர்க்கு அதன் கண் (ஒருவாறு பொருளுணர்ந்து) ஒரு பற்றும் ஆவலும் உண்டாக வேண்டும். அப்படிப்பட்ட ஆவல் தூண்டப்படுமாயின் அதை வளர்க்காது அப்படியே விட்டுவிடாமல் அதை அடிப்படையாக வைத்துக்கொண்டு தொடர்ந்து நடத்த வேண்டும். ஆசிரியர் அப்பாடலின் உயிர்நிலைக் கருத்துக்குப் போய் அதை எடுத்துக் காட்டி அக்கருத்தை நமக்குத் தெரிவிக்கவே அப்பாட்டு புலவரால் பாடப்பட்டது என எடுத்துச் சொல்லி, அக் கருத்து, கதை, நிகழ்ச்சி அல்லது காட்சியே தான் அப்பாடல் எழுதுவதற்குக் காரணமாயிருந்த தென்று கூறவேண்டும்.

பாடல் முற்றுப்பெற்ற ஒரு முழுப் பொருளாயிருக்கிறது. முழுப் பொருள் என்று அதைக் கருத வேண்டுமேயொழிய பல விவரங்கள் அல்லது தனித்தனிப் பகுதிகள் என்று கருதக் கூடாது. முதல் வரியிலிருந்து தொடங்கி ஒவ்வோரடிக்கும், ஏன், ஒவ்வொரு சொல்லுக்குமே பொருள் கூறி, அணிகளுக்கும் இலக்கணக் குறிப்புகளுக்கும் அவைகள் வரும் பொழுது தனித்தனி விளக்கம் கூறும் வழக்கம் நல்லதன்று. ஆனல் உயிர்நிலைக் கருத்தை முழுவதும் எடுத்துக் கூறி, அதை நிரப்பி முழுவதாக்க வரும் விவரப் பகுதிகளைப் பின்னர்ப் பொருத்தமாகவும் தொடர்ச்சியாகவும் எடுத்துக் கூறுதல் வேண்டும். அழகும் எழிலும் வாய்ந்து நறுமணம் வீசும் மலர் ஒன்றைக் கண்டு மகிழ்பவன் அதன் மணம் நிறம், அழகு, அமைப்பு, வனப்பு முதலிய முழு அழகில் ஈடுபடுகிறான். அதை இதழ் இதழாகக் குலைத்து எத்தனை இதழ்கள் இருக்கின்றன என்று எண்ணி, அல்லது கசக்கி மகிழ்வது இயல்பன்று. அதுபோல் ஒரு செய்யுளையும் கருத

வேண்டும். முதலிலேயே சொல் சொல்லாகப் பிரித்து உரை சொல்லுவது, உரைநடையாக்குவது, உவமை, பொருள் கேட்பது முதலிய பழைய முறையிற் கற்பித்தல் செய்யுட் படிப்பைச் சுவையற்றதாக்கி விடுகிறது. இது கவியின் உணர்ச்சியை அறிய உதவுவதில்லை. இம்முறையை இக்காலத்தவர் கண்டிக்கின்றனர். முழுவதையும் படித்து உயிர் நிலைக் கருத்தை அறிந்து, அழகுணர்ந்து, பின்னர் அதை நிரப்புவதற்கு வேண்டுமெனின் விளங்காத அருஞ் சொற்கள் முதலியவற்றிற்கு ஏற்ற இடத்தில் ஏற்ற முறையில் விளக்கங்கள் கூறலாம். நீண்ட பாடலாக இருந்தால் சிறு சிறு பகுதிகளாகப் பிரித்துக் கொள்ளலாம். சிறிய பகுதியாயினும் பெரிய பகுதியாயினும் கருத்து முற்றிய முழுப்பகுதியாக இருந்தால்தான் சுவைத்தறிதல் கூடும்.

ஒரு செய்யுளுக்குப் பதவுரை, பொழிப்புரை, இலக்கணக் குறிப்புகள், அணிகள் முதலியவற்றை நன்கு விளக்குவதால் மாணவர் அச் செய்யுளின் பொருளை நன்றாய் உள்ளத்தில் அமைப்பர் என்பதில் ஐயமில்லை. தேர்விலும் நல்ல மதிப்பெண்கள் வாங்குவர். ஆனால் செய்யுளின் பொருள் மட்டும் உணர்தல் ஒருசார் நோக்கமே யாகும். பொருளுணர்தலினும் சிறந்த நோக்கமாவது அதோடு செய்யுளின் நயமும் அழகும் உணர்ந்து சுவைத்து மகிழ்தலாம். அறிவோடு உணர்ச்சியும் உண்டாக வேண்டும். சில செய்யுட்களைப் படித்துப் பொருளுணர்ந்து கொள்ளலாம். ஆனால் உணர்ச்சி உண்டாகாமலுமிருக்கலாம். நூலாசிரியர், என்ன உணர்ச்சியோடு பாடினரோ அவ்வுணர்ச்சி கற்போருக்கும் உண்டாக வேண்டும். அப்போதுதான் அச்செய்யுளின் அழகு மாணவர்களின் உள்ளத்திற் பதிந்து மகிழ்ச்சியை யூட்டும். ஆதலால் மாணவர் பொருளுணர்தலோடு அழகையும் கண்டு நல்ல உணர்ச்சியும் மனவெழுச்சியும் அடையுமாறு பயிற்றல் வேண்டும். வெற்றெனத் தொடுத்தலின்றி ஏற்ற சொற்கள் அமைப்பெற்று, பொருட்பொருத்தமும், அணியும், இடத்திற் கேற்ற இன்னோசையும் கொண்டும் விளங்கும் கவிகளின் அழகை மாணவர் தம் உள்ளத்தில் உணர்ந்து மகிழுமாறு உதவிபுரிதலே, செய்யுள் கற்பிப்பதன் நோக்கமும் பயனுமாகும். அவ்வழகு முழுவதும் எடுத்துக் காட்ட இயலாவிடினும், ஆசிரியர் எவ்வளவு உணர்ச்சியோடு படித்துக் கற்பிக்கின்றனரோ அவ்வளவுக்கு மாணவருக்கும் உணர்ச்சியுண்டாகும். இவ்வுணர்ச்சி, உண்டாகாமல் செய்யுள் கற்பிப்பதிற் பயனேயில்லை. மாணவருக்கு விரைவில் வெறுப்புண்டாகிவிடும்.

மேல்வகுப்புகளில், உவமை, பொருள், உவமைப்பொருத்தம், தொகு கதைகள், அணிகள், மேற்கோள்கள், சொல் நயம், பொருள் நயம், இலக்கணக் குறிப்புகள், அமைதிகள், அரிய சொல்லாட்சிகள் முதலியன நூல் நயத்தை விளங்க வைப்பதோடு மொழியிற் பற்றுண்டாக்கி அவ்வாசிரியரது பிறநூல்களையும் படிக்க வேண்டுமென்னும் ஆவலையும் தூண்டிவிடும் பாடலைக் கற்பித்த பிறகு, அல்லது தொடக்கத்திற் கூறினொழிய, செய்யுளின் பொருளும் சுவையும் மாணவர்க்கு விளங்காது என்றிருக்குமாயின் தொடக்கத்தில் அல்லது மாணவர் விரும்பிக் கேட்டால், நூலாசிரியர் வரலாற்றைக் கூறலாம். ஆனால் இவை எல்லாம் செய்யுளின் முழுக்கருத்தையும் அழகையும் எடுத்துக் காட்டுவதற்காக உதவும் கருவிகள் என்ற முறையில் தனித்தன்றி அவ்வப் போது வேண்டுங்கால் அவற்றின் உறுப்புகளாகவே விளக்கப் படல் வேண்டும்.

## நெட்டுருச்செய்தல் : அதன் இன்றியமையாமையும் செய்யுள் கற்பிப்பதில் அதன் இடமும்

1. நெட்டுருச் செய்வதில் பல **நன்மைகள் உண்டு.** ஒருவருடைய திறமையானது அவருடைய கூரிய அறிவு தெரிந்து கொண்டுள்ள பொருள் மிகுதிகளுக்கு ஏற்பவே அமைந்து விளங்கும்.

2. பல புதிய சொற்களையும் கருத்துகளையும் அறிந்து கொள்ளவும் அவற்றை மனத்தில் நிலைபெற்றிருக்கச் செய்யவும் ஏற்ற நலம் நெட்டுருச் செய்வதால் உண்டாகும்.

3. செய்யுளின் ஓசை நயமும் சந்த அமைப்பும் உள்ளத்தில் பதிந்து செவியில் ஒலித்துக்கொண்டிருப்பதால் மேன்மேலும் அத்தகைய செய்யுட்களைப் படித்துணரத் தூண்டும்.

4. புதிய செய்யுட்கள் இயற்றவும் நெட்டுருச் செய்தல் மிகவும் உதவும். எடுத்துக் காட்டாக, கட்டளைக் கலித்துறைகள், வெண்பா, அல்லது கலிப்பா பலவற்றை நெட்டுருச் செய்தும் படித்தும் பழகிய ஒருவருக்கு அவற்றை இயற்றுதல் எளிதாகும். அங்ஙனமின்றி யாப்பிலக்கணம் மட்டும் கற்று அடிதோறும் எழுத்து அசைகளை எண்ணி ஒருவர் இயற்றத் தொடங்கினால் ஒரு நாளைக்கு ஒன்று அல்லது இரண்டு பாடுதலும் அருமையாம்.

5. பொருளுணர்ந்து நெட்டுருச் செய்யப்பட்ட பகுதிகளிலுள்ள அழகும் அவற்றாலுண்டாகும் நுண்ணறிவும் என்றும் உள்ளத்தில் நிலைபெறும்.

6. அவற்றிலுள்ள அறிவுரைகளும் அறவுரைகளும் அவ்வாறே நிலைத்திருந்து நம்மை நன்னெறிக்கண் செலுத்தும்.

7. மேலும், ஏனைய நூற் பாடல்களோடு ஒத்திட்டுப் பார்த்து உயர்வு தாழ்வுகளை அறிந்து முடிவு கட்டவும் உதவும்.

8. நெட்டுருப் பண்ணும்போது அதன் பொருள் ஓரளவே உணரப் பெற்றிருப்பினும் பின்னொருகால் நினைவுக்குக் கொண்டு வரும்பொழுது புதிய பொருள்களும் நயங்களும் உணர்ந்து மகிழ இடமுண்டு.

## செய்யுளை நெட்டுருச் செய்தல்

1. ஆனால், கட்டாயத்தின்மேல் நெட்டுருச் செய்யச் சொல்வதிற் பயனில்லை. சிறுவர்கள் தாமாகவே அழகுணர்ந்து விருப்பத்தோடு நெட்டுருச் செய்வதே சிறந்ததாகும்.

2. மாணவர் விரும்பும் பகுதிகளையே அவர்கள் நெட்டுருப் பண்ணவேண்டும்.

3. நெட்டுருப் பண்ணப்படும் பகுதிகள் மாணவர்க்கு அவ்வேலையில் வெறுப்பும் சலிப்பும் தராமல் விருப்பும் பற்றும் தரத்தக்கனவாய் இருத்தல்வேண்டும்.

4. மனப்பாடம் செய்யவேண்டிய பகுதிகள் மாணவருடைய ஒழுக்கம், உளப்பண்பு முதலியவற்றை வளர்க்கத் தக்கனவாயும் முன்னேற்றத்திற்குத் தக்கனவாயும் இருக்குமாறு தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

5. குருட்டுப் பாடமாக நெட்டுருச் செய்யாமல் பொருள் விளக்கத்தோடு மனப்பாடம் செய்யவேண்டும். அப்பொழுதுதான் அது மாணவர் மனத்தில் நிலைத்து நிற்கும்.

6. முழுப் பகுதிகளாகவே நெட்டுருச் செய்யவேண்டும். நீண்ட பகுதியாயிருந்தால், கருத்து முற்றுப்பெற்ற சிறு சிறு பிரிவுகளாகப் பிரித்து நெட்டுருச் செய்யலாம்.

7. மலை, கடல், நாடு, வளநகர், பருவம் முதலியவற்றைக் கூறும் பகுதிகள், ஒழுக்கத்தை ஊட்டவல்ல பாடல்கள், சொல் நயம் பொருள் நயம் மிக்க செய்யுட்கள், இன்னிசையும் பொருட்செறிவும் உள்ளக்கனிவும் பொதிந்த

மொழி, நாட்டு, கடவுள் வணக்க வாழ்த்துப் பாடல்கள், நாட்டுப்பாடல்கள், நல்லணிகள் செறிந்து விளங்கும் பாடல்கள் முதலியவற்றைத் தக்க இளமைப் பருவத்தில் நெட்டுருச் செய்வித்தல் வேண்டும்.

## அருஞ்சொற்களை விளக்கும் முறை

பாமர், தாம்சனும் வயட்டும், ரைபர்ன், சாம்பியன், கால்வின் முதலிய அறிஞரின் நூல்களைக் காண்க.

அருஞ்சொற்கள் செய்யுள், உரைநடைப் பாடங்களில் ஆங்காங்கு வருங்கால் அவற்றை நான்கு சிறந்த முறைகளால் விளக்கலாம். ஆசிரியர் நடத்த வேண்டிய பகுதியைப் படித்துக் காட்டிய பின், மாணவர்கள் படித்தால் அவர்கள் படிப்பிலிருந்து (வகுப்பில் படிப்பதற்கு மிக முதலான அல்லது கடையான மாணவர்களைத் தேர்ந்தெடுக்காமல் இடையான மாணவர்களையே தேர்ந்தெடுக்கவேண்டும்) அஃதாவது எவ்வெவ்விடங்களில் அவர்கள் உச்சரிப்பு, ஒலிப்பு, பொருளுணர்ந்து மேற்செல்லல் முதலியவற்றில் பிழைபடுகிறார்கள் என்பதிலிருந்து. வகுப்பில் எவற்றை விளக்கிச் சொல்லவேண்டும் என்பதை ஒருவாறு ஆசிரியர்கள் அறிந்துகொள்ளலாம். அச்சொற்கள் வரும்போது அவற்றை விளக்க முயல்வதுடன் அவற்றை ஏற்ற இடங்களில் தம் வாக்கிலேயே மாணவர் வைத்து வழங்கும் பயிற்சியையும் ஆசிரியர்கள் கொடுக்க வேண்டுவது கடமையாகும். முதலில் விளக்கமும், பின்னர்ப் பயிற்சியும் வருவது முறையாகும். விளக்கத்தைக் கீழ்க்கண்டவாறு செய்யலாம் :—

(1) கீழ் வகுப்புகளில் இளம் மாணவர்களுக்கு அச்சொற்கள் குறிக்கும் பொருள், படம், அல்லது வரைபடங்களைக் காட்டி விளக்கலாம். சொல், வினையாயின் அது குறிக்கும் தொழிலைச் செய்து காட்டலாம். பெயர் எச்ச வினையெச்சங்களையும் அங்ஙனமே படம் செயல்களால் விளக்கியும், கீழ், மேல், உயரம் முதலியவற்றைக் குறித்தும் சொற்களையும் அவ்வந்நிலையைக் குறித்துக் காட்டியும் விளக்கலாம். (2) மேல் வகுப்புகளில் கருத்துப் பொருள்கள் மிகுதியாகப் பயிலும் இடங்களை வாய்மொழியாகவே அப்பொருள் குறிக்கும் பிற சொற்களினாலும், எடுத்துக் காட்டுகளினாலும், மேற்கோள்களினாலும், விளக்கவுரைகளாலும், உவமைகளாலும் ஒருவாறு விளக்கிவிடலாம். இவ்வாறு விளக்கங்கள் கூறுங்கால் அவை சொற்களைத் தெளிவு படுத்தும் வகையில் இருக்க வேண்டுமே ஒழிய அவற்றை இன்னும் சிக்கலாக ஆக்கத்

தக்க முறையில் இருக்கக்கூடாது. சில ஆசிரியர்களின் விளக்கங்கள் இங்ஙனம் வெற்றெனத் தொடுத்தும், சென்று தேய்ந்து இற்றும் சொற்களை இன்னும் அருமையுடையன வாக ஆக்கி மாணவர்களின் அறிவையும் தெளிவையும் குழப்பிவிடத் தக்கனவாயிருக்கின்றன. இங்ஙனம் நிகழ்ந்து விடாமல் இருப்பதற்கு ஆழ்ந்த படிப்பும் ஆயத்தமும் வேண் டும். (3) இனி நேராக விளக்க முடியாச் சொற்களைப் பல இடங்களில் வைத்துச் சில சொற்றொடர்களை ஆசிரியர் எடுத்துக்கூறிப் பின் மாணவர்களையும் அங்ஙனமே சிலவிடங் களில் வைத்து வழங்கும்படி பயிலுவித்தால் அச்சொற்களின் பொருள் மறைமுகமாக விளங்கிவிடும். இப்படி விளக்கு வதைத் "தம் பொருளைத் தாமே விளக்கிவிடும் தொடர்கள்" என்று முறைவல்லார் கூறுவர். (4) சிற்சில இடங்களில் அயல்மொழி மேற்கோள்களையும் காட்டி, அம்மொழிகளில் மொழிபெயர்த்துச் சொல்வதும் ஏற்கத்தக்க விளக்கமே யாகும். ஆனால் தமிழில் இஃது அவ்வளவு மிகுதியாக வழங் கும் இடம் வராது. தமிழ் மிக அறியாத அயலாருக்குத் தமிழ் கற்பிக்கும்போது இம் முறையை மேற்கொள்ளலாம். இவற் றால் விளக்க முடியாவிடின் நடித்துக் காட்டுவதாலும் விளங் காத சிலவிடங்கள் நன்கு விளங்கும்.

## செய்யுள் கற்பிப்பதில் தள்ளத்தக்க சில குறிப்புகள்

1. பெயரளவில், செய்யுள் கற்பிக்கின்றேன் என்று சிலர் அரிய உரை நடைபோலச் செய்யுளை நடத்துதலும், செய்யுளில் வலிந்தும் நலிந்தும் பொருள் கொண்டு அதை ஒரு சுமையாக்கி விடலும்.

2. அறிவும், ஆற்றலும், பட்டறிவும் படைத்த ஆசிரி யர்கள் தாம் செய்யுளைப் படித்து இன்புறும் தகுதி நிலையை மாணவர்களிடத்தும் எதிர்பார்த்தல்.

3. செய்யுட் படிப்பில் தனிப்பட்ட மாணவர்களிடத்தில் காணப்படும் சில தனிப்பட்ட (பிறரிடத்தில் காணமுடியாத) சுவைகளையும் செய்யுள் இயற்றும் படைப்பு வேலையையும் நசுக்கி விடுதல்.

4. பொருள் நயத்திற்குப் போகாமல் சொல் நயத்தி லேயே மாணவரை ஈடுபடுத்துதல்.

5. தனித்தனியாகப் பிரித்துப் பொருள் கூறுவதால் செய்யுளின் சுவையைக் குலைத்து விடுதல்.

6. நெட்டுருச் செய்வதில் கட்டாயப் படுத்தல்.

## கொள்ளத்தக்க சில குறிப்புகள்

முதற் பிரிவில் இலக்கிய நயமுணர்ந்து இன்புறலுக் காகப் படிக்கும் நோக்கத்தில் வரும் குறிப்புகளையும் காண்க. அவற்றோடு கீழ்க்கண்டவற்றையும் இணைத்துக் கொள்க :—

1. எப்பாடத்திலும் ஏற்ற இடங்களில் ஏற்ற செய்யுட் களைப் படித்துக் காட்டல்.

2. மனம் போனவாறு சொல்லோசை அமைந்த அடி களைப் பாடத் தூண்டிப் பின்னர் யாப்பிலக்கண விதிகளுக் கடங்கிய செய்யுள் வகைகளையும் இயற்றத் தூண்டல்.

3. தமக்கு விருப்பமுள்ள செய்யுட்களைத் தொகுத் தெழுதிய சிறு செய்யுள் நூல்களைத் தாமே தொகுத்து வைத்துக்கொள்ள மாணவர்களைத் தூண்டல்.

4. செய்யுட்களுக்கேற்ற விளக்கப் படங்களை வரைய அல்லது அச்சில் உள்ளதைக் கத்தரித்து ஒட்டி விளக்கத் தூண்டல்.

5. கதைப் பாடல்களை நடித்துக் காட்டல்.

6. தனித்தனியாகச் செய்யுள் நூலைத் தொகுத்துவைத் துக் கொள்வதோடு ஒரு வகுப்பு மாணவர்கள் கூடி ஒத் துழைத்துத் தம் வகுப்புக்கே ஏற்றதொரு செய்யுள் நூலையும் தொகுத்துக் கொள்ளுதல் முதலியன.

## தமிழ்ப்பாட நூல்கள்

மொழிப்படிப்பில் பாட நூல்கள் பொதுவாக மொழி அறிவை வளர்ப்பதோடு மட்டுமின்றி இலக்கியச் சுவையுணர் ஆற்றலையும் உண்டுபண்ணி இலக்கியப் பற்று, மொழிப் பற்று முதலியவற்றை விளைத்து, பள்ளிக்கூடத்தை விட்டு அகன்ற பின்னரும் இவை நிலைத்திருக்குமாறு செய்ய வேண்டும். மொழிப் படிப்பை இரண்டு வகையாகப் பிரிக் கலாம். அவை **ஆழ்ந்த படிப்பு, அகன்ற படிப்பு** என்பனவாம். பள்ளிக்கூடங்களில் ஆழ்ந்த படிப்பிற்காகப் பாட நூல்களைக் காண்கின்றோம். பல வகுப்புகளிலும் இதற்காகவே பாட நூல்கள் வைக்கப்பட்டுள்ளன. அவற்றிலுள்ள சிறந்த உரை நடை, செய்யுட் பகுதிகளை மாணவர் நுட்பமாய் ஆராய்ந்து படிக்க வேண்டும். பொருள் உணர்வதோடு சொல்நயம் பொருள் நயங்களைச் சுவைத்து இன்புறுவதும் இப்படிப்பின் நோக்கமாகும். மேலும் கதைகளில் வரும் ஆட்களின் இயல்புகளை அறிதலும், பாட அமைப்பின் ஒழுங்கையும்

இலக்கணக் குறிப்புகளையும் சொற்றொடர் மரபுத் தொடர்களை யும் உணர்வதுமட்டுமின்றித் தம் வாக்கிலேயே வைத்து வழங்கப் பயிலுவதும் ஆழ்ந்த படிப்பின் குறிக்கோளாம். இது மேலெழுந்தவாரியாக நுனிப் புல் மேயாமல் ஆழ்ந்து நுட்பமாக உணர்ந்து கவனிக்கும் வழக்கத்தை வளர்க்கும்.

முதலாண்டு போக ஏனைய தமிழ் வகுப்புகளில் ஆழ்ந்த படிப்பிற்குரிய பாட நூல்களையே நிலைக்களனாகக் கொண்டு செய்யுள் உரைநடைப் பகுதிகள் நடத்தப்படுவதால் இந் நூல்களைச் சரிவரத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

## ஒரு நல்ல தமிழ்ப்பாட நூலுக்கு இருக்கவேண்டிய இயல்புகள்

1. மாணவர்கள் கற்கவேண்டிய பல்வேறு பொருள்களை யும் ஒருங்கே எளிதாகவும் எப்பொழுதும் தரக்கூடியவை பாட நூல்களே. ஆனால் ஆசிரியருடைய உதவிக்காக இவை உபயோகப்படலாமே தவிர அவருக்குப் பதிலாக இவற்றைக் கொள்ளலாகாது. ஆகையால் இவை நன்றாய்க் கற்றுத் துறைபோகிய பட்டறிவு மிக்க ஆசிரியர்களால் எழுதப்பட வேண்டும்.

2. முறைகள் நன்றாய் விளக்கமுற்று அவற்றை உள் ளடக்கி எழுதப்பட்டிருக்க வேண்டும்.

3. அவைகள் ஒரே வரிசையாக அமைந்திருக்க வேண் டும். அஃதாவது தொடர்ச்சியாக 1 முதல் 5 வகுப்பு வரை; 1 முதல் 3 அமைப்பு வரை; 4, 5 அமைப்புகளுக்கு ஏணிப் படிப்படியாக அமைந்திருத்தல் நலம்.

4. கீழ் வகுப்புகளுக்கு ஒரே ஆசிரியரால் எழுதப்பட் டிருக்க வேண்டும். 4, 5 அமைப்புகளுக்குப் பலர் எழுதிய வற்றை நன்கு தொகுத்துப் பதிப்பித்தல் நலம். ஏனெனில் அப்பொழுதுதான் பொருள் அறிவு, சொற்களஞ்சியம், இலக்கண அறிவு முதலியன யாவும் தொடர்ச்சியாகவும் படிப்படியாகவும் வளர்ந்து வரும்.

5. அந்தந்த வகுப்புப் பிள்ளைகளின் வயது, அறிவு, மன வளர்ச்சிகளுக்கு ஏற்றவாறும், படிப்படியாயும் பாடங் களின் எளிமை அல்லது கடினம் அமைந்திருக்கவேண்டும்.

6. இலக்கண அமைதிகளும், சொற்களும், சொற் றொடர்களும் மரபுத் தொடர்களும் உள்ளடக்கி யிருந்த

லோடு வகுப்பு உயர உயரப் படிப்படியாய் அவை வளர்ந்து போதல் நலம்.

7. உள்ளடங்கி யிருக்கும் சொற்கள், தொடர்கள் முதலியன மாணவர்கள் பொருளுணர்ந்து தமது வாக்கிலேயே வைத்து வழங்கக்கூடியனவாய் இருத்தல்வேண்டும். அவை அருமை நோக்கிப் படிப்படியாய் ஒழுங்கு செய்யப்பட்டிருப்பதோடு மாணவர்கள் பொருளுணர்ந்து ஆனல் தமது வாக்குகளில் வைத்து வழங்க முடியாதனவாயிருக்கும் சொற்களும் சொற்றொடர்களுங்கூட அவ்விதமே ஒழுங்கு செய்யப்பட்டிருக்கவேண்டும்.

8. வாய்மொழி, எழுத்து ஆகிய இருவகைக் கட்டுரைகளும் எழுதுவதற்கேற்ற பொருள்கள், பார்த்து எழுதுதலும் சொல்லுவது எழுதுவதும் உட்பட, உள்ளடங்கியிருத்தலும் படிப்படியாய் வளர்தலும்வேண்டும். கீழ் வகுப்புகளிலும் கீழ் அமைப்புகளிலும் பொதுவாகப் பாடத்தில் உள்ள பொருள்கள் பற்றி வரும் கட்டுரைகளும், பாடங்களிலிருந்து தோன்றி யெழும் கட்டுரைகளும் எழுதும்படி நாம் சொல்கிறோம். அவர்களிடமிருந்து தாமாகவே உதவியின்றி எழுதும் கட்டுரைகளை நாம் எதிர்பார்த்தல் முடியாத காரியம். எனவே அதற்கு வேண்டிய பயிற்சிகளை அளிக்கவல்ல பாடங்கள் அமையப் பெற்றிருக்கவேண்டும்.

9. மாணவர்களின் பற்றையும் கவனத்தையும் இழுக்கவல்ல பொருள்கள் அமைந்தவையே நல்ல பாடநூல்களாம். எனவே அவர்கள் அந்தந்த வயதில், துய்த்துப் பற்றுவைக்கக் கூடியனவும் தமது வாழ்க்கையில் நடைமுறையில் நுகரக் கூடியனவும், இன்றைய உலகில் மல்கிக் கிடந்து அதற்கு உதவக் கூடியனவுமான பொருள்கள் நிறைந்தனவாய் இருத்தல்வேண்டும்.

10. கீழ் வகுப்புகளுக்குச் சிறப்பாகவும் மேல் வகுப்புகளுக்கு ஏற்ற இடங்களிலும் விளக்கப் படங்கள் மிகுதியாய் இருக்கவேண்டும். படம் பார்த்துப் படித்தலும் இருத்தல் வேண்டும். வகுப்புக்குத் தகுந்த பெரிய எழுத்தில் நல்ல பளபளப்பான தாளில், எழுத்துப் பிழைகள் ஒன்றுகூட இல்லாமல், நல்ல கட்டமைப்பும் கண்கவர் வனப்பும், வலிமையும் கொண்டதாய் எல்லோரும் வாங்கக்கூடிய அளவில் விலை அமையப்பெற்றதா யிருக்கவேண்டும்.

11. நடையானது இனிமை, எளிமை, தூய்மை முதலியவற்றைக் கொண்டிருக்க வேண்டும். இது வகுப்புக்குத்தக்க

வாறு படிப்படியாய் உயர்ந்து செல்லவேண்டும். ஏற்ற இடங்களில் பயிற்சிகள், அருஞ்சொல் விளக்கங்கள், வினாக்கள், இலக்கணக் குறிப்புகள் முதலியன அமைந்திருக்கவும் வேண்டும்.

12. வீட்டு வேலையை உள்ளடக்கி யிருக்கவேண்டும்.

13. வாய்க்குட் படிப்பதற்கான பயிற்சிகள் இருக்க வேண்டும்.

14. கீழ் வகுப்புகளில் ஏற்ற இடங்களிலும், மேல் வகுப்புகளில் சற்று மிகுதியாக விரவியும் **நகைச்சுவை** ஆங்காங்கு இருத்தல்வேண்டும். தமிழ்ப்பாட நூல்களில் நகைச்சுவை மிகவும் அருகியிருக்கின்றது. பெரும்பாலும் இல்லை என்று கூடச் சொல்லலாம். ஆகையால் இது கட்டாயமாய் மிகுதியாகச் சேர்க்கப்பட வேண்டும். நகைச்சுவை பொருந்திய பாடங்களாகக் கதைகள், கட்டுரைகள், பாடல்கள், நாடோடிப் பாடல்கள், தனிப்பாடல்கள், சிலேடைச் செய்யுட்கள் முதலியனவற்றைச் சேர்க்கலாம்.

15. சிறுகதைகள், நாடகப் பகுதிகள், வரலாறுகள், தன் வரலாறுகள், வழிச்செலவுகள், உரையாடல்கள் அறிவியல் முதலிய சிறந்த உரைநடைப் பகுதிகள் மாணவர்களின் இலக்கியச் சுவையுணர் ஆற்றலை வளர்த்து அவர்களது மன வெழுச்சிகளையும் ஒழுக்கத்தையும் உளப்பண்பையும் பொது அறிவையும் நாகரிகத்தையும் போற்றக்கூடிய பகுதிகளாய் இருக்கவேண்டும். இவற்றின் தன்மையும் அளவும் வகுப்புக்கேற்றவாறு இருத்தல் நலம். இவ்வுரைநடைப் பகுதிகளாக, கீழ் அமைப்புகளிலும், மேல் அமைப்புகளிலும், கற்பனைக் கட்டுரைகள், அறிவு வளர்ச்சிக்கு உதவக்கூடிய உழவு, பெருங் கைத்தொழில்கள், குடிசைக் கைத்தொழில்கள், அறிவியல்கள் பற்றியனவும் மாணவர்க்கு எளிதில் விளங்கக் கூடியனவுமான பாடங்களும், மக்களின் வாழ்க்கை, வாழ்க்கைக்குதவும் பொருள்கள், மக்கள் இனங்கள் பற்றிய பாடங்களும், மக்கள் ஆக்கிய அறிவியற் புதுமைகள் முதலிய ஆக்கவேலைகள் பற்றியனவும், நேராகத் துய்த்துக் குறிப்புகளாகக் குறித்து வைத்தவைகளும் வெளிச்செலவுகள், புது நாடுகள் கண்டுபிடித்தல், வீரச் செயல்கள், குடியேறுதல், புதுக்காரியங்களை முதன் முதல் தொடங்கியோர் ஆகியவை பற்றிய பாடங்களும், சிறந்த புலவர்களின் வாழ்க்கையில் நேர்ந்த சீரிய நிகழ்ச்சிகள், மிகவும் கவர்ச்சியுள்ள தலைவர்களின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள், கலை, இசை, சிற்பம், உரையாடல், சிறு உரை

நடை நாடகங்கள், கீழ்த்தரமில்லாத, தகுதிவாய்ந்த நகைச் சுவைப் பகுதிகள் முதலியனவும் வருவதற்குரியன. வரும் பாடங்களில் மொத்தத்தில் ஒரு பாதிக்காவது குறையாமல் (சிறப்பாக கீழ் அமைப்புகளில்) நேர்முகமாகவோ, மறை முகமாகவோ, பாடங்கள் இலக்கியத் தொடர்புடையனவாக இருத்தல் வேண்டும். புலவர்களின் வரலாறு, இலக்கியப் புர வலர்கள், நூல்களை ஆக்கியும் வெளியிட்டும் வந்த வரலாற் றுக் குறிப்புகள், சிறந்த இலக்கியப் பகுதிகளின் உரை நடை, முதலியன இவற்றுள் வரலாம். இன்னும் அவர்களை இலக்கியத்தில் நுழைத்துச் சுவையை ஊட்டவல்ல முக வுரைப் பகுதிகளும், கூட்டுறவு, நிதிகள் வைத்து நடத்துதல் போன்ற பகுதிகளும், செய்தித்தாள்கள் இதழ்களிலிருந்து எடுக்கும் எளிய பகுதிகளும் வரலாம். 80, 90, 100 (டெமி) பக்கங்கள் முறையே ஒன்று, இரண்டு, மூன்றும் அமைப்பு களுக் கிருக்கலாம். இனி இவற்றோடு மேல் அமைப்புகளுக் குப் பழம் நாடகப் பகுதிகள், அழகுக் கலைகள், இசைக் கருவிகள், அறிவியற் கருவிகள் கண்டுபிடித்தல், உற்பத்தி முறைகள், குடும்பம் நடத்தல், கிராம முன்னேற்றம், நம்நாடு, பன்னாடு பற்றியவை ஆகிய பாடங்களும், குடியாட்சி, குடி மைப் பயிற்சி, கோயில் முதலிய கட்டடங்கள், ஓவியம், சிறு கதைகள், நாடகங்கள் முதலியனவும் இருக்கலாம். 70 (ராயல்) பக்கங்கள் 4-5-ஆம் அமைப்புகளுக்கும் 80 பக்கங்கள் (ராயல்) 6–ஆம் அமைப்புக்கும் இருக்கலாம்.

16. ஒவ்வொரு பாடமும் தனித்தனியாக முடிதல் நலம்.

17. மேல் வகுப்புகளுக்கு ஒரே ஆசிரியரால் ஒரே நடையில் எழுதப்படாமல், பலரால் பல நடைகளில் எழுதப் பட்ட பாடங்களைத் தொகுத்தலும் பலவகைச் செய்யுட் பகுதிகளைப் பொறுக்கிப் போடுதலும் நலம். அப்பொழுது தான் மாணவனுக்கு எந்த நடையில் விருப்பமோ அதை வளர்க்க இயலும்.

18. சமயம் ஒழுக்கம் பற்றிய பாடல்களின் நடையும் பொருளும் சமயப் பிணக்கத்தை உண்டுபண்ணுமலும் பல சமயத்தினருக்கும் உரியனவாயும் அல்லது ஒத்தனவாயும் இருக்க வேண்டும். திருக்குறள், நாலடியார் போன்ற அற நூல்கள், தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்வியப் பிர பந்தம், தாயுமானவர், இராமலிங்க சுவாமிகள், மஸ்தான் சாகிபு, பட்டினத்தார், சங்க இலக்கியங்கள், வீரமா முனி வர், கிருஷ்ணப்பிள்ளை, வெ. ப. சுப்பிரமணிய முதலியார், தேம்பாவணி, சீறாப் புராணம் முதலியன இப் பகுதிக்கு

உரியன. வேதநாயகம்பிள்ளை கீர்த்தனை போன்ற பொதுப் பாடல்களும் ஏற்றன.

இக்காலப் புலவர்களாகிய, பாரதியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், நாமக்கல் கவிஞர், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை முதலியோர் பாடல்கள் மிக மிக ஏற்றன.

19. இனி, பொதுவாகக் கீழ் அமைப்புகளில் வரும் செய்யுட் பகுதிகளாக இவற்றைக் கொள்ளலாம் :— வரலாற்றுப் பகுதிகள், வாழ்த்துப் பகுதிகள்-எளிய இனிய இசைப் பாடல்கள்-(தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்புகழ், நாலாயிரப் பிரபந்தம், கிருஷ்ணப்பிள்ளை போன்றவை). இயற்கை வருணனைப் பாடல்கள், கதைப் பாடல்கள், அற உரைப் பாடல்கள் (திருக்குறள்-சதகங்கள்) 96 வகைப் பிரபந்தங்களில் எளியவை, தனிப்பாடல்கள், தற்காலப் புலவர் பாடல்கள் முதலியன. ஏறக்குறைய 300, 400, 500 வரிகள் முறையே 1, 2, 3 ஆம் அமைப்புகளுக்கு வைக்கலாம். எண் சீர்களுக்கு மேற்பட்ட வரிகளை இரண்டு வரிகளாக எண்ணிக் கொள்ளலாம். இனி, 4, 5, 6-ஆம் அமைப்புகளில் 600, 600, 800 வரிகள் முறையே வைக்கலாம். 100, 100, 200, வரிகள் மனப்பாடம் செய்யச் சொல்லாம். இங்கு முற்கூறப்பட்டவைகளுக்குமேல், முற்கால, இடைக்கால, தற்காலப் புலவர்களின் எளிய காவியப்பகுதிகள், குறம், பள்ளு போன்ற நாட்டுப் பாடல் வகைகள், சிறந்த இயற்கை வர்ணனைப் பகுதிகள், கைத்தொழிற் சிறப்பு, நாட்டுப் பற்று, மொழிப் பற்று, உலக ஒற்றுமை, சமுதாயத் தொண்டு, பெண்கள் உரிமை முதலியவற்றைப் பற்றிய இக்காலப் புலவர்கள் பாடல்களும் வருவதற்குரியன.

## உரைநடைப் பாடம்

உரைநடை, செய்யுள்களைக் கற்பிக்கும் நோக்கங்கள் நடைமுறையிற் பயன்களாக விளையும்படி அவ்வப்பாடங்கள் நடைபெற வேண்டும் என்பதை ஆசிரியர் முதலிற் கவனிக்க வேண்டும். அறிவை வளர்த்துக்கொள்ளவும், வழங்கும் மொழியினும், இலக்கிய மொழியினும், நடைமுறையில் வகுப்பினும், பிறண்டும் உதவக்கூடிய சொற்றொடர் மரபுத் தொடர்கள், அரிய சொல்லாட்சிகள், இலக்கண வழக்காறுகள் முதலியனவற்றின் பொருள்களை உணருவதோடு அவற்றை ஏற்ற இடங்களில், தம் வாக்கிலேயே வைத்து வழங்குவதற்குரிய பன்முறைப் பயிற்சி பெறவும், பிழையறவும் தெளிவாகவும், கோவையாகவும் தமிழ்மொழியைப் பேச

வும் எழுதவும், கருத்துவளம் சொல்வளம் முதலியன உறுதி பெறவும், ஒரு பகுதியில் வரும் பொருளைச் சுருக்கமாக அறிந்து கொள்வதோடு, காரண காரியத் தொடர்புணர்ந்து வகுத்துப் பார்க்கும் அறிவுபெறவும் இன்னோரன்ன பிற பயன்களை எய்துவிக்கவுமே உரைநடைப் பாடங்கள் பாடத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இன்னும் பிற பாடங்களும் தாய்மொழியிலேயே நடைபெறுவதால் அதற்கு வேண்டிய அறிவையும் தமிழ் உரை நடைப் பாடம் நல்க வேண்டும். இத் தொகுதிகளை யெல்லாம் ஓர் உரை நடைப் பாட நூல் உள்ளடக்கிக் கொண்டிருப்பதோடு, அவற்றை நடைமுறையிலும் பயன்களாக எய்துவதற்குரிய வாய்ப்புகளை யும் கொடுக்கவேண்டும் என்று முன்னரே கண்டுள்ளோம்.

இனி, இந்நோக்கங்கள் எல்லாம் வந்தெய்துவதற்குரிய முறைகளை உரைநடைப் பாடத்தில் மேற்கொள்வதே நலமாகும்.

பாடத்தை நடத்துவதற்கு ஆயத்தம் செய்யும் முகத்தால் மாணவர்கள் முன்னரே அறிந்துள்ள பொருள்களை நடக்க இருக்கும் பாடத்தோடு ஏற்ற முறையில் பொருத்தி, அவர்கள் வாயிலிருந்தே கேட்டு, வரவழைத்து, பாடத்தைத் தொடங்க லாம். பாடத்தை எடுத்துக் கூறும்போது எளிய பகுதிகளா யிருப்பின் மாணவர்களையே படிக்கச்செய்து, படிக்குங்கால் நிகழும் உச்சரிப்புப் பிழை, நிறுத்தப் பிழைகள் முதலியவற் றைத் திருத்திப் பின் ஆசிரியரும் ஒருமுறை படித்து ஆங் காங்கு அருஞ்சொற்களை விளக்கும் முறைகளைப் பின்பற்றி விளக்கிப் பின் பொருளை மாணவர்கள் உணர்ந்தார்களா என அறிய இடையிடை ஏற்ற கேள்விகளைக் கேட்டு விடைகளை வரவழைக்கலாம்.

இஃது உரை நடைப் பாடமாதலின், அருஞ்சொற்கள், சொற்றொடர், மரபுத் தொடர்கள் வரும்போது நேருக்கு நேராகப் பொருள் கூறிச் செல்வதோடு மட்டுமல்லாமல் அவற் றை ஏற்ற இடங்களில் வைத்து மாணவர்கள் தம் வாக்கி லேயே வழங்கும் **மொழிப் பன்முறை முயற்சியை** மிகவும் ஆசிரி யர்கள் வற்புறுத்த வேண்டும். இன்னும், விளக்கங்கள், மேற்கோள்கள், எடுத்துக் காட்டுகள், ஒத்த நிகழ்ச்சிகள், காட்சிகள் முதலியவற்றிற்கு மாணவர்களையும் உடனழைத் துக்கொண்டு போய், மனக்காட்சிகளாகக் காணும்படி செய்து, பாடத்தைச் சுவையுள்ளதாக, உயிருள்ளதாக ஆக்கி அதில் மாணவர்களுக்கு ஒரு கவர்ச்சி உண்டாகுமாறு

செய்தல் ஆசிரியரின் கடமையாகும். குறித்த பகுதியை இங்ஙனம் நடத்திய பிறகு, திருப்பிக் கூறலில் தொடர்ச்சி யாகவும் காரண காரியமுறையிலும் கேள்விகள் கேட்டு அவ் வப்போது வருவித்த விடைகளைக் கரும்பலகையில் எழுதிப் பின் பாடமுடிவில் மாணவர்கள் உளத்தில் நடந்த பாடத்தின் பிண்டப்பொருள் நன்கு அமையுமாறு சுருக்கத்தையும் ஆசிரியர் எழுதி மாணவரைப் படிக்கச்செய்து, குறிப்புப் புத்தகத்தில் எழுதிக்கொள்ளச் செய்யலாம்.

இனி, பொருள்களை வகுத்துப் பார்க்கும் ஆற்றல் மாணவர்களுக்கு உண்டாகுமாறும், நடந்த பகுதியை நல்ல முறையில் உணர்ந்துகொண்டு உளத்தமைக்குமாறும் ஆசிரி யர்கள் உரை நடை வகுப்புகளில் (ஏற்ற பிறபாடங்களிலும்) **ஒருங்குகூடி ஆராய்தல்** என்னும் புது முறையையும் மேற் கொள்ளுதற்குரியர். இதைத் தமிழ் உரை நடை வகுப்புகளில் மேற்கொண்டு, பழைய முறையோடு ஒப்பிட்டுப் பார்த்தல் நல்லது. படித்த பொருள்களைத் தெளிவுப்படுத்தவும் பிள்ளை கள் அவற்றை உணர்ந்தார்களா எனக் கண்டறியவும் ஆசிரியர் வினவும்போது மாணவர்களையே ஆசிரியர் கேட்டல் என்ற முறைக்கு மாருக ஆசிரியரும் மாணவர்களும் தத்தமக் குள் கேள்விகளை மாற்றிக் கேட்டுக்கொள்ளவும், மாணவர் களுக்குள்ளேயே கேட்டுக்கொள்ளவும் ஆன ஒரு புதுமுறை யை மேற்கொள்ளலாம். இம்முறையில் வகுப்பின் ஒழுங்கு கெட்டுப்போய்விடாமல் ஆசிரியர் கவனித்துக் கொள்ளவேண் டும். இதில் வகுப்பை இரு பிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவார் மற்றொரு பிரிவாரை மாற்றி மாற்றிக் கேட்கும்படி செய்து, மதிப்பெண்களும் கொடுத்து எப்பிரிவு சிறந்தது என்றும் கண்டுகொள்ளும்படி செய்யலாம். இதனாலும், மாணவர்கள் ஆசிரியரைக் கேட்டல் என்ற புதுமையாலும் மாணவர்களுக் குப் பாடத்தின்மீது புதியதொரு கவர்ச்சியும் ஊக்கமும் ஏற் படலாம். மேலும் தன்னம்பிக்கையும், தன் முயற்சியும் வளர இடமுண்டு.

இதற்கு, குறித்த ஒரு கால அளவில், குறித்த ஒரு பகுதியை வாய்க்குள்ளேயே படிக்கச்செய்து, பின் அப் பகுதியில் வினவச்செய்யலாம். அல்லது குறித்த பகுதியில் வரும் பொருள்பற்றிய சில கேள்விகளைக் கரும்பலகையில் எழுதி, அவற்றிற்கு விடையை, அப்பகுதியை வாய்க்குள் ளேயே படித்துக் கண்டு கொள்ளச் செய்து, பின் ஒருவர்க் கொருவர் கேட்டு வெளிப்படுத்தும்படி செய்யலாம். கதை யாயின் தொடர்ச்சியாக மாணவரைக் கூறும்படி செய்ய

லாம். ஒரு பகுதியை வாய்க்குட் படித்த பின்னர், வாய் விட்டும் ஒவ்வொருவராகப் படிக்கச்செய்தும், ஆசிரியர் படித்தும் வினவச்செய்யலாம். எது சிறந்ததென்பதை வகுப்பும் இடமும் நோக்கி ஆசிரியர் தெரிந்து கொள்ள வேண்டும்.

எம்முறையில் உரை நடைப் பாடம் நடைபெறினும், நடித்துக்காட்டல், குறிப்புகள் எழுதுதல், கட்டுரையெழுது தல், உரையாடல் முதலியவற்றை ஈற்றில் நேரமிருக்கு மாயின் செய்யலாம். எம்முறையிலும் வினவிடைகள், சொற் ளொடர்கள், அருஞ்சொற்கள், இலக்கணக்குறிப்புகள் முதலிய வற்றை மாணவர்கள் தம் வாக்கிலேயே வைத்து வழங்குமாறு செய்யும் மொழிப் பன் முறைப் பயிற்சிகள் சிறந்த இடம் பெறவேண்டும்.

## அகன்ற படிப்பு

நாம் மொழிப் படிப்பை இரண்டு வகையாகப் பிரிக்க லாம். அவை ஆழ்ந்தபடிப்பு, அகன்ற படிப்பு என்பன வாகும். பள்ளிக்கூடங்களில் ஆழ்ந்த படிப்பிற்காகப் பாட நூல்களைக் கற்கின்றோம். பல வகுப்புகளிலும் இப்படிப் பிற்காகவே பாட நூல்கள் வைக்கப்பட்டுள்ளன. அவற்றி லுள்ள சிறந்த உரைநடை, செய்யுட் பகுதிகளை மாணவர் நுட்பமாய் ஆராய்ந்து படிக்கவேண்டும். பொருள் உணர்வ தோடு சொல் நயம் பொருள் நயங்களைச் சுவைத்து இன்புறுவ தும் இப்படிப்பின் நோக்கமாகும், மேலும் கதைகளில் வரும் ஆட்களின் குணங்களையும் இயல்புகளையும் அறிதலும் பாட அமைப்பின் ஒழுங்கையும், இலக்கணக் குறிப்புகளையும் அமைதிகளையும், சொற்றொடர் மரபுத் தொடர்களையும் உணர் வது மட்டுமின்றித் தம் வாக்கிலேயே அவற்றை வைத்து வழங்கப் பயில்வதும் **ஆழ்ந்த படிப்பின்** குறிக்கோளாம். இது மேலெழுந்த வாரியாய் நுனிப் புல் மேயாமல் ஆழ்ந்த நுட்ப மாக உணர்ந்து கவனிக்கும் வழக்கத்தை வளர்க்கும்.

ஆனல் ஆழ்ந்து படிக்கின்ற பாடப் புத்தகங்களுடன் விரைவாகவும் வாய்க்குள்ளும் படிக்கவேண்டிய பிறிதொரு படிப்புமுண்டு. இதுவே **அகன்ற படிப்பாகும்**. இதன் இன்றி யமையா இயல்புகள் விரைவாகவும் வாய்க்குள்ளும் படித்தலும் பொருளுணர்தலுமாம்.

**அகன்ற படிப்பை வளர்க்கும் சில வழிகள்.** கீழ்க்கண்டவற்றை விரைவாகவும் வாய்க்குள்ளும் பொருளுணர்ந்து படித்தல் களைக் கொள்ளலாம் :—

1. துணைப்பாட நூற்படிப்பு.
2. நூல் நிலையப் படிப்பு.
3. செய்தித்தாள்கள்.
4. பலவகைப்பட்ட இதழ்கள் :—வாரம், வாரம் இருமுறை, வாரம் மும்முறை, திங்கள், திங்கள் இருமுறை, (பிறை வெளியீடு) திங்கள் மும்முறை, ஆண்டு ஆண்டு இருமுறை மும்முறை நான்கு முறை முதலியன, விளக்க இதழ்கள், சிறுவர்க்கான விளக்க இதழ்கள் முதலியன.
5. சிறுவர் செய்தித்தாள்கள்.
6. நிகண்டுகள், அகராதிகள்—சொல்லாட்சி, சொற்றொடர் மரபுத் தொடர்கள், பழமொழிகள், சொற்பிறப்பியல் முதலியவற்றைக் கூறும் அகராதிகள்.
7. ஆராய்ச்சி நூல்கள்—இலக்கியம், மொழி, மொழி நூல், இலக்கிய ஆராய்ச்சி, நாட்டு வரலாறு முதலியவற்றின் வரலாறும் ஆராய்ச்சிகளும்.
8. தனிப் பாடல்கள்—நாட்டுப் பாடல்கள், நாடோடிப் பாடல்கள், கும்மி, சிந்து, தெம்மாங்கு, களிப்பு, குறம், பள்ளு முதலியன.
9. சிறப்புப்பெயர் அகராதிகள், பல் பொருட்களஞ்சியங்கள்.
10. இன்னோரன்ன ஏற்ற பிற நூல்கள்.

## அகன்ற படிப்பின் நோக்கங்கள்

மொழியறிவை வளர்த்தல், (மொழி நோக்கம்) சொற்களஞ்சியத்தைப் பெருக்குதல், உலக அறிவையும் பொது அறிவையும் வளர்த்தல், படிப்பில் ஒரு பற்றை உண்டாக்கித் தாமாகவே படிக்க வெண்டுமென்ற ஆவலையும் பழக்கத்தையும் தோற்றுவித்தல் (இலக்கிய நோக்கம்) விரைவாகப் படிக்கும் திறமையை உண்டுபண்ணுதல், விரைவாகப் படிக்கும் போதே பொருளுணர்ந்து கொள்ளுதல், சிந்தனை, கருதல்களைப் போற்றுதல், உயிர்நிலைக் கருத்தை உடனுணர்ந்து கொள்ளும் ஒட்பத்தை வளர்த்தல், (அறிவு நோக்கம்) வாய்க்குட் படிப்பதால் காலம், முயற்சிச் செலவுகள் குறைவதாலும் ஒலி உறுப்புகள் இயங்காமையினாலும் குறைந்த நேரத்தில்

மிகுதியாகப் படித்தல், தன்னம்பிக்கையையும் தன் முயற்சியையும் வளர்த்தல், காலத்தை வீணுக்காமல் ஓய்வு நேரத்தைத் தூயவழியிற் செலவழித்தல், அவலக்கவலைகளை மறந்து உடற் சோர்வு உளச் சோர்வுகளை நீக்கி ஓய்வு பெறுதல், பிற்கால வாழ்க்கையில் பிறர் உதவியின்றித் தாமாவே வேண்டியவற்றைப் படித்து இன்புறுவதற்குப் பழக்குதல் முதலியன இப்படிப்பின் சில சிறந்த நோக்கங்களாம். வாய்க்குட் படிப்பின் நன்மைகளையும் இதோடு இணைத்துக் கொள்ளும்.

## துணைப்பாட நூற் படிப்பு

அகன்ற படிப்பை இடைநிலை, உயர்நிலை வகுப்புகளில் வளர்ப்பதற்குத் துணைப்பாட நூற்படிப்பு (Non-Detailed Study) ஒரு சிறந்தவழியாகும் என்று கூறினேம் அன்றோ? துணைப்பாட நூல்களைப் படிப்பதன் நோக்கங்களாக, "அகன்ற படிப்பின் நோக்கங்கள்" என்ற தலைப்பின் கீழ்க் கூறியவற்றையே கொள்ளுக. இனி, துணைப்பாட நூல்களின் தகுதிகளையும், எவற்றைத் துணைப்பாட நூல்களாகப் பொறுக்கி எடுத்தமைக்கலாம் என்பதையும், மேல் வகுப்பு நூல் நிலையங்களைப்பற்றிய குறிப்புகளிற் கூறியுள்ளவற்றிலிருந்தே அமைத்துக் கொள்ளலாகும். அவைகளே இவற்றிற்கும் ஏற்றனவாம்.

எளிய துணைப்பாட நூல்களைத் தொடக்க நிலையில் மேல் வகுப்புகளிலிருந்தே (4, 5–ஆம் வகுப்புகள்) தொடங்கலாம். விரைவாகப் பொருளுணர்ந்துகொண்டே படித்துக்கொண்டே போவதற்கும், கதைத்தொடர்பையும், கதையில் வரும் செயல்கள், நிகழ்ச்சிகள், ஆள்களின் இயல்பு போன்றவற்றையும் பொதுப்பட உணர்ந்து கொண்டு, அறிவை வளர்த்துக் கொள்வதே இப்படிப்பின் அடிப்படை நோக்கமாதலின் இந்நூலை ஆழ்ந்த படிப்புக்குரிய பாடநூல்போல் வகுப்பில் நடத்த வேண்டியதில்லை நடத்தினுலும் பொதுப் போக்கைக் கற்பித்தால் போதுமே ஒழிய அருஞ்சொல் விளக்கம், சொற்றொடர் மரபுத்தொடர் விளக்கம், அவற்றை மாணவர் வாக்கில் வைத்துப் பயிற்சிவிக்கும், பன்முறைப்பயிற்சி, அரிய சொல்லாட்சி, இலக்கணக் குறியீடுகளின் விளக்கம், அணி, உவமை உருவகங்கள் முதலியவற்றின் அழகையும் பொருத்தத்தையும் புலப்படுத்தல், முதலிய இன்னோரன்ன முறைகளை ஆசிரியர் மேற்கொள்ள வேண்டியதில்லை. இவற்றை மாணவரே, இதற்கென வகுப்பிருந்தால், அதில், அல்லது, வீட்டில் படித்துக்

கொண்டு வரவேண்டும். வேண்டுமென்றால் முன்னுரையாக ஆசிரியர் அக்கதை நடக்கும் காலம், இடம், சூழ்நிலை முதலிய துணைக்குறிப்புகளைத் தரலாம். ஒரு பகுதியைப் படித்து முடிந்தவுடன் கதையைத் தொடர்ச்சியாகக் கூறச் செய்யலாம். அதில் எந்நிகழ்ச்சி, அல்லது எந்த ஆளின் குணநலம், குணநலத்தில் எந்த இயல்பு தங்கள் கருத்தைக் கவர்ந்தது அது சிறந்தது என்று கருதற்குரிய காரணங்கள் எவை என்பது பற்றி எழுதச்சொல்லலாம். வாய் மொழியாகக் கூறிய கதையையும் எழுதச் சொல்லலாம்.

கதைப் போக்கு, ஆள்களின் குணநலம், நிகழ்ச்சிக் குறிப்புகள் முதலியவற்றைப் பற்றிய சிறு குறிப்புகளும் (Short Notes) எழுதச் சொல்லலாம் வர்ணனைகளும் கேட்கலாம். வினு விடை முறையையும் மேற்கொள்ளலாம். புதிய முறைக் கேள்விகளின் வாயிலாகவும் அவர்களின் படிப்பறிவைக் காணலாம். படிப்பின் முடிவில் படிப்பறிவைத் திரும்பக்கூறும் கேள்விகளின் வாயிலாய்க் (Recapitulatory or Review Questions) கண்டறியலாம். மேலும் படித்துக் கொண்டு போகும்போதே, சில பிற்போக்காளரான மாணவரும் பின்பற்றிக்கொண்டு வருகின்றனரா என அறியவும். அவர்களை இடையிடைக் கேள்விகளும் கேட்கலாம். (Testing Questions) இக்கேள்விகள் எல்லாம் மாணவர்களின் படிப்பு விரைவாகப் போவதற்கும், பொருளுணர்ந்து படித்துக் கொண்டு போவதற்கும் உதவுவனவாம். சுருக்கும் (Epitomy) குறிப்புச் சட்டகம் எழுதல் (Skeleton) அறிக்கைகள் எழுதல் (Reports) குறிப்புகளும் விவரங்களும் தொகுத்தல் (Collecting Data) தொகுத்தவற்றை ஒழுங்காக வகைப் படுத்தல் (Classification) கற்பனையிலிருந்து, இப்படித்தான் சில பொருள்கள் இருந்திருக்கலாம் என ஒரு தற்கால முடிவுக்கு வந்து பின் அவற்றைப் பொருத்திப் பார்த்து உய்த்துணர்ந்து, தீர்மானித்து முடிவுகட்டல் முதலியவற்றையும் இவ்வகுப்பில் செய்யச் சொல்லலாம். இனி, பள்ளியிறுதித் தேர்வில், துணைப்பாட நூல்களிலிருந்து கட்டுரை எழுதும் கேள்விகளும் கேட்கப்படுவதால் அதற்கென மாணவர்களைப் பயிற்றுவித்தல் ஆசிரியர்களின் கடமையாகும், அரைமணி நேரத்தில் விடைத்தாள் அளவில் ஒன்றரைப் பக்கத்துக்கு மிகாமல் கட்டுரைகள் (துணைப்பாட நூலுக்குக் கொடுத்த குறிப்புகளை ஒட்டி) எழுதச் சொல்ல வேண்டும். கட்டுரை திருத்துவதற்குக் கொடுத்துள்ள குறிப்புகளின் துணைக் கொண்டு ஆசிரியர்கள் இவற்றைத் திருத்தவும் வேண்டும்.

## நூல் நிலையப் படிப்பு

அகன்ற படிப்பை நூல் நிலைய வகுப்புகளிலும் வளர்க்கலாம். **நூல் நிலைய வேளை**யென இப்பொழுதுள்ள கால அட்டவணையில் புதிதாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இவ்வேளை தமிழுக்காகவும் தனியாக ஏற்படுத்தப்படல் வேண்டும். சில நூல்களைப் பொறுக்கி யெடுத்துக் கொடுத்து இவ்வேளையில் வாய்க்குள்ளேயே படிக்கும்படி செய்து அவ்வேளையில் முடியாவிட்டால் வீட்டிலும் கொண்டு போய்ப் படித்து வரச் செய்து மொழியறிவு முதலிய முன் கூறப்பட்ட நோக்கங்களைக் கைவரச் செய்யலாம். மாணவர் படித்த பகுதியின் சுருக்கத்தை வாய்மொழியாகக் கூறச் செய்யலாம்; கட்டுரையாக எழுதச் செய்யலாம்; படிக்கும் பொழுதே அவ்வப் பொழுது குறிப்புகள் எடுத்துக் கொள்ளச் செய்து பின்னர் விரித்து எழுதும்படியும் செய்யலாம். ஆசிரியரும் அந்தந்த நூலின் உள்ளடக்கத்தைச் சுருக்கமாகக் கூறல், எளிதில் விளங்காத சில அருஞ்சொற்களை விளக்கல் முதலிய சிற்சில உதவிகளைச் செய்யலாம். ஆனல் ஆழ்ந்த படிப்பிற்போல விளக்கமும் பயிற்சியும் வேண்டியதில்லை. மாணவர்க்கு அவ்விதம் தெரிய வேண்டிய கட்டாயமுமில்லை; இடம் நோக்கிப் பொருளுணர்ந்து கொண்டாலே போதுமானது. மேலும் ஒவ்வொரு வாக்கியமாகப் படிக்க வேண்டியதுமில்லை. பொருளைப் பொதுவாக உணர்தல் அல்லது கதையைத் தொடர்ச்சியாக அறிதல் முதலியன ஏற்பட்டாலே போதுமானது.

## நூல் நிலையங்கள்

நூல் நிலையங்களைப் பொதுவாக, பொது நூல் நிலையம், மேற்கோள் நூல்நிலையம், வகுப்பு நூல் நிலையம் என மூப் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவற்றுள் **பொது நூல் நிலையத்தில்** எல்லா வகுப்பு மாணவர்களும் ஆசிரியர்களும் படிக்கக்கூடிய பல கலைகள் பற்றிய நூல்களும் செய்தித் தாள்களும் இதழ்களும் அடங்கியிருக்க வேண்டும். **மேற்கோள் நூல் நிலையத்தில்** அகராதிகள், நிகண்டுகள், சிறப்புப்பெயர் அகராதிகள், சங்க காலத்து இலக்கியங்கள், பிற இலக்கியங்கள், தமிழ்ப் பொழில், தமிழர் நேசன், கலைமகள், செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி முதலியவற்றின் கழிந்த ஆண்டுத் தொகுதிகள் முதலியன இருக்கவேண்டும். சிறுவர்க்கு விருப்புண்டாகக் கூடிய அழகிய படங்கள் கொண்ட சிறுவர் செய்தித் தாள்களும் வெளியீடுகளும் சேர்க்கப்படலாம். **வகுப்பு நூல் நிலையத்**

தில் அவ்வகுப்புப் பிள்ளைகளுக்கேற்ற நூல்கள் தமிழாசிரியரின் பொறுப்பில் இருத்தல்வேண்டும். அவைகளை அவர் கொடுத்து வாங்குவதுடன் அவர்கள் எதை எப்படிப் படிக்கின்றார்கள் என்பதை மேற்பார்வை பார்க்கவும் வேண்டும். தமிழுக்கெனத் தனியாக ஒரு நூல் நிலையப் பாடவேளை நடத்தப்படவும் வேண்டும்.

## வகுப்பு நூல்நிலையத்தில் வைப்பதற்குரிய நூல்களைப் பொறுக்கி எடுத்தலும் அதிற் கவனிக்க வேண்டிய சில விதிகளும்

1. அவ்வகுப்பு மாணவர்களின் அறிவுக்கும் தகுதிக்கும் மனப்பான்மை, மன ஆற்றல், பொருளறிவு முதலியவற்றிற்கும் ஏற்றவாறு நூல்களை வைத்திருத்தல் வேண்டும்.

2. ஆழ்ந்த படிப்பிற்குரிய பாடப்புத்தகங்களைப்போல் ஆங்காங்கு முடிவுறும் சிறு சிறு பாடங்களைக் கொண்டிராது, இவை தொடர் நிலையாகத் தொடர்ந்து செல்கின்ற கதைகளைக் கொண்டனவாய், மாணவரின் கவனத்தை இறுதி வரையில் இழுத்துக்கொண்டு போகின்றனவாய் இருக்க வேண்டும். மிகுந்த எண்ணிக்கையுடைய பலவகை நூல்கள் இருக்க வேண்டும்.

3. மாணவர்கள் உண்மையாக விரும்புகின்ற நூல்களையே கொண்டிருத்தல் வேண்டும். மாணவர் இன்னின்னவற்றையே விரும்பிப் படிக்கவேண்டும் என்று வற்புறுத்தி நூல்களை ஆசிரியரே நுழைத்தல் நலமன்று. எடுத்துக்காட்டாக, முதல் ஐந்து வகுப்புகளுக்குச் சிறுகதை நூல்களும் மேல் வகுப்புகளுக்குத் தொடர்கதை நூல்களும் இருக்கலாம். அப்பொழுதுதான் மாணவர் அவற்றை விருப்பத்துடன் படிப்பர்.

4. உயர்நிலை வகுப்புகளில் மாணவர்களுக்கு விருப்பமுள்ள நூல்களுடன்கூட அவர்கள் படிக்க வேண்டுமென்று ஆசிரியர்கள் நினைக்கின்ற நூல்களையும் சேர்க்கலாம். ஆனால் கீழ் வகுப்புகளில் மாணவர் விரும்பும் நூல்களேதான் இருக்க வேண்டும்.

5. ஆழ்ந்த படிப்புப் பாட நூல்களைப்போல் பலரால் எழுதப்பட்ட ஒரு நூலாயிராமல் ஒருவராலேயே எழுதப்பட்ட நூலாயிருக்க வேண்டும்; பலர் எழுதிய பல தனித்தனி நூல்களை வைக்கலாம்.

6. மாணவர் பெரும்பாலும் ஆசிரியர் உதவியின்றியும் மிக விரைவாகவும் இவற்றைப் படிப்பதால், அருஞ்சொற்களையும் அறிய முடியாத பொருள்களையும் கடின நடையையும் இவை கொண்டிருப்பின் மாணவர்க்கும் படிப்பதற்கு ஆர்வமிருக்காது. எனவே அழகான, எளிய, இனிய, தூய நடையை யுடையனவாய் எழுத்துப் பிழை எதுவுமின்றி, ஏற்ற விளக்கப் படங்களுடன் இவை இருக்கவேண்டும்.

7. வகுப்புக்கேற்ற பெரிய எழுத்துகளில், நல்ல தாளில் அச்சிடப்பட்டு, நல்ல கட்டமைப்பும் கண்கவர் வனப்பும் வலிமையும் பொருந்திய நூல்களாயிருத்தல் வேண்டும்.

8. தாமாகவே படித்தறிந்தோம் என்னும் ஒரு மகிழ்ச்சியை ஊட்டத்தக்கனவாய், மாணவர்க்கு விருப்பமுள்ள பொருள்களைப் பற்றியவையாய் இவை இருத்தலே சாலச் சிறந்ததாகும்.

## வகுப்பு நூல் நிலையங்களில் வைக்கத் தகுந்த நூல் வகைகள்

1. நிகழ்ச்சிகளும் செயல்களும் மல்கிய கதை நூல்கள்.

2. வழிச் செலவுகளைப் பற்றியனவும், புதிய நாடுகளை முதன் முதலாகக் கண்டுபிடித்த வரலாறுகள் பற்றியனவு மான நூல்கள்.

3. வெளிப்படுத்தப் பட்டவைகளையும் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டவைகளையும், கண்ணையும் கருத்தையும் கவரவல்ல விளக்கப் படங்களுடன் விளக்கும் நூல்கள்.

4. நம் நாட்டு அயல்நாட்டுக் காட்சிகளையும் பழக்க வழக்கங்களையும் விளக்கிக் கூறும் நூல்கள். இவை கூடிய வரையில் ஒரே வகுப்பில் பலவற்றைப் படிக்க இயலுமாறு சற்றுச் சிறியனவாய் இருத்தல் வேண்டும்.

5. பல் பொருள் பற்றியனவும் பல்வேறு நடைகள் கொண்டுள்ளவுமான நூல்கள்.

6. அழகுணர் ஆற்றலை வளர்க்கக் கூடிய நூல்கள்.

7. பொது அறிவையும், அறிவியல் அறிவையும் வளர்க்கவல்ல நூல்கள் முதலியன.

## நூல் நிலைய வகுப்பை நடத்தும் முறையைப் பற்றிய சில குறிப்புகள்

1. ஒவ்வொரு வகுப்பு மாணவனுடைய பெயர், அவன் படிக்க எடுக்கும் நூல்களின் பெயர், அவன் படிப்பின் முன்றே

திருத்தி முதலியவற்றைப் பற்றிய கருத்துக்கள் அடங்கிய குறிப்புப் புத்தகங்க ளிருக்க வேண்டும்.

2. நூல் நிலைய வகுப்பில் பற்றுண்டாகுமாறு, பொது வகுப்புகளிலேயே ஏற்ற இடங்களில் இன்ன மேற்கோள்களை இன்ன நூல்களில், இன்ன இடத்தில், நூல் நிலையத்திற் காணலாகும்; படியுங்கள் என்று தூண்டவேண்டும். இப்படி ஒரு பற்றை உண்டாக்கிவிட்டால் இவ்வகன்ற படிப்புப் பழக்கம் வாழ்க்கை முழுவதும் நிலைபெற இடமுண்டு. இதற்கு ஆசிரியர் நன்கு படித்தறிந்தவராயிருத்தல் வேண்டும்.

3. இவ்வகுப்பில் தாம் பொறுக்கி யெடுத்த நூல்களை வாய்க்குள்ளேயே படிக்குமாறு செய்தல்வேண்டும். அல்லது ஒரு கதையையோ ஒரு பொருள் பற்றியோ அப்பொழுது நடந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றியோ படிக்கச் சொல்லி அதைப்பற்றிய விவரங்கள் இன்ன இடங்களில் கிடைக்கும் என்று படிக்கச் சொல்லிக் குறிப்புகள் எடுக்கச் சொல்லலாம்.

4. ஒரே நூலுக்குப் பல படிகள் இருக்குமாயின் அதே நூலை வகுப்பு முழுவதும் கொடுக்கலாம். சில படிகளே இருக்குமாயின் வகுப்பைச் சிறு பிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவுக்கு ஒரு நூலையும் மற்றொரு பிரிவுக்குப் பிறிதொரு நூலையும் கொடுத்துப் பின்னர் அவற்றை மாற்றிக் கொள்ளும்படி செய்யலாம். வேண்டிய சமயங்களில் அந்நூலை வீட்டுக்கும் எடுத்துக்கொண்டு போய் அப்படிப்பை முற்றுவிக்கச் செய்யலாம். அவற்றைத் திருப்பிக் கொணர்ந்த பின்னர் அவற்றிலுள்ள பொருள்பற்றி ஆசிரியர் ஆராய்ந்து, காலத்திற்குத் தக்கவாறு கேள்விகள் கேட்டும், கதைகளில் வரும் ஆட்களின் செயல்கள், இயல்புகள் முதலியவற்றை விளக்கமாகச் சொல்லச் செய்தும், சுருக்கமாக எழுதச்செய்தும், நாடகமாக மாற்றி எழுதவும் நடிக்கவும் செய்தும் அவர்கள் படிப்பறிவைத் தேறவும்.

5. மாணவர்களே விரும்பும் நூல்களைக் கொடுக்கவேண்டுமே யல்லாது, தான் ஒன்றைக்கொடுத்து இதைத் தான் நீ படிக்கவேண்டும் என்று ஆசிரியர் வற்புறுத்தக் கூடாது.

6. புதிய சொற்றொடர்களையும் அருஞ் சொற்களையும் ஓரோவழி ஆசிரியர் விளக்கலாம். ஆனால் ஆழ்ந்த படிப்பிற் போல பாடநூலிற் போலப் பயிற்சிகளும் பிறவும் வேண்டா.

விளக்கவும் கதைத் தொடர்புக்காகவே யன்றி மொழிப் பயிற்சிக்காக வேண்டுவதில்லை.

7. சற்றுப் பிற்போக்கான பிள்ளைகள் பாடத்தைப் பின்பற்றி வருகிறார்களா என்பதைப் படிப்புக்கு இடையிடையே கேள்விகள் வாயிலாய் அறியலாம். படிப்பு விரைவாகப் போனால் தான் அதில் பற்று குறையாது என்றும் வற்புறுத்த வேண்டும்.

8. படிக்கும்போது பொதுவாக என்ன சொல்லப் பட்டிருக்கிறது என்பதையும் அறிந்துகொண்டே போய்க் கதையின் பொதுப் போக்கையும் தொடர்ச்சியையும் உணர்ந்தாற் போதும் என்பதை வற்புறுத்த வேண்டும்.

9. வாய்க்குள்ளேயே படிக்கும் சலிப்பைப் போக்க இடையிடையே ஆசிரியரோ அல்லது நன்றாகப் படிக்கும் ஒரு மாணவனோ ஒரு பகுதியைச் சிறிது வாய்விட்டுப் படிக்கலாம்.

10. இப்படிப்பில் சுவை உண்டாவதற்கு, இனி என்ன நடக்கப் போகிறது என்று எதிர்பார்த்தலைத் தட்டி எழுப்பத் தக்க ஓர் ஏற்ற இடத்தில் நிறுத்திவிட்டு, மேல் என்ன நடந்தது என்பதை அவர்களே படித்தறிய ஏவுதல் ஒரு நல்ல வழியாகும்.

11. சொல் ஆட்சி, சொற்றொடர்கள், மரபுத் தொடர்கள், பழமொழிகள், சொற்பிறப்பியல் முதலியவற்றைக் காட்டும் நிகண்டுகள், அகராதிகள் முதலியவற்றைப் பார்க்கச் செய்யலாம்.

12. நாட்டுப் பாடல்கள், நாடோடிப் பாடல்கள், தனிப் பாடல்கள், கும்மி, சிந்து, தெம்மாங்கு, குறம், பள்ளு, சிறப்புப் பெயராதிகள், பல்பொருட் களஞ்சியங்கள் முதலியவற்றைப் பார்க்கச் சொல்லலாம்.

13. இலக்கியம், மொழி, மொழி நூல், நாட்டு வரலாறு முதலியவற்றைப் பற்றிய வரலாறுகளையும் இலக்கிய ஆராய்ச்சி நூல்களையும் படிக்கச் செய்யலாம்.

14. சிறுவர்க்கான விளக்க இதழ்கள், அன்றாடச் செய்தித் தாள்கள், வாரம், வாரம் இருமுறை, மும்முறை, திங்கள், திங்கள் இருமுறை, மும்முறை, ஆண்டு, ஆண்டிரு முறை, மும்முறை, நான்கு முறை வெளிவரும் இதழ்கள் முதலியவற்றையும் பார்க்கச் செய்யலாம்.

## செய்யுட் பொருள் உணர் பயிற்சி (Comprehension)

ஆழ்ந்த படிப்பிற்குரிய தமிழ்ப்பாட நூல்களுக்குப் புறமாக, அகன்ற படிப்பை வளர்ப்பதற்குரிய, துணைப்பாட நூற்படிப்பு, நூல் நிலையப்படிப்பு முதலியவற்றைப் பற்றிப் படித்தோம். அதுபோலவே சிறந்த புலவர்களின் செய்யுட் பகுதிகளைப் பாடநூல்களிற் படிப்பதற்குமேலும், மாணவர்கள் தாமாகவே, பாடநூல்களில் இல்லாத செய்யுட் பகுதிகளையும் படித்து இன்புறவேண்டும். அதற்கான பயிற்சிகளையும் ஆசிரியர்கள் கட்டுரை வகுப்புகளில் தரவேண்டும். நகை, அழுகை, அச்சம், பெருமிதம் முதலிய ஒன்பது சுவைகளை ஊட்டவல்ல பாடல்களும், மலை, கடல், நாடு, வளநகர், பருவம், இருசுடர்த்தோற்றம், செடி கொடிகள், பூக்கள், பறவைகள் முதலிய இயற்கைப் பொருள்களின் அழகுகளைத் தெரிவிக்கும் பாடல்களும், கடவுள் அன்பு, நாட்டுப்பற்று, மொழிப்பற்றுகளை ஊட்டவல்ல பாடல்களும், மனித இயற்கையை ஊடுருவி உணர்ந்து வெளிப் படுத்தும் பாடல்களும், ஒழுக்கத்தின் விழுப்பத்தை அறிவுறுத்தும் பாடல்களும், அறவுரைகளையும் அறிவுரைகளையும் கொண்ட பாடல்களுமாகிய பல்வகைப் பாடல்களையும் மாணவர்கள் தாமாகவே படித்தின்புறலாம். தாமாகவே மாணவர்கள் படிக்கப்போவதால், இவை எளிய நடையுடையன வாய், மாணவர்கள் தாமாகவே திரண்ட கருத்துணர்ந்து இன்புறத் தக்கனவாய், இருக்க வேண்டும். திரிசொல், மடக்கு, யமகம், அந்தாதி போன்றவை பயிலாமல் எளிய இனிய செந்தமிழ் நடைபயின்ற பாடல்களே இப் பயிற்சிக்கு ஏற்றன. 20 வரிகளுக்குக் குறையாமலும், 25 அல்லது 30 வரிகளுக்கு மிகாமலும் உள்ள பாடற் பகுதிகளை இப்பயிற்சிக்குத் தேர்ந்து எடுத்துத் தரலாம்.

பாடலை இரண்டு, மூன்று, நான்கு தடவைகள், அல்லது, திரண்ட கருத்து ஒருவாறு மாணவருக்குப் புலப்பட்டது என்று காணும் வரையில், தடவைகளைக் கூட்டியோ குறைத்தோ, தெளிவாகவும் மெதுவாகவும், பொருள் முற்றுப்பெற்று இறும் இடங்களில் போதியகால அளவு நிறுத்தி ஆசிரியர் இப்பயிற்சி வகுப்பில் படித்துக் காட்ட வேண்டும். பின் திரண்ட கருத்தைத் தாமாகவே மாணவர் உணர்ந்திருக்கிறார்களா எனக் கண்டறிய அக்கருத்துப் பகுதிகளை உள்ளடக்கிய வினாக்களைத் தொடர்ச்சியாக விடுத்து, விடைகளை வரவழைக்கவேண்டும். விடைகள் வரு

விப்பதற்கு இடையூருக, விளங்காத அருஞ்சொற்கள் அல்லது தொடர்கள், இருக்குமாயின் அவற்றைமட்டும் விளக்கி, கரும் பலகையில் எழுதிக் காட்டலாம். இவ்வகுப்பில் அருஞ்சொற் களை விளக்கும்போது, செய்யுள் வகுப்பில் நடத்துவதுபோல், ஆழ்ந்து நடத்தவேண்டிவதில்லை. அருஞ் சொல் விளக்கங்கள், மொழிப் பன்முறைப்பயிற்சி, எதுகை, மோனை முதலிய தொடைநலம் காணச் செய்தல், நிகழ்ச்சிகள், காட்சிகள், ஒப்புமைப் பகுதிகள் முதலிய எடுத்துக் காட்டுகளை வழங்கல், இலக்கணக்குறியீடுகள், அரியசொல் லாட்சிகளை விளக்கல், அணிகள், உவமை, உருவங்களின் நயத்தைப் புலப்படுத்தி, பொருளோடு புணர்த்திக் காட்டுதல் முதலிய முறைகளை எல் லாம் ஆசிரியர் மேற்கொள்ள வேண்டியதில்லை. அருஞ்சொற் கள் சில இருப்பின் அவற்றை மட்டும் விளக்கினுல் போதும். இவ்வாறு வாய்மொழியாக முழுவதும் நடத்தி, திரண்ட கருத்தை மாணவர் உளங் கொண்டனரா என்று அறிந்த பின் 15 வரிகளுக்குக் குறையாமலும் 20 வரிகளுக்கு மிகா மலும், இடத்திற்கேற்றபடி, செய்யுளின் திரண்ட கருத்தை மாணவரின் நடையிலேயே எழுதும்படி சொல்லவேண்டும். அல்லது திரண்ட கருத்தை வரவழைக்கும் நோக்கத்தில், சில கேள்விகளின் வாயிலாகவும், முழுவாக்கியங்களில் தம் நடை யிலேயே விடை கூறுமாறு கேட்கலாம்.

## ஆறும் பிரிவு

### இலக்கணம்

மொழிப் படிப்பில் இலக்கணப் பகுதியைப் பற்றி, முறைவல்லார்களிடைக் கருத்து வேற்றுமை மிக இருப்பது போல் வேறு ஒரு பகுதியிலும் இல்லை எனலாம். மேலும், இப்பகுதியே மாணவர்க்கு வெறுப்பையும், சலிப்பையும் கொடுக்கத் தக்க முறையிற் பள்ளிக்கூடங்களிற் கற்பிக்கப் பட்டு வருகிறது.

'பிறர் பிழையறப் பேசுவதைக் கேட்டும், நல்ல நூல் களைக் கற்றுமே திருத்தமாகப் பேசவும் எழுதவும் கற்றுக் கொள்ளலாமே! ஆதலின் இலக்கணமே மாணவர்க்கு வேண்டாம், என்றும், இலக்கண நூல்களை மூட்டை கட்டி மூலையில் வைத்து விடுக' என்றும் ஒரு சாரார் கூறு வர். மற்ஞெரு சாரார் இலக்கணத்தின் பல பகுதிகளையும் அவற்றின் விதிகளையும் தனிப் பாடமாகவே உணர்ந்தா

லன்றி இலக்கணப் படிப்பு படிப்பாகா தென்கின்றனர். இவர்களுக்கு நடுவே பிறிதொரு சாரார் 'இலக்கணம் பிழையற எழுதவும் பேசவும் உதவும் கருவியே ஆதலின், வேண்டிய அளவில் இலக்கண விதிகளை நடை முறையில் அறிந்தாற் போதும்' எனவும், 'அவற்றைத் தனியாகப் 'படித்து' நெட்டுருச் செய்யவேண்டியதில்லை,' என்றும் கூறுகின்றனர்.

இலக்கணமே வேண்டாம் என்பது தொடக்கநிலை வகுப்புகளைப் பொறுத்த வரையில் உண்மையாக இருக்கலாம். அங்கு இலக்கண விதிகளை, எம்முறையிலும் கற்பிக்க வேண்டிய இன்றியமையாமையே இல்லை எனலாம். அந்நிலையில் அவர்களுக்கு இலக்கணத்தை நேர்முகமாக வேனும், மறைமுகமாக வேனும் கற்பிக்கவேண்டி, சொற்களைப் பிரித்தும் வெட்டியும் பின் கூட்டியும் அவற்றின் ஆக்கத்தைக் காட்ட முயல்வது முறையன்று, இஃது அவர்கள் மன நிலைக்கும் ஏற்றதன்று. மேலும் இலக்கியம் கண்டதற்கல்லவோ இலக்கணம்? சொல்லறிவு, பொருளறிவு, மொழியறிவு முதலிய தேர்ச்சிகளில் குன்றியிருக்கும் இளஞ்சிறார்க்கு இலக்கணம் என்ன பயனைச் செய்யும்? சொல்வளமும் கருத்து வளமும் ஓரளவு வந்து உற்றபின்னரே இலக்கணத்தைப் புகுத்துவது முறையும் நேர்மையுமாகும்.

ஆனால், இக்கொள்கை இடைநிலைக்கு முற்றிலும் ஏற்ற தன்று. ஏதாவது ஒரு வகையில் இலக்கணம் இல்லாமல் இந்நிலையில் மொழிப்படிப்பு முற்றுப்பெறாது. ஆதலின் நல்ல புதிய முறையில் அஃதாவது விதிவரு (Inductive) முறையில், நடை முறையில் வரத்தக்கதாய் (functional) மொழிப் பாடத் தோடும், கட்டுரையோடும் பொருத்திக்காட்டும் வகையில், இடைநிலையில் இலக்கணத்தைக் கற்பிக்கலாம். உயர்நிலையில் இலக்கணத்தைத் தனிப்பாடமாகவே நடத்தலாம். அதோடு மொழிப் பாடத்தோடும் கட்டுரையோடும் பொருத்திக் கொள்வது நல்லது. "உயர்நிலை வகுப்புகளுக்கு மாணவர் வருங்கால் இலக்கணத்தைத் தனிப்பாடமாகக் கற்றுக்கொள்வதற்குரிய அறிவும் ஆற்றலும் பெற்றவர்களாய் வருவார்கள் என்று எதிர்பார்க்கலாம். இந்நிலையில் இலக்கணத்தை ஒப்பந்த முறையில் கற்பிப்பது ஏற்றது" என்பர் முறை வல்லார்.

இலக்கணத்தைப் பிழைபட்ட முறைகளிற் கற்பித்தால் மாணவர்கள் அதை வெறுக்கவும் சலிக்கவும் கூடும். ஆசிரியரும் ஊக்கத்தோடு கற்பிக்கின்றார்களில்லை. "எய்தவ

னிருக்க அம்மை நோவது" போல், இலக்கணமாகிய கருவியை வழங்குகின்றவர்கள்பால் காணப்படும் குற்றம் குறைகளை இலக்கணத்தின்மீது ஏற்றி இலக்கணமே பிழை பட்டது என்று முற்றிலும் அதை ஒதுக்குவது அழகாகுமோ? இலக்கணம் தமிழ்க் கல்விக்குக் கண்ணல்லவா? செம்மை யான நேரிய வழி இது, கல்லும் முள்ளும் நிறைந்த குறுக்கு வழி இது என்று நமக்குக் கண் வழிகாட்டுவதுபோல் இலக் கணக் கண்ணும் பிழையின்றித் திருந்திய செம்மையாகிய மொழி நடையை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. கண் ணிழந்துழலும் குருடர்போல் இலக்கணமில்லாத மொழிப் படிப்பாளரும் உழலுவர்.

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

என்று தமிழ்மறை கூறு நிற்கும். எழுத்து ஈண்டு இலக் கணத்தையே குறிக்கும்.

"எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்,
எழுத்தறிவார்க் காணின் இலையாம்"

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும்—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்",

என்பனவும் இலக்கணத்தின் இன்றியமையாமையைப் புலப் படுத்துவனவாம்.

## இலக்கணத்தால் விளையும் நன்மைகள்

1. இலக்கணம் மொழியைத் திருத்தமாகப் பேசவும் எழுதவும் உதவும் கருவியாம்.

2. இலக்கண விதிகளை இலக்கணப் பாடத்தில் மட்டும் கற்பித்து நிறுத்திவிடாமல் மொழிப் பாடத்தோடும் கட்டுரை யோடும் பொருத்திக் கற்பித்தால் இலக்கண விதிகளும் அவற் றின் ஆட்சியும் மாணவர்களுக்கு நன்றாய் விளங்கி, நடை முறையிற் பயன்படும்.

3. மொழியின் அமைப்பை இது நமக்கு நன்றாய் விளக் கிக் காட்டுகிறது. மொழிநூலுக்கு இலக்கணமே இன்றி யமையாத அடிப்படையாம்.

4. பேசப்படும் அஃதாவது வழக்காற்றில் காணப்படும் மொழி மரபுகளை அஃதாவது மொழிப்போக்கை நமக்கு இலக் கணம் தெற்றெனா எடுத்துக்காட்டும்.

5. மாணவருக்கும் ஆசிரியருக்கும், மொழியைத் திருத்த மாய்ப் பேசவும் எழுதவும் இஃது ஒரு கருவியாயிருப்பினும் இந்நோக்கத்தோடு அல்லாமல் இலக்கணத்தின் உண்மை இயல்புகளைக் கண்டறிவதற்கே சில இலக்கண ஆசிரியர்கள் அதனைப் பயிலுகிறார்கள்.

6. இலக்கண அறிவு, மொழியை ஒழுங்காகக் கற்பிக்க வும், அதற்கு ஏற்ற முறைகளை மேற்கோள்ளவும் குறிப்புகளை நல்கவல்லது.

7. மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் தங்கள் எழுத் தும் பேச்சும் செம்மையா யிருக்கின்றனவா என்பதைத் தாங்களே உணர்ந்து கொள்ளுதற்கு இஃது ஏற்ற உரை கல்லாம்.

8. தங்கள் எழுத்திலும் பேச்சிலும் பிழைகள் நேருமா யின் அவற்றைத் திருத்திக்கொள்வதற்கும் இஃது உதவும்.

9. செய்யுட்களைப் பிரித்துப் பொருள் காண்டலுக்கும், சிலேடைப்பொருள் கண்டுமகிழ்வதற்கும், செய்யுள் இயற்ற லுக்கும் செய்யுட்களில் வரும் இலக்கண அமைதிகள், அரிய சொல்லாட்சிகளை அறிவதற்கும் உதவும்.

### பள்ளிக்கூடங்களில் இலக்கணம் வெறுக்கப்படுவதேன்?

1. தொடக்க வகுப்புக்களிலேயே இலக்கணம் தொடங்கு வது.

2. முதலிலேயே விதி விளக்கு முறையிலும் தனியாகவும் இலக்கணத்தைக் கற்பிப்பது.

3. விதிகளையும் நூற்பாக்களையும் முதற்கண் கூறிப் பின் எடுத்துக் காட்டுக்களால் விளக்கும் விதி விளக்கு முறையை இலக்கணப் படிப்பில் மேற்கொள்வது, தெரிந்ததிலிருந்து தெரியாததற்கும், எளிதிலிருந்து அருமைக்கும், தெளிவி லிருந்து சிக்கலுக்கும் போகவேண்டும் என்னும் அடிப்படை யான கல்விபற்றிய கொள்கைகளுக்கு முற்றிலும் மாறாக இருக்கிறது.

4. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற முறையில் இலக்கணத்தைக் கற்பிப்பது. இது காரண காரிய முறையிற் பொருந்தினும் உளநூல் முறைக்குப் பொருந்திய தன்று.

5. மொழிப் பாடத்துடனும் கட்டுரையுடனும் பொறுத்திக் காட்டாமல் இலக்கணத்தைத் தனிப்பாடமாக நடத்துவது.

6. நடை முறையில் வேண்டியது வேண்டாதது என்று இல்லாமல் எல்லா விதிகளையும் கற்பிப்பதோடு நெட்டுருச் செய்ய வற்புறுத்துவது.

7. எடுத்துக் காட்டுகளை மாணவர் தம் வாழ்க்கையில் குறுக்கிட்டு, அவர்கள் பட்டறிந்து பற்று வைக்கக்கூடிய பொருள்களினின்றும் பொருக்கி எடுக்காமல், பழைய இலக்கண நூல்களில் உரையாசிரியர்கள் காட்டியவாறே எடுத்துக் கொள்வது.

8. அவற்றையும் மிகுதியாகக் காட்டாமல் இருப்பது.

9. மாணவர் ஒவ்வொருவரையும் அவர்தம் வாக்கிலேயே இலக்கணக் குறிப்பு முதலியவற்றை வைத்து வழங்கப் பயிற்ருமை.

10. இலக்கணத்தில் எழுத்துப் பயிற்சிகளை மிகுதியாக அளிக்காமை.

11. இலக்கணத்தை ஒரு கருவியாக மட்டும் கருதாமல் இலக்கண அறிவைத் தனியாகப் பெற்றிருப்பதே முடிந்த குறிக்கோளும் பயனும் என்று நினைப்பது.

12. ஆசிரியரே பற்றும் விருப்பமும் கொண்டு பாடத்தை நடத்தாமை.

13. விளையாட்டு, தனித்தனிப் பயிற்சி முறைகளை இலக்கணப் படிப்பிற் புகுத்தாமை.

மாணவர்கள் விரும்பும் வண்ணம் இலக்கணப் பாடத்தை நடத்த நாம் மேற்கூறிய முறைகளைக் கொள்ளாது அவற்றிக்கு முற்றிலும் நேர்மாருன முறைகளை மேற்கொள்ள வேண்டும். அவையாவன :—

1. தொடக்க வகுப்புகளிலேயே இலக்கணத்தைக் கற்பிக்க வேண்டியதில்லை.

2. இடைநிலை வகுப்புகளிலும் கூட, விதிவிளக்கு முறையை மேற்கொள்ளாமலும், தனித்து இலக்கணத்தை நடத்தாமலும், மொழிப் பாடத்தோடும் கட்டுரையோடும் பொருத்தியும் கற்பித்தல் நலம். விதிவிளக்கு முறைக்கு மாருக விதி

வரு முறையை மேற்கொள்ளவேண்டும். இம்முறை, தெரிந்த தில்ருந்து தெரியாததற்கும், எளிதிலிருந்து அருமைக்கும், தெளிவிலிருந்து சிக்கலுக்கும் போகவேண்டும் என்னும் அடிப்படையான கொள்கைக்கு முற்றிலும் பொருந்தி யிருக்கிறது. அஃதாவது விதிகளையும், நூற்பாக்களையும் முன் கூறி, பின் எடுத்துக்காட்டி விளக்கும் முறையைக் கைவிட்டு, முதற்கண் மாணவர்கள் அறிந்த சில எடுத்துக் காட்டுகளிலிருந்து விதியை மாணவர்களே கண்டு வருவிக்கும் முறையை மேற்கொள்ள வேண்டு மென்பதாம்.

3. எல்லா விதிகளையும், வேண்டியது, வேண்டாதது என்று நெட்டுருச் செய்யும்படி வற்புறுத்த வேண்டியதில்லை.

4. இலக்கண அறிவை, மொழிப்பாடத்துடனும், கட்டுரையுடனும் பொருத்தி அதை நடைமுறையிலும் வரும்படி செய்யவேண்டும்.

5. எடுத்துக்காட்டுகள், மாணவர்தம் வாழ்வில் குறுக்கிட்டு, அவர்கள் பட்டு அறிந்து, பற்றுவைக்கக் கூடிய பொருள்களினின்றும், பொருக்கி எடுக்கப்படவேண்டும்.

6. அவற்றையும் மிகுதியாகக் காட்ட வேண்டும்.

7. இலக்கணக் குறிப்புகள் முதலியவற்றை ஒவ்வொரு மாணவரும் தம் வாக்கிலேயே வைத்து வழக்குமாறு பயிற்சி அளிக்கவேண்டும்.

8. எழுத்துப் பயிற்சிகளும் மிகுதியாகக் கொடுக்க வேண்டும்.

9. இலக்கணத்தைப் படிப்பதன் முடிந்த குறிக்கோளும், பயனும் இலக்கண அறிவைத் தனியாகப் பெற்று இருப்பதே என்ற எண்ணத்தை மாற்றி, இலக்கணம் மொழியைப் பிழையறப் பேசுவதற்கும், எழுதுவதற்கும் ஆன ஒரு கருவிதான் என்ற எண்ணத்தை நிறுவவேண்டும்.

10. ஆசிரியரே பற்றும், விருப்பும், கொண்டு பாடத்தை நடத்தவேண்டும்.

11. சொற்றொடர், சொல், எழுத்து என்று உள நூல் முறையில் இலக்கணத்தைக் கற்பிக்கவேண்டும்.

12. இலக்கணப் படிப்பில் விளையாட்டு, தனித்தனிக் கற்றல் போன்ற முறைகளைப் புகுத்தவேண்டும்.

**இலக்கணத்தை விதிவரு (Inductive - முறையிற் கற்பித்தல் எடுத்துக் காட்டுகளிலிருந்து, பொது விதிக்குப் போதல்).**

மாணவர்கள் அறிந்த சில எடுத்துக்காட்டுகளை உற்று நோக்கி, ஒத்துப் பார்த்து, அவற்றிலிருந்து காணக்கூடிய ஒரு பொது உண்மை அல்லது விதியை மாணவர்களாகவே காணவைப்பது இம் முறையின் நோக்கமாகும். திண் பொருள் சிலவற்றையும், நீர்ப்பொருள்கள் சிலவற்றையும், வாயுப் பொருள்கள் சிலவற்றையும் சூடாக்கி விரிவடைவதைக் காட்டி, அவ்வெடுத்துக்காட்டுகளிலிருந்து, இம்மூவகைப் பொருள்களும், சூடாக்கினால் விரிவடையும் என்ற பொது விதியை, மாணவர்களாகவே காணச் செய்வதே விதிவரு முறையாகும்.

| | | |
|---|---|---|
| பெண் + ஆசை | = | பெண்ணாசை |
| மண் + ஆசை | = | மண்ணாசை |
| கண் + ஓட்டம் | = | கண்ணோட்டம் |
| நள் + இரவு | = | நள்ளிரவு |
| புள் + இனம் | = | புள்ளினம் |
| கள் + உண்ணாமை | = | கள்ளுண்ணாமை |
| பொன் + ஆசை | = | பொன்னாசை |
| முன் + ஏற்றம் | = | முன்னேற்றம் |
| தன் + எடுப்பு | = | தன்னெடுப்பு |
| பல் + ஆண்டு | = | பல்லாண்டு |
| மெல் + ஓசை | = | மெல்லோசை |
| சொல் + ஆக்கம் | = | சொல்லாக்கம் |
| மெய் + ஈறு | = | மெய்யீறு |
| மெய் + உணர்வு | = | மெய்யுணர்வு |
| பொய் + உடல் | = | பொய்யுடல் |

மேலே கண்ட எடுத்துக் காட்டுகளை நன்றாக உற்று நோக்குமாறு செய்து, அவற்றிற் பயிலும் நிலைமொழி ஈற்றையும் வருமொழி முதலையும், அவை புணரும்போது நிகழும் வேறுபாடுகளையும் கவனித்து, அதிலிருந்து என்ன பொது விதியை உணரலாமென்று வருவித்து, அவ்விதியே, 'தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்' என்னும் நூற்பாவில் குறிக்கப்படுகின்றதென்று காட்டுவதே மேல் குறித்த முறையாகும்.

## இம்முறையில் ஆசிரியர் கவனிக்க வேண்டியவை

1. ஆசிரியர் கற்பிக்கக் கருதிய விதியமைந்த, சொற்கள் அல்லது சொற்றொடர்களை, மாணவர்களிடமிருந்தே, ஏற்ற கேள்விகளின் வாயிலாய் வரவழைத்து, (இதுவே சிறந்த முறையெனக் கருதப்படுகிறது) அல்லது முடியாவிட்டால் ஆசிரியரே எடுத்துக் கூறிக் கரும்பலகையில் எழுதி, மாணவர்களையே அவற்றை ஒப்பிட்டுப் பார்த்து, வகைப்படுத்தி, ஆராய்ந்து அவற்றிற் காணப்படும் பொதுத் தன்மையாகிய விதியைக் கண்டு பிடிக்கும்படி செய்ய வேண்டும்.

2. பின் அவ்விதியைக் கரும்பலகையில் எழுதி, இன்னும் சில எடுத்துக் காட்டுகளைக் கூறச்செய்து, புதிதாய்க் கண்ட அவ்விதி இவ்வெடுத்துக் காட்டுகளிலும் பொருந்தியுள்ளதா என்று பொருத்திப் பார்க்கச் செய்யவேண்டும்.

3. இறுதியில், விதியை எடுத்துக் காட்டுகளோடு, மாணவர்கள் குறிப்புப் புத்தகத்தில் குறித்து வைத்துக் கொள்ளலாம்.

4. இங்ஙனம் அறிந்துகொண்ட விதிகளை மேல் நடைபெறும் மொழிப் பாடல்களில் ஏற்ற இடங்களில் கேட்டும், பொருத்திக் காட்டியும் பயிற்சி அளிக்க வேண்டும்.

5. பின் கட்டுரைப் பாடத்திலும் இவை பொருந்தி வழங்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். இன்றேல் இவ் விதிகள் மனத்தில் நிலைத்து நில்லா.

6. எடுத்துக் காட்டுகள் மாணவர்கட்கு வெளிப்படையாய்த் தெரிந்தவையாயும், அவர்கள் வாழ்க்கையில் துய்த்து, பற்று வைக்கக் கூடிய செய்திகள் பற்றினவையாயும் இருத்தல் வேண்டும்.

7. எடுத்துக் காட்டுகள் நிரம்பக் கொடுக்க வேண்டும்.

8. ஒவ்வொரு விதிக்கும் ஒரே தன்மையான எடுத்துக் காட்டைக் காட்டாமல் வேறுவேறாக மாறுபடுத்திக் காட்டினால், மாணவர்களுக்கு, வெறுப்பும் சலிப்பும் ஏற்படாமல், பற்று ஏற்படும்.

9. விதியை ஆசியரே கூறிவிடாது, மாணவரையே கண்டு பிடிக்கச் செய்தல் வேண்டும்.

மாணவர்களை ஆழ்ந்து சிந்தித்து எடுத்துக் காட்டுகளை நன்ருக உற்று நோக்கி ஒப்பிட்டுப்பார்த்து பொது விதியை உய்த் துணரும்படி வற்புறுத்த வேண்டும்.

இலக்கணம் முழுவதும் இம்முறையில் எல்லா வகுப்பு களிலும் நடைபெறுவது இயலாத தொன்ரும். மேலும், உயர்நிலை வகுப்பு மாணவர்கள் மன வளர்ச்சி மிக்கோராத லின், நேராகவே விதிகளுக்குப் போகலாம். ஆதலால், மூன்ருவது அமைப்புவரை இம் முறையைக் கையாண்டு, பின்னர் உயர்நிலையில் குறைத்துக் கொள்ள வேண்டும். இடைநிலையிலும் கூட எளிய விதிகளை நேரே கற்பித்து அரியவற்றை மட்டும் இம்முறையில் நடத்தலாம்.

## இம்முறையின் ஈற்றில் விதிவிளக்கு முறையைப் பொருத்திக் காட்டல்

இம் முறையில், ஓர் இலக்கண விதியைக் கற்பித்து முடித்த பின்னர், ஈற்றில் மாணவர் விதியை நன்கு உணர்ந் திருப்பர். அங்ஙனம் உணர்ந்துள்ளனரா என்று அறியப் பின்னும் சில எடுத்துக் காட்டுகளில், அவ்விதி பொருந்தி அமைந்துள்ளதா, என்று பொருத்திப் பார்க்குமாறு செய்ய வேண்டும். இங்கும், மாணவர்களே எடுத்துக் காட்டுகளைக் கூறவேண்டும். ஆசிரியரும் தாமாகவே சிலவற்றைக் கூறி மாணவர்களைப் பொருத்திப் பார்க்கச் செய்து, அவ்விதிக்கு ஏற்ற எடுத்துக் காட்டுகள்தாமா இவை என்று கண்டு உணரச் செய்யலாம். எனவே, விதி வரு முறையின் ஈற்றில் விதி விளக்கு முறையையும் பொருத்திஞல் (subsequent deductive application) இலக்கணப்படிப்பு நன்ருய் உறுதிப்படும்.

## விதிவரு முறையிஞல் விளையும் நன்மைகள்

### விதிவரு முறைக்கும் விதிவிளக்கு முறைக்கும் உள்ள வேற்றுமைகள்

| விதி வருமுறை | விதிவிளக்கு முறை |
|---|---|
| 1. எடுத்துக் காட்டுகளி லிருந்து பொது விதிக்குப் போகிறது. | 1. பொது விதியிலிருந்து எடுத்துக் காட்டுகளுக்குப் போகிறது. |

| | |
|---|---|
| 2. இம் முறையில் ஒரு பாடம் நடந்ததன்பின் அதன் பயனாய் மாணவனுக்குப் புது அறிவு கிடைக்கிறது. | 2. பாடம் நடந்த பின் புது அறிவு கிடைப்பதில்லை. |
| 3. புதியதையும் மாணவர்களையே கண்டு பிடிக்கச் செய்கிறது. | 3. முன்னோர் ஒருவர் கண்டு பிடித்தது சில எடுத்துக்காட்டுகளில் பொருந்தி யிருக்கின்றதா என்று பார்ப்பதே இவர்கள் வேலை. இவர்களே ஒன்றும் புதிதாகக் கண்டு பிடிப்பதில்லை. |
| 4. இம்முறை மெள்ளப் போகும்; ஆதலால் காலம் மிகச் செலவாகும். | 4. இம் முறை விரைவாகப் போகும். |
| 5. மெள்ளப் போனாலும் பயன் உறுதியாய் விளையும். | 5. விரைவாகப் போனாலும் பயன் உறுதியாய் விளையும் என்று சொல்வதற்கில்லை. |
| 6. தெளிவாய் விளங்கும். | 6. தெளிவாய் விளங்காமலும் இருக்கலாம். |
| 7. உளநூலுக்கு ஏற்ற முறையாகும். பொறி உணர்ச்சியிலிருந்து பொறிக் காட்சிக்கும், பொதுக் கருத்துணர்தலுக்கும், கருதுதலுக்கும், தீர்மானத்துக்கும் முறையே போகிறது. | 7. உளநூலுக்கு ஏற்ற முறையன்று. முற்றிலும் மாறாக இருக்கிறது. தீர்மானத்திலிருந்து பிற்போக்காகப் பொறியுணர்ச்சி வரை செல்லுகிறது. |
| 8. தன்னம்பிக்கையை வளர்க்கும். | 8. பிறருதவியை எதிர் பார்க்கச் செய்யும். |
| 9. தெரிந்ததிலிருந்து தெரியாததற்கும், காட்சிப் பொருளிலிருந்து கருத்துப் பொருளுக்கும், எளிதிலிருந்து அருமைக்கும், தெளிவிலிருந்து சிக்கலுக்கும் போகிறது. | 9. இவற்றிக்கு முற்றிலும் மாறாக இருக்கிறது. |

## தமிழ் இலக்கணக் குறியீடுகளை ஆங்கிலக் குறியீடுகளோடு ஒப்பிட்டுக் காட்டுதல்

தாய்மொழி இலக்கணத்தில் நல்ல பயிற்சி ஏற்பட்டால் அயல் மொழி இலக்கணம் படிப்பதற்கும் எளிதா

யிருக்கும். தமிழ் இலக்கணம் ஆங்கில இலக்கணக் குறிப்புகளோடு ஒத்திருக்குமிடங்களும், வேறுபட்டிருக்கும் இடங்களிலும் தமிழாசிரியரால் அவ்வப்போது எடுத்துக் காட்டப் படின் மாணவர்கள் அவற்றை நன்கு உணரலாம். இவ்வொற்றுமை வேற்றுமை இனப்படுத்தல்களால் தமிழ் இலக்கண அறிவு உறுதிப்படுவதோடு ஆங்கில இலக்கணப் படிப்புக்கும் இஃது உதவி புரியும். ஆகவே அவ்வப்போது தமிழ் இலக்கணக் குறியீடுகளுக் கேற்ற ஆங்கில இலக்கணக் குறியீடுகளைத் தமிழாசிரியர்கள் எடுத்துக் காட்டுதல் வேண்டும்.

## இலக்கணத்தை மொழிப் பாடத்தோடும் கட்டுரையோடும் பொருத்துதல்

மாணவர்களைப் பொறுத்தவரையில் இலக்கணம் படிப்பது தனிப்பட்ட இலக்கண அறிவைப் பெறுவதற்கு மட்டுமன்று; அவ்வறிவை நடைமுறையிலும் பயன்படுத்திக் கொண்டு இலக்கணப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் வழங்குவதே யாகும். இதற்கு ஒரு சிறந்த வழி இலக்கணப் பாடத்தில் அறிந்துகொண்ட இலக்கணக் குறியீடுகளையும், குறிப்புகளையும், விதிகளையும் விளக்கிக் காட்டவல்ல சொற்களையும், தொடர்களையும், சொல்லாட்சிகளையும், மரபுத் தொடர்களையும், பிறவற்றையும் தம்முள் அடக்கிக் கொண்டிருக்கும் பகுதிகள் தமிழ்ப் பாட நூல்களில் அமைந்திருக்க வேண்டுமென்பது ஒரு நல்ல பாடநூலின் இயல்பாகும், ஏனெனில் இலக்கண வகுப்பில் பெறும் அறிவை விளக்கிக் காட்டும் இலக்கியங்களாக இவைகள் விளங்க வேண்டும். உரைநடை, செய்யுள், வகுப்புகளில் இவைகள் வருங்கால அவ்வப்போது ஆசிரியர்கள் இலக்கண வகுப்பில் மாணவர்கள் அறிந்து கொண்ட விதிகள் முதலியவை இவைகளில் விளங்கிக் கிடக்கின்றன என்று பொருத்திக்காட்ட வேண்டும். அப்படிக்காட்டினால் மாணவர்கள் அவற்றின் பொருளை நன்குணர்வதோடு அவற்றின் நடைமுறையையும் அறிவர். அதோடு நின்று விடாமல் நூலில் இவைகள் வழங்குகின்ற இடங்களை ஒத்த தமக்குத்தெரிந்த பிற இடங்களிலும் இவற்றை வைத்து மாணவர்கள் தம் வாக்கிலேயே வழங்கும் பயிற்சியையும் ஆசிரியர்கள் அளிக்கவேண்டும். இங்ஙனம் இலக்கணத்தையும் மொழிப் படிப்பையும் ஆசிரியர் பொருத்திக் காட்டலாம். ஆனால் இதற்கு ஆழ்ந்த சிந்தனையோடு கூடிய ஆயத்தம் வேண்டும்.

மேலும் மாணவர்கள் இலக்கண வகுப்பில் பெற்ற இலக்கண அறிவைத் தங்களுடைய வாய்மொழி, எழுத்து ஆகிய இரண்டு கட்டுரைகளிலும் பொருத்தி வழங்குமாறு பயிற்சியளிக்கவேண்டும். மாணவர்கள் இலக்கண வகுப்பில் அறிந்த இலக்கண அமைதிகள், குறியீடுகள், குறிப்புகள் முதலியவற்றை வாய் மொழியில் ஏற்ற இடங்களில் வைத்து வழங்குவதோடு கட்டுரை எழுதும்போதும் அவற்றை ஏற்ற இடங்களில் அமைத்து எழுதிப் பழக்கத்தில் கொண்டு வரவேண்டும். பாட நூல்களில் இவைகள் ஆங்காங்கு வரும் பொழுது தக்க இடங்களில் வைத்து வாய்மொழிப் பயிற்சி செய்தவுடனே ஆசிரியர்கள் அவற்றைச் **சொற்றொடர் மரபுத்தொடர் குறிப்புப் புத்தகத்தில்** குறித்து வைத்துக்கொள்ளும்படி மாணவரை வற்புறுத்த வேண்டும். பின் அதினின்றும் அவற்றை எடுத்துக் கட்டுரையில் அவர்கள் வழங்கிக் கொள்ளலாம். இன்னும் நாம் சொற்களின் பொருளைச் சொல்லின் தொகுதியாகிய சொற்றொடரினின்றும், சொற்றொடரின் பொருளைச் சொற்றொடரின் தொகுதியாகிய பத்தியினின்றும் முன்பின் தொடர்ச்சி நோக்கி அறிந்துகொள்ளுகின்றோம். கட்டுரை எழுதும் போது, இலக்கண அறிவை நேராக வற்புறுத்தாமலே மறைமுகமாக ஒரு கட்டுரை, அதன் பகுதியாகிய பத்தி, அதன் பகுதியாகிய சொற்றொடர்களின் ஒருமை, தொடர்ச்சி, அழுத்தம், வேறுபாடுகளையும் சொற்களின் வைப்பு முறை, ஏற்ற சொற்களை யெடுத்து வழங்கல் முதலியவைகளையும் பற்றிய விதிகளோடு பொருத்திக் காட்ட இடமுண்டு. அஃதாவது இவ்விதிகளை அவர்கள் சொல்லளவில் அல்லாமல் நடைமுறையிலும் தங்கள் கட்டுரைகளிலும் மேற்கொண்டு எழுதுவார்களாயின் கட்டுரையும் இலக்கணமும் சிறந்த முறையில் பொருத்தப்பட்டன என்று கூறி விடலாம். இங்ஙனம் பொருத்திக் காட்டினால் தான் இலக்கண அறிவு நன்றாய் உறுதிப்படும்.

## கடன் வாங்கிய சொற்களும் சொற்றொடர்களும்

இப்பூவுலகில் அன்றும் இன்றும் என்றும் தனிப்பட்ட மனிதர்களோ, நாடுகளோ, பிறமக்களோடும், நாடுகளோடும் கூடிச் சேர்ந்து வாழ்ந்து வருகின்றனரே யொழியத் தனித்து வாழவில்லை. மக்கள் குழு உணர்ச்சியின் பாற்பட்ட கூட்டுறக்கம் என்ற இயல்பூக்கத்தினால் உந்தப் படுபவர்களாதலால் இவர்கள் தனித்தியங்குதலின்றிக் கூடியே இனத்தோடு இனமாக வாழுமியல்பினராவர். காலம் செல்லச் செல்ல, நாகரிகம் முதிர முதிர, மலைகடந்தும், காடுகடந்தும், கடல்கடந்தும்

ஒரு நாட்டார் மற்றொரு நாட்டுக்குச் சென்று குடியேறியும்' வென்றும் வாழலுற்றனர். மண்ணாசையாலும், வாணிகத்தின் பொருட்டும், நாட்டு வளங்காணு மாறும், கலைச்செல்வங் களை நுகரும் எண்ணத்தாலும் பிறகாரணங்களாலும் பன்னாடுகளுக்கிடையே தொடர்புண்டாகிறது. இங்ஙனம் பன்னாட்டு மக்களும் கலந்து வாழுங்கால் அவர் தம் பழக்க வழக்கங்களும், நடை, உடை, எண்ணங்களும், அரசியல், சமயக் கொள்கைகளும், கலைகளும், பிறவும் உட்நாட்டுக் கொள்கைகளோடு கலப்புறுகின்றன. அன்னார் தம் மொழிகளும் ஒன்றோடு ஒன்று கலப்புறுகின்றன. அப்பொழுது ஒரு மொழியில் இல்லாத சில பொருள்கள், கருத்துக்களைக் குறிக்கும் சொற்கள் பிற மொழியிலிருந்து அம்மொழியில் வந்து ஏறுகின்றன. இன்னும், அவற்றைக் குறிக்கச் சொற்களிருந்தாலும் புதுமை கருதியும் அயல் நாட்டிலிருந்து வந்தது என்ற அருமை கருதியும், அயல் மொழிச் சொற்களை அம்மொழியாளர் மேற்கொள்ளுகின்றனர். இங்ஙனம் ஒரு மொழிச் சொற்கள் அயல் மொழியோடு கலப்புறுங்கால், (1) பேச்சு வழக்கற்ற மொழிச் சொற்களே, பேச்சு வழக்குள்ள மொழியில் மிகுதியாக வந்து கலப்புறும்; (2) ஆளுவோரின் அரசியல் மொழிச் சொற்களே ஆளப்படுவோர் மொழியில் மிக்கு வந்தெய்தும், என்பன போன்ற இன்றியமையாத மொழி நூலுண்மைகளை நாம் மறக்காது மனத்துள் வைத்துக் காண வேண்டும்.

மிகப் பழங்காலந்தொட்டு நம் நாட்டு மொழியும் கிரேக்கர், ரோமர், எகிப்தியர், அரேபியர் முதலிய மேலை நாட்டாரோடு தொடர்புடையன வாயிருந்தது. வடமொழி யாளரோடும் பிறகு இடைக்காலத்திலும் இக்காலத்திலும் பல அயல் நாட்டாரோடும், சிறப்பாக மகமதிய, ஆங்கிலேயரோடும் தொடர்புற்றுள்ளன. இவற்றுள் சிறப்பாக வடமொழி ஆங்கிலேய மொழித் தொடர்புகளையும் அவற்றிற்குரிய காரணங்களையும் சுருக்கமாகக் குறித்துச் செல்வோம். விவரங்களை அவ்வம் மொழிநூல்களிற் கண்டுகொள்க.

வடமொழித் தொடர்பின் வரலாற்றை ஒருவாறு மூக்கூறுகளாக்கலாம் என்பர் கால்ட்வெல் ஆசிரியர். (1) மிகப் பழங்காலத்தில் அஃதாவது தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே பிற திராவிட மொழிகளில் வட சொற்கள் புகாத ஒரு காலத்தே, வடசொற்கள் தமிழிற் புகுந்தன. ஆனால் அவைகள் அப்படியே உருவத்தில் அல்லது சில இலக்கண விதிகளுக்கு உட்பட்ட வடிவத்தில் நுழையவில்லை. தொல்காப்

பியத்திற்றுனும் வட சொற்கள் தமிழில் நுழைவதைப் பற்றி ஆசிரியர் "வட சொற்கிளவி வடவெழுத்தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே", "சிதைந்தனவரினும் இயைந் தனவரையார்" என்று தமிழியல்புக்கு ஏற்பத்திரிந்து வரும் எனப் பொதுப்படக்கூறிப் போந்தனரே ஒழிய சிறப்பு விதி கள் வகுத்தாரில்லை. எனவே பழங்காலத்து யாதொரு கட் டுக்கும் விதிக்கும் அடங்காமல் வட சொற்கள் தமிழ் மொழி இயல்புக்கு ஏற்பவே நுழைந்தன. மேலும் அவைகள் அக்காலத்து நேராக வடமொழியினின்றும் தமிழில் நுழை யாமல் பாகத மொழிகளின் வழியாய் நுழைந்த உண்மையை யும் கவனிக்க வேண்டும்.

இன்னும் அக்காலத்தில் பிராமணப் புரோகிதர்கள் சோதிடர்கள், அறிஞர்கள் முதலாயினோர் வழியாய், வாய் மொழியாக, எழுத்திலின்றி, இவைகள் முதலில் இடம் பெற் றிருக்க வேண்டுமாம்.

(1) இங்ஙனம் முற்றிலும் உருமாறி வந்தனவாதலால், வட சொற்கள்தாம் இவை என்று அறியமுடியாத நிலையில் இவை உருமாறி இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, ஆடி, ஐப்பசி, புரட்டாசி முதலிய திங்கட் பெயர்கள், பூர்வ ஆஷா டம், அஸ்வினி, பூர்வ பாத்ரபதம் என்ற வட சொற்களி லிருந்து தோன்றின என்பர் அறிஞர் கால்ட்வெல்.

(2) அடுத்தபடியாக, தமிழ் நாட்டில் வந்து குடியேறித் தமிழின் வாயிலாகத் தத்தம் சமயங்களைப் பரப்பலுற்ற சமணபௌத்த சமயத் துறவிகள், அறிஞர்கள், புலவர்களின் வாயிலாய்ப் பல வட சொற்கள் சமயச் சார்பாக எழுந்தன. இவர்கள் சிறந்த வடமொழிப் புலவர்களா யிருந்தமையின், பல வட சொற்களையும், கொள்கைகளையும் தமிழிற் கொண்டு வந்து புகுத்தினர். இங்ஙனம் தற்சமங்களும், தற்பவங்களும் தோன்றலாயின. (3) பின்னர், தமிழர்களிடை மிகப் பரந்து பரவிக்கிடக்கும் சைவசித்தாந்தம், சங்கராச்சாரியர் நிலைநாட் டிய அத்துவைதம், இராமாநுஜாச்சாரியர் நிலைநாட்டிய வைணவமாகிய சமயங்களைப்பற்றி எழுந்த நூல்களிலும் காவியங்களிலும் வடசொற்கள் எண்ணிறந்தன கலந்ததோடு தமிழும் வடமொழியும் சரிக்குச் சரி கலந்த மணிப்பவள மென்னும் கலப்பு நடையும் இடம்பெற்றது. இம்மூன்று கூறுகளையே அடிப்படையாகக் கொண்டு இற்றை நாள் வரை வடமொழிக் கலப்பைப் ஆராய்ந்து விடலாம். விரிவை இலக் கிய வரலாறுகளிற் காண்க.

எனவே வடமொழியிலும், நாட்டிலும் பயின்ற சமயம், மெய்யுணர்வு, (தத்துவம்) தர்க்கம், இலக்கியம், இலக்கணம், அணிகள், யாப்புகள், சோதிடம், மருத்துவம் முதலிய கலைகளும், நடை, உடை, எண்ணங்களும், பழக்க வழக்கங்களும் தமிழிற்புகுங்கால் அவற்றைக் குறிக்கும் எண்ணிறந்த சொற்களும் புக, தமிழில் உள்ள அவற்றிற்கேற்ற சொற்கள் நாளடைவில் வழங்கா தொழிந்து இறந்துபட்டுப் போயின. மொழித் தூய்மையும் நடைத் தூய்மையும் ஒழிந்தன.

இங்ஙனமே ஆங்கில அரசாட்சி நிறுவப்பட்ட பின்னரும் மெக்காலே பிரபுவால் ஆங்கில மொழியின் வாயிலாகக் கற்பிக்கப்படும் கல்வித் திட்டம் வந்த பின்னரும் கணக்கற்ற ஆங்கிலச் சொற்கள் அணைகடந்து மண்டிவரும் புதுவெள்ளப் பெருக்குப்போல் ஓடிவந்து தமிழ்நாட்டையும் மொழியையும் முழுகடித்து, நெருக்கி, மூச்சுவிட இயலாது, திணர அடித்து விட்டன. அறிவியற் கலைகளைக் கற்பிக்கும் பல பாட நூல்களும், பலவகை ஆராய்ச்சிகளும், இடைநிலைதொட்டு, கல்லூரி, பல்கலைக்கழக நிலைவரையிலும் ஆங்கிலத்தின் வாயிலாயே நடைபெற்றதால் அவற்றிற்கேற்ற கலைச்சொற்கள் அப்படியே வந்து புகுந்தன. (இப்பொழுது உயர்நிலைப்பள்ளிநிலை வரை இவை தாய்மொழி வாயிலாய்க் கற்பிக்கப்படுகின்றன) இன்னும் ஆங்கிலமே அரசியல் மொழியாயும் இருத்தலால் பல்வகை ஆட்சித் துறைகளிலும் அறங்கூறவைகளிலும், சட்டமன்றங்களிலும், வாணிகத் துறைகளிலும், நாடு, நகர், ஊர்களை ஆளும் கழகங்களிலும் பெரும்பாலும், சுருங்கக்கூறின் நாட்டு நடப்புகளில் எல்லா மூலை முடுக்குகளிலும், ஆங்கிலச் சொற்களே தலைசிறந்து விளங்குகின்றன. இன்னும் மேல் நாட்டு நாகரிகத்தில் ஈடுபட்டு ஆங்கிலேயர்களைப் பார்த்துச் செய்து பின்பற்றும் பலரால் இவற்றிற்குப் புறம்பாகப் பல வேண்டாத சொற்களும் வலிந்து வந்து புகுகின்றன. எடுத்துக் காட்டாக ஆங்கிலேயரின், நடை, உடைகள், ஒப்பனைகள், கட்டுவன, கவிப்பன, அணிவன, உண்பன, தின்பன, குடிப்பன, ஆட்டங்கள், பூச்சுவகைகள், பொடிவகைகள், எண்ணெய் வகைகள் முதலிய எண்ணிறந்தவற்றைக் குறிக்கும் எண்ணிறந்த சொற்கள் வந்து புகுவன காண்க. இவை எம்மட்டில் கொள்ளத்தக்கன, எம்மட்டில் தள்ளத்தக்கன, எம்முறையில் கொள்ளத்தக்கன, எம்முறையில் தள்ளத்தக்கன என்பனவற்றை அறிஞர் ஆராய்ந்து முடிவுகட்டவேண்டும். எனினும் இப்படிப்பட்ட அயல்மொழி விலக்குகளினின்றும் விடுபட்டுத் தமிழ்மொழியும் தன் உரிமைபெற்றுப் பண்டு

போல் செம்மையும், தூய்மையும், செழுமையும் பெற்று விளங்குநாள் அண்மையில் வரும் என்று எதிர்பார்ப்பதற் குரிய அறிகுறிகள் காணுமற் போகவில்லை என்று ஐயமறக் கூறலாம். எவ்வகைக் கலையையும் தமிழிலேயே தெளிவாக எடுத்துக் கூறிவிடலாம் என்ற நம்பிக்கை, இப்பொழுது செயலினும் சிறிது சிறிதாக மிளிர்ந்து கொண்டு வருகிறது. 'தமிழில் முடியுமா' என்னும் நூலையும் காண்க.

## செய்யுளும் உரைநடையும்

தமிழில், பா, உரைநடை ஆகியவற்றின் சொற்பொருள், தோற்றம், வளர்ச்சி அவை தம்மிட்காணஇ்றும் வேற்றுமை கள் முதலியவற்றைத் தமிழாசிரியர்கள் ஒருவாறு பொதுப்பட வேனும் உணர்ந்திருந்தால், மாணுக்கர்களுக்கு உரைநடை, செய்யுட் பகுதிகளை நடத்துவதற்கு ஏற்ற அடிப்படை யறிவு எய்தஇாலும் என்பது கருதி, அவற்றை ஒருவாறு உணருவது நலமாகும். இவற்றின் முழு விவரங்களை இலக்கண, இலக்கிய வரலாற்று நூல்களிற் கண்டுகொள்க. பாட்டுச் செய்யுள் என்று பண்டு தொல்காப்பியர் நாள்தொட்டு வழங்கிவந்த பகுதிகளை இக்காலத்து நியதியின்றிப் பொதுப்படச் 'செய் யுள்' என்னும் பெயரால் வழங்குகிறோம். இக்காலத்து வழங்கிவரும் "செய்யுள்" என்ற சொல் குறிக்கும் பொருள், பண்டு தொல்காப்பியர் காலத்துக்கு முன்னும் அவர் தம் காலத்தும் அச்சொல்லால் குறிக்கப்படவில்லை. இன்று பாவையும் செய்யுளையும் ஒரு பொருள் குறித்த சொற்களாகக் கொள்ளுகின்றோம். ஆனல் தொல்காப்பியர் காலத்தில், செய்யப்படுவன (உரையாயினும், நூலாயினும், பாட்டாயினும்) எல்லாம் செய்யுள் என்னும் பரந்தபொருளை அச்சொல் கொடுத்துக்கொண்டு நின்றது. தொல்காப்பியச் செய்யுளி யலைப் படித்தோர் அது, செய்யுளின் உறுப்புகளாக மாத்திரை, எழுத்தியல், அசை முதலிய முப்பத்து நான்கினைக் கூறி இவற்றைக் கொண்டன வெல்லாம் செய்யுள் எனப் பொதுப்படக் கூறியிருப்பதைக் காணுது போகார். பாவும் செய்யுள் உறுப்புகளில் ஒன்றும். எனவே, உரையோ, பாட்டோ, யாதாயிருப்பினும் அது செய்யுளேயாகும். இனு இச்செய்யுளைத் தானும் தொல்காப்பியர்,

"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே,
அங்கதம் முதுசொலோடு அவ்வேழ்நிலத்தும்"

என எழு வகையாக்கி, அவற்றை யும், அடிவரையறை உ ளன், அடிவரையறை இல்லன என இரு கூறாக்கிக் கூறுன்

"எழுநிலத் தெழுந்த செய்யுட்டெரியின் அடிவரையில்லன ஆறென மொழிப" என்பது அடிவரையறையில்லாத செய்யுட்களைக் குறிக்கும் நூற்பா.

"அவைதாம்,
**நூலினுன, உரையினுன,**
நொடியோடு புணர்ந்த **பிசியினுன,**
ஏது நுதலிய **முதுமொழியான,**
மறைமொழி கிளர்ந்த **மந்திரத்தான,**
கூற்றிடை வைத்த **குறிப்பினுன.**"

எனவே கீழ்க்கண்ட கண்ணுடியில். செய்யுளின் வகைகளைக் காணலாகும்.

**செய்யுள்**

அடிவரையறை உள்ளன.
(1) பாட்டு

அடிவரையறை இல்லன
(1) நூல், (2) உரை
(3) பிசி, (4) முதுமொழி,
(5) மந்திரம், (6) குறிப்பு.

நாள் செல்லச் செல்லச் செய்யுள் என்ற சொல் பொருளாற் சுருங்கிக் கொண்டே வந்து இன்று பாச்செய்யுள் ஒன்றையே குறிக்கின்றது.

இவற்றுள் பாச்செய்யுளும், உரைச் செய்யுளும் நாம் கருதற்குரியன.

இடைநிலை, உயர்நிலைப் பள்ளிப் பாடத் திட்டங்களிற் கண்டாங்கு அவ்வம்மாணவர்கள் கற்க வேண்டிய எழுத்து, சொல், சொற்றொடர் இலக்கணங்களையும் அவற்றில் நெட்டுருச் செய்யவேண்டிய பகுதிகளையுமாகிலும், தமிழாசிரியர்கள் தெளிவாய் உணர வேண்டும். அதோடு பா வகைகளிலும் பள்ளிப் பாட நூல்களில் பெருவரவினவாய் வரத்தக்கவற்றின் இலக்கணங்களையும், வழக்காற்றையும் இவர்கள் அறிந்துகோடல் வேண்டும்.

அவர்கள் அறிந்துகொள்ளத் தக்க **பாவகைகளும் பாவின வகைகளும்** :—குறல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, பஃறொடைவெண்பா,

நேரிசை யாசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, கலிப்பாவின் சிலவகைகள், வெண்டாழிசை, ஆசிரியத்தாழிசை, கலித்தாழிசை, கலித்துறை, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், கலி விருத்தம் முதலியன.

இனி இம்மாணவர்கள் கற்கத் தகுந்த சில அணிகளை யும், அவை பயிலுமிடங்களையும் ஆசிரியர்கள் அறிந்திருத்தல் வேண்டும். உயர்நிலைப்பள்ளிப் பா நூல்களிற் காணக்தக்க சில **அணிகளாவன** :— உவமையும், அதன் சில வகைகளும், உருவகம், வேற்றுமை, வேற்றுப் பொருள் வைப்பு, தற்குறிப் பேற்றம், பின் வருநிலை, சிலேடை, பிறிதுமொழிதல், நிர னிறை புகழாப் புகழ்ச்சி, மாறுபடு, நிகழ்நிலை, வீறுகோள் முதலியன. இவற்றின் இலக்கணங்களையும் இவற்றுக்கான எடுத்துக் காட்டுகளையும் நன்னூல், யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலம், தண்டி அலங்காரம், மாறன் அலங்காரம், தொல்காப்பியச் செய்யுளியல் முதலிய இலக்கண நூல்களிற் கண்டுகொள்க.

இவற்றிற்கு மேலும், தொன்றுதொட்டுத் தமிழில் நாடக வழக்கினும், உலகியல் வழக்கினும், பாடல் சான்ற புலனெறி வழக்கிலும் பயின்றுதரும் சொற்றொடர்கள், மரபுத் தொடர் கள், இணை மொழிகள், பழமொழிகள்; தகுதி, இயல்பு வழக்கு கள், திசை, வழக்குகள், இழி வழக்குகள், அயல் வழக்குகள் அவற்றின் இலக்கண அமைதிகளையும் இவ் வாசிரியர்கள் ஐயந்திரிபறப் பயின்றிருப்பதோடு, தக்க எடுத்துக் காட்டுகளைக் காட்டியும், மாணவர்களை அவர்கள் தம் வாக்கிலேயே அவற்றைப் பலவிடங்களிலும், பல்காலும் வைத்து வழங்கச் செய்தும் எழுதச் செய்தும், அவர்களுக்கும் பயிற்சி அளித்தற் குரியர். இத்தொடர்கள் முதலியவற்றை உரிய அகராதிக ளிலும், கட்டுரை இலக்கண நூல்களிலும், இலக்கண நூல் களின் மரபியல், ஒழிபியற் பகுதிகளிலும் கண்டு கொள்க.

## செய்யுள் நடை

ஒவ்வொரு மொழி இலக்கியத்திலுமுள்ள செய்யுட்கள் நுண்மாண் நுழைபுலமுடைய தெய்வப் புலமைச் சான்றோர் கள். இயற்கை யமைப்புகளையும், இயற்கைப் பொருள்களை யும் மக்களியல்பையும் கூர்ந்து நோக்கியும் தம் வாழ்நாட் களில் தாம் பட்டறிந்தும் கண்ட உண்மைகளாகிய அறிவுச் செல்வங்களும், உளர்சுவை வெளிப்பாடுகளும், உணர்ச்சி வெளிப்பாடுகளும் நிறைந்திருக்கின்ற பொற்பேழைக

ளாகும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இவற்றை அப்பெரும் புலவர்கள் இன்ன சொற்களில் இன்ன நடையில் எழுதவேண்டும் என்ற முன் எண்ணமில்லாமலேயே அவர்களின் கருத்துகள் முதலியன அவர்களை யறியாமலே வெளிப்பட வேண்டிப் பீறிட்டுக்கொண்டு புறப்பட, அவற்றைக் குறிக்கும் சொற்களும், தொடர்களும், அணிகளும் தாமே வந்தடைந்து நிற்க, அவர்கள் பாடுகிறார்கள். எனவே ஒவ்வொரு புலவருக்கும், அவரவருடைய அறிவு, ஆற்றல், பட்டறிவு, கூர்ந்து நோக்கல் முதலியவற்றிற் கேற்றவாறே அவரவர் மொழியும் நடையும் மாறுபாடெய்தி வேறுபடும். சான்றோர் கவியின் பொருள் ஆழம், தெளிவு, நடைச் செலவு முதலியவற்றைக் கோதாவரி ஆற்று நீரின் தெளிவு, அழகு, உள்ளூறு பொருள், பயன், ஓட்டம் முதலியவற்றிற்கு உவமை கூறினர் புலவர் பெருமான் கம்பர். அவருடைய பாடல்களின் அழகும் அங்ஙனமே அமைந்துள்ளது. "படிப்போருக்கும் படித்துப் பொருள் விரிக்கக் கேட்போருக்கும் ஒருணர்ச்சியை எழுப்பிப் படிக்குந்தோறும் கேட்குந்தோறும் பின்னும் புதியதாய் இன்பந் தருவனவே பாக்களாம். பெரிய புராணப் பாக்களும், படிப்போர்க்கும் கேட்போர்க்கும் அவ்வாறு ஓருணர்ச்சியை எழுப்பிப் படிக்குந்தோறும் கேட்குந்தோறும் பின்னும் புதிதாய் இன்பந் தருவனவேயாம். இரும்புக் கடலை போன்றனவும், வழங்கு முறை போன்றனவும் பாக்களாகா. இப்பாக்கள் கதலி பாகமாய்ப் படிக்கப் படிக்க வாய் மணப்பனவாம். மேலும் இப்பாக்கள் "சொல்லும் பொருளும் தேடி அடைந்து எதிர் நிற்ப, ஆசிரியர் அவற்றுள் வேண்டுவன கொண்டு அமைத்தனவாமென் பதனைப் பாவாணர் ஒருவரும் மறார். இப்பாக்கள் சுருங்கிய சொல்லும், நெருங்கிய பொருளும் நல்லோசையும் பெற்றனவாய், செறிவு, தெளிவு முதலிய குணங்களும், தன்மை, உவமை முதலிய அணிகளும் நன்கமைந்தனவாய், மேன்மேல் நயந்தோற்றி இன்பம் பயப்பனவாய், சுவை மலிந்தனவாய், செம்பாகம் பொருந்தினவாய் இயல்பின் இயன்றனவாய் உள்ளன" என்று பெரியபுராணப் பாடல்களின் நடை நலத்தைப்பற்றிப் பேசும் தமிழ்ப் பேராசிரியர் சுப்பிரமணியப் பிள்ளையவர்களின் கூற்றுகள் சிறந்த இலக்கிய ஆராய்ச்சி உண்மைகளைத் தம்மகத்தே கொண்டுள்ளனவாம். இலக்கிய நடைச்சுவையாராய்ச்சியில் ஈடுபட்ட சிறந்த அறிஞர்கள் எல்லோரும் "இவை இந்நூலுக்கேயன்றி நல்லிசைப் புலவரியற்றிய நூல்கள் எல்லாவற்றிற்கும் உரியன" என்பதை

மறுக்கார். புலவர்களின் நடைப்போக்கு வேறுபடினும் இந்நலங்கள் எல்லாம் உள்ளடங்கி யிருப்பனவேயாகும்.

சொற்செறிவு, சுருக்கம், பொருட்டெளிவு, இசை நலம், அணிநலம் முதலிய நல்லியல்புகள் அமைய, கருதிய பொருள் மேல் பலசொற்களைத் தொடுத்தமைக்கும் செய்யுள் "எழுத்து முதலா ஈண்டிய அடியிற், குறித்த பொருளை முடிய நாட்டல்" ஆகும். ஒரு பொருள்மேல் பல சொல் கொணர்ந்து ஈட்டல், செய்யுள் செய்தல் என்றும், பலசொல் தொடர்ந்து பொருள் காட்டுவனவற்றுள் ஓசை தழீ இவற்றைப் பாட்டென்னலா மென்றும் உரையாசிரியர்கள் கருதுகின்றனர். இம்மரபின் வழிநின்று "நாற்சொல்லியலான்" வரும் தமிழ்ப்புலவர்களின் செய்யுள் நடைகளைப்பற்றி அன்று முதல் இன்று வரை, ஆங்கில இலக்கிய ஆராய்ச்சி போன்று, விரிவாகப் பேசும் நூல் தமிழில் ஒன்றுமில்லை. இத்துறையில் ஆராய்ச்சி நிகழ்த்துவது சிறந்த தமிழறிஞர்களின் கடமையாகும். செய்யுள் நடையை, திராட்சை, வாழை, தென்னைமரப் பழங்களின் பாகத்திற்கு ஒப்புமைப் படுத்திக் கூறுவதுண்டு. இத்தகைய வேற்றுமைகள் தமிழிலும் உண்டு என்பதை, அகநானூற்றில் வரும் களிற்றுயானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என்ற பிரிவுகளால் ஒருவாறு உணரலாகும்.

மற்றும், பிற்காலத்தெழுந்த தண்டி, மாறனலங்காரங் களிற் பொது வியல்களிற் காணப்படும், வைதருப்பம், கவுடம், பாஞ்சாலம் முதலிய நெறிகளும் அவற்றில் உள்ளடங்கியிருக்கும் இயல்புகளாகிய செறிவு, தெளிவு, சமனிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி முதலியனவும் செய்யுள் நடை வேறுபாடுகளிற் கவனிக் கற் பாலனவாம். இன்னும் தொல்காப்பியர் செய்யுளியலிற் கூறும் அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, புலன், இயைபு, இழைபுகளும், பாவண்ணம் முதலிய வண்ணங்களும், நோக்கும், தூக்கும், மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை, பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை, நிரனிறை, இரட்டை முதலிய தொடைகளும் நடை வேறு பாட்டை உண்டாக்குவதால் கண்டு கவனிக்கற் பாலனவாம். பலவகைச் செய்யுள்களில், இடத்திற்கும், கூறும் பொருளுக்கும் ஏற்ற வாறு நடைகளும் வேறுபடும். நடைகளைச் சங்கத்துச் சான் றோர்கள், பிற புலவர்களின் செய்யுட்களிலிருந்து ஏற்ற எடுத்துக் காட்டுகளை நோக்கி யுணர்க.

இனி, எம்மொழியினும் பாவே உரைநடைக்கும் முற்பட்டிருக்க வேண்டும், என்று இலக்கிய ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். 'இலக்கிய (மொழி) நடைகளில் அடிவரையறையுற்று நடக்கும் செய்யுள் நடையே மிகவுந் தொன்மை வாய்ந்தது. மக்கட் பொது (சமுதாயம்) வின் முதனிலைகளில் வரிவடிவமாகிய எழுத்து இன்னும் கண்டு பிடிக்கப் படாததானும், செறிவு வாய்ந்த செய்யுள் நடையே சிறந்த கருத்துக்களை நினைவு வைத்துக் கொள்வதற்கு ஏற்றதாகும். மேலும், ஆராய்ச்சி செய்யும் அறிவியல் முறைகள் ஏற்படாத அக்காலத்து, இயற்கைப் பொருள்களை ஆராய்ந்து துருவி, அவற்றின் உறுப்புகளை அலசிப்பார்க்காது கற்பனையே துணை கொண்டு தம் மனக்கண்ணால் கண்டு வந்தனர். காரண காரிய முறை இன்னும் இடம் பெறவில்லை. ஆதலால் அதனை விளக்கி விரித்து ஆராய்ந்து கூறும் உரை நடையும் தோன்றவில்லை. அந்நிலையில் புலவர்கள் செய்யுள் நடையில் செய்யுள் செய்பவராயும், கதை சொல்லுபவராயும், கடவுளையும் அவருக்கு மக்களோடுள்ள தொடர்பையும் எடுத்துக் கூறுபவர்களாயும், இயற்கைத் தன்மையை இற்றெனக் கிளப்பவராயுமிருந்தனர்" என்று கூர்த்ஹோப் என்னும் ஆங்கிலப் பேராசிரியர் கூறுநிற்பர். எமர்சன் என்பாரும் இசையும் எதுகையும் குழந்தைக்கு இன்பம் அளிப்பனவாம் என்றும் இலக்கிய வரலாற்றில் செய்யுளே உரைக்கு முந்தியதாம் என்றும் கூறுகின்றனர்.

இவ்விலக்கிய மரபுக்கும் வரலாற்றுக்கும் ஒத்தே நம் மொழியும் நடவா நிற்கின்றது. பாக்களே தமிழில் முதலில் எழுந்தன. பின் உரைநடை வந்தது. ஆனால் நம் மொழியில், ஆங்கிலம், ஜர்மன் போன்ற இக்கால மொழிகளில் உரை நடை பல்கிப் பெருகிப் பல துறைகளினும் கலைகளினும் வளர்ச்சியுற்றிருப்பது போல் முன்னேறவில்லை.

செய்யுள் (பா) நடைக்குள் புகாத நிலையில் மக்கள் பொதுவாகப் பேசும் மொழி **உரைநடையாம்.** கற்றோரும் மற்றோரும் எளிதிற் பொருள் உணர்ந்து கொள்ளக் கூடியதாய்ச் செய்யுள் நடையினின்றும் வேறுபட்டு, வாழ்க்கையில் நாம் பேசும்-நடையை உரைநடை என்னலாம். அஃது உரைத்துப் போதலின் **உரையும்**, தேங்கி நிற்காமல் நடந்து போதலின் **நடையு**மாயிற்று. தமிழில் இச்சொல் ஆகியிருப்பது போலவே உரை நடையைக் குறிக்கும் லத்தீன் தொடர் மொழியையும் நோக்கினால் இது புலப்படும். 'பேச்சு நடை' என்னும் பொருள் தந்து நிற்கிறது அத்தொடர்.* (Oratio

Pedestris) நடை யென்னும் இச்சொற் பொருளானது கவி யரசரது பாட்டொன்றை நமக்கு நினைவூட்டுகிறது. அது வருமாறு :—

"பூவரு மழலையன்னம் புனைமடப் பிடியென்றின்ன"
தேவருமருளத் தக்க செலவினவெனவுந் தேறேன், பாவ
ருங் கிழமைத் தொன்மைப் பருணிதர் தொடுத்த பத்தி நாவருங்
கிளவிச் செவ்வி நடைவரு நடைய ணல்லோய்."

எனவே இவ்விரு பகுதிகளுக்கும்—**செய்யுளுக்கும் உரை நடைக்கும்—அடிப்படையான வேற்றுமைகளைக் காணலாகும்.** செய்யுள் செறிவும் சுருக்கமும் கொண்டது. உரைநடை நெகிழ்ச்சியும் பெருக்கமும் கொண்டது. முன்னது கற்பனையை அடிப்படையாகக் கொண்டது. காரண காரியத் தொடர்பு முதலியவற்றை ஆராய்ந்து அனுமானிக்காது, பொருள்களை முழுப்பொருள்களாகத் தொகுத்துக்கண்டு அழகினை வியப்பது; அடிவரையறை உடையது; எதுகை மோனை, முதலிய தொடை நலங்களும், அணிகளும் கொண்டது; எழுத்து முதலா ஈண்டிய யாப்பிலக்கண விதிகளுக்குட்பட்டது; உளச் சுவைகளையும், உணர்ச்சிகளையும் மனவெழுச்சிகளையும், மெய்ப்பாடுகளையும், பண்படுத்தி, மக்கட் பண்பை வளர்ப்பது. படித்துச் சுவைத்து இன்புறுவதற்குரியது; கற்பனையை வளம்படுத்துவது. அழகுணர் ஆற்றலை, வளர்த்து உறுதிப் படுத்துவது. ஒழுக்க நலத்தைப் பேணுவது.

பின்னது ஆராய்ச்சியையும் காரணகாரியத் தொடர்பைக் காணும் அனுமானத்தையும் அடிப்படையாகக் கொண்டு பொருள்களை ஆராய்ந்து வகுத்துப் பார்ப்பது; சொல்லுவது; எழுதுவது. அடிவரையின்றிப் பரந்து செல்வது. எதுகை மோனை முதலிய தொடை நலங்களை வேண்டாதது. சொல்முடிபு, தொடர்மொழி முடிபு முதலிய நியதிகளன்றி, யாப்பிலக்கண விதிகளை வேண்டுவதின்று; பல கலைகளையும் விரித்துச் சொல்லியும் எழுதியும் வருவதால் இன்பத்துக்கு மட்டுமன்றி அறிவு வளர்ச்சிக்கே மிக்குதவுவது. இன்னும் காணக்கூடிய வேற்றுமைகளை உய்த்தும், அறிஞர்களின் ஏற்ற நூல்களிலும் கண்டுணர்க.

கருத்துகளை விளங்க எடுத்துரைத்துப் போவதே இந் நடையின் நோக்கமாதலால், செய்யுளுக்குப் பொருள் உரைக்கும் வேலையை இது செய்கின்றது. இக்காரணம் பற்றியே சிறந்த செய்யுட்களுக்கும், தொடர்நிலைச் செய்யுட்

களுக்கும் வாய்த்த விளக்கங்களும் உரை என்று பெயர் பெறலாயின. எனவே இவைகள் எல்லாம் பொருள் விளங்குமாறு தெளிவான நடையில் அமைதற்குரியன. "செய்யுள் மணம் மீட்டும் மீட்டும், அடிக்கடி உரைநடையில் இடம் பெறுவது நல்லதன்று என்றும், வேண்டுமென்றே அவற்றை உரைநடையிற் புகுத்துவதைவிடப் பெரியகுற்றம் வேறொன்றுமில்லையென்றும்" சேம்பரின் என்சைக்ளோபீடியா கூறுகிறது.

தமிழ் மொழியில் உரைநடைப் பகுதி பண்டு முதல் கி. பி. பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டுகள் வரை மிகுதியாகப் பல துறைகளிலும் வளரவில்லை. தொல்காப்பியர் உரை எவ்வழிப் பயிலும் என்று குறிக்கும்போது, "பாட்டிடை வைத்த குறிப்பினானும், பாவின்றெழுந்த கிளவியானும் பொருண்மரபில்லாப் பொய்ம்மொழியானும், பொருளொடு புணர்ந்த நகை மொழியானுமென், றுரைவகை நடையே நான்கென மொழிப," என்று கூறுகின்றார். இவற்றுள் பாட்டிடை வைத்த குறிப்பு என்பது "ஒரு பாட்டினை இடையிடை கொண்டு நிற்கும் குறிப்பினால் வரும்" உரையாகும். தகடூர் யாத்திரை போன்ற நூல் இவ்வகைப்படும். சிலப்பதிகாரத்திலும் பெருந்தேவனார் பாரத வெண்பாவிலும் இஃது உண்டு என்பர். இக்குறிப்பு தமிழில் மிகமிகக் குறைவு. இரண்டாவது வகை, இலக்கிய இலக்கண நூல்களுக்கு உரையெழுதும் முகத்தால் அமைந்துள்ளதாகும். இதுவே தமிழில் மிக விரிந்துள்ள வகை. பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங் காவியங்கள், தொல்காப்பியம், நன்னூல் யாப்பருங் கலக்காரிகை, யாப்பருங்கலம், போன்ற நூல்களுக்குச் சிறந்த உரையாசிரியர் எழுதிய விரிவுரைகள் உரைநடையாக அமைந்துள்ளன. பின்னிரண்டு வகைகளும் அருகியுள்ளனவே. இனி 'தொன்மை' என்று தொல்காப்பியர் கூறுவதும் உரைநடைப் பகுதியேயாகும் என்பர்.

இவ்வகை உரைப் பகுதிகளைத் தவிர, தனியான உரை நடைநூல் ஒன்றும் பதினேழாம் பதினெட்டாம் நூற்றாண்டு வரை தமிழில் எழவில்லை யென்று கூறிவிடலாம். எழுந்திருந்தாலும் அது கிடைக்கவில்லை. இந்நூற்றாண்டுகளிலும் பின்னரும் ஐரோப்பியப் பாதிரிமார்கள் வருகையாலும், அவர்கள் தங்கள் சமயக்கொள்கைகளைத் தமிழில் உரை நடையில் எழுதிப் பரப்பியதனாலும் உரைநடை நூல்கள் தோன்றலாயின. பின் ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள் நிறுவி

யதன் பயனுய்ப் பாடநூல்களும் பின்னர்ச் செய்தித்தாள்களும், திங்கள், வார, இதழ்களும், ஆராய்ச்சி நூல்களும், சிறுகதைகளும் பிறவும் மிகுதியாக வெளி வந்ததனுல் உரைநடை வளர்ந்து கொண்டு வருகிறது. இப்பொழுதுள்ளதற்கு மேல் பல துறைகளிலும் உரைநடை ஆயிரம் மடங்குக்குமேல் வளர்ந்தாலும் அதுவும் போதாது என்னும் நிலையிலேயேதான் இருக்கும்.

"நடை என்பது தமிழிலே ஒழுக்கத்தைக் குறிக்கும். செல்லும் செலவையும் குறிக்கும். நட என்பது இரண்டுக்கும் பகுதியாகும். செலவைக் குறிக்கும்போது இது தொழிற்பெயராயிருக்கிறது. பிற பொருளைக் குறிக்கும்போது தொழிலாகு பெயராகும். இச்சொல், செய்யுள் நடை உரைநடை என்னும் பொருள்களில் வழங்கும்போது செய்யுள் உரைகள் செல்லும் செலவு என்பதைக் குறிக்கும். கானடையின் செலவு ஒருவரை ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்துக்குக் கொண்டு செல்லுவதுபோல், இந் நடைகளும், செய்யுட் பொருளையும், உரைக்கும் உரைப்பொருளையும் ஒருவர் மனத்திலிருந்து பிறிதொரு மனத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கின்றன. அவ்வாறு கொண்டுபோய்ச் சேர்க்கும் கருவிகள் செய்யுள் உரை நடைகளில் வழங்குஞ் சொற்களாம்."

என்வே கருதிய பொருளும் அவற்றைக் கொண்டு போகும் சொற்களும் நடையின் உறுப்புகளாகும். கருதிய பொருள் தெளிவாயும், எளிதாயும், கேட்போருக்கும் படிப்போருக்கும் விளங்குவாறு பேசும், எழுதும் உரைநடை அமைவதே சிறந்தது. கருதிய பொருளுக்குரிய சொற்களும் தொடர்களும் ஏற்ற இடங்களில் பொருந்தி நடப்பதே சிறந்ததாகும். "வாக்கிய நடையிலே பொருளும் சொல்லும், உள்ளிட்ட பொருளும் அதனை உரைக்கும் உரையும், பருந்தும் அதன் நிழலும் போல்வன. சொல்லொடு பட்டுக் கருத்து நடைபெறுவது, உடலொடு பட்டு உயிர் இயங்குவது போலாம். பொருளும் சொல்லும் அபேதம். பொருளும் சொல்லும் அபேதமாயினும் தோற்றக் கிரமத்தில் பொருள் முற்பட்டது. சொல் அதன் வழிப்பட்டது. கருத்து முற்பட்டது. உரை அதன் வழிப்பட்டது. பொருளின் செவ்வியே சொல்லின் செவ்வி. கருத்தின் செவ்வியே உரையின் செவ்வி" என்பர் ஆசிரியர் செல்வக் கேசவராய முதலியார். ஆதலால் கருத்தின் வழியே உரை சென்று அதை விளக்கமாக எடுத்துக்

கூற வேண்டுமே ஒழிய, சொல்லுக்கும் உரைக்குமாகக் கருத்தின் தெளிவைப் பறிகொடுக்கலாகாது என்பது தேற்றம்.

இனி உரை நடையின் போக்கையும் மரபையும் அன்று முதல் இன்றுவரை கருதி, உரைநடையின் வகைகளை ஒருவாறு, வெள்ளை நடை, கொடும்புணர் நடை, மணிப்பவள நடை, செந்தமிழ் நடை, கொடுந்தமிழ் நடை, கொச்சை நடை, செய்யுள் நடை, இலக்கிய நடை, தருக்க நடை, கலப்பு நடை, என்பன போன்று பிரித்துக் காட்டலாம். எல்லோருக்கும் எளிதாய்ப் பொருள் விளங்குவது **வெள்ளை நடை.** எல்லாச் சொற்களையும், எளிதிற் பொருள் விளங்க வேண்டிப் புணர்ச்சி பிரித்தெழுதாது, புணர்த்தெழுதுவது **கொடும்புணர் நடை.** வடசொற்களையும் தென் சொற்களையும், மணியும் பவளமும் கலந்து கோப்பதுபொல், சரிக்குச்சரி கலந்தெழுதுவது **மணிப் பவள நடை.** இயன்றவரை அயல்மொழிக் கலப்பின்றித் தனித்தமிழில் இலக்கணப் பிழையின்றி எழுதுவது **செந்தமிழ் நடை.**

திசைச்சொற்கள் மிக விரவுமாறு கலந்து எழுதுவது **கொடுந்தமிழ் நடை.** கற்றறிவில்லா இழி மக்கள் பேசுவது **கொச்சை நடை.** செய்யுள் மணம் கமழுமாறு திரிசொற்கள் விரவப் பொருள் அரிதுணருமாறு அமைப்பது **செய்யுள் நடை.** கற்றோர்க்கு மட்டும் பொருள் விளங்குமாறு மற்றோர்க்கு எளிதில் விளங்காதவாறு உயர்ந்த சொற்களும் வடிவங்களும் அமைய எழுதுவது **இலக்கிய நடையாம்.** இருவர் ஒரு பொருள் பற்றித் தருக்கிப்பது பேன்ற முறையில் எழுதுவதும் பேசுவதும் **தருக்க நடை**யாகும். பேச்சு வழக்கில் இன்று பன்மொழிச் சொற்கள் கலந்து இழிவாகவரும் நடையே **கலப்பு நடை** எனப்படும். இவற்றிற்கேற்ற எடுத்துக் காட்டுகளை ஆங்காங்கு உரை நடை நூல்களிற்கண்டு தெளிக.

## கவியும் கற்பனையும்

"எழுத்து முதலா ஈண்டிய அடியில் குறித்த பொருளை முடிய நாட்டல் யாப்பெண மொழிப" வாதலின் பாவாணரையும் படைப்புக் கடவுளராக்கிக் கூறுவது மரபாகும். "பல வகைத் தாதுவின் உயிர்க்குடல் பொற் பல சொல்லாற் பொருட்கிடனுக் உணர்வினில் வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்" என்பர் நன்னூலார். குமரகுருபரர் இன்னும் ஒரு படி மேற்சென்று படைப்புக் கடவுளாகிய அயனைவிடச் சிறந்தோராக்கினர் பாவாணரை. "கலைமகள்

வாழ்க்கை முகத்ததெனினும், மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய், வெற்றுடம்பு மாயவனபோல் மாயா புகழ்கொண்டு, மற்றிவர் செய்யு முடம்பு" என்பது அவர் கூற்று. நினைத்ததை ஏற்ற நடையிற் பாடவல்ல "கற்பக மனையவக் கவிஞர் நாட்டிய" சொற்பொருளில் கற்பனை 'என்பது சிறந்த, இன்றியமையாத கூறாகும். இது "நியமித்தல், பிறப்பித்தல்" என்று பொருள்படு மென்பர். "கற்பனை என்பது ஒரு பொருளில் கவியானவன் தனது சாதுரியத்தால்-முன்னில்லாத சுவையைப் பிறப்பித் தல். பொய்யும் புனைந்துரையும் கவிகற்பனையல்ல. கட்டுக் கூட்டாய் மனம்போன போக்கிலே உரைப்பதும் கவிகற்பனை யன்று' என்பர் ஆசிரியர் செல்வக் கேசவராயர். இயற்கையி லும், மக்கள் இயற்கையிலும், வாழ்க்கையிலும் பிறருக்குப் புலனாகாத ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக் காட்டுவதும், அவற்றின் நுட்பங்களைப் படிப்போர் அறிந்து வியக்குமாறு சித்திரித்துக் காட்டுவதும், ஏற்ற சொற்களையும் ஓசை நயத்தை யும், இன்ப வெள்ளத்தையும், பொருள் செறிவையும் எங்ஙனம் அவற்றுள் ஏற்றினனோ என்று கற்போர் வியக்குமாறு செய்வதும் கற்பனையின் உயிர் நிலையான கூறுகளாம் என்பர் அறிஞர்.

சிறந்த புலவர்களின் செய்யுட்கள் சிறந்த வாழ்க்கையின் சிறந்த இயல்புகளை எடுத்துக் கூறுவனவாயுள்ளன. ஒரு புலவர் தம்மைச் சூழ்ந்துள்ள இயற்கைப் பொருள்களையும், மக்களையும், மக்கள் இயற்கையையும், தம் நுண்மாண் நுழை புலத்தாற் கூர்ந்துநோக்கி, அவற்றைத் தம்மனத்திலேயே பின்னர் நினைவுறுத்திக் கொள்ளுவர். பிறகு அவற்றைச் சிறந்த செய்யுட்களின் வாயிலாய், புதிய கற்பனையோடு தாம் கண்டவற்றைப் புதியதான ஒரு கவின்பெறுகாட்சியாக, சொல்லோவியமாக ஆக்குகின்றனர். இவற்றைப் படிப் போருக்கும் ஒரு சிறந்த மனக்காட்சியாக, வாழ்க்கைச் செயல்களும் நிகழ்ச்சிகளும் காட்சி யளிப்பது கண்கூடு.

மனத்திற்றோன்றியெழும் உணர்ச்சிகளையும் எண்ணங் களையும் ஏற்ற சொற்களில் நடை நலமும், தொடை நலமும் இசை நலமும் பொருந்தக் காவியப் புலவன் பாடுகின்றான். ஓவியப்புலவனும் நிறங்களிற்கோல் தோய்த்து, ஆழ்ந்து நினைந்து காவியப்புலவன் சொல்லோவியமாகப் பாடிய கருத்துகளையும், உணர்ச்சிகளையும், மனவெழுச்சிகளையும் ஓவியமாகத் தீட்டி, அதில், அவை கூர்ந்து நோக்குவோர்க்குப்

புலனாகுமாறு அமைக்கின்றான். இதுபோன்றே சிற்பப் புலவரும் கல்லிற் செதுக்கியும், செம்பில் வார்த்தும் இக்கருத்துகளையும் உணர்ச்சிகளையும் அவ்வச் சிலைகளிற் காண்பித்து விடுகின்றனர். இசைப் புலவரும் இங்ஙனமே செய்யலாகின்றனர். இக்கலைகள் எல்லாம் ஒரே இயல்புடைய அழகுக் கலைகளானாலும் இவற்றிற் கெல்லாம் இல்லாத சிறப்பியல்பு ஒன்று செய்யுளுக்குண்டு. "காலத்தாலும் இடத்தாலும் கட்டுப்படல் என்பது ஓவியம், சிற்பம், இசை முதலியவற்றுக்குண்டு. ஆனால் இப்படிப்பட்ட தடைகளால் செய்யுள் கட்டுப்படவில்லை. இது தன்னுரிமை உடையது. மேலும் ஏனையவை கண்டும் கேட்டும் உணர விருக்க, இதைக் கேள்வியின்பத்தால் மட்டும் துய்ப்பதோடு, செய்யுளில் உள்ளடங்கியிருக்கும் கருத்தும் அதை எடுத்து உரைக்கும் சொல்லும், பருந்தும் நிழலும்போல் ஒன்றை விட்டு ஒன்று பிரியாது உடன் போவதால், அவற்றின் பொருளையும் நன்குணர்ந்து இன்புற்று, இதிற் காணலாகும் பல தொடர்ந்த நிகழ்ச்சிகளையும் மனக்கண்ணாலும் காணலாம்" என்பர் ஹட்சன் பேராசிரியர்.

இங்ஙனம் மக்களது உளச்சுவைகளாகிய மனவெழுச்சிகள், உணர்ச்சிகள், செயல்கள், கருத்துகள் முதலியவற்றைக் கூர்ந்து நோக்கி அவற்றைப் புதுக்கிச் செய்யுளில் ஆக்கும் புலவர் தாம் வெளியுலகிற் கண்ட காட்சிக்கும், பின் மனக்கண்ணால் கண்டு, கற்பனை யுலகிலிருந்துகொண்டு புதிதாகச் செய்யுள் வடிவத்தில் அதனை எழுதும் கற்பனைக்கும், தன்னையறியாமலே ஒரு தொடர்பை உண்டாக்கி விடுகின்றனர்; இத்தொடர்பு அவர் மனத்தில் மட்டும் உண்டாகி நின்று விடாமல், அச்செய்யுட்களைப் படிப்போர் மனத்திலும் உண்டாக்க வேண்டுமாம். இங்ஙனம் எழுதுவோர் படிப்போராகிய இருவர் மனத்திலும் இது நிற்கவேண்டுமாயின், அப்படிச் செய்வதற்குரிய நுட்பமும் புலவர் கையிலேயே தான் உள்ளது. அவர் தம்மைச் சுற்றிக் காணும் காட்சிகளைக் கூர்ந்து நோக்கியுணருங்கால் தாம்கொண்ட தீர்மானங்களும், கண்ட உண்மைகளும் சிறந்த உறுதி பயக்கும் உண்மைகளாக இருப்பின், அவர் எழுதுவதும் பிழை படாது. இங்ஙனம், எல்லோரும் மறுக்க முடியாத பரந்த நோக்கமும் விரிந்த பார்வையும் கொண்ட கருத்துகளைப் புலவர்கள் தத்தமக்கு விருப்பமுள்ள யாப்பு வகைகளிலும் செய்யுள் நடைகளிலும் எழுதுவர்.

மரபாகப் புலவர்கள் எழுதிவரும் செய்யுள் வகைகளிற் றான் ஒவ்வொருவரும் எழுதித் தீரவேண்டும் என்னும் நியதி

யும் கட்டுப்பாடும் இல்லை. வானம்பாடிகளும், குயில்களும் தம்மியல்பில் இசை வெள்ளத்தை வெளிப் பரப்புவதுபோல் இப்புலவர்களும் தம்மை யறியாமலே பாடுகிறார்கள். எனினும், அவர்கள் நடையும், செய்யுள் வகைகளும், எதுகை மோனை முதலிய தொடை நயங்களும், மரபாகவரும் வடிவங்களில் அமைந்து விட்டால் படிப்போருக்கும் எளிதாகும். பலரும் பழமை கருதி விரும்புவர்.

இன்னும் புலவரின் கற்பனையில் நோக்கத்தக்க தொன்றுண்டு. ஒரு புலவர் தம் கற்பனையில் கண்டு செய்யுளாக ஆக்கப்போகும், படைக்கப்போகும் கருத்துகள் முதலியவற்றைப் பற்றிய கொள்கைள், அப்புலவரது உள்ளத்திலும் உயிரிலும் ஊறி ஒன்றிக் கிடக்கவேண்டும். மேலும் அப்புலவரின் நடையும் செய்யுள் வடிவமும் அவை யெழுந்த காலத்தையும், அக்கால மக்களது பழக்க வழக்க, நடை உடை எண்ணங்களையும் பிறவற்றையும் உள்ளபடியே எடுத்துக் காட்டும் கண்ணாடியாகவும் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட கற்பனைப் படைப்புகளிலும், அவை செய்யுள் வடிவங்களில் வெளிப்படலிலும், மக்கட்சமுதாயமும், அவர்கள் தம் வாழ்க்கையும் எடுத்துக் காட்டப்பட்டு, செய்யுளும், மக்கள் வாழ்க்கையும் ஒன்று படுதலிலுமே செய்யுள் என்னும் அழகுக் கலையின் சிறப்பு காணக்கிடக்கிறது என்பர் இலக்கிய ஆராய்ச்சியாளர். இன்னும் புலவர்களின் கற்பனையைப் பற்றிய சிறப்பியல்களையும், இலக்கிய ஆராய்ச்சி முறைகளையும் அறிஞர்களின் நூல்களிற் கண்டு தேறுக.

## தமிழில் நாடகங்களும் புதினங்களும்

**நாடகப்** பகுதியானது எம்மொழி இலக்கியத்திலும் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது. நம்மொழியிலும் தொன்றுதொட்டே ஒரு சிறந்த இடத்தை இது பெற்றிருக்கிறது. தமிழை, இயல், இசை, நாடகம் என்னும் மூன்று பிரிவுகளாக அறிஞர் வகுத்துள்ளனர். "**இயற்றமிழ்** என்பது தமிழர் யாவர் மாட்டும் பொதுமையின் இருவகை வழக்கினும் இயங்குகின்ற வசனமும் செய்யுளுமாகும் நூல்களின் தொகுதியாகும். இதன்கண் இலக்கியங்களும் இலக்கணங்களுமாகிய யாவும் அடங்கும் என்க" என்பர் சூரியநாராயண சாத்திரியார். "இவ்வியற்றமிழ் இசைத் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் முன்னர்த் தோன்றினமை பற்றி அஃது இவ்விரண்டிற்கும் முன் வைக்கப்படுவதாயிற்று. இயற்றமிழே, இவ்விரண்டிற்கும் உயிரென விளங்குவது. இயற்றமிழின்றி இவ்விரண்டும் தனித்தியங்குவனவல்ல.

"**இசைத்தமிழென்பது** பண்ணொடு கலந்தும் தாளத்தொடு கூடியும் இயங்கும் செந்தமிழ்ப் பாட்டுக்களாலும் கொடுந் தமிழ்ப் பாட்டுக்களாலும் ஆகும் நூல்களின் தொகுதியாம். இதன்கண் கீர்த்தனங்களும், வரிப்பாட்டுக்களும், சிந்து, ஆனந்தக் களிப்பு, கும்மி, தெம்மாங்கு முதலியனவும் அடங் கும் என்க. இவ் இசைத் தமிழ் நாடகத் தமிழுக்கு முன் னர்த் தோன்றினமை பற்றி முன் வைக்கப்பட்டது."

இனி, இயற்றமிழையும் இசைத்தமிழையும் தன்னுள் ளடக்கியுள்ள நாடகத்தமிழ் இவற்றிற்குப் பின் தோன்றின மையின் மூன்றாவதாக வைக்கப்பட்டது. இயற்றமிழும் இசைத்தமிழும் கூடிய வழியே நாடகத் தமிழ் பிறக்கும். "**நாடகத் தமிழ்** என்பது கையில் நூலெடுத்துப் படித்தற்குரிய அவகாசமில்லாத வேலைக்காரர்களுக்கும், படிக்கத் தெரியா தவர்களுக்கும் நல்லறிவு புகட்டும் நோக்கத்தோடு வகுக்கப் பட்டது"; உலக இயல்பையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும், உள்ளதை உள்ளவாறே புனைந்து காட்டுவது; கேள்வி யின்பத்தோடு காட்சி யின்பத்தையும் உடனளிக்கின்றது. உழைத்துக் களைத்த உடலுக்கும், உளத்திற்கும் இளைப் பாறுதலைக் கொடுத்துக் கிளர்ச்சி செய்வது நல்ல பொழுது போக்காகும். மன எழுச்சிகளுக்கு முறையீடு செய்வதோடு, மெய்ப்பாடுகள், உரையாடல், நடிப்புகளின் வாயிலாய் அவை வெளிப்படுவதற்கு ஒரு நல்ல வழியாவது; ஒழுக்கத் தைச் சீர்படுத்துவது; கற்பனையை வளம்படச் செய்வது; பேச்சுத் திறனையும், நடிப்புத் திறனையும் வளர்த்தோம்புவது; மக்களின் மனப்பான்மையை விரிவடையும்படி செய்து அவர்களைப் பரந்த நோக்க முள்ளவர்களாக்குவது.

கடைச் சங்க நாட்களுக்கு முன்பே சிறந்தோங்கி யிருந்த நாடகத் தமிழ் பிற்காலத்து வளர்ச்சியுறாது தேங்கிக் கிடந்து கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து தான் ஒருவாறு மறுமலர்ச்சி யடைந்து சிறிது சிறிதாக முன்னேறுகிறது. நாடக இலக்கிய வரலாற்றை உரிய நூல் களிற் காண்க.

இனி, தமிழ் '**புதினங்கள்**' எனத் தகும் புதுக்கதை களிலும், இக்காலத்தில்தான் மிக முன்னேற்றம் ஏற்பட்டு வருகின்றது. இக்காலத்துத் திங்கள், பிறை, வார வெளி யீடுகளிலும் தனிப்பட்ட நூல்களிலும், பல புதுக் கதைகள் இயற்றப் பெற்றும், அயல் மொழிகளிலிருந்து பெயர்த்து எழுதப்பட்டும் வருகின்றன. இவை வாழ்க்கை இயல்பு களையும், நிகழ்ச்சிகளையும் உள்ளவாறே கண்டு பின் புனைந்து

புதிதாக எழுதுவதால் இவற்றைப் பலரும் விரும்பிப் படிக்கின்றனர். தமிழ் உரைநடையும் இதன் வாயிலாய் வளர இடமுண்டு. புதுக் கதைகளுக்கு முன்னரே நாடகங்கள் தோன்றி வளர்ந்திருந்தாலும், இவை யிரண்டும் தோன்றி வளர்வதற்குரிய அடிப்படைகள் ஒன்றே என்றும், இவை யிரண்டுக்கும் பலவகை ஒற்றுமைகள் உண்டென்றும் ஹட்ஸன் ஆசிரியர் கருதுகிறார். நாடக ஆசிரியர்களும் கதையாசிரியர்களும் தம்மைச் சுற்றிலுமுள்ள மக்களையும், அன்னார் தம் வாழ்க்கைகளையும், இயல்புகளையும் கூர்ந்து நோக்கிப் புதுவதாகக் கதைகளைப் புனைகின்றனர். ஆனல் இக் கதைகள் உண்மைகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றன. உலகமே ஒரு நாடக மேடையாயிருக்கின்றது. அங்கே நிகழ்வனவற்றை இவர்கள் சித்திரித்துக் காட்டுகின்றனர்.

நாடகமேடை, நடிப்போர், உடைகள் ஒப்பனைகள், திரைச் சீலைகள் முதலியவற்றால் நாடகம் நடித்துக் காட்டப் படுகின்றது; கதை எழுதுவோர் நேராகப் படர்க்கையிலே யெழுதுவர். அன்றித் தமக்கே நிகழுவதுபோல் செய்திகளைத் தன்மையிற் கூறுவர்; அல்லது கடிதங்களின் வாயிலாய்க் கூறுவர். நாடகத்தில் நடிப்போர்களோ உரையாடி, நடித்துக்கொண்டு போவர் என்பன போன்ற சில வேற்றுமைகள் தவிர, நாடகமும் புதினமும் கூறும் பொருள், அவற்றின் அமைப்பு, வரும் ஆட்கள், அவர்களின் ஒழுக்க இழுக்கங்கள் வெளிப்படுத்தப்படல், நிகழ்ச்சிகளுக்கும் ஒழுக்க இயல்புகளுக்குமுள்ள தொடர்பு, பேச்சுகள், உளச் சுவைகளும் உணர்ச்சிகளும் வெளிப்படுத்தப்படல், வாழ்க்கையைப்பற்றிய ஆராய்ச்சி, உண்மை முதலிய நல்லியல்புகள் கூறப்படல், இன்பச் சுவை முதலியன இவ்விரு வகைகளிலும் ஒன்ருகவே காணப்படுகின்றன என்பர் இவ்வாசிரியர். விவரங்களை ஆண்டுக் காண்க.

இப்புதினங்களும் தமிழில் தொல்காப்பியர் காலத்தேயே எழுவதற்குரிய அடிப்படை யோடப்பட்டிருந்தது. அவ்வகை நூல்களும் உண்டாகியிருந்தன என்று கொள்ளலாம். உரைவகை நடையைக் குறிக்கும் நூற்பாவில் "பொருண் மரபில்லாப் பொய் மொழியானும்," என்பது ஒருவகையாகக் காட்டப்பட்டிருப்பது காண்க. இனி "தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமைமேற்றே" என்பதனுலும் பழங் கதைகள் அக்காலத்து எழுதப்பட்டதை அறியலாகும். இப்புதினத் துறையும் தமிழில் இன்னும் மிகமிக விரிவடைய வேண்டும்.

# ஏழாம் பிரிவு

## கட்டுரை

### உள்ளக் கருத்தை மாணவர்கள் வெளியிடல்

இயற்கையில் மனத்தில் தோன்றி எழும் எண்ணங்கள் எவ்வகையிலாயினும் வெளிப்படுத்தப்படல் வேண்டும். மொழிப்படிப்பைப் பொறுத்தவரையில் பேச்சுவாயிலாக அது முதலில் வெளிப்படுகிறது. பேச்சில் வெளியிடப்பட்ட எண்ணங்கள் சிறந்தனவாய்க் கேட்காத பிறரும் படிக்கத் தக்கனவாய், என்றும் நிலைத்திருக்கத் தக்கனவாய் இருக்குமாயின் அவற்றை எழுதியே வெளியிட வேண்டியிருக்கிறது. எழுதி வைக்கும் பழக்கம் இல்லையேல் சிறந்த புலவர் பெருமக்களின் செய்யுட்கள், நாடகங்கள், கட்டுரைகள், காவியங்கள், முதலிய அறிவுச் செல்வங்கள் இன்று நமக்குக் கிடைத்திருக்குமோ? எனவே இவ்வெழுதும் பயிற்சியை இளமையில் தானே பள்ளியில் தொடங்கலாம்.

கட்டுரை எழுதும்போது கருத்தை ஒழுங்காக முறைப்படுத்தி எழுதுகிறோம்; குறித்த காலத்தில் எழுதுகிறோம்; குறித்த அளவில் எழுதுகிறோம்; இலக்கண வரம்பிற்குட்பட்டு எழுதுகிறோம்; சொற்றொடர் ஒழுங்கையும், பத்தி ஒழுங்கையும்; கட்டுரை ஒழுங்கையும் பின்பற்றியே எழுதுகிறோம். ஆகவே பேச்சில் வேண்டுமளவு விரித்துக் கொள்வது போலன்றி நினைத்த பொருளைக் குறித்த அளவில் பிழைகளின்றி இனிய, எளிய, தூய, செந்தமிழ், நடையில் மாணவர்களை எழுதப் பயில்விப்பதே கட்டுரையின் நோக்கமாகும்.

### வாய்மொழிக் கட்டுரைக்குப் பிறகே எழுத்துக் கட்டுரை

பேச்சுக்கும் படிப்புக்கும் பின் எழுத்துப் பயில்வது இயல்பாவது போல் வாய்மொழிக் கட்டுரைக்குப் பிறகே எழுத்துக் கட்டுரை வரவேண்டும்.

### வாய்மொழிக் கட்டுரையின் நோக்கங்களும் பயன்களும் வருமாறு

1. பேச்சுப் பயிற்சிக்கு இது நல்ல வாய்ப்பைக் கொடுக்கிறது.

2. நல்ல உச்சரிப்பையும் சொற்பொழிவாற்றும் திறமையையும் வளர்க்கிறது.

3. குறைந்த காலத்தில் மிகுந்த பொருள்பற்றி ஆராய இடமுண்டு.

4. பல் வேறுபட்ட பயிற்சிகளுக்கிடமுண்டு.

5. தன் கையே தனக்குதவியாகக் கருதும்படி மாணவன் தூண்டப்படுகிறான்.

6. சற்றுத் தன்னம்பிக்கை யிழந்த பிள்ளைகள் ஏனைய பிள்ளைகளோடு ஒத்துழைத்துப் பயனெய்தலாம்.

7. இன்றியமையாத பொருள்களை மாணவர்கள் அறிந்து உள்ளத்து அமைந்திருக்கின்றனரா என ஆசிரியர் கண்டறிய இடமுண்டு. எழுதப்போகும் பொருள்பற்றிய குறிப்புகளை முன் கூட்டியே ஒழுங்குபடுத்தி வகைப்படுத்திப் பழகுவதால், எழுதும்போது திருத்தமாக எழுத இயலும்.

8. பிழைகளை உடனுக்குடனேயும் விரைவாகவும் திருத்தலாம்.

9. கட்டுரையைத் திருத்தும் வேலையை ஆசிரியருக்குப் பின்னர் இதுவும் குறைத்துவிடும்.

10. மேற்கொள்ளத் தக்க நல்ல பேச்சுப் பழக்கங்களை உண்டுபண்ணிக் கெட்ட பழக்கங்களைப் போக்குகிறது.

11. அச்சத்தினலும், கூச்சத்தினலும் வாய் பேசாதிருக்கும் மாணவரைப் பேச வைப்பதற்கு இஃது ஒரு தூண்டுகோலாகும்.

12. மொழிப் பாடங்களிலிருந்து கற்றறிந்த பொருள்களைப்பற்றி ஆராய்வதில் மாணவர்களின் சிந்திக்கும் ஆற்றலை இது செலுத்துகிறது.

வாய் மொழிப் பயிற்சி அல்லது வாய் மொழிக்கட்டுரையைப்பற்றிய தவருன சில எண்ணங்கள் உலவுகின்றன. பழைய முறையில், பேச்சுப்பயிற்சிக்கே இடமில்லை யாதலால் இஃது ஒரு தனிப் பாடமாகக் கருதப்படவில்லை. ஆனல் இதற்கு மிகவும் சிறந்த நிலையை மொழிப்படிப்பில் கொடுக்கவேண்டும். இதற்கெனத் தனிப்பாட வேளையை ஒதுக்கலாம். எழுத்துக் கட்டுரைக்கு மட்டும் இது தொடக்கமும் நற்பயிற்சியும் ஆகுமென்று நினைக்காமலும், தொடக்க வகுப்புக்களில் மட்டும் இஃது இடம்பெற்ருல் போதுமென்று நினைக்காமலும், இஃது எளிது, ஆதலால் முன் ஆயத்தம் வேண்டியதில்லை என்று நினைக்காமலும் ஆசிரியர் எழுத்துக் கட்டுரைக்கு இதனைத் தொடக்கமும் நற்பயிற்சியுமாகக் கொள்ளுவதோடு ஒரு

தனிப் பாடத்தின் நிலையைக் கொடுத்து, கீழ் மேலாகிய எல்லா வகுப்புகளிலும் அமைப்புகளிலும் மொழிப் பாடத்தின் எல்லாப் பிரிவுகளிலும், இஃது இடம் பெறுமாறு பார்த்துக்கொள்வதோடு, இதற்கும் ஆழ்ந்த சிந்தனையோடு கூடிய ஆயத்தத்தையும் செய்யவேண்டும்.

"வகுப்பில் ஆசிரியரும் மாணவரும் ஒரு பொருள்பற்றி ஆராய்ந்து பேசுதலைக் கேட்டல், பின் பேசுதல், கேள்விகள் கேட்டல், விடையிறுத்தல், பன்முறைப் பயிற்சி பெறுதல் (drilling) என்பதே வாய்மொழிக் கட்டுரையாகும்" என்று சுருக்கமாகச் கூறிவிடலாம் என்பர் முறை வல்லார். மொழிப் படிப்பின் அடிப்படையான நோக்கம், பிறர் பேசுவதைக் கேட்டுப் பொருளுணர்தலும், தெளிவாகவும், கோவையாகவும், திருத்தமாகவும் பேசுதலும் ஆதலால் வாய்மொழி எவ்வகையிலும் சிறப்பாகக் கட்டுரையிலும் சிறந்த இடம் பெறுகிறது.

எழுத்துக் கட்டுரைக்கு முற்பயிற்சியாக இதைக் கொண்டாலும், தனியாகவே வாய்மொழிக் கட்டுரையாகவும் நடத்தலாம். படங்கள், தெரிந்த பொருள்கள் பற்றி ஆசிரியரும் மாணவர்களும், மாணவர்கள் தமக்குள்ளும் பேசுதலும், உரையாடலும், அவர்களுக்குள் கேள்விகள் கேட்டலும், விடையிறுத்தலும் ஆசிரியர் ஒரு பொருள் பற்றிக் கூறிய சில வாக்கியங்களைத் திருப்பி மாணவர்கள் கூறலும், பாடங்களில் ஆங்காங்கே கண்ட அருஞ் சொற்களையும், சொற்றொடர்களையும், மரபுத் தொடர்களையும், பல இடங்களில் தம் வாக்கிலேயே மாணவர்கள் வைத்து வழங்குமாறு பயிற்சியளித்தலும் பிறவும் வாய்மொழிக் கட்டுரை வகுப்பில் செய்வதற்குரியனவாம்.

இனி வாய்மொழிக் கட்டுரைப் பயிற்சி வகைகளாக உரையாடல், சொற்போர்கள், சிறுவர்களின் சிறு சொற்பொழிவுகள் முதலியவற்றையும் கொள்ளலாம். பிள்ளைகள் ஒருவரோடொருவர் உரையாடுவதும், தாங்கள் நுகர்ந்த சில பொருள்கள், அல்லது நிகழ்ச்சிகள், தாங்கள் கண்ட காட்சிகள் முதலியனபற்றிச் சிறு சொற்பொழிவுகள் நிகழ்த்துவதும், சில ஆராயத் தக்க, கருத்து வேற்றுமையுள்ள பொருள்கள் பற்றிச் சொற்போர் நடத்துவதும் கட்டுரை எழுதுவதற்கு வேண்டிய குறிப்புகளைக் கொடுத்து நன்கு உதவக்கூடிய பயிற்சிகளாகும். பிழைகளை ஆசிரியர் தாமாக

அல்லது பிற மாணவரைக்கொண்டு அவ்வப்போது திருத்தி விட வேண்டும்.

### கட்டுரை எழுதுவதில் படிப்படியான வளர்ச்சிமுறை

கட்டுரை எழுதும் பயிற்சி படிப்படியாய் எளிதிலிருந்து அருமைக்கும், தெரிந்ததிலிருந்து தெரியாததற்கும், தெளிவி லிருந்து சிக்கலுக்கும், காட்சிப் பொருளிலிருந்து கருத்துப் பொருளுக்கும் போகவேண்டும். இம்முறையில் கட்டுரைப் பயிற்சியின் வளர்ச்சியை மூன்று நிலைகளாகப் பிரிக்கலாம். (1) மாணவர்கள் பிற உதவிகொண்டு எழுதுவது. (2) பிற உதவிகொண்டும் கொள்ளாமலும் எழுதுவது [முதல் நிலையி லிருந்து மூன்றாவது நிலைக்குக் கொண்டுபோய் உய்க்கக் கூடிய ஒரு மாறு நிலை] (3) பிற உதவியின்றி (தாமாக) எழுதுவது.

#### 1. பிற உதவிகொண்டு எழுதும் முதல் நிலை

இவற்றுள் முதல்நிலையாக, (1) இரண்டு மூன்று நான்காம் வகுப்புகளில் பாடப் புத்தகத்திலிருக்கும் பொருள்கள் பற்றி ஏறக்குறையப் பாடப் புத்தகத்தின் மொழி நடையிலேயே திரும்பச் சுருக்கமாக எழுதுதலைக் கொள்ளலாம். தாமாகவே ஒரு பொருளின் இயல்புகளை விளக்கியும் வர்ணித்தும் எழுது வது இளஞ்சிறார்க்கு இயலாத தொன்றாம். ஆகலால் தொடக்கத்தில் அவர்கட்கு அவர்கள் அறிந்த பாடங்களி லிருந்தே கட்டுரை எழுதும் பயிற்சி கொடுத்தல் நலம். அங்ஙனம் செய்தால் நடந்த பாடப் பொருளை மறுபடியும் சிந்திக்க இடமும் உண்டாகிறது. (2) தமிழ்ப் பாடத்தில் வரும் பொருள்களோடு, வரலாறு, இயற்கைப் பொருட் பாடம், தரை நூல் முதலிய பாடங்களில் வரும் கதைப் பொருள்களைப் பற்றியும் எழுதச் சொல்லலாம். (3) அக் கதைகளில் உள்ளடங்கிய பழமொழிகளையும் நீதிகளையும் உணர்ந்தால் அவற்றையும் பற்றி எழுதச் சொல்லலாம். (4) இந்நிலையில், பார்த்து எழுதும் (5) சொல்லுவதெழுதும் பயிற்சிகளைக் கட்டுரைப் பயிற்சிகளாகக் கொள்ளலாம். மூன்றாம் பிரிவில் சில எழுத்துப் பயிற்சிகள் என்னும் பகுதியைப் பார்க்க.

#### 2. பிற உதவிகொண்டும், இன்றியும் எழுதும் மாறு நிலை

பிற உதவிகொண்டும் இன்றியும் எழுதும் மாறுநிலை யில் (ஐந்தாம் வகுப்பிலும் முதல் அமைப்பிலும்) (1) பாடப் புத் தகத்தில் இருப்பவை பற்றியும், (2) பாடப் புத்தகத்தில்

இருப்பதைச் சிறிது மாற்றியும், (3) பாடப் புத்தகத்திலில்லாத ஆனால் அதன் உதவிகொண்டு எழுதக்கூடியனவும் அதி னின்று தோன்றி எழக்கூடியனவுமான பொருள்கள் பற்றி யும் ஆசிரியர்கள் பல குறிப்புகள் கொடுத்து எழுதச் சொல்ல லாம். (4) மாற்றியமைக்கப்பட்ட சொல்லுவதெழுதும், பார்த்து எழுதும் பயிற்சிகளையும் (மூன்றும் பிரிவில் சில எழுத்துப் பயிற்சிகள் என்னும் பகுதியைப் பார்க்க) இந் நிலைக்குரிய கட்டுரைப் பயிற்சிகளாகக் கொள்ளலாம். (5) இன்னும் பாடப் புத்தகத்திலில்லாத, ஆனால் வீட்டிலும் பள்ளியிலும் வகுப்பிலும், இவற்றின் சூழ் நிலையிலும் காணக்கூடிய மாணவருக்குத் தெரிந்த பொருள்கள் பற்றி யும் எழுதச் சொல்லலாம். இப்பொருள்கள் கண்ணால் பார்த் தும், கையால் தொட்டும் அறிந்துகொள்ளக் கூடிய காட்சிப் பொருள்களா யிருத்தல்வேண்டும். கருத்துப் பொருள்களைப், பற்றி இந்நிலையில் எழுதச் சொல்லுவது முறையன்று. மேலும் (6) மொழிப் பயிற்சிகள், (7) கதைக் கட்டுரை. (8) படக் கட்டுரைகளும் இந்நிலைக்குரியன.

## பிற உதவியின்றித் தாமாக எழுதும் உயர்நிலை

அடுத்து, உதவியின்றி மாணவர் தாமாகவே எழுதும் கட்டுரை வகைகளுக்குப் போகலாம். **இரண்டாம் மூன்றும் அமைப்புகளில்** அவர்கள் காணாத பொருள்கள் பற்றியும் எளிய முறையில் கருத்துப் பொருள்கள் பற்றியும் எழுதலாம். இதன் வகைகளாவன.

(1) வரலாற்றுக் கட்டுரை.
(2) வருணனைக் கட்டுரை.
(3) கருதியற் கட்டுரை.

(அ) விளக்கம் (ஆ) கற்பனை (இ) விவாதம்

இவற்றிற்கு மேலும் (4) கடிதம் எழுதுதல். (5) சுருக்கி எழுதுதல். (6) பெருக்கி எழுதுதல். (7) கருத்துரை எழுது தல். (8) மொழி பெயர்ப்பு (இரண்டாம் பிரிவில் ஈற்றில் மொழிபெயர்ப்பைப் பார்க்க) ஆகியவைகளையும் கொள்ள லாம். ஈண்டு மாணவர்களின் (9) படைப்பு ஆற்றலை வளர்க் கும் பயிற்சிகளும் உள. தாமாகவே கற்பனையிலிருந்து விரும் பிய நடையிலும் பொருள் பற்றியும் சிறு கதைகள், பாடல் கள், சிறு நாடகங்கள் முதலியவற்றை மாணவர்கள் எழுதும்

படி தூண்டலாம். நடந்ததாகக் கற்பனையில் எண்ணிக் கொள்ளக் கூடிய சில நிகழ்ச்சிகள், நுகர்வுகள், செய்திகள் பற்றியும் எழுதும்படி கூறலாம்.

இந்நிலையில் தரப்பட்டவை இடைநிலை, உயர்நிலை ஆகிய இரு வகைப்பட்ட மாணவர்க்குரியனவாம். ஆனால் வகுப்பிற் கேற்றவாறு பொருள்களின் எளிமை அருமையை மாற்றிக் கொள்ளலாம்.

இனி, பிற உதவிகொண்டும் இன்றியும் எழுதும் **மாறு நிலையில்** எழுதத்தக்க **கட்டுரை** வகைகளில் நான்கை, ஒரு சிறிது விவரமாகப் பார்ப்போம்.

(அ) **பாட நூலிற் காணாத—ஆனால் மாணவர்களுக்குத் தெரிந்த —பொருள்கள் பற்றி எழுதுதல்.** சிங்கம், யானை போன்ற விலங்குகள் பற்றியும், தங்கம், அரிசி, மாங்காய், பலாப்பழம், உடைபோன்ற பொருள்கள் பற்றியும், மாணவர்க்குத் தெரிந்த சில ஊர்கள் பற்றியும், தாள் செய்தல், மட்பாண்டம் செய்தல், கூடை முடைதல், உப்பு உண்டாக்கல் போன்ற சிறு தொழில்கள் பற்றியும், தாஜ்மஹால், மதுரைக் கோவில் போன்ற சிறந்த கட்டடங்கள் பற்றியும், ஊர்ப்பூம்பொழில், ஆற்றங்கரை, சந்தை, புகைவண்டி நிலையம், மலைச்சரிவு போன்ற காட்சிகள் பற்றியும், நாட்டில் நடக்கும் சில நடப்பு, நிகழ்ச்சிகள் பற்றியும், பள்ளிக்கூட ஆண்டுவிழா, பொங்கல், போன்ற விழாக்கள்பற்றியும், மோட்டார், புகைவண்டி, வான வூர்தி முதலியவற்றில் ஊர்ந்து செல்லல், ஒரு மழைநாளில் வெளியிற் சென்று வந்தது, கோயில் திருவிழாக் கடைத்தெரு வுக்குப் போய் வந்தது போன்ற நுகர்வுகளைப் பற்றியும், தலைவர்கள், அரசியற் பெரியார்கள், சமய ஆசிரியர்களைப் பற்றிய சிறு வரலாறுகளையும் எழுதும்படி சொல்லலாம்.

(ஆ) **சில மொழிப் பயிற்சிகள்.** விடுபட்ட சொற்களை எழுதித் தொடர்மொழிகளை முடித்தல், கதையில் வரும் படர்க்கை யிடங்களை யெல்லாம் தன்மை அல்லது முன்னிலை இடங்களாக் கல், முன்னிலை அல்லது தன்மையிடங்களைப் படர்க்கையாக் கல், ஒருமையைப் பன்மையாக்கல், பன்மையை ஒருமையாக் கல், காலத்தை மாற்றல், தனி வாக்கியங்களாகவும் புணர், கலப்பு வாக்கியங்களைத் தனி வாக்கியங்களாகவும் மாற்றல், தற்கூற்றுகளை அயற்கூற்றுகளாகவும், அயற்கூற்றுகளைத் தற்கூற்றுகளாகவும் மாற்றல், எழுவாய் பயனிலைகளை ஒரே

திணை, பால், இடங்களாகக் கூறல், எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களுக்கு ஏற்ற அடைமொழிகளை வழங்கச்செய்தல், நிறுத்தக் குறிகளைச் சரியாக வழங்கச் செய்தல், உடன்பாட்டு வாக்கியங்களை எதிர்மறை வாக்கியங்களாகவும், எதிர்மறை வாக்கியங்களை உடன்பாட்டு வாக்கியங்களாகவும், வெறும் வாக்கியங்களை வினா வாக்கியங்களாகவும், வினா வாக்கியங்களை வெறும் வாக்கியங்களாகவும் மாற்றல், எழுவாயைச் செயப்படு பொருளாகவும், செயப்படு பொருளை எழுவாயாகவும் மாற்றல் போன்ற பயிற்சிகள் பிழையின்றிக் கட்டுரை எழுதுவதற் கேற்றவையாகும்.

(இ) **கதைக் கட்டுரை.** இக்கட்டுரையில், கதையை ஆசிரியர் ஓரிரண்டு முறைகள்கூற அல்லது படித்துக்காட்ட, அதைக் கேட்டுக் கொண்டிருந்த மாணவர் பின்னர் அதே கருத்தையும் சொற்களையும் நினைவூட்டிக்கொண்டு சொல்லிப் பின் எழுதுவதால் முன்னறிந்த சொற்களைத் திரும்பவும் வழங்கல், நினைவு ஆற்றலை நன்முறையில் பயிற்றல், கருத்துகளைச் செம்மையாகவும் ஒழுங்காவும் கோவைப்படுத்திச் சொல்லும் வாய்மொழிப் பயிற்சி, பின்னர், தொடர்ச்சியாய் அம்முறையில் எழுதும் பயிற்சி, கற்பனைக்கு ஏற்ற வாய்ப்பு முதலியவற்றை அவர் அடைய இடமுண்டு.

இதிலும் மூன்று படிகளைக் கொண்ட ஒரு வளர்ச்சி முறையைக் காணலாகும். முதற்படியில் ஆசிரியர் ஒரு கதையைச் சுருக்கமாய்ச் சொல்லி (இது சிறந்தது) அல்லது ஓரிரண்டு முறை படித்துக் காட்டுவர். பின் அதைக் கேட்டுக் கொண்டிருந்த மாணவரை, இதைத் திரும்பவும் தொடர்ச்சியாகச் சொல்லும்படி ஏவியும், கேள்விகள் கேட்டும், தங்களுக்குள்ளேயும், ஆசிரியரையும் கேள்விகள் கேட்கும்படி தூண்டியும், ஆசிரியர் கோவையாகக் கூறச்செய்து, பின் கரும்பலகையில் குறிப்புகளை எழுதி ஒருவாறு மாணவர் உள்ளத்தில் அமையும்படி செய்து, பின் எழுதப் போகுமுன்னர் அழித்துவிட்டு எழுதும்படி சொல்லலாம்.

இரண்டாம் படியில் கதை முழுவதையும் கூறாது அல்லது படித்துக் காட்டாது, இன்றியமையாது வேண்டப்படும் குறிப்புகளை மட்டும், கரும்பலகையில் எழுதிக் கதையின் பரந்த போக்கு ஒருவாறு விளங்கும்படி சொல்லி, வகுப்பில் ஒவ்வொரு மாணவரும் முன்போல் கூறும்படிசொல்லிப் பிறகு தனித்தனியாக எழுதும்படி சொல்லலாம். மூன்றும் படியில் குறிப்புகள் தாமும் தொடர்ச்சியாகவும், மிகுதியாகவும் இல்லாமல் கதையின் சுருக்கமே சிறு தொடர்மொழிகளிற்

குறிக்கப்பட, ஒவ்வொரு தொடர்மொழியையும் மாணவர் விரித்துச் சொல்லப் பின், முன்போன்ற முறைகளில் எழுதும் படி செய்தல் வேண்டும். புலப்படாத இடங்களில் ஆசிரியர் கூறி உதவலாம். கட்டுரை எழுதும்போது ஆசிரியர் கூறும் குறிப்புகளை இங்கும் கூறலாம்.

இதற்கடுத்தபடியாகப் (ஈ) **படக் கட்டுரையைக்** கொள்ளலாம். கட்டுரையில் மட்டுமின்றி, மொழிப் படிப்பிற் பிற பகுதிகளிலும், பொதுவாகக் கற்றலில் எல்லாப் பாடங்களிலும் வாழ்க்கையிலும், உளப் பண்பை வளர்ப்பதில் நல்ல படங்கள் ஒரு சிறந்த இடத்தைப் பெறுகின்றன. மொழிப் படிப்பில் அதிலும் சிறப்பாக அயல் மொழிப்படிப்பில் சொற்களின், சொற்றொடர்களின் பொருள்களை உள்ளவாறே உணர்ந்து உள்ளத்தமைப்பதற்கேற்ற பின்னணியைப் படங்கள் தருவதால் அவற்றை மிகுதியாக வழங்க வேண்டும் என்று முறைவல்லார்கள் கூறுகிறார்கள். மேலும் ஒரு நாட்டினுடைய (சிறப்பாக அயல் நாட்டினுடைய) வாழ்க்கை, பழக்க வழக்கங்கள், நிலையங்கள், தரைநூல், வரலாறு முதலியவற்றை அறியப் பலவகைப் படங்கள் மிக உதவும் என்று கூறுகின்றனர். இளம் மாணவர்களின் சொற்களஞ்சியத்தைப் பெருக்கவும், ஒரு பாடத்திற்கு வேண்டிய ஆயத்தத்தைச் செய்வதற்குரிய பின்னணியைத் தரவும், காட்சிகளின் நயங்கண்டு வியக்கு மாற்றலையும் அழகுணர் ஆற்றலையும் வளர்க்கவும், கற்பனையைத் தூண்டிக் கூர்மையாக்கவும், சொற்களின் பொருள்களை நேருக்கு நேராக விளக்கிக் காட்டவும், குறிப்புணர்தலை வளம் படுத்தவும், படங்கள் உறுதுணையாயிருக்கின்றன என்பர் **ரைபர்ன், காக்** என்னும் பேராசிரியர்கள். இன்னும் அழகுள்ள சூழ்நிலையைக் கொண்டுள்ள படங்களும் காட்சிகளும் தம்மை யறியாமலே மாணவர்கள்பால் ஒரு நற்பயனை விளைக்குமென்று உள நூலறிஞரும் கருதுகின்றனர்.

மேலும் கட்டுரையைப் பொறுத்த வரையில் படங்கள், வாய்மொழிக் கட்டுரைக்கேற்ற பொருள்களையும், குறிப்புகளையும் நல்குவதோடு, (பாடங்களிலிருந்தே அவற்றிலுள்ளவற்றைத் திருப்பியெழுதும் கட்டுரைக்கு அடுத்த நிலையாகவுள்ள) உதவிகொண்டும், உதவியின்றியும் மாணவர்கள் எழுதும் இரண்டாம் நிலையான மாறுநிலைக் கட்டுரைக்குச் சிறந்த ஒரு வழியும் வகையுமாகும். கதைக் கட்டுரையை விட இஃது ஒருபடி வளர்ச்சியுற்றதுமாகும் என்பர். ஏனெனில், கதைக் கட்டுரையில் கேட்ட, படித்த கதைகளைச் சுருக்கி ஒழுங்குபடுத்தி எழுதுவதோ, கொடுக்கப்

பட்ட குறிப்புகளைப் பெருக்கி எழுதுவதோ செய்கிறார்கள். ஆதலினால் மாணவர்கள் பெறும் உதவி மிகுதியா யிருப்ப தோடு திரும்பக் கூறுவதையே அவர்கள் செய்கிறார்கள். ஆனால் இதிலோ, காணும் காட்சியை அல்லது படத்தில் பொதிந்து கிடக்கும் குறிப்புகளையும் விவரங்களையும் மாண வர்களே குறிப்புணர்ந்து அறிந்து, ஒழுங்கு செய்து வகைப் படுத்திக் கூறவேண்டி யிருப்பதால், அவர்களே பெறும் உதவி குறைவதோடு, உதவியின்றித் தாமாகவே எழுதும் கட்டுரைக்கு மிகவும் அண்மையில் அவர்களைச் செலுத்திக் கொண்டும் போகிறது.

எனவே, "பேசும் உரிமையையும் பழக்கத்தையும் தூண்டுவதற்கும், கற்பனையைக் கூர்மைப்படுத்துவதற்கும், படிப்படியான பயிற்சிகளைக் கட்டுரையிலும் வாய் மொழியி லும் தருவதற்கும், பொதுவாக அழகுணர் ஆற்றலுக்கான வழியைச் சீர்திருத்துவதற்கும், சொற் களஞ்சியத்தைப் பெருக்கவும் படங்கள் செய்யும் சிறந்த உதவியைப் போல் வேறொன்றும் செய்வதில்லை" என்றும், "படங்கள் மாண வர்களின் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றன; கவ னத்தை இழுக்கின்றன; ஆராய்வூக்கத்தைத் தூண்டுகின் றன; ஆராய்ச்சியை வளர்க்கின்றன" என்றும் காக் ஆசிரியர் கூறும் கூற்றுகள், சுருக்கத்தில் படங்கள் கட் டுரையிற் பெறும் சிறந்த இடத்தைக் காட்டுகின்றன.

ஒரு படக் கட்டுரைப் பாடம் நடத்தும்போது அதில் மூன்று படிகளைக் காணலாம். முதலாவதாக ஆசிரியரின் ஆயத் தமே கவனிக்கற்பாலது. தம் ஆயத்தத்தைச் சரிவரச் செய்ய வேண்டுமாயின் ஆசிரியர் முதன் முதலில், படத்தின் உயிர் நிலை, அதற்குதவும் சிறு விவரங்கள், படத்தின் முன்னணி, பின்னணி முதலியவற்றைக் கூர்ந்து நோக்கி உணர்ந்து, படம் கூறுவதென்ன, குறிப்பாய்க் காட்டுவதென்ன, வெளிப்படையாய்க் காட்டுவதென்ன, மறைத்து வைத்திருப்ப தென்ன என்பன போன்ற கேள்விகளைத் தாமே கேட்டுக் கொண்டு விடையிறுத்துப் பார்த்துக் கொள்வதோடு, மாண வரின் பட்டறிவு, பட அறிவு, பரிவு, சொற்களஞ்சிய விரிவு முதலியவற்றை வளர்க்கும் நோக்கத்தோடு, அதற்கேற்ற பயிற்சிகளை ஆயத்தம் செய்யவேண்டும். இப்பயிற்சிகள் தெளிவான விளக்கத்திலிருந்து தொடங்கி, படிப்படியாய், படத்தைப்பற்றிய முழுவிவரம், அதை ஒட்டிய பிறகாட்சிகள் முதலியவற்றிற்கு வளர்ந்துகொண்டு போகும்படியான நிலை யில் அமையவேண்டும்.

இங்ஙனம் முன்கூடிய ஆயத்தத்தைச் செய்துகொண்ட பின், **அடுத்தபடியாக** ஆசிரியர் குறித்த படத்தை மாணவர்களுக்குக் காண்பிக்கவே, அது தன் வேலையைத் தானே செய்யத் தொடங்குகிறது. அது மாணவரின் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து, அவர்களின் முழுக் கவனத்தையும் இழுக்கிறது. ஆசிரியர் படத்தைக் காண்பித்தவுடனேயே அதைப் பிடுங்கிக் கொள்ளவோ, அதைப்பற்றிய கேள்விகள் கேட்கவோ தொடங்கிவிடாமல், மாணவர்கள் நன்ருய்ப் பார்த்துப் பொருளுணர்ந்து துய்ப்பதற்கு வேண்டிய போதிய காலத்தைக் கொடுப்பதோடு, தாம் குறுக்கிட்டு அந்த நுகர்வைக் குலைத்து விடாமலும் இருக்கவேண்டும். அதற்கு வேண்டிய வாய்ப்புகளையும் தரவேண்டும். ஒரு வேளை மாணவர்கள் தமக்குள்ளேயே தாழ்ந்த குரலில் ஒருவருக்கொருவர் அதைப்பற்றிப் பேசிக்கொண்டாலும், வகுப்பின் அமைதியைக் குலைக்கின்றது என்று தவருக எண்ணி அதைத் தடுக்கவும் கூடாது.

**கடைசியாக,** இவ்வாறு நிகழும் பேச்சில் ஓர் ஒழுங்கைப் படிப்படியாய் உண்டுபண்ணுவதற்கு ஏற்றவற்றை ஆசிரியர் செய்தற்குரியர். முதலில் படத்தை ஒரு முழுப்பொருளாகப் பார்க்கச் செய்தபின், பகுதிகளுக்கும் விவரங்களுக்கும் போகச்செய்தல், படத்திற் சிறந்து விளங்கும் பொருள்களை முதலிற் பார்க்கச்செய்தல், முன்னணி, பின்னணிகளைக் கவனிக்கச் செய்தல் முதலியவற்றை மாணவர்கள் மேற்கொள்ளுமாறு செய்தும் ஆசிரியர், தொடர்ச்சியாகவும் கோவையாகவும், வாய்மொழியில் அப்படத்தைப் பத்து முதல் பதினைந்து வரிகளுள் எழுதிவிடக் கூடிய அளவில் கேள்விகள் கேட்டு வருவித்துக் கரும்பலகையில் எழுதுவர். பின் இங்ஙனமே வகுப்பில் எல்லோரிடையும் நிகழ்ந்த பின் கரும் பலகையில் உள்ளதை அழித்துவிட்டுத் தம் நினைவிலிருந்தே அக்கட்டுரையைப் பின் எழுதும்படி ஆசிரியர் சொல்லவேண்டும். பொதுவாகக் கட்டுரை எழுதும்போது ஆசிரியர் கவனிக்கவேண்டியவற்றை ஈண்டும் மேற்கொள்ளல் வேண்டும்.

அடுத்து, இடைநிலையிலும், உயர்நிலையிலும் தரத்தக்க உதவியின்றித் தாமாக எழுதும் கட்டுரை வகைகளில் ஈற்றில் நிற்கும் இரண்டைச் சற்று விவரமாகப் பார்ப்போம்.

**(அ) கடிதம் எழுதுதல்.** பள்ளிக்கூட வாழ்விலும், வாழ்க்கையிலும் கடிதம் எழுதுதல் இன்றியமையாத ஓர் இடத்தைப் பெற்றிருப்பதால், கட்டுரையிலும் அதை எழுதுவதற்கான பயிற்சி ஒரு சிறந்த இடத்தைப் பெறவேண்டும். கடிதம் எழுதுதலைப் பெருவாரியாக, தொழில் முறை விண்ணப்பக் கடிதங்கள், தனிப்பட்ட கடிதங்கள், சமுதாயக் கடிதங்கள் என முக்கூறுகளாகப் பிரிக்கலாம். கீழ்க்கண்ட இயல்புகளை ஒரு நல்ல கடிதம் பெற்றிருக்கவேண்டும்.

(1) **இருப்பிடமும் எழுதும் நாளும்.**—தனிப்பட்ட கடிதங்களிலும், சமுதாயக் கடிதங்களிலும் இவை கடிதத்தின் வலப்புற மேலும், தொழில் முறைக் கடிதங்களிலும், விண்ணப்பக் கடிதங்களிலும் இடப்புற அடியிலும் குறிக்கப்படல் வேண்டும். (2) **முகவுரை.** இன்னாரிடமிருந்து இன்னாருக்கு என்று முகவரியுடன் தொழில்முறை, விண்ணப்பக் கடிதங்களில் எழுதுவதே முகவுரை யெனப்படும். இஃது ஏனைய கடிதங்களில் வேண்டப்படுவதன்று. (3) **விளி.** கடிதம் பெறுவோரைச் செய்தி எழுதத் தொடங்குமுன் விளிப்பதே விளி யெனப்படும். அவர்களின் தகுதியும், பழமையும், உரிமையும் கருதி விளியை இடத்திற்கேற்றவாறு ஒருமையாகவோ, உயர்வுப்பன்மையாகவோ அமைக்கலாம். பெறுவோர் ஒரு கூட்டமாகவோ பலராகவோ இருப்பின் பன்மையாக்கலாம். (நண்ப, நண்பரீர், நண்பர்காள்!). இவ்விளிக்குமுன், அன்பு, வணக்கங்களைக் குறிக்கும் அடைமொழிகளையும் சேர்க்கலாம். (4) **செய்தி.** கடிதம் எழுதுவோர், பெறுவோர்க்கு அறிவிக்க வேண்டிய செய்தியை இப்பகுதி கொண்டிருக்கும். செய்தியை அளவிற்கும், பொருளுக்கும் தக்கபடி ஒன்று அல்லது பல பத்திகளாக அமைக்கலாம். (5) **முடிப்பும் கையெழுத்தும்.** செய்தியின் கீழ் வலப்புறத்தில் எழுதுவோர்க்கும் பெறுவோர்க்கும் இடையில் உள்ள உறவின் முறை தொடர்புகளுக்கு ஏற்ற (தங்களின் தாழ்மையுள்ள, வணக்கமுள்ள, கீழ்ப்படிதலுள்ள, உண்மையுள்ள, அன்புள்ள) ஒரு தொடர் எழுதப்படலாம். இனத்தார்க்காயின் உறவின் முறையும் கூறப்படலாம். அதற்குக் கீழ், கையெழுத்திருத்தல் வேண்டும். (6) **முகவரி.** கடிதத்தின் மறுபுறத்தில் அல்லது உறையின் மேற்புறத்தில் அல்லது கடிதத்தின் இறுதியில் இடப்புறத்தில் கடிதம் பெறுவோரின் முழு முகவரியும் எழுதப்படல் வேண்டும். ஆங்கிலமுறையில் ஆட்பெயர், அலுவல், கதவெண், தெரு, ஊர், அஞ்சல் (தபால்) நிலையம், கூற்றம் (தாலுகா), கோட்டம் (ஜில்லா), மாகாணம், நாடு என்னும்

வரிசையில் இஃது அமையும், தமிழ் முறையில் இது தலை கீழாக அமையும். முன்னதே எளியதும் தெளிவுடையது மாகும்.

பெயரெழுதும் முன்னர் நண்பர், ஒத்தார்க்குத் திரு வாளர் என்றும், பெரியோர்களுக்கு உயர் திருவாளர் என் றும் அடைகொடுக்கலாம். இன்னும் இடத்திற்கேற்றவாறு மறைத் திருவாளர், சைவத் திருவாளர் என்பன போன்ற அடைகளும் வரலாம். பெண்டிர்க்குத் திருவாட்டி, திருமதி என்னும் அடை கொடுக்கலாம். இவ்விரு பாலார்க்கும், இவற் றின் குறுக்கமாகிய திரு என்பதையும் இடலாம். இவ்விரு பாலார்க்கும் உயர்வு கருதும்போது பெயருக்குப்பின் அவர் கள் என்று குறிப்பிடலாம்.

(2) **சுருக்கி எழுதுதல்.** தாய்மொழியின் வாயிலாகவே கற்றல் மட்டுமின்றி மற்றுமுள்ள அரசியல், வணிக அலுவ லகங்கள், நாடு நகர் ஊர் ஆளுங் கழகங்கள், அறங்கூறு அவையங்கள் சுருங்கக் கூறின் நாட்டின் நடப்பின் எல்லாத் துறைகளும் நடைபெறவேண்டும்; மொழியை அடிப்படை யாகக் கொண்டே மாகாணங்கள் பிரிக்கப் படவேண்டும் என் றெல்லாம் வேண்டிவரும் இந்நாட்களில் அத்தகைய அலுவல கங்களில் பணியாற்றப் போகும் மக்களுக்கு ஒருசார் முற் பயிற்சியாக அமையும் வகைகளில் சுருக்கி எழுதுதல், பெருக்கி எழுதுதல், கருத்துரை எழுதுதல் முதலியவற்றைச் சிறப்பாகக் கொள்ளலாம்.

இவற்றுள் **சுருக்கி எழுதுதல்** என்பது, கொடுத்திருக்கும் ஒரு பகுதியைச் சுருக்கி எழுதுவதாகும். கொடுத்த பகுதி யில் உள்ள கருத்துகள் ஒன்றையும் விடாமலே, சுருக்கமாயும், எழுதவேண்டும், சுருக்கம், கொடுத்த பகுதிக்கு எவ்வளவில் அமையவேண்டும் என்பதற்குத் தனிப்பட்ட விதி இல்லையா யினும், அதில் உள்ள சொற்களில் மூன்றில் ஒரு பகுதிக்கு மேல் சுருக்கம் கொண்டிருக்கலாகாது என்று ஒருவாறு கொள்ளலாம். உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கு, துணைப் பாட நூல்களில் படித்தவற்றிற்குச் சுருக்கம் எழுதவும், நூல் நிலையப் படிப்பில் அல்லது பரந்தபடிப்பில் குறிப்புகள் எழுத வும் இப்பயிற்சி மிக உதவும். இன்னும் மேற்குறித்தாங்கு, அரசியல் முதலிய அலுவலகங்களில் பணியாற்றும் எழுத்தா ளர்களுக்கும், செய்தித்தாள்கள், இதழ்கள் முதலியவற்றில் பணியாற்றும் ஆசிரியர்கள், உதவியாசிரியர்கள், பதிப்பாளர்,

எழுத்தாளர்களுக்கும் இப்பயிற்சி மிக உதவி செய்வதொன்ரும் என்பதில் ஐயமில்லை.

இதில் செறிவும், தெளிவுமே மிக இன்றியமையாது அமைய வேண்டிய நல்லியல்புகளாம். சொல்ல வேண்டிய வற்றை நேராக, தெளிவாக, ஐயம் திரிபுகளின்றி எடுத்துக் கூறுவதே இதன் நோக்கமாகும். மேலும் கூறுவது படிப் போருக்கும் படிக்கக் கேட்போருக்கும் எளிதில் விளங்கும் படி அமைய வேண்டும். குறித்த சில கால அளவிலும் இதை எழுதவேண்டுமானுல் கொடுத்திருக்கும் பகுதியிற் காணப்படும் சிறந்த அடைமொழிகளையும், சொற்ருெடர், மரபுத் தொடர்களையும் அங்ஙனமே எடுத்தாளாது விடுத்து விடுவதோடு, கொள்ளத்தக்க சாரத்தை மட்டும் கொண்டு, தள்ளத்தக்க சக்கையைத் தள்ள வேண்டும். இவ்வேலையை யும் மிக விரைவிற் செய்யவேண்டும். இதற்கு முன்னதாக ஒரு குறிப்புச் சட்டகம் போல எளிய நடையில் பொருள் களைப் பகுதியில் கண்ட வரிசையில் முன் பின்னுக மாற்ருது முறைப்படுத்தி எழுதி, அதைப் படித்துப் பார்த்துச் சரி என்று கண்டதற்பின் செம்மையாக எடுத்தெழுதிக் கொள் ளலாம். மாணவர்கள் நன்முறையில் இதிற் பயிற்சி பெறும் நோக்கத்தோடு ஆசிரியர்கள் அடிக்கடி நல்ல எடுத்துக்காட்டு களாக உள்ள சுருக்கி எழுதும் பயிற்சிகளை அவர்களுக்குப் படித்துக் காட்டவேண்டும். மாணவர்கள் இவற்றைப் பார்த்தும், கேட்டும் தாமும் பின்பற்றி எழுதலாம்.

## கட்டுரை எழுதும்போது ஆசிரியர்கள் கவனிக்கத்தக்க சில குறிப்புகள்

மாணவரின் வகுப்புக் கட்டுரை, தலைப்பில் பொருள் குறிக்கப் பெற்றும், இடப்பக்கம் வரம்பையின் (margin) மேலே கட்டுரை எண்ணும் தேதியும் குறிக்கப்பட்டும், பெரி தும் சிறிதுமின்றி வழக்கமாய் எழுதும் எழுத்து அளவில் பொருள் கோவைப்பட, பத்தி அமைப்புடன் எழுத வேண் டும். உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் கால் தாள் பக்கத்தில் மூன்று பக்கம் பேரெல்லையாக வைத்து, எழுத்து, சொல், பொருட் பிழைகளினின்றித் தெளிவாயும் துப்புரவாயும் எழுத வேண்டும். இடப்புறமெல்லாம் திருத்துவதற்கென வெற்றிடமாய் விடல் நலம். (1) வாக்கிய உறுப்புகளாக ஆங்கிலச் சொற்கள் வருதல் கூடாது. (2) இடக்கைப் புறத் தின்மேல் ஒரு **குறிப்புச் சட்டகம்** எழுதி அதை மாணவர்கள் பின்பற்ற வேண்டும். இங்ஙனம் செய்வது எழுதவேண்டிய

வற்றை ஒன்றும் விட்டு விடாமல் எழுதுவதற்கும், வேண்டாத வற்றை எழுதாம லிருப்பதற்கும், உறுதுணை செய்யும். மேலும் மற்றொன்று விரித்தலுக்கும் இடமிருக்காது. கட்டுரையின் ஒவ்வொரு பகுதிக்கும் எவ்வளவு இடம் கொடுக்க வேண்டுமென்பதற்கும், பத்திகளை ஒழுங்காக முறைப்படுத்துவதற்கும் இஃது உதவும். (3) எழுதும் பொருள் மாணவர்கள் தாமாக எழுதத் தக்கனவாயும் குறிப்புகள் எளிதில் தரத் தக்கனவாயும் இருத்தல் வேண்டும். மாணவர்கள் தம் கருத்து, சொல்வளங்களுக்கு ஏற்றவாறு அவர்களையே எழுதும் பொருளைத் தேர்ந்தெடுக்கவும் செய்யலாம். ஒரு வாரத்திற்கு முன்னரே அப்பொருளை வெளிப்படுத்தி அதுபற்றிய குறிப்புகளடங்கிய இடங்களையும் கூறினால் மாணவர்கள் அவற்றைத் திரட்டிக்கொண்டு வர இயலும். (4) இவற்றிலிருந்து வாய்மொழிக் கட்டுரை நடக்கும்போது ஏற்றவற்றைப் பொறுக்கி முறைப்படுத்திக் கரும்பலகையில் எழுத, அவற்றையே மாணவர்கள் குறிப்புச் சட்டமாகக்கொண்டு பின்னர் விரித்துக் கட்டுரையை எழுதலாம். (5) அகராதியையும், பொருளில் ஐயம் நேர்ந்துழி எழுதுவதற்கு முன் பாட நூல்களையும் பார்த்துக் கொள்ளும் உரிமையை மாணவர்கட்குக் கொடுக்கலாம். (6) ஆசிரியர் ஒரே இடத்தில் உட்கார்ந்து கொண்டு வேறு எதையாவது பார்த்துக்கொண்டு அல்லது பிறரோடு பேசிக் கொண்டு இராமல் சுற்றி வந்து மேற்பார்வை பார்ப்பதோடு பெரும் பிழைகளை அவ்வப்போது சுட்டிக் காட்டி மாணவர்கள் எழுதும் போதே திருத்திவிடவேண்டும். இது பின்னர்த் திருத்தும் வேலையை மிகவும் குறைத்து விடும். (7) **நிறுத்தக் குறிகளைக்** கவனித்து எழுதுமாறு வற்புறுத்தல் வேண்டும். கால், அரை, முக்கால், முழுப் புள்ளிகள், வினா, உணர்ச்சி, மேற்கோள், வரலாறு, தொகை, இடைப் பிறவைப்பு, விடுபாடு, இடைக்கோடு முதலிய குறிகளின் ஆட்சிமுறைகளைக் கட்டுரை இலக்கண நூல்களிற் கண்டு கொள்க. (8) **கையெழுத்து** அழகாயும் தெளிவாயுமிருக்க வற்புறுத்த வேண்டும். (கையெழுத்துப் பகுதியைக் காண்க.) (9) **கட்டுரை அமைப்பையும்** கவனிக்குமாறு செய்யவேண்டும். கட்டுரையில் தொடர்ச்சி, அளவு, ஒருமை ஆகிய யாவும் வெளிப்பட்டுத் தோன்ற வேண்டும்.

ஒரு பொருளைப்பற்றி எழுதும்போது அதைப்பற்றியே எழுதி மற்றொன்று விரிக்காம லிருப்பது **ஒருமையாம்**. கட்டுரையின் பல பகுதிகளும் ஏற்ற அளவோடு அமைந்திருத்தல் **அளவாம்**. கட்டுரை பல பத்திகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும்போது ஒவ்வொன்றுக்கும் தொடர்பு இருப்பதும் ஒவ்

வொரு பத்தியிலும் சொற்றொடர்களுக்குள் தொடர்பு இருப்பதும் தொடர்ச்சியாம். பொதுவாக ஒவ்வொரு கட்டுரையும் முகவுரை, உடல், முடிவு என்ற பிரிவுகளைக் கொண்டிருக்க வேண்டும். **முகவுரை** பொருத்தமுள்ளதாயும், படிப்போரின் கவனத்தை இழுக்கக் கூடியதாயும், சிறியதாயும், கட்டுரையின் நோக்கத்தைக் காட்டுவதாயும், படிப்போரைக் கட்டுரையின் உடலுக்குள் அழைத்துக் கொண்டு போவதாயும் இருக்க வேண்டும். ஆதலால் முதலில் உடலுக்குச் சட்டகம் அமைத்துக்கொண்டு அதற்கேற்ற தோற்றுவாய் அமைப்பது ஏற்றதாகும். **உடலே** கட்டுரையின் சிறந்த பகுதியாம். எழுத எடுத்துக்கொண்ட பொருள் பற்றிய இன்றியமையாத கருத்துக்களும், விளக்கங்களும், குறிப்புகளும், மேற்கோள்களும் எடுத்துக்காட்டுகளும் இப்பகுதியிலேயே அடங்கியிருக்கும். குறித்த கால, இட, அளவில் ஒரு பொருள்பற்றிய அனைத்தையும் எழுத இயலாது. ஆதலால் இன்றியமையாதனவற்றை மட்டும் தேர்ந்தெடுத்து இணைக்கவேண்டும். **முடிவு** படிப்போர் மனத்தில் பசுமரத்தாணியெனப் பதியுமாறு அமையவேண்டும். இஃது இல்லாவிட்டால் உடலின் சுருக்கத்தையாவது கூறி முடிக்கலாம். (10) கட்டுரையின் அமைப்பைக் கவனித்த வாறு போலவே கட்டுரையின் உட்பகுதிகளாகிய **பத்திகளின் அமைப்பையும்** கவனிக்கவேண்டுவதை வற்புறுத்த வேண்டும். ஒரு கட்டுரை பல பத்திகளாலானது. ஒரு பத்தி, ஒரே ஒரு குறிப்பு அல்லது கருத்தைத் தன் முதல் இடை கடைகளில் ஓரிடத்திற் கொண்டு இருக்க வேண்டும். ஒரு பத்தி வெளிப்படையாகத் தன் கருத்தை முதலிலேயே கொண்டிருப்பது சிறந்ததாகும். பத்திப் பொருள் பெயரளவாய் அமையாமல் முழுத்தொடர் மொழிகளாலாகி (வாக்கியங்களாலாகி) இருத்தல் மேலாகும்.

ஒரு பத்தியை மற்றொரு பத்தியிலிருந்து வேறு பிரித்துக் காட்டற்கு, அதைத் தொடங்கும்போது இடது வலப்புறத்திற் சிறிது இடம் விட்டுப் புதிதாய்த் தொடங்குகின்றோம். இவ்வாறு, சற்று இடம் விட்டு நிறுத்தி எழுதுவது, இதுவரை எழுதிய பத்தியைப் பற்றி நினைத்து, இனி வரப்போகும் பத்தியைப் பற்றி நினைத்து, இவை யிரண்டுக்கும் ஒரு தொடர்பை எங்ஙனம் உண்டாக்குவது என்பதைக் கருதுவதற்கான காலத்தையும் இடத்தையும் கேட்போருக்கும் படிப்போருக்கும் தருவதற்கேயாம். எனவே ஒரு நல்ல பத்தி, படிப்போரையும் கேட்போரையும் அவர்களை அறியாமலே அடுத்ததற்கு அழைத்துக்கொண்டு போகவேண்டும். ஒரு வரலாற்றில்

நிகழும் ஒவ்வொரு புது நிகழ்ச்சி அல்லது விளக்கம் ஒரு புதிய பத்தியில் தொடங்கப் பெறுவதால், கட்டுரை வளர்ச்சியின் போக்கு எங்ஙனம் போகின்றது என்பது தெளிவாய்ப் புலப்படும்.

ஒரு கட்டுரையில் பத்திகளை **முகவுரைப் பத்தி**, முகவுரையிலிருந்து உடலுக்குப் படிப்போரை அழைத்துக்கொண்டு செல்லும் **மாறு நிலைப் பத்தி, உடற் பத்தி**, உடலிலிருந்து முடிவுக்கு அழைத்துக் கொண்டு செல்லும் **மாறுநிலைப் பத்தி முடிவுப் பத்தி** என்று சில வகைகளால் பிரிக்கலாம் என்பர் பெரியோர். கீழ்க்கண்ட இயல்புகள் அடங்கியுள்ள ஒன்றே நல்ல பத்தியென அறிஞரால் மதிக்கப்படும். ஒரு முறை படித்தவுடனேயே அதில் அடிங்கியிருக்கும் பொருளை அறிந்துகொள்ளத் தக்க ஒருமைப் பாடுடையதாய் ஒரு பத்தி அமைந்திருக்க வேண்டும். அஃதாவது அஃது ஒரே கருத்து, செய்தி, அல்லது பொருளை, அல்லது கட்டுரை முதற் பொருளின் ஒரே இயல்பு அல்லது உட்பிரிவைப் பற்றியதாயிருக்கவேண்டும். எனவே புதியதொரு கருத்து அல்லது இயல்பு எடுத்துக் கூறப் படுங்கால், புதியதொரு பத்தியில் அது தொடங்கப்பட வேண்டும் என்பது பெறப்படுகின்றது. இவ்வியல்பையே பத்தியில் **ஒருமை** என்பர் முறை வல்லோர். ஒருமைப் பாடுடைய ஒரு பத்தியிற் பொதிந்துள்ள கருத்தை ஒரே தொடர்மொழியில் அல்லது தொடரில் அல்லது சொல்லிற் கூறி விடலாம். அடுத்து நாம் பத்தியின் **தொடர்ச்சிக்குப்** போவோம். ஒரு கட்டுரை முழுவதிலும் பத்திக்குப் பத்தி தொடர்ச்சி இருக்க வேண்டும் என்பதைக் கண்டோம். அதுபோன்றே ஒவ்வொரு பத்தியிலும் ஒவ்வொரு தொடர்மொழிக்கும் தொடர்ச்சி இருக்க வேண்டும். ஒவ்வொரு பத்தியும் கட்டுரையை வளர்த்திக் கொண்டு போவதைப் போலவே, ஒவ்வொரு தொடர் மொழியும், பத்தியை வளர்த்துக்கொண்டு போகவேண்டும். இவ்வாறு பத்திப் பொருள் வளர்ச்சி யுறுவதால் அவ் வளர்ச்சியைச் செய்யும் உட்பிரிவுகளும் குறிப்புகளும் நடந்த முறைப்படி, முறை பிறழாமல் கோவையாக அமையவேண்டும்.

இனி ஒரு நல்ல பத்தியில் ஒருமைக்கிடையில் **வேறுபாடும்** காணப்பெறும். அஃதாவது அதன் உறுப்புகளாகிய தொடர் மொழிகள் அளவிலும் அமைப்பிலும் ஒரே தன்மையனவாய் இராமல் வேறுபட்டிருக்க வேண்டு மென்பதாம். கற்றறிவும் பட்டறிவும் மிக எய்தப் பெறாத இள மாணவர்களின் கட்டு

ரைகளில் தொடர்மொழிகள் ஒரே அளவினவாயும் அமைப்பைக் கொண்டுமிருப்பதால் படிப்போருக்கு அதில் கவர்ச்சி ஏற்படுவதில்லை. நடையும், சலிப்பையும் வெறுப்பையும் தருகிறது. தொடர்மொழி (வாக்கிய) அமைப்பு முறைகள் மாணவர்களுக்கு வற்புறுத்தப் படுமாயின், அவர்கள் எழுதும் பத்திகளில் வரும் தொடர்மொழிகள் அளவிலும் அமைப்பிலும் ஒரே தன்மையனவாயிராமல், நீண்டும், குறுகியும், நடுப்பட்டும், தொடக்க, நடு, முடிவுகள் மாறுபட்டும், வேறுபாட்டைக்கொண்டு விளங்கும். அவைகள் வேறுபாட்டைக் கொண்டு விளங்கினால், பத்தியும் வேறுபாடு கொண்டு விளங்கிப் படிப்போர் உள்ளத்தைக் கவரும்.

ஒரு பத்தியின் அளவை நாம் வரையறை செய்ய இயலதெனினும் இடைநிலைக் கல்வி பயிலும் மாணவர்கள் பெரும்பாலும் நெடும் பத்திகள் எழுதுவதைவிடக் குறும் பத்திகள் எழுதுவதே முறையாகும்; நலமுமாகும். ஒரு நெடுங் கட்டுரையில் அல்லது முழு நூலில் நெடும் பத்திகள் வரின் குற்றமில்லை; வரலாம். ஆனால் அரைமணி நேரத்தில், ஒன்றரைப் பக்க அளவில் உதவியின்றி மாணவர்கள் தாமாகவே எழுதும் சிறு கட்டுரைகளில் அல்லது கடிதங்களில், நெடும் பத்திகள் இடம் பெறுவது முறையன்று; நலமுமில்லை. ஒவ்வொரு புதுக் கருத்துக்கும் புதுப் பத்தி வேண்டியிருப்பதால் ஒவ்வொன்றும் நெடும் பத்தியாயிருப்பது இயல்பன்று எனினும் பத்திகள் எல்லாம் குறுகினவாயிருந்தால் கவர்ச்சி இராது. ஆகையால், வேறுபாடு கருதி ஒரோ வழி சற்று நீண்ட நெடும் பத்தி ஒன்றை ஆங்காங்கு இடையிற் செருகுவதால் வேறுபாடு தோன்றிக் கட்டுரையில் படிப்போருக்குக் கவர்ச்சி தோன்றலாம். ஒரே அளவுள்ள மிகச் சிறியனவைகள், கட்டுரையை விரைவாக வளர்த்துக்கொண்டு செல்கின்றன என்பது உண்மையே. இருப்பினும், ஒரே அளவுள்ள பல, சலிப்பைத் தருவதோடு பார்ப்பதற்குக் கட்டுரை, ஒரு கட்டுரை போலத் தோன்றாது. சட்டகம் போலத் தோற்றுமாதலால் சற்று நீண்ட நெடும் பத்தி, இடையில் செருகப்படின் தோற்றப் பொலிவும், கவர்ச்சியும் கட்டுரையிற் காணப்படும். இங்ஙனம் பத்தி அளவு வேறுபட்டால் பத்தியில் காணப்படும் ஒரு புத்தியல்பை **அழுத்தம்** என்பர் அறிஞர்.

**வாக்கிய அமைப்பில்**, தனி வாக்கியம், புணர் வாக்கியம், கலப்பு வாக்கியம், சொன்முறை, சொல்லிடையீடு, முதன்மை நிலை, அண்மைநிலை, தெளிவு, பொருள் வலிமை, திட்பம்,

தகுதி, இனிமை, சுருக்கம், தூய்மை, இசைவு, வாக்கியத்தின் முன் பின் முடிப்புகள், வாக்கியத்தின் அளவு, ஒருமை, ஒரு போகு அமைப்பு, உம்மைத் தொடர், வினா, மரபுகள் முதலிய வற்றின் வரையறவுகளை உரிய நூல்களிற் கண்டுகொள்க.

(11) இனிக் கட்டுரை எழுதும்போது, ஆங்காங்கு இடத் திற்கும், பொருளுக்கும், தமிழ் மரபுக்கும் ஏற்ற சொற்றொடர் கள், மரபுத் தொடர்கள், உவமைகள், இணை மொழிகள், பழ மொழிகள் முதலியவற்றை உயர்நிலை அமைப்பு மாணவர்க ளும், இடைநிலையில் உயர் வகுப்பு மாணவர்களும் வழங்கினால், அவர்கள் கட்டுரை பொலிவெய்துவதை ஆசிரியர்கள் காட்ட வேண்டும். (12) குறித்த காலத்தில் அளவில் கட்டுரையை எழுதி முடிப்பதோடு, கவனமாய்த் திருப்பிப் பார்த்துப் பிழை களைத் திருத்தவேண்டும் என மாணவரை ஆசிரியர் ஏவ வேண்டும். பெரும்பாலும் வகுப்புகளில் இவை நடைபெறுவ தில்லை.

### கட்டுரை திருத்துவதைப் பற்றிய சில குறிப்புகள்

கட்டுரை திருத்துவதே கட்டுரை எழுதும் வேலையில் ஆசிரியரின் பெருமுயற்சியை வேண்டுவதொன்றாயும் செய் தற்கு மிகவும் அருமையானதும் இன்றியமையாததுமான பகுதியாகவு மிருக்கின்றது. எவ்வளவு நன்றாய் இவ்வகுப்பை நடத்தினாலும் அதனுடைய பயன் மாணவர்கள் எழுதிய பயிற்சி களைத் திருத்துவதிலும் அவற்றிற் கண்ட பிழைகளை அவர்கள் உணர்ந்து திருத்திக்கொள்ளுமாறு காட்டுவதிலுமே நிலைத் திருக்கிறது என்னலாம். இதையே கட்டுரைப்பாட ஆசிரியர் மிகவும் பொறுப்பான வேலையாகக் கொள்ள வேண்டும். ஆனால் பெரும்பாலான பள்ளிகளில் இவ்வேலை புறக்கணிக் கப்பட்டும் சரியான மேற்பார்வை இன்றியும் நடைபெற்று வருகின்றது. மேலும் சில தலைமையாசிரியர்கள் இவ் வேலையை ஏளனமாகக் கருதி அதனைத் தமக்குப் பிடிக்காத அல்லது மிக்க பட்டறிவு இல்லாத ஆசிரியர்கள் தலையில் அளவுக்குமேல் ஒரு சுமையாகக் கட்டி விடுகிறார்கள். இத் தகைய மனப்பான்மை அறவே ஒழியவேண்டும்.

1. பல பயிற்சிகளைக் கொடுத்துச் சரிவரத் திருத்தாமல் விட்டு விடுவதைவிடச் சில பயிற்சிகள் கொடுத்து நன் றாய்த் திருத்திப் பிழைகளை மாணவர் உணருமாறு செய் வதே மேல்?

2. கட்டுரை எழுதும் முன்னர்ச் சரியான முறையில் வாய்மொழிக் கட்டுரைப் பயிற்சியிருந்தால் எழுத்தில் பிழைகள் குறைந்து பின்னர்த் திருத்தும் வேலையும் சுருங்கும்.

3. பிழைகளைத் திருத்தும் வேலையைக் கூடிய வரையில் மாணவர்கள் முன்னிலையில் செய்வது நலம். பிழைகளைக் கரும்பலகையில் எடுத்துக்காட்டி மாணவர்களுடன் ஆராய்ந்து சரியான திருத்தங்களை வருவித்துப் பின்னர் அவற்றைத் தம் குறிப்புப் புத்தகங்களில் எழுதிக் கொள்ளும்படி செய்யலாம்.

4. எல்லாப் பிழைகளையும் இங்ஙனம் திருத்த முடியாவிடினும் மிகவும் பெரும் பிழைகளையாயினும் தனித்து எடுத்துக்காட்டி மாணவர்களோடு சேர்ந்து திருத்தி, எஞ்சியவற்றை அவர்களே தங்கள் குறிப்புப் புத்தகங்களின் இடது புறத்தில் திருத்திக்கொள்ளும்படி செய்யலாம்.

5. ஒரு மாணவன் பிழைகளை அவனைக் கொண்டே வகுப்பில் திருத்தும்படி செய்வது, பயனுடைய முறையாகும். ஆனால் பலர் முன்னிலையில் தம்பிழைகள் சுட்டிக் காட்டப் படுவதைக் கண்ட முன் குமரப்பருவ மாணவர்கள் மனம் புண்பட்டு வருந்தவும் கூடுமாதலால் இம்முறை, பொருந்திய தொன்றோ என ஆராயற்பாலது. எனினும் தன் குற்றத்தைத் தான் பிறர் முன்னிலையிலோ, தனித்தோ, உணர்ந்து கொள்வது வாழ்க்கையில் மக்கள் எல்லோரும் மேற்கொள்ளத்தக்க தொன்றாகும். மாணவர் மனம் புழுங்காமலும், புண்ணுகாமலும் நிகழுமாயின் இம்முறை மிகச் சிறந்த தொன்றும்.

6. எல்லாப் பயிற்சிகளையும் மாணவர்களோடு திருத்துவது இயலாத தொன்றாதலால் ஒரு வாரத்தில், ஒரு பயிற்சியை, ஐந்தாறு மாணவர்களைப் பொறுக்கி எடுத்து வைத்துக் கொண்டு திருத்தலாம். இங்ஙனமே எட்டு வாரத்திற்குள் ஒரு வகுப்பு மாணவர்கள் எல்லோரையும் ஒரு முறை உடன் வைத்துக்கொண்டு திருத்த இயலும்.

7. இப்பொழுது இருப்பது போல் கட்டுரைக்கு ஒரு பாட வேளை போதுமென்று அமையாமல் தொடர்ந்து இரண்டு பாடவேளையில் நடத்தினல் நலமாயிருக்கும். முதற் பகுதியில் முந்திய கட்டுரையின் பிழைகளைக் காட்டித் திருத்தவும், நேரமிருப்பின் அன்றைய கட்டுரைக்குரிய வாய்மொழிப் பயிற்சி கொடுத்துக் குறிப்புச் சட்டகம்' எழுதிக்

கொள்வதற்கும் போதிய நேரமிருக்கும். பிற்பகுதியில் அவர்கள் நிதானமாக எழுதித் திருப்பிப் பார்ப்பதற்கும் போதுமான நேரமிருக்கும்.

8. திருத்தும்பொழுது பிழைகளை எடுத்துக் காட்டுதல் மாணவர்களின் மனத்தைப் புண்படுத்தவோ, ஊக்கத்தைக் குறைக்கவோ கூடாது. மேலும் பிழைகளுக்கு மாறாக அவற்றை நீக்கி எப்படி எழுதவேண்டும் என்பதையும் எடுத்துக்காட்டி மேலும் மேலும் மாணவர்களை ஊக்க வேண்டும்.

9. பிழைகளை எடுத்துக் காட்டுவதோடு மட்டுமன்றிச் சில சிறந்த பகுதிகளையும் எடுத்துப் படித்துக்காட்டி மாணவர்களை ஊக்கலாம். மாணவர்கள் எழுதிய கட்டுரையை இங்ஙனம் அவர்கள் அறியத் திருத்தியும், படித்துக் காட்டியும், ஆராய்ந்தும் அவர்களுக்கதிலொரு பற்று உண்டாகும் வண்ணம் செய்யாமல் மூலையில் போட்டுவிட்டால் பயனில்லை. ஆனால் வகுப்பில் அது படிக்கப்படும், ஆராயப்படும் என்ற ஒரு எண்ணமும், பற்றும் ஒவ்வொரு மாணவனுக்கும் உண்டாக்கப்படுமாயின், மாணவர்கள் தங்கள் கட்டுரைகளை நன்றாய் எழுதுவதற்கு முந்துவார்கள்.

10. பிழைகளைச் சில குறிகளால் எடுத்துக் காட்டி அவற்றை மாணவர் உணர்ந்து, பிழைகளைச் சரிவரத் திருத்துகின்றனரா என்று பார்த்தால் காலச் செலவு மிகவும் குறையும். ஒவ்வொருவருக்கும் தனித்தனியாய்ப் பிழைகள் எவை என்று எடுத்துக்காட்ட வேண்டியதுமில்லை. அவர்களையே திருத்தவும் சொல்லலாம். சில குறிகள் :—

| | குறி | | குறிப்பது |
|---|---|---|---|
| 1. | எ. பி. | — | எழுத்துபிழை. |
| 2. | ʌ | — | சில சொற்கள் விடுபட்டிருப்பதைக் காட்டும். |
| 3. | த.ந. | — | தமிழ் நடை நன்றாயில்லை. |
| 4. | இ. பி. | — | இலக்கணப் பிழை. |
| 5. | ! | — | உயர்வு நவிற்சி. |
| 6. | ? | — | கருத்தின் உண்மையில் ஐயம். |
| 7. | நி. | — | நிறுத்தக் குறியில் தவறு. |
| 8. | வி. | — | விட்டு விடுக. |
| 9. | வே. | — | வேண்டாதவை. |

# தேர்வுகள்

## பழைய, புதிய முறைக் கேள்விகள்

தேர்வுகளைப்பற்றியும் அவற்றின் கொடுமைகளைப் பற்றியும் நாம் அடிக்கடி கேட்கின்றோம். எனினும் பள்ளிக்கூட ஆட்சிமுறையில் இவை மிகவும் இன்றியமையாத இடத்தைப் பெற்றுவிட்டன. பாட அறிவைக் கண்டறிவதோடு வகுப்பு மாற்றத்துக்கும் ஓர் அளவுகோலாய்க் கொள்ளப்படுவதால் இவற்றை முற்றிலும் ஒழிப்பதற்கில்லை. ஆதலால் இவற்றின் முறையை மாற்றிச் சீர்திருத்தி அமைத்தல் கூடியவரையில் நல்ல முறையில் மாணவர்களின் கல்வி யறிவைக் கண்டறிவதற்கும் வளர்ப்பதற்கும் ஏற்ற ஒரு கருவியாகும்.

தேர்வுகள் பள்ளிக்கூட வேலையின் ஓர் உறுப்பாகும். அவ்வப்போது வகுப்புக்களிலும், ஒவ்வொரு பருவ ஈற்றிலும், ஆண்டின் இறுதியிலும், பள்ளிக்கூடப் படிப்பின் இறுதியில் அரசியலார் நடத்துவனவும் ஆகிய அகப்புறத் தேர்வுகளெல்லாம் மாணவர்கள் மேல் சுமத்தப்படும் சுமையென்று கருதாமல் பள்ளிக்கூடத்தின் இயல்பான வேலையென்றே கருதவேண்டும். தேர்வு என்பது ஆண்டு முழுவதும் ஆசிரியர் நடத்திய பாடத்தைத் திருப்பிக் கூறுவதேயாகும் என்று மாணவர் உணராமல் சுமையாகக் கருதுகிறார்கள்.

இவற்றைச் சுமையாகக் கருதாமல் பள்ளிக்கூடத்தின் இயல்பான வேலைப் பகுதியே என்று கருதும்படி செய்யக் கீழ்க்கண்டவற்றை ஒருவாறு மேற் கொள்ளலாமென்று தோன்றுகிறது.

1. ஆசிரியரே தேர்வாளராக இருந்தால் சொல்லிக் கொடுத்த முறையிலேயே தேர்வுகள் நடத்தலாம். சொல்லிக் கொடுக்காததைக் கேட்கவேண்டிய நிலைமையும் ஏற்படாது.

2. தேர்வுகளை வகுப்பு மாற்றலோடு பொருத்துவது நல்லதன்று. எனினும் இவை இரண்டும் பிரிக்க முடியாத தொடர்பைப் பெற்றிருப்பதால் இவற்றின் தொடர்பைப் பிரிக்காமலே தேர்வுகளின் கொடுமைகளை ஒருவாறு குறைத்துக் கொள்ளலாம். இரண்டு மூன்று நாட்களில் ஓராண்டு முழுவதும் படித்த பாடங்களின் அறிவைத் தேர்வது முறையன்று. அதுபோல் வகுப்பு மாற்றத்தையும் ஆண்டுத்தேர்வு ஒன்றினாலேயே முடிவு செய்வதும் சரியன்று. ஆதலால்

மூன்று பருவத் தேர்வுகளை வைத்து, ஆண்டு முழுவதிலும் நடந்த பாடங்களை மூன்று பிரிவுகளில் தேறலாம். இம் மூன்றிலும் மாணவர்கள் பெற்றுள்ள தேர்ச்சியைக் கண்டு அதைக்கொண்டு வகுப்பு மாற்றலாம்.

3. மூன்று பருவத் தேர்வுகளுக்குப் புறமே அவ்வப் போது வகுப்புகளில் சிறு தேர்வுகள் நடத்தி, வகுப்பு மாற்றத்தின்போது இவற்றின் மதிப்பெண்களையும் கவனிக்கலாம்.

4. இடைநிலை, உயர்நிலை மாணவர்களுக்கு வீட்டு வேலையாகச் சில பொருள்கள்பற்றிச் சிறு கட்டுரைகள் எழுதிக்கொண்டு வரும்படி கொடுத்துப் பின் திருத்தி, அதில் பெற்றுள்ள எண்களையும் வகுப்பு மாற்றத்தில் கவனிக்கலாம்.

5. வாய் மொழியாகவும், குறைந்த எண்ணிக்கையுள்ள மிகுந்த கேள்விகளையும் கேட்டு மாணவர்களின் உள்ளத்தை ஒருவாறு கண்டறியலாம்.

6. எல்லாவற்றிற்கும் மேல் பழைய முறைக் கேள்விகளின் தன்மைகளை மாற்றிப் புதிய முறைக் கேள்விகள் பலவற்றைக் கேட்கலாம். சில எண்ணிக்கையுள்ள கட்டுரைக் கேள்விகட்குப் பதிலாகப் பல சிறிய கேள்விகளைக் கேட்டு மாணவர்களின் பொருளறிவோடு அநுமான, தீர்மான ஆற்றல்களையும் அளந்தறியலாம்.

## பழைய முறைக் கேள்விகள் அல்லது கட்டுரைத் தேர்வு

பழைய முறைப்படி கட்டுரைக் கேள்விகளின் வாயிலாகவே தேர்வுகள் எல்லாம் நடைபெற்றன. மூன்று அல்லது இரண்டரை மணிக் கால அளவில் ஐந்து அல்லது நான்கு கேள்விகளைக் கேட்டு, ஒரு பாடம் முழுவதிலும் ஒரு மாணவனுக்கு இருக்கவேண்டிய ஒன்று அல்லது இரண்டு அல்லது மூன்று ஆண்டு அறிவை அளந்து அறிய முயலுகின்றது இப் பழைய முறைத் தேர்வு. இதில் குறைகளும் நிறைகளும் கலந்திருக்கின்றன. முதலிற் குறைகளை ஒருவாறு காண்போம்.

**குறைகள்** : எந்தத் தேர்வும், ஒரு மாணவன் பள்ளிக் கூடத்தில் ஒரு கால அளவில், ஒரு பாடத்தில், படித்தறிந்த அறிவைத் தேறுவதோடு அம்மாணவனது உளப் பண்பையும் அவன் எய்தியுள்ள நாகரிகப் பண்பையும் அளந்தறிய

வேண்டும். இது மாணவர்களின் தகுதியையும் அவர்கள் தம்முள் நிலவும் வேற்றுமைப் படிகளையும் கண்டறியவேண்டும். மேலும் ஆசிரியரின் வேலையையும் ஒருவாறு இஃது அளந்தறிய வேண்டும். இம்மூன்று வேலையையும் (புதிய அல்லது பழைய முறைத் தேர்வுகளில்) எது கண்டறிகிறதோ அதுவே சிறந்ததாகும் என்பர் அறிஞர் ஹாமில்டன். ஆனால் இவை யிரண்டில் எதுவும் இவ்வேலையைத் திறம்படச் செய்வதில்லை என்ற குறை கூறப்படுகிறது.

(1) ஓர் ஆசிரியர் வேலையையும் அவர் மேற்கொண்ட முறைகளையும் முதன் முதலில் மாணவர்களின் விடைத்தாள் களின் வாயிலாய்க் கண்டறிந்து உறுதி செய்வது முறை யன்று; சரியான துறையுமன்று.

(2) மேலும் மாணவர்களின் பாட அறிவைத் தேறு வதற்கு அப்பாடத்தின்மீது அவர்களுக்கு இருக்கும் மனப் பான்மையையும், அதன்மீது அவர்கள் வைத்திருக்கும் பற்றின் அளவையும் தகுதியையும் அறியவேண்டுமன்றோ? (attitude and the degree and kind of interest of a student) இத்தேர்வு இவற்றை அறிவதில்லை. வாய்மொழிக் கேள்விகள் ஒருவேளை ஒருவாறு இவற்றைக் கண்டறிதல் கூடும்.

(3) சிந்தித்தலிலேயே மிகுகாலம் கழிவதோடு, கருத்துக் களைத் திரட்டி ஒழுங்குபடுத்துவதில் இன்னும் மிகுதியாகக் காலஞ்செல்லும். ஆதலின் சிறிது எழுதி முடிவதற்குள் ளேயே மாணவர்கள் வெறுப்பும் சலிப்பும் இதில் எய்துகின் றனர்.

(4) ஆண்டிற்காண்டு இதன் நிலை மாறிக்கொண்டே போவதால் இதை ஒரு நிலையாக்க (Standardised) முடிவ தில்லை.

(5) இஃது ஓர் அரைகுறை முறையாக இருக்கிறது. நல் லொழுக்கம், நன்னடத்தை, மாணவரின் தனித்தன்மை, அழகுணர் ஆற்றல் முதலியவை கண்டறியப்படுவதில்லை.

(6) உண்மையான அறிவை மாணவர்களாகவே எய்தி யிருக்கின்றனரா என்று இது கண்டறிவதேயில்லை. குருட் டுப் பாடஞ்செய்தவை தேர்வில் நற்காலப் பயனாக வந்திருந் தால், அவற்றை எழுதியதையே இது கண்டறிய நேரிடு கிறது.

(7) குருட்டுப் பாடம் செய்யும் வழக்கத்தையும், சில நல்ல கேள்விகளை மட்டும் எதிர்பார்த்துப் பிற பகுதிகளை

விட்டு விடும் வழக்கத்தையும், முயற்சியின்றி மிகுபயனை எதிர் பார்க்கும் வழக்கத்தையும் இம்முறை வளர்க்கிறது என்பதில் ஐயமே இல்லை.

(8) மேலும் ஆசிரியர்களே மாணவர்களின் தன்முயற்சியைக் கெடுத்து, அதற்கு மாறாகத் தாமே குறிப்புகளைக் கொடுத்து, இவற்றைவிட்டு, இவற்றைமட்டும் படியுங்கள் என்று ஏவிவிடும் கெட்ட பழக்கத்தையும் இம்முறை வளர்க்கிறது என்கின்றனர் அறிஞர். இது மறுக்க முடியாத உண்மையே ஆகும்.

(9) சிறிய கால அளவில் ஆண்டு முழுவதும் படித்த பாட அறிவைத் தேறிவிடமுடியும் என்பது பொருந்தாத தொன்றும். (inadequate sampling–not comprehensive)

((10) மொழிநடையின் மேன்மையினால் சிறப்பற்ற விடைக்கும் மிகுந்த மதிப்பெண்கள் கொடுக்க நேரிடுகிறது. சில சமயங்களில் பொருள் செறிந்த விடைக்கு, மொழிநடைத் தாழ்வினால் குறைந்த மதிப்பெண்களும் தேர்வாளர்கள் கொடுத்து விடுகின்றனர். மேலும் தேர்வாளர்களுக்குத் தேர்வாளர் எழுதும் மொழி நடையின் தகுதி, நோக்கம் முதலியவை மாறுபடுவதால், மதிப்பெண்களும் ஒரு நிலையாகத் தரப்படாமல், மாறுபடுவதுண்டு. எனவே இம்முறைத் தேர்வை நம்புவதற்கில்லை (not reliable).

(11) இனி இம்முறையில் எல்லா விடைத்தாள்களையும் தேர்வாளர் ஒரே பொது நோக்கமும், ஒரேவித நோக்கமும் கொண்டு பார்க்கின்றனர் என்று கூறுவதற்குமில்லை. (not objective—Subjectivity of the scoring—vagaries of the examiner) விடைகளின் தகுதியை அறிந்து ஏற்ற மதிப்பு எண்களைக் கொடுப்பது தேர்வாளர்களின் மன நிலையையே பொறுத்திருக்கிறது. இவர்கள் "முக்குண வசத்தால் முறை பிறழ்ந்து" போவதும் உண்டு. சினம், மகிழ்ச்சி முதலியவற்றிற்கேற்ப, மதிப்பு எண்கள் குறைந்தும் மிகுந்தும் போகலாம். ஒரே விடைக்குப் பல தேர்வாளர்கள் 28 முதல் 90 வரை மதிப்பு எண்கள் தந்தது, 20 மதிப்பு எண்களைக் கொண்ட ஒரு கேள்விக்கு, 2 முதல் 20 வரை மதிப்பு எண்கள் தந்தது, ஒரு தலைமைத் தேர்வாளரின் மாதிரி விடை, பிற விடைத் தாள்களொடு கலந்துவிட, அதைத் திருத்திய உதவித் தேர்வாளர்கள், அதை எழுதியவர் தேறுவதற்கு ஏற்றவரல்லர் என்று தள்ளிவிட்டது போன்ற எடுத்துக்காட்டுகளை நாம் காணும்போது, இப்

பழைய முறைத் தேர்வில் ஏதோ பெருங்குறை இருப்ப தாகவே உறுதிசெய்ய வேண்டியிருக்கிறது.

இனி இம்முறையில் நிறைகள் இல்லாமலுமில்லை.

(1) பாட அறிவை நன்றாய் முற்றிலும் நன்முறைகளிற் கண்டறியாவிட்டாலும், இஃது ஒரு நல்ல மனப்பயிற்சியாகும். (valuable as a means of training).

(2) கருத்துகளைக் காரண காரிய முறையில் ஒழுங்கு படுத்த வேண்டும் என்பதற்கும், அவற்றை நன்னடையிலும் ஏற்ற மொழியிலும் எடுத்துக் கூறவேண்டும் என்பதற்கும், பல பொருள்களையும், கொள்கைகளையும் வகைப்படுத்தி முறையாக எடுத்துக் காட்டுவதற்கும் இன்றியமையாது வேண்டப்படுவதாகிய ஒரு நன்னோக்கத்தை (desirable motive) இஃது உண்டுபண்ணுகிறது. புதிய முறைக் கேள்வி களிலோ எனின் விடைகள் தனித்தனிச் சொற்களில், அன்றி வெறும் குறிகளில் முடிந்துவிடுவதால் மாணவர்களின் கருத் துக்களை ஒழுங்குபடுத்தும் ஆற்றலைக் கண்டறிய முடிவதில்லை.

(3) மொழி அறிவு, நல்லமொழி நடை முதலியவற்றை இது வளர்க்கும்.

(4) மாணவன் ஒரு பாடத்தில் திரட்டிக்கொண்ட கொள் கைகளையும் அறிவையும் எங்ஙனம் பிரண்டு பொருத்திக் காட்டுவது என்பதைக் கண்டறிய இம்முறை மிக ஏற்றது application of the principles learnt and the ways in which knowledge is used).

(5) பொருள்களின் வரையறவுகள் கூறுவது, தெளிவு படுத்தி விளக்கிக் காட்டுவது, தொகுப்பது, வகுப்பது, விரிப் பது, சுருக்குவது முதலியவற்றில் மாணவன் எய்தியிருக்கும் தகுதியின் அளவை இம்முறைத் தேர்வு மிக நன்றாய்க் கண் டறியும் ; இவற்றை வளர்க்கவும் செய்யும்.

## புதிய முறைக் கேள்விகள்—சில வகைகள்

1. **சரி–தவறு.** சில குறித்த தொடர் மொழிகளைக் (வாக் கியங்களை) கொடுத்து, அவற்றுள் வரும் கருத்துக்கள் சரியா இல்லையா என்பதற்கேற்ப அவ்வத்தொடர் மொழிகளின் ஈற்றில் +, — அல்லது, ×, 0 குறியிடச் சொல்லலாம். சரியா இல்லையா என்று தெரியாமலிருக்கும் தொடர் மொழிகளுக்கு ஒரு குறியும் இடவேண்டாம் என்று அறிவுறுத்தலாம். உறுதியாக அறியாமல் உத்தேசமாகச் சரியா இல்லையா

என்று கூறக்கூடாது. அப்படி உத்தேசமாய்க் கூறினல், அதை ஒழிப்பதற்கு என மதிப்பெண்கள் குறைக்கப்படும். எப்படியெனில் சரியாகக் கூறியவற்றின் மதிப்பெண்களி லிருந்து, சரியாகக் கூருதவற்றின் மதிப்பெண்கள் கழிக்கப் படும் (Right. Wrong). நாற்பது கேள்விகளில் முப்பது சரி யாகவும், பத்து தவருகவும் விடை யிறுக்கப்பட்டால், (பொது வாகப் பிறதேர்வுகளிற் போல முப்பது மதிப்பெண்கள் கொடுக்காமல்) இத்தேர்வு வகையில் முப்பது மதிப்பெண்களி லிருந்து (உத்தேசத்தைத் தடுக்கும் நோக்கத்தோடு) தவருக எழுதிய பத்துக் கேள்விகளுக்குரிய பத்து எண்களும் கழிக் கப்படும். எனவே இதற்குக் கிடைப்பன இருபது எண்களே. இதை வேறுவகையிலும் கூறலாம் :— 40-10-10=20 அல்லது 40-(10 × 2)=20. பொருளறிவு, தீர்மானிக்கும் ஆற்றல் முத லியவற்றை இக்கேள்விகள் தேறுகின்றன. வகுப்பின் தகு திக்கு ஏற்றபடி தொடர் மொழிகளின் அருமையை ஏற்றிக் கொண்டே போகலாம். இஃது உத்தேசத்தைத் தடுப்ப தோடு, காலச் செலவையும் குறைக்கிறது.

**ஆம்-இல்லை** என்பது இவ்வகையின் மற்ருெரு பிரிவாம். **ஆம், இல்லை, தெரியாது** என்ற மற்ருெரு பிரிவையும் இவ்வகை யிற் கொடுப்பதுண்டு. (yes-no-unknown). ஒரு தொடர் மொழியைக் கொடுத்து அதனடியில் ஆம், இல்லை. தெரியாது என்பனவற்றைக் குறித்திருக்க, மாணவர் அவற்றில் எது சரியோ அதன் மேல் ✓ என்ற குறியை இடுவர் அல்லது கீழ்க்கோடிடுவர்.

2. **பல்விடையிற் பொறுக்கல்.** முற்கூறியதைவிட இது சற்று அருமையும் வளர்ச்சியுமுடையது. இவற்றுள் ஒரு பொருள் பற்றிய பல தொடர் மொழிகளில் எது சரி என்று மாணவர்கள் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிவரும். முக்கிய ஆண்டுகள், தலைவர்களின் குணம், பொருள் அறிவு முதலிய வற்றை இவற்ருல் தேறலாம். இதைப் பெரும்பாலும் மாண வர்களும் ஆசிரியர்களும் மிக விரும்புகின்றனர். நினைவு ஆற் றலும், கருதும், (அனுமானிக்கும்) தீர்மானிக்கும் ஆற்றலும், வளர்ச்சியுறுகிறது. சரி என்று கண்ட தொடர்மொழியின் மீது பெருக்கற் குறியை இடச் செய்யவேண்டும். ஒன்றையே குறிக்கவேண்டும்.

3. **முடித்துக் காட்டல்.** கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற் களை அமைத்துத் தொடர் மொழியை முடித்துக் காட்டல். கீழ் வகுப்பு மாணவர்களுக்கு மிக ஏற்றது இது. ஏற்ற

சொல்லை எழுதும் முன் ஒருமுறை தொடர்மொழியைப் படித்துப் பின் சொல்லை அமைத்துப் பின்னும் ஒருமுறை தொடர்மொழியைப் படித்துத் தொடர்மொழி சரியான பொருளைக் கொடுக்கிறதா என்று பார்க்கும்படி அறிவுறுத்த வேண்டும்.

4. **பொருத்திக் காட்டல்.** இரண்டு வரிசைகளாகத் தொடர்மொழிகளை, உண்மையும், பொருத்தமும், முறையும் பிறழ அமைத்து அவற்றைப் பொருத்தும்படி செய்தல், நிகழ்ச்சிகள் அவை நிகழ்ந்த ஆண்டுகள், போர்கள், அவற்றை நடத்திய சேனைத் தலைவர், புது நாடுகள், அவற்றைக் கண்டு பிடித்தவர்கள், நாடுகள், அவற்றை ஆளும் அரசர்கள், புலவர்கள் அவர்கள் இயற்றிய நூல்கள் போன்றவற்றைப் பொருத்தச் செய்யலாம். காரண காரியங்களையும் வரிசைப் படுத்தலாம். குறித்த பொருளறிவைத் தேற இது சிறந்த முறையாகும்.

5. **வகைப்படுத்திக் காட்டல்.** ஓர் இனம், அல்லது தொகுதியில் சேராத, அடங்காத, சொற்களை அவ்வரிசையிலிருந்து அடித்து விடும்படி செய்தல்.

6. **ஒப்பிட்டுக் காட்டல்.** கொடுத்த ஒரு பொருள் எதனை ஒத்திருக்கிறது என்று காட்டச் செய்தல். அவ்வாறு கூறுவதில் சற்று மாணவர்க்கு உதவியாயிருக்கும்படி, இஃது அதை ஒத்திருப்பதுபோல் என்று ஓர் எடுத்துக் காட்டைக் கூறிப் பின் கொடுத்துள்ள பொருள் எதை ஒத்திருக்கிறது என்று கூறும்படி செய்யவேண்டும். இவ்வகைக் கேள்விகளை ஆயத்தம் செய்யும் முறைகள், எடுத்துக் காட்டுகள் முதலியவற்றை, **சைமண்ட், பாட்டர்சன், மென்ஸெல், பாலர்ட்** முதலிய அறிஞர்களின் நூல்களிற் காண்க.

## சில நன்மைகள்

1. மிகுதியான பொருளறிவை மிகவும் குறைந்த காலத்தில் அளந்தறிகிறது.

2. நிறையக் கேள்விகள் கேட்டு எல்லாப் பகுதிகளின் அறிவையும் தேறலாம்.

3. திருத்துவது மிக எளிது.

4. உயிரற்ற பொறிகளும் இதனைத் திருத்தி விடலாம்.

5. குறைந்த காலத்தில் மிகுந்த தாள்களைத் திருத்தலாம்.

6. மற்றும், சினம், மகிழ்ச்சி முதலிய உளச் சுவைகளின் மேலீட்டால் மாணவர்களின் விடைத்தாள்களை மதிப்பிடாமையால் மதிப்பு எண்கள் வேறுபடக் காரணமில்லை. ஒரு வரையும் ஏமாற்றுவதற்கும், கெடுப்பதற்கும், வேண்டுமென்று ஒருவர்க்கு மதிப்பு எண்களை மிகுத்துக் கொடுப்பதற்கும் இடமில்லை. விடை எழுதுவதிலும் பழைய கட்டுரைத் தேர்வு போல் மாணவனுக்கு மாணவன் வேறுபடாமல் எல்லோருடைய விடையும் ஒரே நிலையிலும் தன்மையிலும் அமைவதற்கு இங்குச் சிறந்த வாய்ப்பு இருக்கிறது. ஏனெனில் எல்லோரிடத்திலிருந்தும் ஒரே விடையை எதிர் பார்ப்பதோடு மொழி நடை முதலியவை மாணவனுக்கு மாணவன் வேறுபடவும், அல்லது அவை மதிப்பு எண்களைக் கூட்டவும் குறைக்கவும் செய்வதற்கும் இடமில்லை.

7. பொருளறிவு மட்டுமல்லாமல் கால உணர்ச்சி, காரண காரியத் தொடர்பு, தீர்மானிக்கும் ஆற்றல், அநுமானித்தல் யாவும் சோதிக்கப்படுகின்றன. குருட்டுப் பாடத்துக்கு இங்கு இடமில்லை.

8. ஆசிரியர்களும் புதுமை பற்றியும், திருத்தும் எளிமை பற்றியும் இதை விரும்புகின்றனர்.

9. மாணவர்களும் புதுமை பற்றியும், எழுத்துக் குறைவு பற்றியும், களைப்பு அதிகமில்லாமையினாலும், விருப்பு வெறுப்பினால் ஆசிரியர்கள் மதிப்பெண்களைக் கூட்டிக் குறைத்து விடுவார்கள் என்ற அச்சமின்மையாலும் இதனை விரும்புகின்றனர்.

10. மேலும் மாணவர்க்கு இது நல்ல படிப்பாகவுமிருக்கிறது.

11. மாணவர்க்குள்ளேயும் எழுதினவர்களே தங்கள் தாளைத் தாங்களேயும் திருத்திக் கொள்ளலாம். திருத்திய பின்னர் ஆராய்ச்சிகள் நடத்தித் தங்கள் குறைகளைத் தாங்களே உணர்ந்து கொள்ளுகிறார்கள்.

12. தனிப்பட்ட மாணவர்களின் படிப்பை ஒப்பிட்டு அளந்தறிவதற்கு ஏற்றதாகும்.

13. இவைகள் ஒரு நிலையாக்கப்பட்டால் ஒவ்வோர் ஊரிலுமுள்ள பல பள்ளிக்கூடங்களையும், பல ஊர்களிலுமுள்ள பள்ளிக்கூடங்களையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியும்.

14. கலைத்திட்டத்தையும் பாடத்திட்டத்தையும் வகுப்புக்குத் தக்கவாறு படிப்படியாய் அமைப்பதற்கு இவை உதவலாம்.

15. வகுப்பு மாற்றத்திற்கும், மாணவர்களைத் தகுதி பிரிப்பதற்கும் உதவும்.

16. வீண் காலச் செலவைக் குறைக்கும்.

17. ஆசிரியருடைய வேலையை ஒருவாறு கண்டறிய முடியும்.

18. ஆசிரியர் கையாண்ட முறைகளில் எது சிறந்தது என்று கண்டறியவும் இயலும்.

## இவற்றிற் காணப்படும் சில குறைகள்

1. கொடுக்கப்பட்டிருக்கும் கேள்விகளிலுள்ள பொருள் சரியா, தவறா என்று மட்டும் சொல்லுவதாலும், அல்லது விடுபட்ட வார்த்தை ஒன்றை மட்டும் நிரம்புவது போன்றும் ஓரிரண்டு சொற்களில் விடையைக் கூறிவிட வேண்டியிருக்கிறது. ஆதலால் மாணவர்கள் எண்ணங்களை ஒழுங்கு படுத்துவதற்கும், பொருள்களை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கும், பொருள்களின் வரையறவு கூறுவதற்கும், சுருக்கம் எழுதுவதற்கும், கொள்கைகளையும் விதிகளையும் எடுத்துக் காட்டுகளில் வைத்துப் பொருத்திக் காட்டுவதற்கும் உரிய வாய்ப்பு இதில் கிடைப்பதில்லை. இவைகளெல்லாம் சிறந்த மனப் பயிற்சிகளாம்.

2. மாணவர்கள் கருதுதலில் (அநுமானித்தலில்) எங்குத் தவறுகிறார்கள், எங்கு உத்தேசிக்கிறார்கள் என்றும் கண்டறிய முடிவதில்லை.

3. இம்முறைக் கேள்விகளைத் திருத்துவது எளிதாயும் ஆயத்தம் செய்வது அரிதாயுமிருக்கிறது. மிகுந்த பட்டறிவு வாய்ந்த ஆசிரியரால் மட்டுமே இக்கேள்விகளை நல்ல முறையில் ஆயத்தம் செய்ய இயலும்.

4. இவைகளும் ஒரு நிலையாக்கப்பட்டால் நலமாகும். ஒரு நிலையாக்கப்பட்ட இக் கேள்வி முறையை நம் நாடெங்கும் நிறுவுவதில் மிகுந்த முயற்சியும் காலமும் பணமும் செலவழியும்.

5. கீழ்நிலை வகுப்புகளில் எளிய பாடங்களைத் தேர்வதற்கு இவை பொருத்தமேயாயினும் உயர்நிலை வகுப்புகளில் மிக விளக்கத்தோடும் ஆராய்ச்சியோடும் படிக்கத்

தக்க பாடங்களின் அறிவைத் தேர்ந்து அறிவதற்கு இவை பொருத்தமில்லை.

6. இவைகள் பள்ளியின் பாடங்கள் நடத்தப்பட்ட முறையை ஒருவாறு எடுத்துக் காட்டலாமே யொழிய அவற்றைச் சீர்திருத்துவதற்கான வழி வகைகளைக் காட்டுவதில்லை.

7. பொருளறிவை மட்டும் வளர்க்கிறதே யொழியத் தாமாகச் சிந்திக்கும் ஆற்றலை உண்டுபண்ணவும் வளர்க்கவும் இல்லை.

8. மாணவர்களின் சிறப்பு இயல்புகளையும் தனி இயல்புகளையும் வளர்ப்பதில்லை.

9. அறிவு என்பது சிறு சிறு துண்டுகளாக அளக்கப் படுகிறதேயொழிய முற்றுப்பெற்ற தொகுதியாகக் கருதப்படுவதில்லை. ஆதலால் வாழ்க்கையின் மிகுந்த சிக்கலான கேள்விகளையும் எப்படிச் சிந்தித்துச் செயலிலாற்றுவது என்ற ஆற்றலையும் இது வளரச் செய்வதில்லை.

10. இம்முறைக் கேள்விகள் மாணவர்கள் தம் பாடங்களின் மீது கொண்டிருக்கும் மனப்பான்மையையும் அவற்றின் மீது வைத்திருக்கும் பற்றின் அளவையும் தகுதியையும் கண்டறிவதில்லை. வாய்மொழிக் கேள்விகள் ஒரு வேளை இப்பற்றை ஒரு சிறிது காட்டலாம்.

11. மொழியறிவு, நடைத்திறம் முதலியவற்றை இவைகள் அளந்தறிவதில்லை.

12. நன்ருய் இம்முறைகளில் பயிற்சி பெருத ஆசிரியர்கள் இக் கேள்விகளைக் கேட்டால் இத்தேர்வினல் அடையக் கூடிய முழுப் பயனையும் அடைவதற்கில்லை.

ஆதலால் நம் பள்ளிக்கூடங்களில் இவ்விருவகைக் கேள்விகளையும் ஏற்ற அளவில் கலந்து கேட்பதே மேலான முறையென இக்காலத்தில் கருதப்படுகிறது. சில ஆண்டுகளாக இடைநிலைப் பள்ளி நீக்கத் தகுதிச்சீட்டுத் தேர்வின் தேர்வாளர்களும் இங்ஙனமே தங்கள் அறிக்கையில் தெரிவித்து வருகின்றனர்.

**முற்றும்**

---

## பின்னிணைப்பு 1.

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளிலும், பள்ளிக்கூடங்களிலும் பயிலும் மாணவர்கள், ஆசிரியர்கள் நடத்தும் பாடங்களை உற்று நோக்கும் போதும் (Observation) தம் ஒரு சாலை மாணவர்கள் வகுப்பில் பாடம் நடத்திப் பயிலுங்கால் (Teaching practice lessons observation) பார்த்துக் கொண்டிருக்கும்போதும், பேராசிரியர்களும், ஆசிரியர்களும் மாதிரிப் பாடங்கள் நடத்திக் காட்டும்போதும் (Demonstration lessons) தாங்கள் கண்டு, கேட்டு அறிந்தவற்றைக் கீழ்க் கண்ட மாதிரியில் குறிப்புகளாகக் குறித்து வைத்துக் கொள்ளற் குரியர்.

பேராசிரியர்களும், ஆசிரியர்களும் மாதிரிப் பாடம் நடத்துவதைக் கவனிக்கும் போதும், அவர்கள் வகுப்பில் நடத்தும் பாடங்களை உற்றுநோக்கும்போதும், IV. V. VI-ஆம் பிரிவுகளை ஆசிரிய மாணவர்கள் நிரப்பவேண்டுவதில்லை. தம் ஒரு சாலை மாணவர்களின் பாடத்தைப்பற்றி எழுதும்போதும் வேண்டுவதில்லை. அவை ஆசிரிய மாணவர்களின் பாடத்தை மேற்பார்வை பார்க்கும் பேராசிரியர்களுக்கும், ஆசிரியர்களுக்குமே உரியன.

## பின்னிணைப்பு 2

## புதிய முறைக் கேள்விகள்—சில எடுத்துக்காட்டுகள் (இலக்கணத்தில்)

உயர்நிலைப் பள்ளிகளிற் பயிலும் மாணவரின் இலக்கண அறிவை அளந்தறிவதற்கு, புதுமுறைக் கேள்விகள் மிகவும் ஏற்றன. வெறுப்பும் சலிப்பும் தரக்கூடிய பழைய முறையிலேயே இலக்கணக் கேள்விகள் கேட்பதை விட, வேறுபாடும், கவர்ச்சியும் உடையனவும், சிந்தனை, அனுமானம், தீர்மானம் முதலியவற்றைத் தூண்ட வல்லனவுமான புதிய முறைக் கேள்விகளே சிறந்தனவாம். இவை மாணவர் அறிவை மிக நன்றாய் அளந்தறிவதோடு, மாணவர்க்கு ஏற்படும் வெறுப்பையும் சலிப்பையும் நீக்குகின்றன; கவர்ச்சியையும், உள்ளக் கிளர்ச்சியையும் தருகின்றன. மிகக் குறைந்த கால அளவில் மிகவும் மிகுதியான பாட அறிவைக் கண்டறிய இம்முறைக் கேள்விகளில் இடமுண்டு. உயர்நிலைப்பள்ளி அமைப்புகளுக்குரிய பாடத்திட்டத்தில் கண்ட இலக்கணப் பகுதிகளிற் சிலவற்றிற்கு, (ஆகுபெயர் வகைகளிற் சில, குற்றியல், முற்றியல் உகரங்கள், வேற்றுமைகளிற் சில, தொகைகளிற் சில, காலம் காட்டும் இடை நிலைகள், வியங்கோள் விகுதிகள், திணை, பால், இடங்கள் முதலியன) ஐந்து வகைப் புதிய முறைக் கேள்விகளுக்குக் கீழே எடுத்துக் காட்டுகள் தரப்படுகின்றன; இவற்றையே முன்மாதிரியாகக் கொண்டு, ஆசிரியர்கள் பிற பாடத்திட்டப் பகுதிகளுக்கும் புதியமுறைக் கேள்விகளை ஆயத்தம் செய்யக்கடவர். இப்புதிய முறைகளை இலக்கணத்திற்கேயன்றி, மொழிப் பயிற்சிகளுக்கும் (Linguistic exercises) வாய்க்குட் படிக்கும் தாள்களை ஆயத்தம் செய்வதிலும் (Preparation or readig charts for silent study) சிறுவர்களுக்கான பாட நூல்களை ஆக்குவதிலும் (Preparation of reading charts for reading in Text books) பயன்படுத்திக் கொள்ளலாம்.

### 1. சரி-தவறு (ஆம்-இல்லை) (True or False Test)

கீழ்வரும் இலக்கணக் குறியீடுகளையும், தொடர் மொழிகளில் (வாக்கியங்களில்) வரும் கருத்துகளையும், ஆராய்ந்து அவற்றுள் சரியானவற்றை ✓ என்ற குறியிட்டும், தவறானவற்றை × என்ற குறியிட்டும், சரி, தவறு என்று தெரியாதவற்றை ஒரு குறியும் இடாது விட்டும் காட்டுக :—

1. நெடிற்றொடர்க் குற்றியலுகரம்—நாடு நலமுற்றது.

2. வன்றொடர்க் குற்றியலுகரம்—காற்றில் அடிபட்ட பஞ்சு.

3. இரண்டாம் வேற்றுமைத்தொகை—பொன் கொடுத்தான்.

4. நான்காம் வேற்றுமை—செல்வர்க்கு அழகு செழுங் கிளை தாங்குதல்.

5. அஃறிணை, பலவின்பால் படர்க்கை வினை முற்று—மாணவர்கள் கேள்விகளுக்கு விடை இறுத்தனர்.

6. உயர்திணை, பலர்பால், படர்க்கை வினைமுற்று—நாம் எல்லோரும் நேற்று நன்றாய் விளையாடினோம்.

7. பனிக்காலம், இறந்தகாலம், இராகுகாலம், முற்காலம், நிகழ்காலம், எதிர்காலம் எனக் காலம் ஆறு வகைப்படும்.

8. த், ட், ற், ன் என்னும் இடைநிலைகள் இறந்த காலத்தைக் காட்டும்.

9. சில வினைச் சொற்களுள் விகுதியும் காலம் காட்டும்.

10. ப், வ் என்னும் இடை நிலைகள் நிகழ் காலத்தைக் காட்டும்.

11. நான்காம் வேற்றுமை கருவி, கருத்தாப் பொருளிலும் வரும்.

12. பண்பாகு பெயர்—பொங்கலுக்கென்று வீட்டை வெள்ளை அடித்தார்கள்.

13. தொழிலாகு பெயர்—பொங்கலும் சுண்டலும் தின்றார்கள்.

14. அன்மொழித் தொகை—பூங்குழலாள் எனப் புலவர் போற்றினர்.

15. பண்புத் தொகை—வெண்டாமரை மலர்ந்தது.

## 2. பல்லிடையிற் பொறுக்கல் (multiple choice)

கீழ்க்கண்ட இலக்கணக் குறியீடுகளில் ஒவ்வொன்றிற்கும் எதிரில் பல எடுத்துக்காட்டுகள் தரப்பட்டிருக்கின்றன. அவற்றிலிருந்து, ஒவ்வொன்றுக்கும் ஏற்ற எடுத்துக்காட்டை மட்டும் பொறுக்கி எடுத்து அதன்மீது √ என்ற குறியை இட்டுக் காட்டுக.

1. **பண்பாகு பெயர்** :—மிளகாய்ப் பொடி மிகவும் காரமாய் இருந்தது. வண்ணான் இன்று அழுக்கு எடுக்க வர

வில்லை. எனக்கு இனிப்பு பிடிக்காது. காக்கை கருநிற முடையது. கடல் நீல நிறமுள்ளதாயிருக்கிறது. செந்தாமரை மலர்ந்தது.

2. **எதிர்கால இடைநிலைகள்** :—த், ப், ட், கிறு, வ், ற், இன், கின்று, ஆநின்று.

3. **வன்தொடர்க் குற்றியல் உகரம்**:—பந்து, காடு, பட்டு, அரசு, தெங்கு, கயிறு, கொக்கு.

4. **உயர்திணை, ஆண்பால், படர்க்கைப் பெயர்** :—நமது தமி ழாசிரியர் நல்லவராகக் காணப்படுகிறார். நீங்கள் பாடியது நன்றாய் இருந்தது. நாம் இன்று படக்காட்சிக்குப் போக லாமா? அவன் நேற்றுப் பள்ளிக்கூடத்திற்கு வரவில்லையே!

5. **உவமைத் தொகை** :—கருங்குழல், கமலக் கண்கள், அலைமனம், செய்நன்றி, பிறைநுதல், பச்சிலை, உடலுயிர்.

6. **நான்காம் வேற்றுமை** :—பூவொடு சேர்ந்த நாரும் மணம் பெறும். வெற்றிலை பாக்கு கொடு. கல்வியிற் பெரி யன் கம்பன். செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்.

7. **அன்மொழித் தொகை** :—தலைவணங்கினான். சேற்றில் செங்கமலம் முளைத்தது. தேன் மொழி வந்தாள். மதிமுகம் வாடியதேன்? எங்கேயோ அழுகுரல் கேட்கிறது. இராப் பகலாக உழைத்துப் பயனில்லை.

## 3. முடித்துக் காட்டல் (Completion)

கீழே வரும் தொடர் மொழிகளை, (வாக்கியங்களை) கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்து, முடித்துக் காட்டுக.

1. ஓர் இடத்தின் பெயர்——குறிப்பின்——ஆகு பெயராம்,

2. தொழிலாகு பெயராவது, ஒரு——பெயர்——அடை யும்——குறிப்பதாம்.

3. ————————நிகழ்கால இடைநிலைகள் ஆகும்.

4. வியங்கோள் விகுதிகள் ———————— ஆகும். இவை ——திணை ——பூநல்——இடத்திற்கும்——

5. தனித்தும், தனிக்குறிலோடு சேர்ந்தும் உள்ள——மெய்யின் மேல் ஊர்ந்து வரும்——முற்றியலுகரமாம்.

6. ஒரு மொழியின் ஈற்றெழுத்து வல்லின உகரமாக வும் அயல் எழுத்து நெடிலாகவும் இருப்பின் அது——உகர மாகும்.

7. முதல் வேற்றுமை——எனப்படும்.

8. ——வேற்றுமையில் 'ஆல்' உருபு——பொருளி லும்——உருபு உடனிகழ்வுப் பொருளிலும் வரும்.

9. ——இடத்தில் வரும் பெயர், வினைச் சொற்களுக்குத் திணை, பால், இடங்கள் கூறவேண்டும்.

10. ——இடங்களுக்குத் திணை பால்கள் கூறக்கூடாது. ——களே கூறவேண்டும்.

11. உவமைத் தொகையாவது——————

12. வினைச்சொல்லின் ஒரு வகையாகிய——விகுதியும், காலம் காட்டும் இடைநிலையும் குறைந்து நின்று, ஒரு பெய ருடன் சேர்ந்து வருமாயின்——ஆகும்.

## 4. பொருத்திக் காட்டல் (Matching)

கீழே வரும் இரு வரிசைகளிலும் முறையே இலக்கணக் குறியீடுகளும், எடுத்துக் காட்டுகளும் தரப்பட்டிருக்கின்றன. இவற்றை நன்கு ஆராய்ந்து, ஒவ்வோர் இலக்கணக் குறியீட்டு வகைக்கும் ஏற்ற எடுத்துக் காட்டை அதோடு பொருத்தி, அதற்குரிய எண்ணை அதற்கு ஏற்ற எடுத்துக்காட்டின் பக்கத்திலே போட்டுக் காட்டுக.

| | | |
|---|---|---|
| 1. | கால ஆகுபெயர் | வியங்கோள் விகுதிகள் |
| 2. | இடவாகு பெயர் | பாய்புனல் பரந்தது |
| 3. | மென்றொடர்க் குற்றியல் உகரம் | ஆடு தழையைத் தின்றது |
| 4. | இடைத்தொடர்க் குற்றி. யல் உகரம் | கார் விளைந்தது |
| 5. | நான்காம் வேற்றுமை | படக்காட்சியைக் கண்டு களித்தேன் |
| 6. | ஐந்தாம் வேற்றுமை | க, ட, ற, ஒற்றுக்கள் |
| 7. | அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கைப் பெயர் | அவர் உண்மைக்கு உறை விடம் |
| 8. | தன்மைப் பன்மை வினை முற்று | பணிவுடைமை பெரியோர் இயல்பு |
| 9. | இறந்தகால இடைநிலை கள் | நேற்று இரவு நன்றாய்த் தூங்கினோம். |

| | | |
|---|---|---|
| 10. | ஐம்பால் மூவிடங்களுக்கும் உரியன | கல்வியிற் பெரியவர் கம்பர் |
| 11. | பண்புத் தொகை | செந்நெறிச் செல்வர் |
| 12. | வினைத் தொகை | உலகம் உவந்தது. |

## 5. வகைப்படுத்திக் காட்டல் (classification)

கீழே சில இலக்கணக் குறியீடுகளுக்கு எடுத்துக் காட்டுகள் தரப்பட்டிருக்கின்றன. அவற்றை ஆராய்ந்து ஒவ்வொரு தொகுதியின் ஈற்றிலும் கொடுக்கப்பட்டிருக்கும் தலைப்புக்களின் கீழ் அவற்றை வகைப்படுத்தி எழுதிக் காட்டுக :—

(1) நிலங் கடந்தான், தலைவணங்கினான், வட்டக்கல், தோய் தயிர், அன்னநடை வந்தாள், மலர்முகம், இராப்பகல், தீவினை, தின்பண்டம், கருங்குவளை, விரிகதிர், ஆண்டகை அருள் புரிந்தான்.

| வேற்றுமைத் தொகை | வினைத் தொகை | பண்புத் தொகை | உவமைத் தொகை | உம்மைத் தொகை | அன்மொழித் தொகை |
|---|---|---|---|---|---|
| | | | | | |

(2) இன், கின்று, ய், ற், றும், இகரவிகுதி, பகர விகுதி, று, கிறு, து, த், தும், வியங்கோள் விகுதி, ஆநின்று, எதிர் மறை ஆகாரவிகுதி, கு, மின், ட், கிறு, கும், வ், மார்.

| இறந்தகால இடைநிலைகள் | நிகழ்கால இடைநிலைகள் | எதிர்கால இடைநிலைகள் |
|---|---|---|
| | | |

(3) தாமரை மலர்ந்தது, உலகம் உவந்தது, சுண்டல் தின்றேன், செவிடு கூறியது யாது? வெற்றிலை நட்டான், நன்றுயில்லை. காந்தியாரைக் காணச் சென்னை நகரே திரண்டது, கார் விளைந்தது, தேநீர் விருந்தில் இரண்டு இனிப்புக் கொடுத்தார்கள், புறங்காட்டி ஓடினன், ஊமை வந்தான்; துணிக்கு நீலம் போடு.

| பொருள் ஆகுபெயர் | இட ஆகுபெயர் | கால ஆகுபெயர் | சினை ஆகுபெயர் | குணம் அல்லது பண்பு ஆகுபெயர் | தொழில் ஆகுபெயர் |
|---|---|---|---|---|---|
| | | | | | |

(4) பலாசு, வண்டு, இறும்பூது, குருடு, சங்கு, மத்து இஃது, பஞ்சு, சூடு, எஃகு, ஐந்து, மாடு, பசு, பாகு, உப்பு, மார்பு, கதவு, கொய்து, விறகு, பிரபு.

| நெடில் தொடர்க் குற்றியலுகரம் | ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம் | உயிர்த் தொடர்க் குற்றியலுகரம் | வன்றொடர்க் குற்றியலுகரம் | மென்றொடர்க் குற்றியலுகரம் | இடைத் தொடர்க் குற்றியலுகரம் | முற்றியலுகரம் |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | |

## பின்னிணைப்பு 3

## தமிழ் இலக்கிய வரலாற்றுக் குறிப்புகள்

நந்தஞ் செந்தமிழ்மொழி மிகத் தொன்மை வாய்ந்தது; இலக்கியவளம் செறிந்தது. நமது தமிழ் மொழியில் தற்பொழுதுள்ள நூல்களுள் மிகவும் பழமை வாய்ந்ததாகக் கருதப்படுவது தொல்காப்பியமே ஆகும். அஃது ஓர் இலக்கண நூல். மக்களின் நாகரிகம் நாளடைவில் முதிர்ந்து, முகக்குறி, கைக்குறி, கண்குறி முதலியவற்றால் கருத்துகளை வெளிப்படுத்தி, பின்பு பேசி, அதன் பின்னர் எழுதப் பெற்றே ஒரு மொழி உருப்பெற வேண்டும். அம்மொழியில் பின்பு இலக்கியங்கள் தோன்றும். இலக்கியங்கள் பல்கிய பின்னர் அவ்விலக்கியங்களுக்கு ஏற்ப இலக்கணம் வகுக்கப் படும். அத்தகைய இலக்கணம் தோன்றுவதற்கு முன்னர் அம்மொழி பண்பட்டு, இலக்கியவளம் செறிந்திருக்கும். இம்முறைகொண்டு நம் தமிழ் மொழியை ஆராயின் தொல்காப்பியம் என்ற இலக்கண நூல் தோன்றுவதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னமே தமிழில் இலக்கிய நூல்கள் பல எழுந்திருத்தல் வேண்டும் என்பதை நன்கு அறியலாம். தொல்காப்பியர் தம் நூற்பாக்களில் பலவிடங்களில் 'என்ப' 'என்மனார்' என்று குறிப்பிடுகின்றார். ஆகவே தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே பல இலக்கிய நூல்கள் தமிழில் இருந்தன என்பது திண்ணம். அன்றியும், தொல்காப்பியத்திற்கு முதனூல் 'அகத்தியம்' என்றும் குறிப்பிடப்படுகின்றது. எனவே சரித்திர ஆராய்ச்சிக்கு எட்டாத மிகப் பழங் காலத்திலேயே தமிழில் இலக்கண இலக்கிய நூல்கள் பல இருந்தன என்பதை நாம் நன்கு உணரலாம்.

பழந்தமிழர் தமிழ் மொழியை மூவகையாகப் பாகுபாடு செய்தனர். அவை இயல், இசை, நாடகம் என்பனவாம். தமிழில் அமைந்த இலக்கிய, இலக்கண நூல்கள் யாவும் இயற்றமிழில் அடங்கும். இசைத் தமிழுக்கும், நாடகத் தமிழுக்கும் முன்னரே இயற்றமிழ் தோன்றியிருத்தல் வேண்டும். முதலிற்றோன்றிய சிறப்புப் பற்றியே இயற்றமிழ் முதற்கண் வைத்து ஓதப்பட்டது என்று தெளியலாம். இனி, இசைத் தமிழ் என்பது பண்ணோடு கலந்து, தாளத்தோடு பொருந்திய தமிழ்ப்பாட்டுக்களால் அமைந்த இலக்கிய நூல்களும், அவற்றின் இலக்கண நூல்களுமாம். சிலப்பதிகாரத்தில் உள்ள

வரிப் பாட்டுகள் போன்றவை இசைத் தமிழ்ப் பாடல்களே யாம். இயற்றமிழில் இசையமைந்தால் அஃது இசைத் தமி ழாகும். ஆகவே இயற்றமிழின்றேல் இசைத்தமிழின்று என்று அறியலாம். அதுபற்றியே அஃது இரண்டாவதாக அமைக்கப்பட்டது. அன்றியும், இசைத்தமிழ் இயற்றமிழோ டும், நாடகத் தமிழோடும் கலந்து, அவ்விரண்டிற்கும் சிறப் பைக் கொடுக்கின்ற காரணம்பற்றி அஃது இடைக்கண் வைத் தோதப்பட்டது என்றும் கொள்ளலாம். இயற்றமிழும் இசைத் தமிழும் கூடிய வழி நாடகத் தமிழ் பிறக்கும். அக்காரணத் தாலேயே அஃது இறுதிக்கண் அமைந்தது.

மனித வாழ்க்கையின் முழுத்தன்மையும் முற்றுப்பெற வேண்டுமானல், முழுமன வளர்ச்சியும் அடையவேண்டும். மனத்தில் பொதுவாக, அறிவுக்கூறு, (Knowing) உணர்ச்சிக் கூறு (Feeling) முயற்சிக்கூறு, (Willing) என்ற மூன்று கூறுகள் உள்ளன. இந்த மூன்று கூறுகளும் ஒன்றை விட்டு ஒன்று பிரியாத தொடர்பைப் பெற்று, ஒத்துழைத்து ஒருங்கே வளர்ந்தால்தான் மனம் சரியான வளர்ச்சி எய்தும். கல்வியும், கலைத் திட்டங்களும் (Curriculum) பாடத் திட்டங் களும் (Syllabuses) இம் மூன்றையும் வளர்க்கும்படியான நிலையில் அமைக்கப்பட வேண்டும்.

இவ்வுண்மையை நம் முன்னோர்கள் நன்குணர்ந்திருந் தனர். சைவத்தில் அறிவு, இச்சை, செயல் (இச்சை, ஞானம், கிரியை) என்று முக்கூறுபடுத்தி இறைவனின் ஆற்றலை விவரிக்கும் முறையும் இதைத்தான் காட்டுகிறது. இவ்வுண் மையைக் கருதியேதான் அமிழ்தினுமினிய நம் தமிழ் மொழி யதனிலும், நம் முன்னோர்கள் இயல், இசை, நாடகம், என முத்திறத்தை நிறுவினர்; "சங்கத் தமிழ் மூன்றும் தா" என்றார் ஔவையார். "ஏழுலகும் புகழ் முந்து முத்தமிழ்" என்றார் கம்பரும். இயல் வாயிலாகத் தமிழ் மனத்தின் அறி வுக்கூற்றையும், இசை வாயிலாக உணர்ச்சிக் கூற்றையும், நாடகம், இயல் இசைகளின் துணைகொண்டு நடித்துக் காட்டி, முயற்சிக் கூற்றையும் முற்றுவிக்கின்றது என்க.

தமிழில் தோன்றிய இசைத்தமிழ் நூல்களும், நாடகத் தமிழ் நூல்களும், இறந்துபட்டன. இடைக் காலத்தே தோன்றிய உரையாசிரியர்கள், பல இசை, நாடகத் தமிழ் நூல்களின் பெயர்களைக் குறிப்பிடுகின்றனர்; சில நூற்பாக் களையும் எடுத்தாண்டுள்ளனர். அவற்றிலிருந்தும் அந்நூல்கள் இருந்தன என்னும் உண்மையையே அறிய முடிகின்றது.

இசை நுணுக்கம், பெருநாரை, பெருங்குருகு, தாளவகை யோத்து, இந்திர காளியம், பஞ்ச மரபு முதலிய இசைத்தமிழ் நூல்களும், முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல், மதிவாணர் நாடகத் தமிழ் நூல்களும் தமிழ் மொழியின்கண் அமைந்திருந்தனவாம். அவற்றின் சில நூற்பாக்களையும், செய்யுட்களையுமே நாம் அடையும் பேற்றைப் பெற்றுள்ளோம். தமிழ் நாட்டின் பல பகுதிகளைக் கடல் கொண்டது என்று தமிழ் நூல்கள் குறிப்பிடுகின்றன. கடல் கோளினுலும் பல அரும்பெருந் தமிழ் நூல்கள் இறந்தன. இறவாது எஞ்சி நிற்கும் நூல்களைப்பற்றியும், இலக்கியத்தின் வளர்ச்சியைப் பற்றியும் பொதுவாக இனி நாம் அறிவோம்.

பேராசிரியர் பூரணலிங்கம் பிள்ளையவர்கள் தமிழ் இலக்கிய வரலாற்றை ஒருவாறு உணர்வதற்கு, அவ்விலக்கியக் காலங்களை அறுவகையாகப் பிரித்து ஆராய்வது நல்லதாகும் என்பர். அவை பின் வருமாறு :-

(1) சங்கங்களின் காலம் (The Age of Sangams) (ஏறக்குறைய கி. பி. 100 வரை)

(2) பௌத்த, சமண சமயங்களின் காலம் (The Age of Buddhists and jains) ஏறக்குறைய கி. பி. 100 முதல் கி. பி. 600 வரை)

(3) சமய மறுமலர்ச்சிக் காலம் (The Age of Religious Revival) (ஏறக்குறைய கி. பி. 600 முதல் கி. பி. 900 வரையில்)

(4) இலக்கிய மறுமலர்ச்சிக் காலம் (The Age of Literary Revival) ஏறக்குறைய கி. பி. 900 முதல் கி. பி. 1400 வரை)

(5) ஆதீனத் தலைவர்களின் காலம் (The Age of Matams) (ஏறக்குறைய கி. பி. 1400 முதல் கி. பி. 1600 வரை. 1800-க்கும் போகலாம்)

(6) மேனாட்டுச் சார்புக்காலம் (The Age of European Culture) (ஏறக்குறைய 1600 முதல் தற்காலம் வரையில்)

தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியை ஒருவாறு பொதுவாக அறியும் பொருட்டே மேற்கண்டவாறு அறுவகையாகப் பிரித்தோம். அங்குள்ள கால எல்லைகளும் பொதுவாகவே அமைக்கப்பட்டன. கால விவரங்களுக்குப் போகவில்லை. இவற்றிற்கு மேலும், காலமுறைப்படி போகாமல், பெண்பாற்

புலவர், உரையாசிரியர்கள், காவியங்கள், பிரபந்தங்கள், மகமதிய, கிறிஸ்துவ, ஜைன, பௌத்த, சைவ, வைணவத் தமிழ்த் தொண்டர் என்பன போன்ற முறையிலும் படிக்கலாம்.

(1) **சங்கங்களின் காலம்** — தற்காலத்தில் சங்க நூல்கள் பல நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றுட் பெரும்பாலன கடைச் சங்க நூல்கள் என்றும், சிறுபாலன இடைச்சங்க நூல்கள் என்றும் கூறப்படுகின்றன. அவற்றிலிருந்து பண்டைத் தமிழர்களின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய விரிவான குறிப்புகள் நமக்குக் கிடைக்கின்றன. உலகத்து மக்களின் வாழ்க்கையைப் பொதுவாக 'காதல்', 'போர்' என்ற இரு வகையுள் அடக்கலாம். இத்தகைய சிறந்த பாகுபாடு தமிழ் மொழியின்கண் உள்ளது. அவையே அகம், புறம் என்பனவாம். தமிழ் மக்களின் வாழ்க்கையை அகவாழ்வு, புறவாழ்வு என்று பிரித்து, இலக்கிய நூல்களும், இலக்கண நூல்களும், அவற்றை விரிவாக விளக்கிக் கூறுகின்றன. அவற்றிலிருந்து பழந் தமிழரின் திருமண முறைகள், இல்லற வாழ்க்கை, போர் முறைகள், பண்பாடுகள் முதலியவற்றை நாம் தெளிவாக அறியலாம். அத்தகைய நூல்கள் தோன்றுவதற்குக் கருவியாக இருந்தவை சங்கங்களேயாம்.

முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்ற மூவகைச் சங்கங்களைப் பற்றி இறையனார் அகப்பொருள் உரையில் காணப்படும் குறிப்புகள் வருமாறு:—

**"தலைச்சங்க** மிருந்தார் அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனுமென இத் தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு (4440) சங்கமிருந்தாரென்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரையென்ப. அவர்க்கு நூல் அகத்தியம் என்ப."

"இனி இடைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும், தொல் காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி மோசியும், வெள்ளூர்க்காப்பியனும், சிறுபாண்டரங்கனும், திரையன் மாறனும், துவரைக்கோமானும், கீரந்தையுமென இத் தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்தெழுநூற்றுவர் பாடினரென்ப. அவர்களாற் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழ மாலையகவலுமென இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மா புராணமும், இசை நுணுக்கமும், பூத புராணமுமென இவை. அவர் மூவாயிரத்து எழுநூற்றிரண்டு ஆண்டு சங்கமிருந்தாரென்ப. அவரைச் சங்கம் இரீஇயினார் வெண்டேர்ச்செழியன் முதலாக முடத் திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார், ஐவர் பாண்டியரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டியநாட்டைக் கடல் கொண்டது".

இனி, கடைச் சங்கத்தைப்பற்றி, "கடைச் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேந்தம் பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங்குன்றூர்க் கிழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிள நாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத் தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், பேரிசையும், சிற்றிசையும் என்று இத் தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்தெண்ணூற்று ஐம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதியீறாக நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை என்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டியரென்ப" என்று கூறியுள்ளார்.

மேலே எடுத்துக் காட்டப்பட்டுள்ள பகுதிகளைப் பற்றி விரிவாக ஆராய்வது நம் நோக்கமன்று. மூன்று சங்கங்களைப் பற்றி முன்னோர் குறிப்பிட்டவற்றை அவர் தம்மொழி

நடையிலேயே உணர்வது நன்று என்பதே நம் கருத்தாகும். தலைச் சங்கத்து நூல்கள், இடைச் சங்கத்து நூல்கள் என்று குறிக்கப்பட்டனவற்றுள் தொல்காப்பியத்தைத் தவிர ஏனைய வை நமக்குக் கிடைத்தில. அவை கடல் வயிறு புக்கன கொல்! நமக்குத் கிடைத்திருக்கும் தொல்காப்பியத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

**தொல்காப்பியம்** என்பது ஒரு பழைய இலக்கண நூல். இதனை இயற்றியவர் ஆசிரியர் தொல்காப்பியனார் என்பர். தொல்காப்பியர் அகத்தியனாரின் மாணவர்கள் பன்னிருவருள் முதன் மாணவர் என்று கூறப்படுகிறது. அகத்தியனார் ஒரு பெரிய இலக்கண நூலை இயற்றினார் என்றும், அதற்கு 'அகத்தியம்' என்பது பெயரென்றும், அதனை முதனூலாகக் கொண்டே தொல்காப்பியம் எழுந்தது என்றும், நாளடைவில் அகத்தியம் வழக்கொழிந்து மறைந்தது என்றும் கூறப்படுகின்றன. அகத்தியத்தின் சில நூற்பாக்களை உரையாசிரியர்கள் தம் உரைகளில் எடுத்தாண்டுள்ளனர். இன்று தொல்காப்பியமே நமக்கு முழு உருவில் கிடைத்துள்ளது.

தொல்காப்பியம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற முப்பெரும் பிரிவுகளை உடையது. ஒவ்வோர் அதிகாரத்திலும் தனித்தனி ஒன்பது பிரிவுகள் அல்லது இயல்கள் உள்ளன. தொல்காப்பியத்திற்கு, இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர் ஆகியோர் உரையெழுதியுள்ளனர்.

இனி, தொல்காப்பியனாருடைய காலத்தை ஒருவாறு அறிவோம். தொல்காப்பியனாரின் காலம் கி. மு. ஏழாம் நூற்றாண்டிற்கு முந்தியதே என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. அவற்றுள் சில வருமாறு :—

(1) ஆதிகாவியமாகிய வடமொழி வான்மீகி ராமாயணத்தில் கபாட புரத்தைப்பற்றியும், அகத்தியரைப் பற்றியும் குறிக்கப்பட்டுள்ளன. அகத்தியருடைய மாணவர் தொல்காப்பியராதலால் அவரும் அக்காலத்தில் வாழ்ந்தவராவர். வான்மீகி ராமாயணத்தின் காலம் ஏறக்குறைய கி. மு. ஏழாம் நூற்றாண்டிற்கு முந்தியதாகும்.

(2) தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிர உரையில் நச்சினார்க்கினியர், "நான்கு கூறுமாய் மறைந்த பொருளும்

உடைமையான் மறையென்றார். அவை தைத்திரியமும், பௌடியமும், தலவகாரமும், சாமவேதமும் ஆம். இனி இருக்கும், யசுவும், சாமமும், அதர்வணமும் என்பாரும் உளர். அது பொருந்தாது. இவர் இந்நூல் செய்த பின்னர் வேத வியாசர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினர் உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தாராகலின்" என்று எழுதுகின்றார். ஆகவே வேதவியாசருக்கு முன்னரே தொல்காப்பியர் வாழ்ந்தவர்.

(3) 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியர்' என்று பனம்பாரனார் தொல்காப்பியரைக் குறிக்கின்றார். ஐந்திரம் பாணினியின் வியாகரணத்திற்கு முந்தியது. பாணினியின் காலத்திற்கு முன்னர் ஐந்திரம் புகழுடன் விளங்கியிருத்தல் வேண்டும். அக்காரணத்தாலேயே தொல்காப்பியர் ஐந்திரத்தை நன்கு கற்றிருந்தார் எனக் கொள்வது பொருந்தும். பாணினியின் காலம் ஏறக்குறைய கி. மு. ஏழாம் நூற்றாண்டு என்று சரித்திரக்காரர்கள் (கோல்ஸ்டகர்) கூறுகின்றனர். பாணினியின் வியாகரணம் புகழுடன் விளங்கி யிருந்தால் தொல்காப்பியர் அதனையே படித்திருப்பார். ஆகவே அந்நூல் சிறப்புப் பெறுவதற்கு முன்னரே தொல்காப்பியர் வாழ்ந்தார் என்று கொள்வது தகும்.

(4) சந்திரகுப்தரின் அமைச்சராகிய கௌடில்யர் அல்லது சாணக்கியர் (ஏறக்குறைய கி.மு. 400–320) தம் அர்த்த சாஸ்திரத்தில் 'கபாடக முத்து' என்று குறிப்பிடுகின்றார். இடைச் சங்கம் இருந்த கபாடபுரத்தில் எடுக்கப்பட்ட முத்தையே அவர் குறிப்பிட்டார். கௌடில்யரின் காலம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டாகும். ஆகவே கௌடில்யரின் காலத்திற்கு முன்பே கபாடபுரம் சிறப்புப் பெற்றிருக்க வேண்டும். ஆகவே தொல்காப்பியர் கௌடில்யர் காலத்திற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தனராதல் வேண்டும்.

(5) தொல்காப்பியர் சில எழுத்துகள் மொழிக்கு முதலில் வாரா என்று கூறியுள்ளார். கடைச்சங்க நூல்களில் அவற்றை முதலிலே உடைய சொற்கள் பயின்று வந்துள்ளன. ஆகவே அந்நூல்கள் தோன்றுவதற்கு நெடுங் காலத்திற்கு முன்னதாகவே தொல்காப்பியம் எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

(6) தொல்காப்பியர் யாப்பிலக்கணத்தைப் பொருளிலக்கணத்தின் ஒரு சிறு பிரிவாகவே அமைத்துள்ளார். ஆனால்

கடைச் சங்கத்தில் யாப்பிலக்கணம் பெரிய இலக்கணப் பகுதியாகக் கருதப்பட்டது. ஆகவே கடைச்சங்க காலத்திற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தொல்காப்பியர் வாழ்ந்தவராதல் வேண்டும்.

(7) தமிழகத்தில் வடமொழியாளர் (ஆரியர்) முதன் முதலிற் புகுந்த காலம் ஏறக்குறைய கி. மு. 1000 என்று வின்ஸென்ட் ஸ்மித் போன்ற வரலாற்றாசிரியர் கூறியிருக்கின்றனர். இவர்கள் தமிழர்களோடு ஒன்றுபட்டுக் கலந்த பின்னர், தமிழ் மொழியில் வடசொற்கள் ஏறுவதற்கு இலக்கணமும் வகுக்கப் புகவேண்டுமானால் அதற்கு இரண்டு மூன்று நூற்றாண்டுகளாவது ஆகவேண்டாமா? அயல் மொழிச் சொற்கள் வேறு ஒரு மொழி இலக்கியத்தில் புக வேண்டுமானால், முதலிற் பேச்சிலும், பின் கடிதங்கள் போன்றவற்றிலும், பின் உரைநடையிலும், அதன் பின்னர்ச் சிறு பாடல்களிலும், அதற்கும் பின்னர்ப் பேரிலக்கியங்களிலும் புகுவதே முறையாம் என்பர் மொழிநூல் வல்லோர். இவ்வாறு இலக்கியம் கண்டதற்குப் பின்னரே இவற்றிற்கு இலக்கணம் வகுப்பர். இம்முறையில் தொல்காப்பியத்தில் வடசொற்களும் பாகதச் சொற்களும் தமிழிற் புகுவதற்குரிய பொது விதிகள்,

“வடசொற் கிளவி வடஎழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே”

எனவும், “சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்” எனவும், வருமாயின் கி. மு. 1000-க்குப் பின் இரண்டு மூன்று நூற்றாண்டுகளாவது ஆகியிருக்க வேண்டாமா? எனவே தொல்காப்பியர் கி. மு. ஏழாம் நூற்றாண்டுக்கு ஒரு காலும் பிற்பட்டிருக்கமாட்டார்; முற்பட்டுமிருக்கலாம்.

(8) அகத்திய மாணக்கருள் ஒருவரும் தொல்காப்பியரின் ஒரு சாலை மாணவருமாகிய பனம்பாரனார், தொல்காப்பியருக்குக் கொடுத்த சிறப்புப்பாயிரத்தில் “வடவேங்கடம், தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்” எனத் தெற்கு எல்லையாகத் தென்குமரியைக் கூறியதால், தமிழ் நாட்டுக் கடல் கோள்களுக்கு முன்பே இவர்கள் இருந்திருக்க வேண்டுமன்றோ? மேலும், முதற் சங்கமிருந்த இடமாகிய தென் மதுரையும், இரண்டாம் சங்கமிருந்த கபாடபுரமும் முதலிரு கடல் கோளினால் அழிந்தன என உணருகிறோம். சிலப்பதிகார, வேனிற்காதையில் வரும் “நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும் தமிழ் வரம்பறுத்த தீண்புனல்

நாட்டில்" என்னும் அடிகளின் சிறப்புரையில் அடியார்க்கு நல்லார் இக்கடல் கோள்களைப் பற்றித் தெரிவிப்பதோடு,

"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள"

என்ற சிலப்பதிகார அடிகளையும் மேற்கோள் காட்டுகிறார். இலங்கை வரலாற்று நூல்களாகிய மகாவம்சம், இராசவழி என்பன இலங்கையில் முதற் கடல் கோள் கி. மு. 2387-இல் என்றும், இரண்டாவது கி. மு. 504-இல் என்றும், மூன்றாவது கி. மு. 306-இல் என்றும் கூறுகின்றன. கி. மு. 604-இல் இரண்டாம் சங்கமிருந்த கபாடபுரம் அழிந்தது என்று கொண்டால், அதற்கு முன்னரே தொல்காப்பியம் தோன்றி இருந்திருக்க வேண்டும். மேலும் இந்நூலில் சமண பௌத்த சமயக் குறிப்புகள் ஒன்றுமில்லாததால் உறுதியாக, கி. மு. நான்காம் நூற்றாண்டுக்கு இது முற்பட்டே இருக்க வேண்டும்.

(9) பாணினி முனிவர், சந்திரகுப்த மௌரியருக்கு முற்பட்ட மகத நாட்டரசர் நந்தருடைய அவைக்களப் புலவராகிய வர்ஷர் உபவர்ஷருடைய மாணவர் என்பது கூறப்படுகிறது. கி. மு. 400—320-க்கு முற்பட்ட இக்காலத்தில், பாணினி இருந்தார் என்றால், அவருக்கும் முற்பட்ட ஐந்திரவியாகரண ஆசிரியருக்கு முன்பு தொல்காப்பியர் இருந்தாராகக் கொள்ள வேண்டும்.

இனி, வரருசி என்பாரோடு பாணினி முனிவர் வாதம் செய்து வென்றாரென்றும், பின் வரருசி பனிவரையடைந்து கண்ணுதற் பெருமானைக் கருதிக் கடுந்தவஞ் செய்து, அவர் அருளால் பாணினி முனிவர் அறிந்த இலக்கண அறிவைத் தாமும் அடைந்ததோடு, பாணினி இலக்கணத்தில் உள்ள குறைகளையும் நிறை செய்து பாணினி இலக்கணத்துக்கு "வார்த்திகை" எழுதினர் என்ற கதை வழங்குகிறது. இவருக்கு, காத்யாயனர் என்று மறுபெயருமுண்டு. இவ்விரண்டுக்கும், பின்னல் கி. மு. 200-இல் வந்த பதஞ்சலியார் விரிவுரை எழுதினர் (மஹாபாஷ்யம்). இவருக்கு முற்பட்டவர்கள் பாணினியும் காத்யாயனரும். அவர்களுக்கு முற்பட்டவர் ஐந்திர வியாகரண முடையார். அவருக்கு முற்பட்டவராகத் தொல்காப்பியர் இருந்திருக்க வேண்டும். இன்னும்

தொல்காப்பியத்திலேயே பல அகச்சான்றுகளும் அதன் காலத்தை அறுதியிட உளவேனும், விரிவஞ்சி விடுப்போம்.

மேற்காட்டிய சான்றுகளால், தொல்காப்பியம் கி. மு. 700-க்குப் பிற்பட்டதாகாது என்று ஒருவாறு கொள்ளலாகும். இனி, கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியே கடைச் சங்கத்திறுதிக் காலமாகு மென்பர். அதன் ஆராய்ச்சிக்குள் இறங்காமல் அக்கால நூல்களின் பொதுவியல்புகளைக் கவனிப்போம்.

**கடைச்சங்க நூல்** :—எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, முத்தொள்ளாயிரம் ஆகியவை கடைச் சங்க காலத்து நூல்களாம்.

**எட்டுத் தொகை** :—நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன எட்டுத்தொகை நூல்கள் என்று அழைக்கப்படும்: பல காலங்களில் பல புலவர்களால் பாடப் பெற்ற பாடல்களின் தொகுப்பே தொகை நூல்களாகும். அவை பிற்காலத்தில் பொருள், அடி, பா ஆகியவற்றிற் கேற்பத் தொகுக்கப்பெற்றன. தொகை நூல்களில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அக நானூறு ஆகியவை அகப் பொருள் பற்றிய நூல்களாம்.

**பத்துப் பாட்டு** :—ஆசிரியப்பாவினால் ஆகிய பத்துப் பாட்டுகள் பத்துப்பாட்டு என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப் படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல் வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம் அல்லது கூத்தராற்றுப் படை என்பனவே பத்துப் பாட்டுகளாம்.

எட்டுத் தொகை பத்துப்பாட்டு ஆகிய நூல்களிலிருந்து கடைச் சங்க காலத்துப் பல அரசர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள், புலவர்கள் முதலியோரின் வரலாறுகளையும், தமிழ் மக்களின் பண்பாடு, திருமணமுறை, இல்வாழ்க்கை, போர் முறை, அரசியல், சமய நெறி, வாணிகம், கலைகள், பழக்க வழக்கங்கள் முதலியவற்றையும் நன்குணரலாம். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய பதினெட்டையும் பதினெண் மேற் கணக்கு நூல்கள் என்றும் அழைப்பர்.

அவை, அகவல், கலிப்பா, பரிபாடல் ஆகிய அடிகளில் அமைந்துள்ளன.

**பதினெண் கீழ்க் கணக்கு** :—அடி நிமிர் வில்லாப் பாக்களில் பாடப் பெற்ற பாடல்களில் ஐம்பதுக்குக் குறையாமல், ஐந்நூறு பாடல்களுக்கு மிகாமல் உள்ள நூல்கள் பெரும்பாலும் கீழ்க் கணக்கு வகையைச் சார்ந்தவை. இவற்றில் வெண்பாப் பாடல்களே பெரும்பாலும் வரும். எனினும் ஐம்பதுக்குக் குறைந்த பாடல்களும் ஐந்நூற்றுக்குக் குறைந்த பாடல்களும் அமைந்திருப்பினும் அந்நூலும் கீழ்க்கணக்கிலேயே அடக்கப் பட்டது. நாலடியார், நான்மணிக்கடிகை, களவழி நாற்பது இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, திணை மொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, திணை மாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி நானூறு, சிறு பஞ்ச மூலம், கைந் நிலை, முது மொழிக் காஞ்சி, ஏலாதி என்பன பதினெண் கீழ்க் கணக்கு நூல்களாம். இவற்றுள் திருக்குறளும், நாலடியாரும் அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பகுதிகளைப் பற்றிப் பேசுகின்றன. ஏனையவை அகப் பொருள் பற்றியும், புறப் பொருள் பற்றியும் பாடப்பட்ட பாடல்களைக் கொண்டுள்ளன.

**முத்தொள்ளாயிரம்** என்ற நூல் தமிழ் நாட்டு மூவேந்தருடைய படை, கொடி, புகழ், வீரம், நாடு, நகர் முதலியவற்றை விரித்துக் கூறுகின்றது.

மணிமேகலை, சிலப்பதிகாரம் ஆகிய இரண்டும் தமிழின் கண் உள்ள ஐம்பெருங்காப்பியங்களுள் முந்தியன. அவை முறையே கூலவாணிகன் சாத்தனர், இளங்கோவடிகள் ஆகியோர்களால் இயற்றப்பெற்றன. சிலப்பதிகாரத்தை முத்தமிழ்க் காப்பியம் என்பர். இவற்றால், கடைச்சங்க காலத்துத் தமிழ் நாட்டு மக்களில், அரசியல், பொருள் நிலை, வழக்கங்கள், நடை, உடை, எண்ணங்கள், தமிழ்நாட்டு அரசர்களின் வீரமும் செல்வாக்கும் இமயம் வரை பரவி யிருந்தது முதலிய பன்முக வரலாற்றையும் நாமுணரலாகும்.

இனி, கடைச்சங்க நூல்களிலிருந்து நாமறியக்கூடிய, அக்கால இலக்கியத்தின் பொதுப் போக்குகளைக் கீழ்க் கண்டபடி ஒருவாறு தொகுக்கலாம்; [இதைப்போலவே ஒவ்வொரு சீலப் பகுதியிலும், எழுந்த இலக்கியங்களின் பொதுப் போக்குகளை அறிஞர்களின் இலக்கிய வரலாறுகளிலிருந்து கண்டறிந்து கொள்க.] (1) சங்க காலம்—

துரைசாமிப் பிள்ளை. (2) சங்கநூல்—கோவிந்தராஜ முதலியார். (3) தமிழ் வரலாறு. I, II பாகங்கள்—சீனிவாசப் பிள்ளை. (4) தமிழ் மொழி வரலாறு—சூரிய நாராயண சாஸ்திரி (5) தமிழ் வரலாறு—ரா. இராகவ ஐயங்கார். (6) Tamils 1800 years ago—கனகசபைப் பிள்ளை (7) The History of the Tamils—P. T. Srinivasa Iyengar (8) Tamil Literature-M. S. Purnalingam Pillai. (9) The Chronology of the Early Tamils—K. N. Siva Raja Pillai. (10) Studies in Tamil Literature and History—இராமச்சந்திர தீக்ஷிதர். (11) தமிழ் இலக்கிய வரலாறு—கா. சுப்பிரமணிய பிள்ளை. (12) கிறிஸ்துவமும் தமிழும், பௌத்தமும் தமிழும்—மயிலை சீனி, வேங்கடசாமி. (13) The History of Jain Literature in Tamil—A. Chakravarti Nayanar. (14) The History of Tamil Poets—சூரிய நாராயண சாஸ்திரி. (15) The History of Tamil Prose Literature—Chengalvaraya Pillai (16) கிறிஸ்துவத் தமிழ்த் தொண்டர்-சேதுப் பிள்ளை. (17) 16-ஆம், 17-ஆம் நூற்றாண்டுப் புலவர்—சோமசுந்தர தேசிகர். (18) சாஸனத் தமிழ்க் கவி சரிதம். (19) ஆழ்வார்கள் கால நிலை. (20) சேரன் செங்குட்டுவன்—மு. இராகவ ஐயங்கார். (21) The Cheras of the Sangam Period—சேஷ ஐயர். (22) Dravidian India—Sesha Iyengar. (23) Beginnings of South Indian History—Dr. Krishnaswmy Iyengar, etc.

## 1. சங்கச் செய்யுட்களின் பொதுப் போக்குகள்.

1. அகம், புறம் என இரு கூறுகளில் வாழ்க்கைச் செயல்கள் அனைத்தையும் அடக்கி விட்டார்கள். அறம், பொருள், இன்பம், வீடு என இவற்றையே நான்காக்கிக் கூறுவது வடநூல் முறை.

2. அறநூல்கள் மிகுதி—திருக்குறள், நாலடியார் தலை சிறந்தவை. ஒழுக்க முறைகளை இன்னார் இனியார் என்ற வேற்றுமையின்றி, குலத்துக்கொரு நீதியாய் அமையாமல், எல்லாச் சமயத்தினரும், எல்லா மொழியினரும், எல்லாக் காலத்தினரும் ஒத்துக்கொள்ளக் கூடிய பொது நோக்க முறை.

3. சமயப் பொறை—பல சமயத்தவரும் ஒத்து ஒருமித்து, பிணக்கமின்றி, இணக்கத்தோடு வாழ்தல்—சிலப்பதிகாரத்தில் பல சமயக்கோயில்களும் பக்கத்தே பக்கத்தே தழைத்தோங்கிய பான்மை—சமயக் கணக்கர்தம் திறம் கேட்ட காதை—சிவபெருமான் (அகம் புறம்) திருமால்

(நற்றிணை) முருகன் (குறுந்தொகை) ஆகிய தெய்வங்களுக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனாராகிய ஒரே புலவர் வாழ்த்துப் பாடுதல்.

4. நடைத் தூய்மையும் பெருமிதமும். செந்தமிழ் நடை—வடமொழிக் கலப்பு மிக அரிது.

5. உரைநடைக் குறைவு—உரைநடை வகைகள்:—பாட்டிடை வைத்த குறிப்பு, பாவின்றெழுந்த கிளவி, பொருளொடு புணராப் பொய்மொழி—பொருளொடு புணர்ந்த நகைமொழி.

6. இலக்கண வரம்புகளும், மரபுகளும் வரையறுக்கப்பட்டன—அவற்றிற்கு உட்பட்டே இலக்கியங்கள் எழுந்தன.

7. நால்வகைப் பாக்களே நிலவின. பாவினங்கள் இல்லை.

8. இலக்கியங்கள் உள்ளதை உள்ளவாறு படம் பிடித்துக் காட்டின. தன்மை நவிற்சி, (Realism or Naturalism) வாய்ந்த இயற்கைக் காட்சிகள், செய்யுள் ஓவியங்கள், உயர்வு நவிற்சி (Exaggeration or Hyperboie) இல்லை.

9. அணிகள் மிகுதி இல்லை. உவமை ஒன்றே தொல்காப்பியரால் கொள்ளப்பட்டது. அதுவே எல்லா அணிகளுக்கும் அடிப்படை.

10. யாப்பிலக்கணம், அணி யிலக்கணம் என்று தனித் தனி இலக்கணங்கள் இல்லை. பொருளுணர்வதற்காகவே இவை கருவியாதலின் தொல்காப்பியர், பொருளதிகாரத்திலேயே யாப்பை அடக்கிவிட்டார். உவம இயலில் அணியும் அடங்கிவிட்டது. பிற்காலத்தில் இவை தனித்தனி யாப்பிலக்கணம், அணியிலக்கணம் எனப் பிரிந்தன.

11. புராணக் கதைகள், இயற்கைக்கு முரணானவை முதலியவைகள் கிடையா. வரவரப் பிற்காலத்தில் (இடைக் காலத்தில்) வடமொழியைப் பின் பற்றிய காலத்தில் இவை காணப்படுகின்றன.

12. வாழ்க்கையில், நடை முறையில், காணக் கூடியவைகளே, நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கத்தையே இந்நூல்கள் கொண்டுள்ளன. சிந்தைக் கெட்டாத கற்பனைகள் இல்லை. பிறவு முள வேல் கொள்க.

2. **பௌத்த சமண சமயங்களின் காலம்:**—சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி

என்பன ஐம்பெருங்காப்பியங்கள் என்று அழைக்கப்படுகின்றன. நீலகேசி, சூளாமணி, யசோதர காவியம், நாககுமார காவியம், உதயணன் கதை ஆகிய ஐந்தும் ஐஞ்சிறு காப்பியங்கள் என்று வழங்கப்படுகின்றன. ஐம்பெருங் காப்பியங்களும், ஐஞ்சிறு காப்பியங்களும் பௌத்த, சமணசமய ஆசிரியர்களால் பாடப்பட்டன. அம்மதங்களின் கருத்துகள் அந் நூல்களில் பலவிடங்களில் விளக்கிக் கூறப்படுகின்றன. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்ருகிய நாலடியார் சமணமுனிவர்களால் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பேயாகும். பௌத்தர்களும், சமணர்களும் இனிய காவியங்களைப் பாடித் தமிழ்த் தாய்க்குத் தொண்டு செய்தனர் என்பது உண்மையே. ஆனுல் வாய்ப்புக்கிடைத்த பொழுதெல்லாம் அவர்கள் தத்தம் மதத்தின் உண்மைகளையும், உயர்வையும் எடுத்துக் கூறியே வந்தனர். கடைச்சங்க காலத்தின் பிற்பகுதியிலே இவ்விரு சமயங்களும் உயர்நிலையில் இருந்தன. இவ்விரு சமயங்களைப் பின்பற்றியவர்கள் தத்தம் சமயமே சிறந்தது என்று கூறிவந்தனர். அவை செய்யுளுருவில் வெளிவந்தன. சமணர்கள் செய்த தமிழ்த் தொண்டு அளவில் அடங்காது. இலக்கண நூல்களும், அறநூல்களும், சமணர்களால் கணக்கின்றி இயற்றப் பட்டன. வீரசோழியம், யாப்பருங்கலக்காரிகை யாப்பருங்கலம், நன்னூல், நேமிநாதம் முதலியன பிற்காலத்தனவேனும் பௌத்த சமணர்கள் இயற்றியனவாம். திவாகரம், பிங்கலம் என்னும் நிகண்டுகளும் இக் காலத்தைச் சேர்ந்தவைகளே. பாவினங்களும், உயர்வு நவிற்சி முதலியனவும், புத்த ஜாதகக் கதைகளும், புராணக் கதைகளும் தமிழிற் புகலாயின. சமண ஆசிரியர்களின் காலத்தில் ‘மணிப்ரவாளம்’ என்னும் இருமொழிக் கலப்பு நடை தோன்றியது. தமிழும் வடமொழியும் கலந்து எழுதப் படும் நடையே மணிப்பவள நடையாகும். அந்நடை பிறகு வைணவர்களால் பெரிதும் போற்றப்பட்டது. இந்தக் கலப்பு நடை தமிழ் நடைக்கு அழகு கொடுக்கிறது என்பது அவர்கள் கொள்கை. இதை “ஆபாச” நடை என இக்கால ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

3. **சமய மறுமலர்ச்சிக் காலம்** :—சமணமும் பௌத்தமும் தம்முள் போட்டியிட்டுக்கொண்டிருந்தன. அப்போட்டியின் பயனுய்ப் பல அரிய தமிழ் நூல்கள் தமிழுக்குக் கிடைத்தன என்று பார்த்தோம். இவ்விரு சமயங்களும் அயல் சமயங்கள் என்ற உணர்ச்சி தமிழ் மக்களிடையே தோன்றத்

தொடங்கியது. சைவ, வைணவ சமயங்கள் தலைதூக்கத் தொடங்கின. சைவசமயப் பெரியார்களாகிய நாயன்மார்களும் வைணவ சமயப் பெரியார்களாகிய ஆழ்வார்களும் தமிழ்நாட்டில் தோன்றினர். அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் சிவபெருமானைப் பற்றிய போற்றிப்பாடல்களும், வாழ்த்து வணக்கப் பாடல்களும், பண்ணும் தாளமும் பயின்ற இசைத் தமிழிற் பாடினர். அப்பாடல்களின் தொகுதியே தேவாரம் ஆகும். மாணிக்கவாசகர் திருவாசகத்தைப் பாடினர். திருவிசைப்பா, திருப்பல்லாண்டு போன்ற பதினோராம் திருமுறையைச் சேர்ந்த இசைப் பாடல்களும் இக்காலத்தனவே. இவர்கள் தொண்டினால் சைவசமயம் உயர்ந்தது. அம்மட்டுமா? இசைத் தமிழ்ப் பாடல்கள் தமிழ் மக்களுக்குக் கணக்கின்றிக் கிடைத்தன. மேலும் இக்காலத்தில் நேரிசை, தாண்டகம், குறுந்தொகை போன்ற கலித்துறை, ஆசிரியவிருத்த, கலிவிருத்தப் பாவினங்களும் தோன்றின. வைணவ ஆழ்வார்களும் திருமால்மீது பல இன்னிசைப் பாடல்களைப் பாடினர். அப்பாடல்களின் தொகுப்பே "நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்" ஆகும். இவ்விரு சமயங்களும் போட்டியிட்டு உயர் நிலையை அடையவே சமணமும், பௌத்தமும் குன்றத் தொடங்கின.

4. **இலக்கிய மறுமலர்ச்சிக் காலம்** :—கடைச்சங்க நூல்கள் இயற்கை வருணனைகள் நன்கு அமையப் பெற்றவை; பல வகைக் சுவைகள் கெழுமியவை. பிறகு தோன்றிய சமண, பௌத்த சமய நூல்களும், சைவ வைணவ சமய நூல்களும் அறம், ஒழுக்கம் முதலியவற்றையும், கடவுள் அன்பையும் மக்களுக்கு ஊட்டின. தத்தம் சமயங்களின் உண்மைகளை எடுத்தோதுவதே அவற்றின் சிறந்த நோக்கமாக இருந்தது. சமய மறுமலர்ச்சிக் காலத்தின் இறுதியில் மக்கள் தமிழிலக்கியத்தின் சுவையில் ஈடுபட்டனர்; பல புலவர்கள் தோன்றினர். அவர்கள் ஒன்பான் சுவையும் ஒருங்கே அமையவும் பத்துவித அழகும் பாங்குடன் பொருந்தவும், நடை நலமும் தொடைநலமும் வாய்ந்த செந்தமிழ்க் காவிய நூல்களைக் கணக்கின்றி யாத்தனர். பல வரலாறுகள் இலக்கியச் சுவைபடப் பாடப்பட்டன. இதைத் தமிழ்க் காவிய காலமென்றே கூறலாம். கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, சேக்கிழார், ஜயங்கொண்டார் முதலிய புலவர்கள் தோன்றி அழியாச் சிறப்பு வாய்ந்த பெரு நூல்களைப் பாடினர்.

வடமொழிக் கதைகளைத் தமிழிற் புகுத்திப் பாடிய காலம் இதுவே. எனினும் தமிழ்ப் புலவர்கள் வடமொழிக்

கதைகளைப் பாடுவதற்குரிய பொருளாக மட்டும் எடுத்துக் கொண்டனர். தமிழ்மக்களின் வாழ்க்கை முறை, நாகரிகம் பண்பாடுகளையே அக்கதைகளில் புகுத்தினார்; சங்க நூல்களில் கண்ட அழகுக் காட்சிகளை அவற்றுள் அமைத்தனர். இக்காலத்தில் கந்தபுராணம், கம்பராமாயணம், பெரியபுராணம், கலிங்கத்துப் பரணி போன்ற பெருங் காவியங்கள் தோன்றின. சைவசித்தாந்த சாஸ்திரம் என்று சொல்லப்படும் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் முதலியவை உள்ளிட்ட பதினன்கு "மெய்யுணர்வு" நூல்களும், அவற்றை யியற்றிய மெய்கண்டார், அருள்நந்தி, உமாபதி சிவம் முதலியோரும் விளங்கிய காலமும் இதுவே.

இலக்கிய மறுமலர்ச்சிக் காலத்தின் மற்று ஒரு தனிச் சிறப்பு தமிழில் உரைநடை வளர்ந்ததே ஆகும். இதை உரையாசிரியர்கள் காலம் எனவும் கூறலாம். தொல்காப்பியத்திற்கும், சங்க நூல்களுக்கும், பெருங் காப்பியங்களுக்கும் பல உரை ஆசியர்கள் உரை எழுதத் தொடங்கினர். இளம்பூரணர், பேராசிரியர், சேனவரையர், நச்சினர்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் போன்ற சிறந்த உரையாசிரியர்கள் இலக்கிய மறுமலர்ச்சிக் காலத்தைச் சேர்ந்தவர்களேயாவர். அவர்களுடைய உரைகளால் தமிழ்மொழி பெற்ற பெருமைக்கு அளவில்லை. அவர்களுடைய உரைகளாலேயே பழங்காலத்து நூல்கள் இறவாது இன்றும் உள்ளன? செய்யுட்கள், இலக்கண நூற்பாக்கள் முதலியவற்றின் உரைகளை அறியமுடிகிறது; உரைநடை வளரத் தொடங்கியது. எனினும் பல நூற்றாண்டுகட்குப் பிறகே தமிழ் உரைநடை மக்களால் விரும்பிப் போற்றப்பட்டது. இனி இக்காலத்தில்தான் தண்டியலங்காரம், யாப்பருங்கல்விருத்தி, யாப்பருங்கலக் காரிகை, நேமிநாதம், வீரசொழியம், நன்னூல் போன்ற இலக்கண நூல்களும் தோன்றின. இதுவே தமிழ் இலக்கிய வரலாற்றில் தலைசிறந்த காலமாகும்.

**ஆதீன மடம் (தலைவர்களின்) காலம்** :—சங்க காலத்தில் முடியுடை மன்னர்களும், சிற்றரசர்களும், வள்ளல்களும் தமிழ்ப் புலவர்களைப் புரந்தனர். இலக்கிய மறுமலர்ச்சிக் காலத்திலும் தமிழ் அவ்வாறே போற்றப்பட்டு வந்தது. பிறகு தமிழ் நாட்டில் பல ஆதீனங்கள் அல்லது மடங்கள் தோன்றின. அவற்றின் நோக்கங்கள் சமய வளர்ச்சியும், தமிழ் வளர்ச்சியுமே. ஆதீனத் தலைவர்கள் சிறந்த தமிழறிஞர்களாய் விளங்கினர். தமிழப் புலவர்களையும் சமயப்

புலவர்களையும் ஆதீனங்களில் போற்றிப் புரந்து நூல்களும் உரைகளும் உரைநடைகளும் ஆராய்ச்சிகளும் எழுதத் தூண்டினர். புராண ஆகமங்கள் தமிழில் நுழைத்து எழுதப் பட்டன.

இதே காலத்தில் பல புலவர்கள் தமிழ்நாடெங்கும் தோன்றினர். வடமொழியின் செல்வாக்கும் அப்பொழுது மிக்கிருந்தது. பாடல்களில் வடமொழிச் சொற்களை மிகுதியாகப் பாடுவது சிறந்தது என்ற கருத்து சில புலவர்களிடையே இருந்தது. இக்காலத்தில் நிரம்ப அழகிய தேசிகர், வரதுங்கராம பாண்டியர், அதிவீரராம பாண்டியர் முதலிய அரசப் புலவர்களும், வில்லிபுத்தூராழ்வார், அருணகிரிநாதர், பரஞ்சோதி முனிவர் முதலிய புலவர்களும் தோன்றினர். சிலேடை, வசை, முதலிய பாடுவதில் இணையற்ற காளமேகம், அதிமதுர கவி, இரட்டையர் என்ற மூவர் கூட்டமும் இக்காலத்துத் தான் நிகழ்ந்தது. பொய்யாமொழிப் புலவர், வீரைக் கவிராயர், மண்டல புருஷர். அரச கேசரி, அந்தகக் கவி வீரராகவர் முதலியோரும் இக்காலத்தவரே.

இனி மடங்களில் இருந்தோர்களிற் சிறப்பாகக் கீழ்க் கண்டோரைக் குறிக்கலாம்.

**திருவாவடுதுறை**:—நமச்சிவாயதேசிகர், அம்பலவாண தேசிகர், சுவாமிநாத தேசிகர், சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர், (தணிகைப் புராண, விநாயக புராண-ஆசிரியர்) பிற்காலத்தில் வந்த பெரும் புலவராகிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்களும் இதைச் சேர்ந்தவரே.

**தருமபுரம்** :—குமரகுருபரர்—வைத்தியநாத நாவலர். குமரகுருபரர், தனியாகப் பின்னர்த் திருப்பனந்தாளில் தனிமடத்தை நிறுவினர். இது இக்காலத்தில் பல நல்வழிகளிலும் தமிழ்த் தொண்டாற்றி வருவது நாடறிந்ததொன்றும்.

**திருவண்ணாமலை** :—குகை நமச்சிவாயர்.

**துறைமங்கலம்** :—சிவப்பிரகாசரும், அவர் உடன் பிறந்தோராகிய வேலைய தேசிகரும், கருணைப்பிரகாசரும்.

இக்காலப் பகுதியில் தத்துவராய சுவாமிகளையும், தாயுமான முனிவரையும், பிள்ளைப்பெருமாள் ஐயங்காரையும் எல்லப்ப நாவலர், திரிகூட ராஜப்பகவிராயர்களையும் அடக்கிக் கொள்ளலாம்.

6. **மேனாட்டுச் சார்புக்காலம்** :—பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து தற்காலம் வரையில் உள்ள

காலத்தை மேனாட்டுச் சார்புக்காலம் என்னலாம். சிவஞான முனிவர், சிவப்பிரகாச சுவாமிகள், தாயுமானவர் முதலியோர் வாழ்ந்தது இக்காலத்திலேயே. அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ் முதலிய நூல்கள் கணக்கின்றித் தோன்றின. பொருளழகினும் சொல்லழகே சிறந்தது என்று பலர் கருதினர். வீரமாமுனிவர் என்னும் ஐரோப்பியப் பெரியார் தேம்பாவணி என்னும் நூலை இயற்றிய காலம் இதுவேயாகும். மேனாட்டுச் சார்பினால் தமிழ் பலவகைகளில் சிறப்புப் பெறத் தொடங்கியது.

இவர் தமிழுக்குச் செய்த பன்முகத் தொண்டின் விவரங்களை இலக்கிய வரலாற்று நூல்களிற் கண்டுகொள்க.

இனி, தத்துவ போதக சுவாமிகள், ஜீகன்பால்கு ஐயர், இரேனியஸ் ஐயர், எல்லிஸ்துரை, போப்பையர், கால்டுவெல் ஐயர், பாப்லி முதலியோர் இக்காலத்தைச் சேர்ந்த தமிழ்ப் புலமை வாய்ந்த ஐரோப்பியப் புலவர் ஆவர். இவர்கள் இயற்றிய நூல்களையும், செய்த தமிழ்த் தொண்டுகளையும் விரிவஞ்சி எடுத்துக் கூறாது விடுத்தோம். உரிய இடங்களிற் கண்டு கொள்க.

இனி, இக்காலத் தமிழ்ப் புலமைவாய்ந்த இந்தியக் கிறிஸ்துவப் புலவர்களில் கிருஷ்ணப் பிள்ளை, வேதநாயகம் பிள்ளை, பவர் ஐயர் முதலியோர் சிறந்தோராவர்.

இதே காலத்தில் விசாகப் பெருமாளையர், சரவணப் பெருமாளையர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, இராமலிங்க அடிகள், வல்லூர் தேவராச பிள்ளை முதலியோர் கிறித்தவர்கள் அல்லாத தமிழ்ப் புலவர்களாவர்.

மேனாட்டுச் சார்பினால் தமிழ்மொழி பலவகைகளில் சிறப்புப் பெறத் தொடங்கியது. தமிழ் உரைநடை வளர்ச்சியுறத் தொடங்கியது. ஆங்கில மொழியோடு ஒப்பிட்டுப் படிப்பதன் பயனாக, நாடகங்கள், சிறு கதைகள், தொடர் கதைகள், புதினங்கள், இலக்கிய வரலாறு, மொழிவரலாறு, மொழிநூல், இலக்கிய ஆராய்ச்சி முறைகள், கவிநயம் காணல் முதலிய பல மொழித் துறைகளும் வளம் பெறலாயின. மேலும், ஆங்கிலமொழியே உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் கற்பிக்கும் வாயிலாக அமைந்திருந்ததால் தமிழ் மொழியில், தமிழொழிந்த பல பாடங்களுக்கும் ஆங்கில மொழியிற் போலப் பாட நூல்கள் எழலாயின.

உரைநடை மாணவர்கட்கும், புலவர்கட்கும் ஏற்ற வகைகளில் அமைந்துள்ளது. இராமலிங்க அடிகள் வாழ்ந்தது இக் காலத்திலேயே. பிறகு பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, தாமோதரம் பிள்ளை, சோழவந்தான் அரசன் சண்முகனார், நாவலர் நாட்டார், மறைமலை அடிகள், விபுலானந்த அடிகள், சுப்பிரமணிய பிள்ளை, பண்டித மணி, நாவலர் பாரதியார், திரு. வி. க., சேதுப்பிள்ளை, வையாபுரிப் பிள்ளை, ஆறுமுக நாவலர், சூரியநாராயண சாஸ்திரியார், டாக்டர் சாமிநாத ஐயர், செல்வ கேசவராய முதலியார், வேதநாயகம் பிள்ளை முதலியவர்கள் பல உரைநடை நூல்களை எழுதினர். இவ்வாறு வளர்ந்த உரைநடை இன்று மிக உயர் நிலையில் உள்ளது. இன்று உரைநடை நூல்கள் புதிது புதிதாக நாள்தோறும் தோன்றுகின்றன. புதினங்கள், மொழி பெயர்ப்புகள், நகைச் சுவைக் கட்டுரைகள், சிறு கதைகள், தொடர் கதைகள் முதலியன தமிழில் கணக்கின்றித் தோன்றியுள்ளன. செய்தித் தாள்கள், வார, பிறை, திங்கள் இதழ்களினும், இலக்கிய ஆராய்ச்சி, மொழி நூலாராய்ச்சி, இலக்கிய வரலாறு முதலியவை பற்றிய இதழ்களினும், சிறுவர்க்கான இதழ்களினும், உரை நடை மிகவும் வளர்ச்சியுறுகிறது. ஆங்கிலத் தொடர்பினால் தமிழ் மக்கள் நாடக நூல்களின் நன்மையை உணர்ந்தனர். ஷேக்ஸ்பியரைப் படித்த தமிழறிஞர்கள் தமிழிலும் பல நாடக நூல்களை எழுதி வெளியிட்டனர். பேராசிரியர் சுந்தரம்பிள்ளை எழுதிய மனோன்மணீயம் சிறந்த நாடக நூல். வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், இராவ் பகதூர் ப. சம்பந்த முதலியார் போன்றவர்கள் பல நாடக நூல்களை எழுதியுள்ளனர். இன்னும் தற்காலத்தில் நாட்டு மக்களின் நாட்டுப்பற்றைத் தட்டியெழுப்பிய கவி சுப்பிரமணிய பாரதியாரை நாம் மறக்க முடியாது. தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர், வே. இராமலிங்கம் பிள்ளை, சுத்தானந்த பாரதியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் போன்றவர்கள் அழகிய எளிய இனிய புதுமைப் பாடல்களைப் பாடினர் ; பாடிக்கொண்டும் இருக்கின்றனர்.

இன்று தமிழ் மொழியே முதன்மொழி. பாடத் திட்டத்தில் தமிழுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. தமிழ் கற்பிக்கும் ஆசிரியர்களின் நிலையம் உயர்த்தப்பட்டு வருகின்றது. தமிழ்நாடு முழுவதும் தமிழுணர்ச்சி நன்கு பொங்கி வழிகின்றது. தமிழிலக்கியச் சுவையே எச்சுவையினும் சிறந்தது என்ற உணர்ச்சி தமிழர்களுக்கு உண்டாகி விட்டது. இனி வருங்காலத்தில் தமிழ்த்தாயின் பெருமை உலக முழுவதும் நன்கு பரவும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# TRAINING College/School

Report on Student's Lesson

(ஆசிரிய மாணவர் கற்பித்த பாட அறிக்கை)

Name of Student (ஆசிரிய மாணவர் பெயர்)

Date of lesson (பாடம் நடத்திய நாள்

Class or Form taken (வகுப்பு அல்லது அமைப்பு)

Number of pupils (மாணவரின் எண்ணிக்கை

Subject (பாட வகை)

Name of lesson (பாடத்தின் பெயர்)

Aim of the lesson—General Special பாடநோக்கம்—பொது சிறப்பு)

I. Preparation of work (ஆயத்தம்)

(a) Notes (and illustrations) பாடக் குறிப்புகளும் விளக்கப் படங்களும்)

(Care and intelligence shown (இவற்றைச் செய்வதில் காட்டிய ஊக்கமும் நுண்ணறிவும்)

(b) Apparatus Teaching Aids prepared (foresight, adaptability and use)—கற்பிப்பதற்கான துணைக் கருவிகள்—உதவிக் கருவிகளைச் செய்தது (முன் னேக்கமும் அவற்றின் தகுதிப் பொருத் தமும் பயனும்)

2. Teaching Power (கற்பிக்கும் ஆற்றல்) :—

(a) Knowledge of the subject matter (பாட அறிவு)

(b) Presentation of Matter (பாடத்தை எடுத்துக் கூறல்)

(i) Introduction (முகவுரை)

(ii) Development (பாட வளர்ச்சி)

(iii) Use of Blackboard (கரும்பலகை வேலைத்திறம்)

(c) Power of dealing with and building on pupil's answers (மாணவர் விடைகளைப் பயன்படுத்திக் கொண்டு அவற்றின் மேலும் துணைக் கேள்விகள் கேட்டுக் கட்டிக்கொண்டு போகும் ஆற்றல்)

(d) Personal characteristics–Manner, language, pnonunciation, voice (ஆசிரியரின் நடந்து கொண்ட முறை-இயல்பு மொழியும் நடையும்—உச்சரிப்பு, குரல்)

3. Class Management (வகுப்புஆட்சி) :—

(a) Power of control including meeting and dismissal of class (வகுப்பைத் தொடங்கும் போதும், விடும்போதும் உள்ளிட்ட வகுப்பு ஒழுங்குமுறை)

(b) Response of class (வகுப்பு மாணவர்கள் விடையிறுத்த அளவு)

(c) Effectiveness (பாடம் மாணவரிடத்துப் பதிந்த அளவு)

4. General remarks of the supervisor (மேற்பார்வையாளரின் பொதுக் குறிப்புகள்) :—

5. Standard of Lesson (பாடத்தின் தகுதிநிலை) (Fair minus, Fair, Fair plus, good, very good etc). ஏற்றுக் கொள்ளுதற் குரியதல்ல, ஏற்றுக்கொள்ளலாம், மிகவும் ஏற்றுக்கொள்ளற்குரியது, நல்லது, மிகவும் நல்லது முதலியன)

6. Lecturer's remarks (பேராசிரியரின் குறிப்புகள்)—

Signature of Supervisor

(மேற்பார்வையாளரின் கையெழுத்து

Date (நாள்)

## பின்னிணைப்பு

### இந்நூலிற் பயிலும் சில கலைச்சொற்களும், அவற்றிற்கேற்ற தமிழ்ச் சொற்களும்

Abstract – கருத்து
Adenoids – மூக்கடிச்சதை
Administration – ஆட்சிமுறை
Aesthetic – அழகுணர்
Aims – நோக்கம்
Aim-intellectual – அறிவு நோக்கம்
Aim-Linguistic – மொழி ,,
Aim-Literary – இலக்கிய ,,
Alliteration – மோனை
Allusions – தொகு பொருள்கள்
Alphabetic Method – எழுத்து முறை
Analytic – வகுத்துப் பார்க்கும்
Antonyms – எதிர்ச் சொற்கள்
Apostrophe – தொகைக்குறி
Apperception – முன்னறிவோடு ஒன்றுவித்தல்
Articulation – ஒலிப்பு
Arts – கலைகள்
Assignments – ஒப்பந்தங்கள்
Assignments-Post lesson – பாடப்பின் ஒப்பந்தங்கள்
Assignments-Pre. lesson – பாட முன் ஒப்பந்தங்கள்
Assimilation – உள்ளத்தமைத்தல்
Association – இனப்படுத்துதல்
Association-Laws of – இனப்படுத்தும் விதிகள்
Attention – கவனம்
Attitude – மனப்பான்மை
Back-ground – பின்னணி
Bad – கேடானது
Beauty – அழகு
Black-Board – கரும்பலகை
Black-board Demonstration–கரும்பலகையில் எழுதிக்காட்டல்
Body of the letter – செய்தி
Breathed – ஓசை இல்லன
Brevity – சுருக்கம்
Bussiness letters – (தொழில் பற்றிய வேலை பற்றிய) கடிதங்கள்
Catalogues – விலைப்பட்டிகள்
Certificates – தகுதிச் சீட்டுகள்
Chamber of resonance–இசை (ஒலி) அறை
Cinema films – படக் காட்சிகள்
Class – வகுப்பு
Class system – வகுப்பு முறைகள்
Classical Language–உயர்தனிச் செம்மொழி

Clear – தெளிவாக
Clipped ending – கடையெழுத்து விழுங்கல்
Coherence – தொடர்ச்சி
College – கல்லூரி
,, Professional – தொழிற் கல்லூரி
,, Teachers – ஆசிரியர் ,,
Colon Dash – வரலாற்றுக் குறி
Commands – கட்டளைகள்
Composition – கட்டுரை யெழுதுதல்
,, free – உதவியின்றி எழுதும் கட்டுரை
,, oral – வாய்மொழிக் கட்டுரை
Composition original – தாமாகவே எழுதும் கட்டுரை
,, Reproductive – திருப்பி எழுதும் கட்டுரை
,, Picture – படக் கட்டுரை
,, story – கதைக் கட்டுரை
,, written – எழுத்துக் கட்டுரை
Compromise method – நடு முறை
Concentration – மன ஒருமை
Concord – இசைவு
Concrete objects – காட்சிப் பொருள்கள்
Consonants – மெய்யெழுத்துகள்
Context – இடம்
Conversation – உரையாடல்
Conveyance – ஊர்தி
Co-operative – கூட்டுறவு
Copies – படிகள்
Copy-writing – பார்த்து அதன்படி எழுதுதல்
Correlation – பொருத்திக் காட்டல்
Creative power – படைப்பாற்றல்
Curriculum – கலைத் திட்டம்
Daily life – அன்றாட வாழ்க்கை
Dalton plan – டால்டன் திட்டம் (ஒப்பந்த முறை)
Dash – இடைக்கோடு
Debate – சொற்போர்
Deductive Method – விதிவிலக்கு முறை
Definitions – வரையறவுகள்
Dictation – சொல்லுவதெழுதுதல்
,, Modified – மாற்றியமைக்கப்பட்ட சொல்லுவதெழுதுதல்
Diction – நடை
Diction-Poetic – செய்யுள் நடை
,, Prose – உரை நடை
Dictionaries – அகராதிகள், அகர வரிசை
Difficult – அரிய
Directly – நேர்முகமாக

Direct method – நேர்முறை
Discussions – ஆராய்ச்சி
Discussion Socialised – ஒருங்குகூடி ஆராய்தல்
Drama – நாடகம்
Dramatisation – நடித்துக் காட்டல்
Drill – பன்முறைப் பயிற்சி
Drill Method – பன்முறைப் பயிற்சி முறை
Easy – எளிது
Emotions – மனவெழுச்சிகள்
Emphasis – அழுத்தம்
Enjoyment – இன்புறல்
Enthusiasm – உள்ளக் கிளர்ச்சி
Essay – கட்டுரை
,, Argumentative–விவாதக் கட்டுரை
,, Descriptive – வர்ணனைக் ,,
,, Expository – விளக்கக் ,,
,, Imaginative – கற்பனைக் ,,
,, Narrative – வரலாற்றுக் ,,
,, Reflective – கருதியற் கட்டுரை
Euphemism – தகுதிவழக்கு
Euphony – இனிமை
Examinations – தேர்வுகள்
,, Essay type of – கட்டுரைத்தேர்வுகள்
Examinations New type – புதுமுறைத் தேர்வுகள்
,, old type – பழையமுறைத் தேர்வுகள்
,, Terminal – பருவத் தேர்வுகள்
,, Annual – ஆண்டுத் தேர்வுகள்
Examination S.S.L.C. – இடைநிலைப் பள்ளி நீக்கத் தகுதிச் சீட்டுத் தேர்வு (இ. ப. நீ. த.)
T.S.L.C – ஆசிரியர் பள்ளி நீக்கத் தகுதிச் சீட்டுத் தேர்வு (ஆ. ப. நீ. த.)
Examples – எடுத்துக்காட்டுகள்
Excellent – சிறப்புடையது
very – மிகச்சிறப்புடையது
Exclamation mark – வியப்புக் குறி
Execution – செய்து முடித்தல்
Exercise – பயிற்சி
,, breathing – மூச்சுப் பயிற்சி
,, tongue loosening – நாநெகிழ் பயிற்சி
Expanding – பெருக்கி யெழுதுதல்
Experience – பட்டறிவு (அனுபவம்)
Eye-fixation – கண்ணிறுத்தம்
,, limit – கண்ணிறுத்த அளவு

Eye movement – கண்ணகர்ச்சி
Eye sight – கண் பார்வை
Eye sweep – கண் பாய்ச்சல்
Fair – ஏற்றுக்கொள்ளலான
Fatigue – சோர்வு
Fatigue mental – உளச்சோர்வு
Fatigue Physical – உடற்சோர்வு
Feeling – உணர்ச்சி
Feeling fellow – ஒத்துணர்ச்சி
Figures of speech – அணிகள்
Flourishes – (எழுத்தின்) சுருள்கள்
Folk-Songs – நாட்டுப் பாடல்கள்
Force – (பொருள்) வலிமை
Fore-ground – முன்னணி
Foreign Language – அயல்மொழி
Form – அமைப்பு
Free speech – பேசும் உரிமை
Frequent occurrence – அடிக்கடி பயிலும்
Function – வேலை
Function creative – படைப்பு வேலை
,, expressive – வெளியிடும் வேலை
,, receptive - உட்கொள்ளும்வேலை
Generalisation – பொதுவிதி அறிதல்
Good – நல்லது
Good-very – மிக நல்லது
Government Departments – அரசியல் துறைகள்
Graded – படிப்படியாய்
Grading – தகுதி பிரித்தல்
Gramaphone Record – இசைத்தட்டு
Grammar – இலக்கணம்
Grammar formal–தனிப்பட்ட இலக்கணம்
,, functional–நடைமுறை இலக்கணம்
Grammatical terms-இலக்கணக்குறியீடுகள்
Graph – கோட்டுப் படங்கள்
Gregarious instinct – கூட்டு ஊக்கம்
Guide – வழிகாட்டி
Hand work – கைவேலை
Hand-writing – கையெழுத்து
Hard-Palate – இரட்டு அண்ணம்
Hatred – வெறுப்பு
Healthy-rivalry – நன்முறைப் போட்டி
History of Language – மொழி வரலாறு
,, Literature – இலக்கிய வரலாறு

Hobby—பிரியமுள்ள வேலை
Home work—வீட்டு வேலை
Humour—நகைச்சுவை
Idioms—மரபுத் தொடர்கள்
Imagination—கற்பனை
Imposition—பன்முறை எழுதுதல்
Improvised—முன் ஆயத்தமில்லா
Incidental Method—அவ்வப்போது கற்பிக்கும் முறை
Indirectly—மறைமுகமாக
Individual system-தனித்தனிக்கற்றல் முறை(தனிப்பயிற்சி முறை)
Individuality—தனித்தன்மை
Inductive Method—விதிவருமுறை
Inferiority complex—தாழ்வுணர்ச்சி
Instincts—இயல்பு ஊக்கங்கள்
Institutions—நிலையங்கள்
Intellectual training—மனப் பயிற்சி
Intelligence quotient—நுண்ணறிவு ஈவு
Interest—கவர்ச்சி
Inter verbal space—சொல்லிடையீடு
Introduction—ஆயத்தம்
Inverted commas—மேற்கோள் குறிகள்
Judgment—தீர்மானம்
Known—தெரிந்தது
Labortories—ஆய்வுக்களங்கள்
Language Drill—மொழிப் பன்முறைப் பயிற்சி
Law of Effect—பயன் விதி
,, Exercise—பயிற்சி விதி
,, Readiness—ஆயத்த விதி
Learning by rote—குருட்டுப் பாடஞ் செய்தல்
Lecture—சொற்பொழிவு
Lectures little men—சிறுவர் சொற்பொழிவுகள்
Lecturers—சொற்பொழிவாளர்கள்
Legibility—(எழுத்தின்) தெளிவு
Letter-writing—கடிதம் எழுதுதல்
Library—நூல் நிலையம்
,, General—பொதுநூல் நிலையம்
,, Reference—மேற்கோள் நூல் நிலையம்
,, Class—வகுப்பு
,, Period—நூல்நிலையப் பாடவேலை

Linguistic habits—பேச்சுப் பழக்கங்கள்
Lips—இதழ்கள்
Liquids—நெகிழ் ஒலிகள் (இடையினம்)
Listening practice—கேள்விப் பயிற்சி
Lists—பட்டிகள்
Literacy permanent—நிலைத்த படிப்பறிவு
Literary Beauty—இலக்கியநயம் (அழகு)
,, Critcism—இலக்கிய ஆராய்ச்சி
,, Language—இலக்கிய மொழி
Literature—இலக்கியம்
Logical order—காரண காரிய முறை
Logical sequences—5 காரண காரியத் தொடர்பு
Look and say—பார்த்துச்சொல்லும்
Loose construction—முன் முடிப்பு
Lungs—நுரை யீரல்
Magazines—இதழ்கள்
,, children—குழந்தை இதழ்கள்
,, class—வகுப்பு
,, critical—ஆராய்ச்சி
,, illustrated—விளக்க
Magazines-personal—தனி
Magazines school—பள்ளிக்கூட இதழ்கள்
Marks-மதிப்பு எண்கள்
Mates class—ஒரு வகுப்பு மாணவர்கள்
,, college
,, school
,, university } ஒரு சாலை மாணவர்
Medium of instruction—கற்பிக்கும் வாயில்
Memorisation—நெட்டுருச் செய்தல்
Memory—நினைவாற்றல்
Merits and Demerits—குற்றம் நற்றங்கள்
Methods—முறைகள்
Mile stones—எல்லைக் கற்கள்
Modulation of voice—குரல் ஏற்றத் தாழ்வு
Monotony—சலிப்பு
Moral sayings cards—அறமொழி அட்டைகள்

Mother tongue - தாய்மொழி
Muscle control - தசையடக்கம்
Muscle coordination - தசை ஒருங்கியக்கம்
Nasals - மூக்கொலிகள் (மெல்லினம்)
Natural tendency - இயல்புப் போக்கு
Neatness - துப்புரவு
Nervous stimulation - நரம்புக்கிளர்ச்சி
Nearvous strain - நரம்பு முறுக்கம்
News papers - செய்தித் தாள்கள்
Non-language subjects - மொழி ஒழிந்த பிற பாடங்கள்
Notice Boards - விளம்பரப் பலகை
Novels - புதினங்கள்
Observation - உற்று நோக்கல்
Oral practice - வாய்மொழிப் பயிற்சி
Order of words - சொல்முறை
Organs of articulation - ஒலி உறுப்புகள்
Orators - பேச்சாளர்கள்
Opportunities - வாய்ப்புகள்
Painting - ஓவியம்
Paragraph - பத்தி
Paragraph Introductory - முகவுரைப் பத்தி
,, Transitional - மாறுநிலைப் பத்தி
,, Body - உடற்பத்தி
,, Concluding - முடிவுப்பத்தி
Parallel construction - ஒரு போகு அமைப்பு
Paraphrase - கருத்துரை யெழுதுதல்
Parentheses - இடைப் பிறவரற் குறிகள்
Part - சினைப்பொருள்
Pause - நிறுத்தம்
Perception - பொறிக்காட்சி
Period - பாட வேளை
Period - Double - இரு பாடவேளை
,, Single - ஒரு பாடவேளை
Periodic construction - பின் முடிப்பு
Perspicuity - தெளிவு
Personality - தனி (ஆள்) இயல்பு
Philologists - மொழி நூலறிஞர்
Philology - மொழி நூல்
Phonetics - ஒலியியல்
Phraces - சொற்றொடர்கள்
Planning - திட்டம் போடுதல்
Play way - விளையாட்டு முறை
Plosives - வெடிப்பொலிகள்

Poetis Diction - செய்யுள் நடை
Practical - நடைமுறை
Prakrits - பாகத மொழிகள்
Precision - திட்டம் (ஆனது)
Precis-writing - சுருக்கி எழுதுதல்
Presentation - எடுத்துக் கூறல்
Priority - முதன்மை நிலை
Private - தனிப்பட்ட, குடும்பம்பற்றிய
Problem - பெருங்கேள்வி
Progress cards - தேர்ச்சிப் பதிவுத்தாள்
Project - தன்னேக்க முயற்சி வேலை
Project Consumer's - துய்ப்போர்க்கான
,, Group - தொகுதியாகச் செய்யக்கூடிய
,, Individual - தனியாகச் செய்யக்கூடிய
,, Method - தன்னேக்க முயற்சிமுறை
,, Producers - படைப்போர்க்கான
Promotion - வகுப்பு மாற்றம்
Pronunciation - உச்சரிப்பு
Proportion - அளவு
Propriety - தகுதி
Provincialisms - திசை வழக்குகள்
Prose - உரை நடை
Prose Diction - உரை நடை நடை
Proverbs - பழமொழிகள்
Proximity – அண்மை நிலை
Psychology – உளநூல்
Publication – வெளியீடு
Public Speakers – மேடைப் (பொதுப்) பேச்சாளர்கள்
Punctuation marks – நிறுத்துக்குறிகள்
Punishment – தண்டனை
Purity – தூய்மை
Purposing – நோக்கம்
Questions–answers – வினு விடைகள்
Radio – வானொலி
Readiness – ஆயத்தம்
Reading charts – படிப்புத் தாள்கள்
Reading Extensive – அகன்ற படிப்பு
Reading Intensive – ஆழ்ந்த படிப்பு
, Loud – வாய்விட்டுப் படித்தல்
,, Silent – வாய்க்குட் படித்தல்
Reasoning – கருதுதல் (அனுமானம்)
Recitation – ஒப்புவித்தல்
Recapitulation – திரும்பிக் கூறல்

References – மேற்கோள்கள்
Regression – பிற்போக்கு
Repression – நசுக்குதல்
Requests Cards – வேண்டுகோள் அட்டைகள்
Residential – உடனுறை
Response – துலங்கல்
Rhetoric – அணியியல்
Rhyme – எதுகை
Rhythm – ஓசை இனிமை
Riddlies – விடுகதைகள்
Roof of the Mouth – வாய்க்கூரை
Roots – வேர்கள்
Rote – குருட்டு
Salutation – விளி
Sand paper – உப்புத் தாள்
School - Elementary – தொடக்க நிலைப் பள்ளி
,, High – உயர்நிலைப்பள்ளி
,, Middle, Secondary – இடைநிலைப் பள்ளி
,, Nursery – குழந்தைப் பள்ளி
School Basic – அடிப்படைப் பள்ளி
Self activity – தன் முயற்சி
Self confidence – தன்னம்பிக்கை
Self consciousness – தன்னுணர்ச்சி
Self Interpreting – தம் பொருள் (தாம்) விளக்கும்
Sensation – பொறி உணர்ச்சி
Senses – பொறிகள்
Sentence – தொடர் மொழி (வாக்கியம்), சொற்றொடர்
Sentence Complex – கலப்பு வாக்கியம்
Sentence Compound – புணர்வாக்கியம்
Sentence Method – சொற்றொடர் முறை, தொடர்மொழி முறை
Sentence Simple – தனி வாக்கியம்
Series – வரிசையாய்
Settings – ஒப்பனைகள்
Signature – கையெழுத்து
Simple – எளிய
Sing Song – குரல் போடல்
Skelton – சட்டகம்
Social – மக்கட் பொது (சமுதாயம்) பற்றிய
Social life – (சமுதாய) மக்கட் பொது வாழ்க்கை
Society – மக்கட் பொது (சமுதாயம்)
Sociological laboratories – கூட்டு ஆய்வுக் களங்கள்
Soft Plate – முதல் அண்ணம்
Songs action – ஆட்டப் பாடல்கள்

,, Songs Children's – பாப்பா பாடல்கள்
,, Nursery – செவிலிப் பாடல்கள்
,, Stories – கதைப் பாடல்கள்
Sounds – ஒலிகள்
,, alveolar – எதிர் ஒலிகள்
,, aspirates – மூச்சு ஒலிகள்
,, cerebrals or (linguals) – தலை ஒலிகள்
,, Dentals – பல் ஒலிகள்
,, Gutturals – மிடற்று ஒலிகள்
,, Labials – இதழ் ஒலிகள்
,, Labio dental – இதழ்—பல்—ஒலிகள்
,, Palatals – நா ஒலிகள்
,, Sibilants – இரைப்பு ஒலிகள்
Space between – இடை வெளி
Specialists – வல்லுநர்
Speed – விரைவு
Spelling – எழுத்துக் கூட்டல்
Spoken – வழங்கும்
Stage Early adolescent முன்குமரப் பருவம்
,, Formative – உருவமை பருவம்
,, Infant – குழவிப் பருவம்
,, Later adolescent – பின் குமரப்பருவம்
,, Transitional – நிலைமாறு பருவம்
Standardised – ஒரு நிலையாக்கப்பட்ட
Statistics – புள்ளி விவரங்கள்
Stem – பகுதி
Stimulus – தூண்டல்
Subscription – (முடிப்பு) கையொப்பம்
Superscription – முகவரி (விலாசம்)
Supervised Study – மேற்பார்வைப் படிப்பு
Sutrams – நூற்பாக்கள்
Sullabus – பாடத்திட்டம்
Sympathy – பரிவு
Synonyms – ஒரு பொருள் குறித்த பல சொற்கள்
Syntax – சொற்றொடர் இயல்
Synthetic – தொகுத்துப் பார்க்கும்
Teacher's training – ஆசிரியர் பயிற்சி
Teaching aids – கற்பிக்கும் உதவிப் பொருள்கள்
,, appliances – கற்பிக்கும் உதவிக் கருவிகள்
Technical terms – கலைச் சொற்கள்
Teeth – பற்கள்
Teeth ridge – எகிர்
Terseness – செறிவு

Tests – கேள்விகள்
hests-analogy - ஒப்பிட்டுக் காட்டும் கேள்விகள்
,, classification – வகைப்படுத்திக் காட்டும் கேள்விகள்
,, completion – முடித்துக் காட்டும் ,,
,, essay type – கட்டுரைக் ,,
,, matching – பொருத்திக் காட்டும் ,,
,, maltiple choice – பல்விடையிற் பொறுக்கும் கேள்விகள்
,, True or false – சரி தவறு கேள்விகள்
,, Yes or no – ஆம் இல்லை
Texts books – பாடநூல்கள்
Thick silk – தடித்த பட்டு
Thinking power – சிந்திக்கும் ஆற்றல்
Thought – சிந்தை
Time charts – காலக் குறிப்புகள்
Time lines – காலக் கோடுகள்
Time sense – கால உணர்ச்சி
Time table – கால அட்டவணை
Tongue twisters – நாபிறழ் பயிற்சிகள்
Tonsils – தொண்டைச் சதை
Transcription – பார்த்தெழுதுதல்
Transcription modified - மாற்றியமைக்கப்பட்ட பார்த்தெழுதுதல்
Translation – மொழி பெயர்ப்பு
Translation method – மொழி பெயர்ப்பு முறை
Unit – அளவுகோல்
Unity – ஒருமை
University – பல்கலைக் கழகம்
Unknown – தெரியாதது
Variety - மாறுபாடு
Village Assembly – ஊர் ஆளும் கழகம்
Visual – கட்புல
Vocabulary – சொற் களஞ்சியம்
,, active – நாள்தோறும் வழங்கும் சொற்கள்
,, passive – நாள்தோறும் வழங்காச் சொற்கள்
Vocal chords – குரல் நாண்கள்
Voiced – ஓசையுள்ளன
Voiceless – ஓசையில்லன
Vowels – உயிர் (எழுத்துக்கள்)
,, back – பின் உயிர் எழுத்துக்கள்
,, close - மூடு
,, Dipthong - புணர் உயிர் எழுத்துக்கள்
,, Front - முன் உயிர் எழுத்துக்கள்
,, Half close – அரைமூடு உயிர் எழுத்துக்கள்

,, Half open - அரைத் திறப்பு உயிர் எழுத்துக்கள்
,, Lax - நெகிழ் ,, ,,
,, Lips rounding - இதழ்குவி ,, ,,
,, Lips spreading - இதழ் விரி ,, ,,
,, Long - நெடில் ,, ,,
,, Open - திறப்பு ,, ,,
,, Nasal - மூக்கு (ஒலி) ,, ,,
,, Short - குறில் ,, ,,
,, Simple - தனி ,, ,,
,, Tense - இறுகு ,, ,,
Vulgarisms - இழி வழக்கு
Ways and means - வழி வகைகள்
Whole - முதல் பொருள்
Wind Pipe - காற்றுக் குழாய்
Words in pairs - இணை மொழிகள்
Written exercise - எழுத்துப் பயிற்சி

## பின்னிணைப்பு 3.

### இந்நூல் எழுதுவதற்குதவியனவும், மேற்கோளாக எடுத்தாளப் பட்டனவும், படித்தற்குரியனவுமான சில நூல்கள்


Abercrombi : Poetry, its music and meaning, Literary criticism.

Adams : Modern developments in educational practice. Educational movements and methods.

Applachari: Child nature and education, Educational psychology.

Bagely : Class room management. Educative Process.

Ballard : Thought and language. Teaching mother tongue.

The new examiner : The changing school. Mental tests.

Bateman : Aids to Modern language teaching.

Board of Education : Memoranda on the teaching and organisation in secondary schools modern languages.

Bossing : Progressive methods of teaching in Secondary Schools.

Brerton : Teaching of modern languages.

Breul : Teaching of modern languages.

Brown : Encyclopeadia.

Caldwell : Comparative grammar of the Dravidian languages.

Champion : Lectures on the teaching of English in India.
Colvin : Introduction to High School teaching.
Cook : The play way.
Courthope : Life in poetry and law in taste.
Devanesan : A Guid to Tamil Composition.
Dewey : The Dalton Laborytory plan.
Dewey and Dewey : Schools of to-morrow.
Dumville : The science of speech. Teaching, its varieties. How to teach.
Findlay : Principles of class teaching. Modern language teaching.
Fry : A key to language.
Galley and Scott : An introduction to the methods and material of criticism.
Gates : Psychology for the students of education.
Gouin : The art of teaching and studying languages.
Grierson : Lingustic Survey of India Vol. IV.
Gurrey : The appreciation of poetry.
Haddow : On the teaching of poetry.
Handschin : The teaching of modern languages in united states.
Horne : Principles of education. Philosophy of education
Hudson : Introduction to the study of literature.
Hughes and Hughes : Learning and teaching.
James : Talks to teachers.
Jesperson : Language its nature origin and development. How to teach a foreign language. Mankind, Nation and individual.
Jha : Educational psychology.
Kilpatric : The project method. Education for a changing civilisation.
Kitson : Language teaching.
Lamborn : The rudiments of criticism.
Latham : On the Study of Language.
Laurie : Language nd Linguistic Method.
Lewis : Language in schools.
Macpherson : Principles and Methods in the Study of English Literature.
Maxmuller : Lectures on the Science of Language.
Mc Allister : The Primary Teachers' Guide for Speech Training.
Menzel : Suggestions for the new type tests in India. Suggestions for the teaching of reading in India.

Moulton : Modern Study of Literature.
Nunn : Education, its data and principles.
Palmer : The Scientific Study and Teaching of Languages. Principles of Language Study. Oral method of Teaching Languages.
Parkhurst : Education on the Daltan Pl[illegible] .
Patterson : The preparation and use of ne.. type examinations.
Periera : The Psychology of Learning, and Teaching. The essentials of teaching.
Prendergast : The Mastery of Languages.
Purnalingam Pillai : History of Tamil Literature.
Rajanayakam : Modern Psychology and Child Education. Activity Programme in Indian Elementary Education. The Project Method in Indian Education The Activity method in Education., How we learn.
Raymont : Principles of Education. Modern Education—its aims and methods.
Richards : Literary Criticism.
Robson : How shall we train the teacher of Modern Language
Rose : Ground work of Educational psychology.
Ryburn : Suggestions for the Teaching of Mother Tongue in India. Suggestions for the Teaching of English
Sandiford : Educational Psychology.
Santhanakrishna Naidu, T. P.: Methods of Teaching Tamil.
Sayce : Introduction to the Science of Language. Principles of Comparative Philiology.
Srinivasa Pillai : Tamil Varalaru, Parts I and II.
Srinivasa Iyengar : Tamil Studies.
State Education department of New York. Syllabus in Modern Foreign Language.
Stevenson : Project Method of Teaching.
Suryaarnayana Sastri : History of Tamil Language.
Sweet : A Practical Study of Languages.
Thorndyke : Principies of Education.
Vendryes : Languages, a linguistic introduction to History.
Ward and Roscoe : The Approach to Teaching .
Watts. A, F. The Language and Mental Development Children.
West : Language in Education.
Winchester : Principles of Critcism.
Wood, F. T.: Training in Thought and Expression.
Worsfold : Principles of Criticism.